# இன இதழ்கள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**மு.ரமேஷ்பாபு**

*(பதிவு எண்: 1431)*

நெறியாளர்

பேராசிரியர் முனைவர் மு.பாண்டி






தமிழ்த்துறை

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசிய தரமதிப்பீட்டுக் குழுவின் 'A' மதிப்பு பெற்றது)

**காரைக்குடி 630 003**

**தமிழ்நாடு**

**இந்தியா**


**டிசம்பர் – 2009**

**முனைவர் மு.பாண்டி,**
பேராசிரியர் & துறைத்தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி–630 003.

# நெறியாளர் சான்றிதழ்

**இன இதழ்கள்** என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக **மு.ரமேஷ்பாபு** அவர்களால் என் மேற்பார்வையில் தன்னியலாகச் செய்யப்பட்டதாகும். அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் செய்த இவ்வாய்வின் மீது இதற்குமுன் வேறெந்தப் பட்டமும் அளிக்கப்பெறவில்லை எனச் சான்றளிக்கிறேன்.

இடம் : காரைக்குடி
நாள் : 11.12.09
உறுதிக் கையொப்பம்

முனைவர் மு. பாண்டி, எம்.ஏ.,எம்.ஏ.,எம்பில்.,பிஎச்.டி.,
பேராசிரியர் & துறைத்தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

(மு.பாண்டி)
நெறியாளர்

**மு.ரமேஷ் பாபு**, எம்.ஏ., எம்.ஃபில்., பிஜிடிஜேஎம்சி.,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி–630 003.

# ஆய்வாளர் உறுதிமொழி

**இன இதழ்கள்** என்னும் தலைப்பில் முனைவர் **மு.பாண்டி** அவர்கள் மேற்பார்வையில் அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக நிகழ்த்தப்பட்ட இவ்ஆய்வேடு நான் மேற்கொண்ட ஆராய்ச்சியின் பயனாகும். இவ்ஆய்வேடோ, இதன் பகுதிகளோ இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அளிக்கப்படவில்லை என்றும், இஃது என் சொந்த முயற்சியால் உருவாக்கப்பட்டது என்றும் உறுதி அளிக்கிறேன்.

11/12/09
(மு.ரமேஷ்பாபு)
ஆய்வாளர்

இடம் : காரைக்குடி
நாள் : 11-12-09

உறுதிசெய்யப்படுகிறது
11/12/09

முனைவர் மு.பாண்டி,
பேராசிரியர் & தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

# நன்றியுரை

'இன இதழ்கள்' என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொள்ள அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக்கழகத் **துணைவேந்தர், பதிவாளர்** ஆகியோர்க்கு என் உளம்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வாளராக என்னை ஏற்று இவ்வாய்வு செம்மையாக நிகழ்ந்தேற எனக்கு இன்முகத்துடனும், இனிய சொற்களுடனும் நன்னெறி காட்டி, பல்லாற்றானும் உதவிகள் பல புரிந்து வரும் தமிழ்த்துறைத் தலைவரும், கலைப்புல முதன்மையரும், எனது வாழ்வு மற்றும் ஆய்வு நெறியாளருமான **முனைவர் மு.பாண்டி** அவர்களுக்கு நான் என்றென்றும் நன்றியும் நினைவும் கொள்ளக் கடமைப்பட்டுள்ளேன்.

என்னை வளர்த்து ஆளாக்கி இவ்வுயர்வு நிலை அடைய வைத்த, நினைவில் வாழும் தெய்வத்திரு **செம்பிராயன்–சிகப்பியம்மாள், சுந்தர்ராஜன்–அழகியம்மாள்,** எனதருமை பெற்றோர் **செ.முருகேசன்–லெட்சுமி** ஆகியோருக்கும் இவ்வாய்வேட்டு மலரை அர்ப்பணிக்கின்றேன்.

ஆய்வுக்குத் தேவையான முதன்மைச் சான்றாதாரங்களான 'இன இதழ்களை'த் தந்துதவிய நண்பர் **பழனி பாலமுருகன், திசைமுத்து, இராஜவேலு, லட்சுமணமூர்த்தி** மற்றும் இன இதழாசிரியர்கள் 'அச்சமில்லை' **இறைவன்**, 'இந்திய நாடார் முரசு' **ஜூலியன் நாடார்**, 'இருளர் செய்தி' **விழி.பா.இதயவேந்தன்**, 'ஒலிக்கும் யாதவர் முரசு' **டாக்டர் கந்தையா**, 'கடலார்' **வேலாயுதம்**, 'தெலுங்கர் கீதம்' **ராதாகிருஷ்ணன்**, 'பண்டிதம்' **தங்கவேல்**, 'பூச்சரம்' **பேரா.சொக்கலிங்கம்**, 'வீரபாண்டிய கட்டபொம்மன்' **பரதபாண்டியன்** போன்றோர்க்கும் இவ்வேளையில் நன்றி செலுத்துகின்றேன்.

ஆய்வுத் தொடர்பாக அவ்வப்போது எழுந்த ஐயங்களைத் தீர்த்த மன்னார்குடி கலைக்கல்லூரி, தமிழ்த்துறைத் தலைவர் வை.சோமசுந்தரம், பேரா.ஆ.சீனிவாசன், பேரா.நைனார் மற்றும் எனது ஆய்வுக்கு ஊக்கமூட்டி என்பால் அன்பு பாராட்டும் கெழுதகை நண்பர்கள் பேரா.இரா.குமார், முனைவர் இரா.பழனிச்சாமி, முனைவர் வெ.இராதா, முனைவர் க.கலியபெருமாள், முனைவர் த.கார்த்திகேயன் ஆகியோர்க்கு என் நன்றிகள்.

ஆய்வு நிறைவேற தங்களால் இயன்ற உதவிகள் புரிந்த எனதருமைத் தம்பிகள் கரு.முத்துக்கருப்பன், இராசசேகர், மாரிமுத்து போன்றோரை நினைவுப்படுத்தி நன்றி நவில்கின்றேன்.

இவ்வாய்வேட்டினை குறுகிய காலத்திற்குள் மனம் நிறைவாகச் செம்மையாக அச்சாக்கம் செய்து, சிறந்த முறையில் நூல்கட்டு செய்து கொடுத்த 'ஆய்வேட்டுச் செம்மல்' கிடைத்தற்கரிய இனிய நண்பர் மு.நாகராசன் மற்றும் அவர்தம் துணைவியார்க்கும் இந்நேரத்தில் நன்றி பாராட்டி மகிழ்கின்றேன்.

மு.ரமேஷ்பாபு

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| அக். | - | அக்டோபர் |
| ஆக. | - | ஆகஸ்ட் |
| இ.நா.மு. | - | இந்திய நாடார் முரசு |
| இ.ப. | - | இரண்டாம் பதிப்பு |
| ஏப். | - | ஏப்ரல் |
| ஒ.யா.மு. | - | ஒலிக்கும் யாதவர் முரசு |
| குறள். | - | திருக்குறள் |
| சன. | - | சனவரி |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| செப். | - | செப்டம்பர் |
| செ.மி. | - | செங்குந்தமித்திரன் |
| டிச. | - | டிசம்பர் |
| தெ.கீ. | - | தெலுங்கர் கீதம் |
| தே.ம. | - | தேவேந்திரர் மலர் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நவ. | - | நவம்பர் |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பரி. | - | பரிபாடல் |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பு.யா. | - | புதிய யாதவம் |
| புறம். | - | புறநானூறு |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| மதுரைக். | - | மதுரைக்காஞ்சி |
| மு.ப. | - | முதற்பதிப்பு |
| மு.ப.ஆ. | - | முதன்மைப் பதிப்பு ஆசிரியர் |
| மேலது. | - | மேற்படி |
| வீ.பா.க. | - | வீரபாண்டிய கட்டபொம்மன் |

# பொருளடக்கம்

# முன்னுரை

ஆங்கிலேயர் வருகையால் இந்தியர்களுக்குக் கிடைத்த செய்தித்தாள் எனும் தகவல் சாதனம் இந்திய விடுதலைப் போராட்டக் காலத்தில் சுதந்திர நோக்கங்களுக்காக வெளிவந்தது. நாளடைவில் இதழ்கள் பல்கிப் பெருகி அரசியல் மற்றும் இன வளர்ச்சிக்கு உதவின. மக்களிடையே கருத்துக்களைப் பரப்புவதற்கு மரபு வழிப்பட்ட தகவல் முறைகள் வழக்கில் இருந்தன. மேனாட்டார் வருகையின் மூலமும் அறிவியல் வளர்ச்சியின் காரணமாகவும் அச்சு இயந்திரங்கள் பல்கிப் பெருகின. இதழ்கள், செய்தி இதழ்கள், பருவ இதழ்கள், வணிக இதழ்கள், நிறுவன இதழ்கள் எனப்பல வகையின. தொழில் வழி உருவாகிய சாதிகளில் நிலவுகின்ற ஏற்றத்தாழ்வுகளின் காரணமாகத் தங்கள் சாதியை மேம்படுத்திக் கொள்ளவும், பிற இனத்தாரிடையே சமமான அல்லது உயர்நிலை அடையவும், தங்களை இனம் காட்டிக் கொள்ளவும் இதழ்களைப் பயன்படுத்திக் கொண்ட பொழுது 'இன இதழ்கள்' தோன்றின. இன்றைய நிலையில் தங்கள் இனத்தின் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ள இன இதழ்களை வெளியிடுகின்றனர். இவ்விதழ்கள் அவ்வவ் இனத்தவர்களின் முன்னேற்றத்தை முதன்மை நோக்காகக் கொண்டு வெளிவருவதால் 'இன இதழ்கள்' எனச் சுட்டப்பெற்றுள்ளது.

இன்றைய நிலையில் ஒவ்வொரு இன வளர்ச்சிக்கும், மேன்மைக்கும் காரணமாக விளங்குகின்ற 'இன இதழ்கள்' இன்றியமையாதவனாகவும், இனத்தை அடையாளங் காட்டாக் கூடியனதாகவும் பரிணாம வளர்ச்சி பெற்றுள்ளன.

### ஆய்வுத் தலைப்பு

ஒவ்வொரு இனமும் இதழ்களை இன முன்னேற்றத்திற்கு எந்த வகையில் பயன்படுத்திக் கொண்டது. அதில் இனவுணர்வுகள் வெளிப்படுகின்ற முறை, அவற்றின் உத்திகள், நடை, கரு, சமுதாயத் தாக்கம் போன்றவை எவ்வாறு உள்ளன என்பதைப் பற்றிக் கண்டறியும் மூலமாக 'இன இதழ்கள்' என்பது ஆய்வுத் தலைப்பாகத் தெரிவு செய்யப்பட்டுள்ளது.

### ஆய்வு நோக்கம்

இன இதழ்களின் தோற்றக் காரணங்கள், வளர்ச்சி நிலைகள், இன வெளிப்பாடுகள் போன்றவற்றைக் கண்டறிவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு எல்லை**

தமிழ்நாட்டில் தற்காலத்தில் இன இதழ்கள் பெரும்பாலும் திங்களிதழ்களாக வெளி வருகின்றன. இவ்விதழ்கள் 50க்கும் மேற்பட்டவைகளாகும். ஆய்வின் கால எல்லை கருதி 2008 ஆம் ஆண்டு வெளிவந்த பதினான்கு இனங்களின் பதினாறு இதழ்கள் மட்டும் இவ்வாய்வின் எல்லையாக அமைகின்றன.

**கருதுகோள்**

தமிழகத்தில் மரபுவழித் தகவல் தொடர்புகளுள் கடிதம், ஓலைச்சுவடிகள், கல்வெட்டுகள், நூல்கள் போன்ற எழுத்து வழிச் சாதனங்கள் இருந்து வந்த நிலையில் ஆங்கிலேயர்கள் இந்தியாவில் தங்கள் மதக் கோட்பாடுகள், வணிகம், அரசியல் போன்றவற்றை மக்களிடையே புகுத்துவதற்கு இதழ்களைக் கருவியாகக் கையாண்டனர்.

இந்தியச் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டவர்கள் பலவாறு பிரிந்திருந்த மக்களை ஒன்று திரட்டி, ஆங்கிலேயரை எதிர்த்து, விடுதலைக் கருத்துக்களைப் பரப்புவதற்கு இதழ்களை ஒரு சாதனமாகப் பயன்படுத்தினர்.

அரசியல் இயக்கங்கள் தங்கள் இயக்கக் கொள்கை, கோட்பாடுகளைத் தொண்டர்களிடமும் பொதுமக்களிடமும் செயல்படுத்துவதற்குத் தங்களுக்கென்று இதழ்களை உருவாக்கிக் கொண்டனர்.

ஒவ்வொரு இனத்தவரும் வெகுஜன இதழ்கள் தங்களைப் புறக்கணிப்பதாகக் கருதித் தங்களுக்கென்று இதழ்கள் அமைந்தால் இனத்தின் தொடர்பு நிலைக்கும், மேன்மைக்கும் பயன்படும் என்ற அடிப்படையிலும், இனத்தை ஒருங்கிணைப்பதற்கும், வலிமைப்படுத்துவதற்கும் தங்கள் மரபைப் போற்றுவதற்கும் இன இதழ்களை ஆரம்பித்திருக்க வேண்டும் என்பது இவ்வாய்வின் கருதுகோளாக அமைகின்றது.

**சான்றாதாரங்கள்**

2008 ஆம் ஆண்டு வெளிவந்த பதினான்கு இனங்களின் பதினாறு இதழ்கள் இவ்வாய்விற்குரிய முதன்மைச் சான்றாதாரங்களாகும். ஆய்வுத் தொடர்பான திறனாய்வு நூல்கள், இதழ்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள் போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாகும்.

## ஆய்வு அணுகுமுறை

இன இதழ்களையும் இனங்களையும் விளக்கிக் கூறி, செய்திகளை வெளிக் கொணரும் நிலையில் விளக்கமுறை அணுகுமுறையும் (Descriptive approach), இன இதழ்கள் சமுதாயத்தின் மீது ஏற்படுத்தியுள்ள தாக்கங்களைக் கண்டறியும் நிலையிலும் சமூகக் கூறுகளைப் புலப்படுத்தும் முறையிலும் சமூகவியல் அணுகுமுறையும் (Sociological approach), இன இதழ்களின் தோற்றம், வரலாறு, இன்றைய நிலைகளைக் கண்டறிய வரலாற்றியல் அணுகுமுறையும் (Historical approach) இவ்வாய்விற்குரிய அணுகுமுறைகளாகப் பின்பற்றப்பட்டுள்ளன.

## ஆய்வுச் சிக்கல்

இந்தியா வேற்றுமையில் ஒற்றுமை காணும் நாடு. தமிழ்நாடு பல இனங்களை உள்ளடக்கிய ஒரு முழுமையாகும். இவ்வினங்கள் தங்களின் பழக்கவழக்கங்கள், பண்பாடுகள், கலாச்சாரம் போன்றவற்றை வெளிக்காட்டும் நிலையில் முரண்பாடுகள் இருப்பது ஆய்வுக் கருத்துக்களை வெளிப்படுத்துவதில் சிக்கல்களைத் தோற்றுவிக்கின்றன,

## ஆய்வுப் பகுப்பு

'இன இதழ்கள்' என்னும் இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களைக் கொண்டுள்ளது.

1. இன இதழ்களின் தோற்றமும் வளர்ச்சியும்
2. இன இதழ்களில் உள்ளடக்கக் கூறுகள்
3. இன இதழ்களில் தகவல் வெளியீட்டு உத்திகள்
4. இன இதழ்களில் இன உணர்வும் இன முன்னேற்றமும்

என்பனவாகும்.

ஆய்வு முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, நோக்கம், எல்லை, கருதுகோள், சான்றாதாரங்கள், அணுகுமுறை, ஆய்வுச் சிக்கல்கள், ஆய்வுப் பகுப்பு ஆகியன ஆய்வு நெறிமுறைப்படி இடம் பெறுகின்றன.

இன இதழ்களின் தோற்றமும் வளர்ச்சியும் என்னும் முதலாம் இயலில் சமூகம் விளக்கம், இனம் விளக்கம், இனத்தின் தோற்ற வளர்ச்சி நிலைகள், சாதி விளக்கம், இன

இதழ்களின் தோற்றம், அரசியல் மாற்றம், சமுதாயத்தின் வளர்ச்சி நிலை போன்ற சூழ்நிலையை அடிப்படையாகக் கொண்டு ஒவ்வொரு காலகட்டத்திலும் இவ்விதழ்கள் பரிணாம வளர்ச்சி பெற்றமை இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளது.

**இன இதழ்களின் உள்ளடக்கக் கூறுகள்** என்னும் இரண்டாம் இயலில் அவ்வவ் இனமக்களின் வாழ்க்கையில் அன்றாடம் நடக்கும் செயல்களை அடிப்படையாக வைத்து ஆராய்ந்து இல்லங்களில் நடைபெறும் பிறப்பு, இறப்பு, திருமணம், புதுமனைப் புகுவிழா போன்ற நிகழ்வுகள் மூலமாகவும் சங்கம், பேரவை, மன்றக் கூட்டங்கள், மாநாடுகள், ஆன்மீகம், அரசியல், கல்வி போன்ற பல்வேறு வகையான நிகழ்வுகளின் அடிப்படையிலும் இன இதழ்களில் உள்ளடக்கம் அமைகின்றது. இவ்வகையான உள்ளடக்கக் கூறுகளையும் ஒப்பிட்டுப் பதிவு செய்து ஆராயப்பட்டுள்ளது.

**இன இதழ்களில் தகவல் வெளியீட்டு உத்திகள்** என்னும் மூன்றாம் இயலில் இதழியல் விளக்கம், இதழியல் பணிகள், உத்திகள் விளக்கம், இதழியல் கூறுகளான தலையங்கம், பக்க ஒருங்கமைப்பு, புறவடிவம், மொழிநடை, தலைப்பு, திறனாய்வு, வாசகர் கடிதம், துணுக்கு, விளம்பரம். இன இதழ்களின் தனித்த உத்திகள் போன்றவை சிறப்பாக அமைய பலவகையான உத்தி முறைகள் கையாளப்பட்டுள்ளன. அவ்வுத்தி முறைகளை வெளிக்கொணரும் வகையிலும் இனத்தவர்களின் கல்வி, பொருளாதார நிலைகளில் விழிப்புணர்வு பெறுவதற்கும், கருத்து மேம்பாட்டிற்கும் உத்தி முறைகள் எவ்வாறு பயன்பட்டுள்ளன என்பதைச் சுட்டும் முகமாகவும் இவ்வியல் விளக்கப்பட்டுள்ளது.

**இன இதழ்களில் இன உணர்வும் இன முன்னேற்றமும்** என்னும் நான்காம் இயலில் தமிழ்ப் பண்பாடு, ஒருவனுக்கு ஒருத்தி, விருந்தோம்பல், உதவும் மனப்பான்மை போன்ற நற்பண்புகள் கொண்டிருந்ததை இலக்கியங்கள் உணர்த்துகின்றன. அனைத்தும் இனத்திற்குள்ளே (அகமணம்) என்ற தன்மை, ஆதிக்க இனத்தார்கள் அட்டவணை இனத்தார்களை இரக்கக் குணத்தோடு பார்க்கின்ற பார்வை குறைந்து வருவது, தேசியத் தலைவர்களைத் தங்கள் இனத்தலைவர்களாக அடையாளமாகக் காட்டுவது இனத் தலைவர்களாகவே பார்க்கும் போக்கு ஆகியன இன இதழ்களின் வாயிலாக வெளிப்படுகின்றன.

திரைக்கலைஞர்கள், படைப்பாளர்கள் போன்றவர்களைப் பொதுப்பார்வைப் பார்க்காமல் இனப்பார்வை பார்க்கும் தன்மையையும், தமிழன், இந்தியன் என்னும் பொதுநோக்கை இவ்வின இதழ்கள் சிதைத்து இனவுணர்வூட்டுவதும், கல்வி, பொருளாதாரம், அரசியல் ஆகிய நிலைகளில் இன முன்னேற்றத்தை மையமாகக் கொண்டிப்பதும் ஆராயப்பட்டுள்ளது.

ஒவ்வொரு இயலிலும் பெறப்பட்ட கருத்துக்களின் முடிவுகள் அவ்வவ் இயலின் தொகுப்புரைகளாகக் கொடுக்கப்பட்டிருப்பினும், ஆய்வின் நிறைவு கருதி கருத்துச் சாரங்கள் முடிவுரையாகத் தரப்பட்டுள்ளன.

ஆய்வுக்குப் பயன்பட்ட இன இதழ்கள், நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள் போன்றவை துணைநூற்பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ளன.

ஆய்வேட்டின் இறுதியில் தமிழகத்தில் இதுவரை வெளிவந்துள்ள இன இதழ்களின் பட்டியல் பின்னிணைப்புகளாகத் தரப்பட்டுள்ளது.

# இயல் 1

# இன இதழ்களின் தோற்றமும் வளர்ச்சியும்

இதழ்கள் வலிமை வாய்ந்த ஆயுதங்களாக உலகில் விளங்குகின்றன. வாழ்க்கை விரைவு, அரசியல் மாற்றம், சமுதாயத்தின் வளர்ச்சி இவற்றின் சூழலினை அடிப்படையாகக் கொண்டு ஒவ்வொரு காலக்கட்டத்திலும் இதழ்கள் தோன்றி வளர்ச்சிபெற்று வருகின்றன. இந்தியா என்பது ஒரு தனி நாடல்ல. எல்லா மக்களும் ஒரே இனத்தவரல்லர். தங்களுக்கென தனித்தனிப் பண்பாடுகள், கலாச்சாரங்கள், மொழிகள், பழக்கவழக்கங்களைப் பெற்று வேற்றுமையில் ஒற்றுமை பாராட்டி விளங்குகின்றனர்.

ஒவ்வொரு இனமும் தங்களின் மக்கள் வளர வேண்டும். சமூகத்தில் தனியிடத்தைப் பெற வேண்டும் என்று நினைப்பதுண்டு. இதனால் அவ்வின ஆர்வலர்களால் ஆங்காங்கே சாதிச்சங்கங்களும், பேரவைகளும், இயக்கங்களும் தோற்றுவிக்கப்படுகின்றன. சங்கத்தின், பேரவையின் எண்ணங்கள், கருத்துக்கள், செயல்பாடுகள் அனைத்தும் தம் இன மக்களிடையே சென்று சேர வேண்டும் என்ற எண்ணத்தில் தங்களுக்கெனத் தனி இதழ்களைத் தொடங்குகின்றனர். இதனை ‘இன இதழ்கள்’ எனக் குறிப்பிடலாம்.

தங்கள் இன மக்களின் பிரச்சினைகள், சிக்கல்கள், பழக்கவழக்கங்கள், பண்பாடு, கலாச்சாரக்கூறுகள் இலக்கியம், சமூக மேம்பட பாடுபட்டவர்களின் வாழ்க்கை வரலாறு, சமூகப்பணி போன்றவை இவ்விதழ்களின் வழியாக வெளியிடப்படுகின்றன. இன இதழ்களின் தோற்ற நிலை, வளர்ச்சி நிலை மற்றும் இன்றைய நிலை குறித்து ஆய்வது இவ்வியலின் நோக்கமாக அமைந்துள்ளது.

### சமூகம் - சமுதாயம் விளக்கம்

மனிதன் கூடி வாழும் இயல்பினன். அதனால் அவனைச் சமூக விலங்கு என்பர். இக்கூட்டு வாழ்க்கையிலிருந்து தனித்தொதுங்கிவிட்டால் அவனால் முழுமையாக வாழ இயலாது. தனி மரம் தோப்பாகாது என்பது பழமொழி. அதுபோல தனிமனிதன், தனியொரு குடும்பம் சமூகமாகாது. கூட்டு வாழ்க்கையின் விளைவாக ஏற்பட்ட சமூக நிறுவனங்களான குடும்பம், சமயம், அரசு, கல்வி ஆகியவை அவன் வாழ்க்கையை

மேலும் செம்மைப்படுத்த உதவுகின்றன. பல்வேறு குடும்பங்களின் கூட்டுத்தொகுப்பு அல்லது கூடி வாழும் அமைப்பைச் சமுதாயம் அல்லது சமூகம் என்கிறோம்.

மனிதன் சமூகத்தில் ஓர் உறுப்பினனாக இணைந்து வாழ்கிறான். சமூகச் சிக்கல்களைப் போக்குவதற்குச் சமூகத்தின் ஏனைய உறுப்பினர்களோடு இணைந்தும் போராடுகிறான். மனிதர்கள் இங்ஙனம் ஒருங்கிணைவதால் இயக்கங்கள் உருவாகின்றன. வெவ்வேறு தேவை மற்றும் நோக்கங்களுக்காக மனிதர்கள் வெவ்வேறு குழுக்களாகப் பிரிந்தும் செயல்படுகிறார்கள். மக்களாட்சி நிலவும் நாட்டில் அதிகாரத்தைக் கைப்பற்றும் நோக்கத்தால் அரசியல் கட்சிகளையும், வல்லாட்சியில் அல்லலுறும் நாட்டில் மக்களாட்சி மலர்வதற்காகப் புரட்சி இயக்கங்களையும் மனிதன் நிறுவுகிறான். இத்தகைய சமூக நடவடிக்கைகள் அனைத்திற்கும் காரணமாக விளங்குவது மனிதன் ஏனையோருடன் ஒருங்கிணைந்து பழகும் வாழ்க்கை முறை அல்லது சமுதாய ஊடாட்டம் (Social Intraction) என்பதாகும். இவற்றை ஆய்வதே சமூகவியலின் நோக்கமாக விளங்குகிறது.

> சமுதாய ஊடாட்டத்தினால் அமையும் சமுதாய உறவுகளின் கட்டமைப்பைப் பகுத்தாயும் துறையே சமூகவியல்[1]

என்னும் வரையறையை வழங்கும் பெங்குவின் சமூகவியல் அகராதி சமூகவியலை வரையறுத்துக் கூறுவது மிகவும் கடினமானது என்பதையும், சமூகவியல் பற்றிய எத்தகைய வரையறையும் மனநிறைவளிக்கக்கூடியதாக இருக்காது என்பதையும் சுட்டிக்காட்டுகிறது. ஏனெனில் சமூகவியலின் களம் மிக விரிந்து பரந்ததாகவும், நாளுக்கு நாள் பெருகி வருவதாகவும் விளங்குகிறது.

> சமூகவியலை வரையறுக்க முற்படும் ஸ்பென்சரும் (Meta Spencer) இக்கருத்தையே வலியுறுத்துகிறார். சமூகவியல் மனிதனின் கூட்டு வாழ்க்கையைப் பற்றிய படிப்பு ஆகும். எவ்வாறு மனிதர்கள் தங்கள் செயல்முறைகளால் ஒருவருக்கொருவர் இயைந்த தொடர்பு கொண்டு, ஒரு சமூக அமைப்பாக இணைந்து செயல்படுகிறார்கள் எனக் காண்பதே சமூகவியலின் அடிப்படைக் குறிக்கோளாகும். எனினும் கூறுவது ஒரு வரையறைக்கான தொடக்கமே ஆகும்[2]

எனக் கூறுகிறார்.

> சமூகவியல் கற்பனை செய்து பார்க்க முடியாத அளவு மிகவும் பரந்து பட்ட துறை[3]

எனவும்

மனிதனின் எல்லாவித நடப்புக்களையும் மனிதன் செய்யும் எந்தச் செயலையும் ஆய்ந்து கூறும் ஆற்றல் சமூகவியலுக்கு உள்ளது[4]

எனவும் அவர் கூறுகிறார். சில பொதுவான விழுமியங்களையும், நம்பிக்கைகளையும் கொண்டு தமக்கிடையே வினையாற்றிக் கொள்ளும், ஒருவருக்கொருவர் உறவு கொள்ளும் தன்னிறைவுடைய நிலையான மிகப்பெரிய மக்கள் குழுவே சமுதாயம் ஆகும். இச்சமுதாயத்தைப் பற்றியும், சமுதாயத்தின் நடவடிக்கைகள் பற்றியும், பல்வேறு கோணங்களில் ஆராயும் அறிதுறைகளின் தொகுதி 'சமூக அறிவியல் துறை' என்று கூறப்படுகிறது. சமூகவியல், பொருளியல், அரசியல், வரலாறு, நிலவியல், உளவியல், மானுடவியல், சமூகப்பணியியல் ஆகியவற்றைத் தன்னுள் கொண்டது.

கி.மு.400 ஆண்டுகட்கு முற்பட்ட பிளேட்டோவின் (Plato) குடியரசு (Republic) என்ற நூலும், அவரது மாணவர் அரிஸ்டாட்டிலின் ஒழுக்கவியல் (Ethics), அரசியல் (Polictics) எனும் நூல்களிலும் முதன் முதல் சட்டம் அரசு, சமூகம் பற்றிய முறையான ஆராய்ச்சியைக் காண முடிகிறது.[5] இதன் பின் ரூஸோ (Roussew) தமது 'சமூக ஒப்பந்தம்' (Social contract) என்ற நூலில் பிளேட்டோ, அரிஸ்டாட்டிலின் கருத்துக்களைத் தழுவி, மனிதன் சுதந்திரமானவனாக இருந்தாலும் பிறப்பிலும், பிறந்த மன்னர் சமுதாயத்துடன் இணையும் போதும், சமூகம் அவனைப் போன்ற எண்ணற்ற தனி மனிதர்களின் சக்திகளைக் கொண்டு ஒரு சில காரியங்களைச் சாதிக்க முற்படும் போதும் அவனைத் தன்னகத்தே ஏற்றுத் தனது கட்டுத்திட்டங்களுக்கு உள்ளாக ஆட்படுத்துவது மூலம் தனி மனிதர் சமூகம் என்னும் கூட்டமைப்பில் ஒன்றுகிறான்[6] என்று கூறுகின்றார்.

ஒரே விதமான எண்ணங்களை உடைய மனிதர்கள் தங்களுடைய ஒத்த தன்மையை உணர்ந்து அதன் காரணமாகப் பொதுவான நோக்கங்களை அடையச் சேர்ந்து முயல்கின்ற பொழுது சமூகம் உருவாகின்றது[7]

என்பது கிட்டங்ஸ் (F.M.Giddings) என்ற அறிஞரின் கருத்தாகும்.

தனி மனிதன் ஒருவன் மட்டும் சமூகத்தில் தனித்து வாழ முடியாது. அவனுடைய அன்றாடத் தேவைகளை நிறைவு செய்ய அவன் சமூகத்தில் உள்ள பிற மனிதர்களின் துணையை நாட வேண்டியுள்ளது.

சமுதாய அமைப்பிலும் மனித உறவிலும் மாற்றங்கள் தோன்றி, வளர்ந்து பெருகும் காலகட்டத்தில் வாழும் ஆக்க இலக்கியக் கர்த்தாக்களின் உணர்வினைத் தாக்குவது புதிய சூழ்நிலையில் தோன்றும் மனித இன்னல் அல்லது புதிய சூழ்நிலையில் ஏற்படும் நடைமுறையே[8]

என்பார் கா.சிவத்தம்பி.

சமுதாயத்தைச் சொல்லில் வடித்து அளிப்பதே இலக்கியம் ஆகும். மரபு வழிப்பட்ட பண்பு நலன்கள், உணர்வுகள், உடலமைப்பு, ஆகியவை ஒரு சமுதாயத்தை உருவாக்குகின்றன.[9]

*என்கின்றனர்.*

மனித உயிரைப்பிற உயிர் வகைகளின் படைப்பிலிருந்து பிரிப்பது உயிருடன் உயிராய் அதனுடன் ஒன்றிவிட்ட சமுதாய உணர்வு தான்[10]

*என்பர்.*

கூட்டுச்சிந்தனை என்பது சமூகச்சிந்தனையாகும். சமயம், பொருளாதாரம், அரசியல் போன்ற பல்வேறு சமூக நிறுவனங்களின் ஒருங்கிணைப்பே சமூகக்கூட்டமைப்பு (Social Structure) ஆகும்.[11]

*என்றும் விளக்கமளிக்கின்றனர்.*

**சமூகம் பற்றிய அகராதி விளக்கம்**

*மனிதன் பிறருடன் கூடி வாழ்ந்து தனது தேவைகளை நிறைவேற்றவும், அச்சத்தைப் போக்குவதற்கும் சமூகத்துடன் உறவு கொள்கிறான்.*

சமூகம், சமுதாயம் என்ற இரண்டு சொற்களுக்கும் அகராதிகளின் விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன. சமூகத்தை ஆராய்கின்ற அறிவியல் துறை சமூகவியல் துறையாகும். சமூகத்தின் பல்வேறுபட்ட மக்களின் உறவுகளையும், அவர்களது செயல்களையும் அறிகின்ற இயலே சமூகவியல் துறையாகும். சமூகவியல் என்ற சொல்லுக்கு மன்னாய நூல் மனித சமுதாயத்தின் வளர்ச்சி, இயல்பு, சட்டங்கள் பற்றிய ஆய்வுத்துறை[12]

*என்று ஆங்கிலம் - தமிழ் அகராதி விளக்கம் தருகின்றது.*

சமுதாயம் என்ற சொல் கூட்டம், சங்கம், பொதுவானது மக்களின் திறன், பொருளின் திறன், உடன்படிக்கை[13]

*என்று தமிழ் அகராதி விளக்கம் தருகின்றது. மேற்குறித்த அகராதிகளின் கூற்றிலிருந்து சமூகக்கூறுகளை உணர முடிகின்றது.*

**சமூகம் பற்றிய அறிஞர்களின் கருத்துக்கள்**

*சமூகம் பற்றி பல்வேறான அறிஞர்கள் தங்கள் கருத்துக்களைப் பதிவு செய்துள்ளனர்.*

சமூகம் என்பது உயிர்வாழ்வதற்காகப் போராடும் நம் மக்களினத்தின் தனித்தன்மையுள்ள ஒரு குழுவாகும். தமக்குத்தாமே அமைத்துக் கொண்ட

அக்குழுவின் தலைவிதியையே அக்குழுவைச் சார்ந்த ஒவ்வொரு தனி மனிதனும் பெற்றிருக்கிறான். இவ்வமைப்பில் குழந்தமையிலிருந்து முதுமை வரையில் மனிதர்கள் மற்றவரைச் சார்ந்தும், மற்றவரின் கூட்டுறவோடும் வாழ வேண்டியவர்களாயுள்ளனர்[14]

*என்பர்.*

ஒரு சமூகம் என்பது தனி மனித வாழ்வெல்லைகளை மிகக் கடந்து நிலவும் ஒன்றாகும். சமூகம் என்பது செயற்பாடுடைய ஒரு குழுவாகும். தனி மனிதர் பலரால் சமூகம் உருவாக்கப்பட்டிருப்பினும், சமூகம் என்ற நிலையிலேயே அது தொழிற்படுகிறது. சமூக அமைப்பில் தனி மனிதர்களின் நலன்கள் சமூக நலன் கீழாகவே அமைகின்றன.[15]

*என்பர்.*

ராய்ட்டர் (Rauter) என்ற சமூகவியல் சிந்தனையாளர் வாழ்க்கை என்பது ஒரு பொருள் அல்ல. அது வாழும் இயங்கு முறையாகும். அதனைப் போன்றே சமூகம் என்பது ஒரு பொருள் அல்ல. அது இணைப்பின் இயங்கு முறையாகும்[16]

*என்று சமூகத்தைப் பற்றி தெளிவாக விளக்கம் அளிக்கின்றார்.*

சமூக விஞ்ஞானத்துறைகள் பலவற்றுள்ளும், இலக்கியத்துடன் மிக நெருங்கிய தொடர்புடையது சமூகவியலாகும். சமூகவியல் மனித ஒழுகலாறு சம்பந்தமானது. தனி மனிதனையும், மனித சமுதாயத்தையும் ஆராய்வதையே சமூகவியல் முக்கியக் குறிக்கோளாகக் கொண்டுள்ளது.[17]

சமுதாயத்தையும், சமுதாய அமைப்பையும் உள்ளவாறே கொண்டு அதன் இயக்கப்பாட்டைக் கூறுகளாய் விவரிப்பது சமூகவியலாகும்.[18]

விஞ்ஞான பூர்வமாகவும், புறநிலையாகவும், மனிதனையும், சமுதாயத்தையும் அறிவதே சமூகவியலின் சாராம்சமாகும்.[19]

சமூக நிறுவனங்கள், சமயம், பொருளாதாரம், அரசியல், குடும்பம் முதலியவற்றுடன் நெருங்கிய தொடர்புடையவை. இவை பலவற்றினது இயக்கத்தையும் ஆராய்வதே சமூகவியலின் தலையாய பண்பும் பணியுமாகும்.[20]

*ஆகவே பல குடும்பங்கள், சமயங்கள், தொழில்கள் போன்றவை இணைந்து இயங்கி வரும் அமைப்பு முறையைச் சமூகம் என்று அழைக்கின்றனர். பல்வேறு குடும்பங்கள் இணைந்த தொகுப்பில் அன்றாடம் நடைபெறும் செயல்களை, நிகழ்ச்சிகளை, அதன் விளைவுகளைப் பற்றி அறியும் அமைப்பே சமூகமாகும்.*

**சமூகக்கூறுகள்**

> சமூகத்தின் சிறு பகுதியே சமூகக்கூறாகும். குடும்பம் அரசு என்ற சிறு கூறுகள் இணையும் பொழுது சமூகம் முழு வடிவம் பெறுகிறது. குடும்பம், சமயம், அரசு, கல்வி, பொருளாதாரம் ஆகியவை முதன்மையான நிறுவனங்களாம்[21]

*என்று சியாமளா கூறியுள்ளார்.*

*தனி மனிதனோ, குடும்பமோ மட்டும் சமூகம் ஆகிவிடாது. மேற்கண்ட ஐந்து கூறுகளும் இணையும் பொழுதே சமூகம் முழு உருவம் பெறுகிறது.*

**சமூக நோக்கம்**

*ஒரு சமூகத்தின் உன்னதமான நோக்கம், மக்கள் கூட்டம் மகிழ்ச்சியாகவும், ஒழுங்காகவும், அமைதியாகவும் அறத்துடன் வாழ்வதைக் குறிக்கும். ஒவ்வொரு சராசரி மனிதனும் அரசியல் விளைவுகள், பொருளியல் சிக்கல்கள், அறிவியல் முன்னேற்றங்கள் இவைகளை நன்கு அறிந்து கொள்ள வேண்டும். சமூகம் வளம் பெற்றிட மேற்கண்ட துறைகளில் அறிவு பெற வேண்டும்.*

> சமூகவியலின் முக்கிய குறிக்கோள் சமுதாயத்தில் ஏற்படும் நிகழ்ச்சிகளைப் பற்றிய உண்மை அறிவைப்புகட்டி, மனிதனின் வாழ்க்கையில் எதிர்ப்படும் சமூகச் சிக்கல்களைத் தீர்க்க இயல்வதாகும்[22]

*என்பர்.*

*தனிப்பட்ட குடும்பங்கள் ஒவ்வொன்றும் தன்னலமின்றிச் செயல்படும் பொழுது சமுதாய நோக்கம் முழுமையான வெற்றியைப் பெறும். சமூக நோக்கம் என்பது சுருங்கக்கூறின் பொது நலனில் ஆர்வமும், ஈடுபாடும் கொண்டதாக இருத்தல் வேண்டும். சமூக நலனுக்காக ஒவ்வொரு உறுப்பினரும் சில இன்றியமையாத கட்டுப்பாடுகளைப் பின்பற்ற வேண்டும்.*

**சமுதாயம் விளக்கம்**

> பல்வேறு சமூகங்கள் அடங்கிய ஒரு குழுவுக்குத் தலைமையாக அமைந்திருப்பது சமுதாயம் என்பதாகும். சமுதாயம் என்பது மக்கள் சேர்ந்து வாழ்வதை மட்டும் குறிப்பதன்று. தனி மனிதர்கள் ஓர் ஒழுங்கின் அடிப்படையில் சேர்ந்துள்ள அமைப்பு முறையையும் குறிக்கின்றது.[23]

இக்கருத்திற்கேற்ப சமுதாயம் பெரிய தொகுதியைப் பெற்றிருக்கின்றது. இத்தொகுதிக்குள் அமைந்த சிறு சிறு பிரிவுகளே சமூகக் கூறுகளாக அமைகின்றன. எனவே, சமூகம் என்பது சமுதாயம் என்ற பெரும் பிரிவிற்குள் அமைந்திருக்கின்றது.

> சமுதாயம் என்பது ஆற்றுக்கு ஒப்பாகக் கூறப்படுகிறது. ஒரே ஆற்றில் நேற்று மூழ்கிய நீரில் இன்று நீராடல் இயலாது. நேற்று புனலாடிய நீர் இன்று எத்தனையோ மைல் தூரம் ஓடிப்புதுப்புது ஊர்களைக் கடந்திருக்கும். அதே ஆற்றின் கண் இன்று வேறு புதிதான நீரில் தான் குளித்தெழ வேண்டும்[24]

என்று சமுதாய இயங்குநிலை பற்றிக் கூறுகின்றனர்.

> ஒவ்வொரு மனிதனும் ஏனைய மனிதர்களுடன் கொண்டுள்ள சிக்கலான உறவு முறைகளைத் தான் சமூகம்[25]

என்று சமூகவியலாளர் குறிப்பிடுவர்.

> சமுதாயம் என்பது சலனமுற்றுக்கொண்டே இருக்கிற மாறிக் கொண்டே இருக்கிற ஒரு திரவ அமைப்பு. திட இந்த அமைப்பு கண்ணால் நிதர்சனமாகக் காணகூடியது அல்ல.[26]
>
> மனித வாழ்வோடு பண்பாடு பிணைந்த நாளே சமுதாயம் உருவான பெருநாள். இனச்சமுதாயம் காலத்துக்கும், இடத்துக்கும் சூழ்நிலைக்கும் ஏற்ப பல்வேறு வகையில் தோன்றி வளர்ந்தது[27]

என்று அ.மு.பரமசிவானந்தம் குறிப்பிடுகிறார்.

மேலோட்டமாகப் பார்த்தால் சமுதாயம் சமூகத்தை ஒத்திருப்பதைப் போலத் தோன்றும் இரண்டிலும் மக்கள் கூடி ஒருவருக்கொருவர் சார்ந்து வாழ்வர். பொதுவான வாழ்க்கை வழியைப் பின்பற்றுவர். ஆயினும் இரண்டும் வெவ்வேறானவை.

இவ்வாய்வில் 'இனம்' என்பது சாதியைக் குறிக்கும். ஏனெனில் இதழ்கள் தங்கள் இனத்தவர்களை முன்னிலைப்படுத்தி விளித்துச் சுட்டுகிற பொழுது 'நம் இனம்' இனச் சொந்தங்களே! என்ற சொற்களைப் பயன்படுத்துகின்றன. எனவே இங்கு 'இனம்' என்பது சாதியை உணர்த்துகிறது. தேவை கருதி 'சாதி' என்ற சொல்லாட்சியும் சில இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**இனம் விளக்கம்**

மனித குலத்தின் மிகச்சிறு பிரிவு இனம். இனம் (Race) என்னும் சொல் பல்வேறு சூழலில் பலவாறாகப் பொருள் கொள்ளப்பட்டுக் கூறப்படுகிறது. அரசியலார், மொழியியலாளர், உயிரியியலார், வரலாற்றியலார், சமய அறிஞர்கள் முதலானோர்

பண்டைக் காலம் தொட்டே வெவ்வேறான கருத்தினைக் கொண்டு தத்தம் சொல் வழக்கில் இச்சொல்லைக் கையாண்டுள்ளனர்.

இனம் பற்றிய மானிடவியலின் வரையறை நீண்ட வரலாறு கொண்டது. இக்கருத்தை அரிஸ்டாட்டிலின் இயற்கை பற்றிய கருத்துக்கள் முதல் இலின்னேயசு (Linnaeus) வகுத்த வகுப்பு (class), பொதுவினம் (Genus), சிறப்பினம் (Species) முதலான கோட்பாடுகள் வரை தொடர்புப்படுத்தி அறியலாம். தொன்மை மானிடவியலாரின் (Classical Anthropologists) இனம் பற்றிய கருத்து அறிவியல்சார் கருத்துக்களிலிருந்தும் மரபியல்சார் கருத்துகளிலிருந்தும் மாறுபட்டது. இவர்கள் அனைவரும் மக்களிடம் இயற்கையிலேயே தனிப்பட்ட பண்புகளைக் கொண்ட ஒரு சிறப்புப் படைப்பு என விளக்கினர்.

'இனம்' என்னும் சொல்லை முதன்முதலில் கி.பி.1749 ஆம் ஆண்டு இயற்கை வரலாற்றியலில் (natural history) பப்பன் (Buffon) என்பவர் கையாண்டார். உடல்சார் மானிடவியலரான (Physical Anthropologist) புளுமன் பேக்கு (Blumenbach) கி.பி. 18 ஆம் நூற்றாண்டில் இனம் பற்றி மிகுதியாக ஆராய்ந்தார். இவர்தம் வரையறையும் கருத்துக்களும் மனித உடலின் புறக்கூறுகள் மீது அமைந்த ஒரு தலைக்கருத்தாகவே காணப்பட்டன. டார்வினின் (Darwin) இயற்கைத் தேர்வு கோட்பாட்டின் வெளிப்பாட்டிலிருந்தே இனத்தின்பால் அறிவியல் சான்றோடு அறியும் போக்கு வலுப்பெற்றது. ஒவ்வொரு சிறப்பினமும் தான் வாழும் சூழ்நிலையில் நிலையான பண்புகளைச் சிதையாமல் நிலைநிறுத்தும் திறனைக் கொண்டிருக்கவில்லை. படிமலர்ச்சி (Evolution) நிகழ்வில் ஒவ்வோரினமும், காலப்போக்கில் தன் பண்புகளில் மாற்றம் பெற்று விடுகிறது. இக்கருத்தினை அடிப்படையாகக் கொண்டே மானிடவியலார் கி.பி. 19 ஆம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து இனம் பற்றிய கருத்துக்களை வெளியிடுவதில் மனிதப் புறப்பண்புகளை விடுத்து, மரபுப் பண்புகளையும், இரத்த வகைகள், அமினோ அமிலங்கள், ஆர்.எச். கூறுகள் (Rh factors) முதலான உடற்கூற்றுப் பண்புகளையும் அடிப்படையாகக் கொண்டு, மனித வேற்றுமைகளுக்கான காரணங்களை அறியமுற்பட்டனர்.

இன்று 'இனம்' என்னும் சொல்லை மானிடவியலார் புனை கருத்துக்கள் கொண்டோ அரசியல், மொழி, சமுதாயம் முதலானவற்றில் புறச்சூழலை

வெளிக்காட்டும் கருத்துக்கள் கொண்டே வரையறுக்கவில்லை. உடல்சார் அடிப்படையில் ஒத்தபண்புகளைக் கொண்ட மக்கள் குழு இனப்பெருக்க மக்கள் தொகை (Breeding Population), மரபு வழி கொண்டு செல்லும் பண்புகளைக் கொண்ட மக்கள் குழு ஆகியவற்றையே 'இனம்' என்று இக்கால மானிடவியலார் வரையறை செய்வர். மனித குலத்தைக் குறைந்த எண்ணிக்கையிலான இனங்களாகக் குறிக்கும் முற்கால இன வரையறை இக்கால மானிடவியலாளரால் மாற்றியமைத்துக் கூறப்படுகிறது. இனம் என்னும் சொல்லுக்குப் பதிலாக இனக்குழுக்கள் (Ethinic groups) என்னும் சொல்லை வழக்கில் கொண்டு வர முனைகின்றனர். பாரீசில் உலக நாடுகளின் கல்வி அறிவியல் பண்பாட்டுக் கழகம் (UNESCO) 1967 ஆம் ஆண்டு வெளியிட்ட 'இனம்' பற்றிய வெளியீடு, இனம் என்னும் சொல்லை நாடு, சமயம், புவியமைப்பு, மொழி, பண்பாடு ஆகியவற்றைச் சார்ந்த குழுக்களோடு தொடர்புப்படுத்தலாகாது எனக் கூறுகிறது. பண்டைக் காலந்தொட்டே மேற்கூறிய சொற்களோடு 'இனம்' என்னும் சொல் தவிர்க்க முடியாமல் சொல் வழக்கில் வந்து விட்டதால் இச்சொல்லைக் கைவிட்டு இனக்குழுக்கள் என்னும் சொல்லைப் பயன்படுத்த வேண்டும் என அவ்வெளியீடு கூறுகிறது.

இனங்களுக்கிடையில் காணப்படும் வேறுபாடுகள், ஒவ்வோரினத்திலும் அதன் மக்கள் குழுவினர் கொண்டுள்ள மாறுபட்ட பண்புகளைக் குறிப்பதாகும். இரு பண்புகள் தொடர்ச்சியான மாற்றங்களைப் பெற்று வருவன. மனிதக்குழுக்கள் சார்ந்துள்ள புவியமைப்பு, சூழ்நிலை, காலநிலை, உணவுமுறை முதலானவை நெடுங்காலமாகச் செயற்பட்டு ஒவ்வொரு மக்கள் குழுவையும், அதன் மரபுப்பண்பை மாற்றும் தன்மை கொண்டவை.

தொன்மைக் காலத்தில் மனிதகுலம் வெவ்வேறு சூழ்நிலையில் எண்ணிக்கையில் குறைந்து காணப்பட்டது. காலத்தினூடே படிமலர்ச்சி நிகழ்வில் மனிதக் குழுக்கள் பெரிய நிலப்பரப்புகளிலிருந்து வெவ்வேறு திசைகளில் இடம்பெயர்ந்தன. மலைத் தொடர்களாலும், பாலை நிலங்களாலும், கடல்களாலும் ஒதுக்கப்பட்ட புவிப்பரப்பில் வாழ்ந்த மக்களினங்கள் வாழும் தன்மையில் தகவமைந்து மென்மேலும் நுண்ணிய மாறுபாடுகளைப் பெற்றன. இம்மாற்றங்களின் அடிப்படையில் இனங்களை புவியமைப்புசார் இனங்கள் (Geographical Races), வட்டார இனங்கள் (local races), நுண்ணினங்கள் (Microraces) என வகைப்படுத்தலாம்.

**புவியமைப்பு சார் இனங்கள்**

மனித இனங்களின் வளர்ச்சியிலும், வேறுபாடுகளிலும் இயற்கையின் தாக்கம் மிகுதியானது. பண்டைக் காலத்தில் மனிதர்கள் குறிப்பிட்ட எண்ணிக்கையிலான நிலப்பகுதிகளில் மட்டுமே வாழ்ந்திருந்தனர். பின்னர் அவர்கள் பூமியின் பல்வேறு இடங்களுக்கு உயரமான மலைகள், அகன்ற ஆறுகள், அடர்ந்த காடுகள், செழிப்பற்ற பாலை நிலங்கள் முதலான இயற்கைத் தடைகளைக் கடந்து இடம்பெயர்ந்து வாழ முற்பட்டனர். இறுதியில் வரலாற்றுப் போக்கில் பூமியின் அனைத்துக் கண்டங்களிலும் வேறுபட்ட சூழ்நிலை, கால நிலைகளையுடைய அனைத்து நிலப்பரப்புகளிலும், மனித வாழ்க்கை பரவிவிட்டது. ஒவ்வொரு இயற்கைச் சூழலிலும் வாழும் மனிதக்குழு ஒவ்வொன்றும் தான் சார்ந்துள்ள நிலப்பரப்பின் தன்மைக்கேற்றப் பண்புகளைப் பெற்று விடுகிறது. இதனால் மக்களிடையே புறப்பண்புகளிலும் உடற்கூற்றுப் பண்புகளிலும் ஒவ்வொரு பகுதி மக்களும் ஏதோ ஒரு வகையில் தனிப்பட்டவர்களாகக் காணப்படுவர். இவ்வித மக்கள் இனத்தையே புவியமைப்புசார் இனங்கள் எனக் கூறுவர்.

இவ்வினம் இயற்கையினால் அமையப் பெறுவது. புவிப்பரப்பால் பகுக்கப்படுவது. வேற்று நிலப்பரப்பு மக்களிடமிருந்து வேறுபடுவது. புவியமைப்புசார் இனங்கள் பற்றி தெளிவாக விளக்கும் போது, மிகப்பரந்த நிலப்பரப்புகளைக் கொண்ட கண்டங்களைக் குறிப்பிடுவதே பொருத்தமானது. புவியமைப்புசார் இனங்கள் பெரும்பாலும் ஒரு குறிப்பிட்ட கண்டத்தைச் சார்ந்ததாகக் காணப்படினும் சில இனத்தவர்கள் பிற கண்டங்களிலும் காணப்படுகின்றனர்.

**வட்டார இனங்கள்**

புவியமைப்புசார் இனங்கள் அனைத்தும் பல வட்டார இனப்பெருக்க மக்கள் தொகைகளை (local breeding population) உடையன. குறைந்த எண்ணிக்கையுள்ள மக்கள் தொகையுடைய வட்டார இனங்கள் மொழியாலும், மரபுப் பண்பாலும், பண்பாட்டாலும் மிகுந்த ஒற்றுமையைப் பெற்றிருக்கும் வட்டார மக்கள் தொகை (local population) என்று கூறப்படும் வட்டார இனங்கள் ஒரு குறிப்பிட்ட பகுதியைச் சார்ந்திருக்கும் பண்பினைக் கொண்டுள்ளதால் அவர்கள் பேசும்மொழியில் ஒன்றாகக் காணப்படுவர். அமெரிக்க இந்தியர்கள் எனப் பொதுவான பெயரைக் கொண்ட மக்கள்தொகையில் 100க்கும் மேற்பட்ட வட்டார இனங்கள் காணப்படுகின்றன. தமிழகப் பகுதியில் வாழும் பழங்குடிகளுள் தோடர், படுகர், இருளர், காடர் போன்ற மக்களனைவரும் ஒவ்வொரு வட்டார இனங்களாகவும், ஆந்திரப் பகுதியில் வாழும்

செஞ்சுகள், எருகுளர், இலம்பாடி போன்றோர் ஒவ்வொருவரும் தனித்தனி வட்டார இனங்களாகவும் காணப்படுகின்றனர். வட்டார இனத்தைப் பற்றி துல்லியமாக வரையறை செய்யும் போது ஒவ்வொரு பழங்குடியும், ஒவ்வொரு சாதிக்குழுவும் தனித்தனி வட்டார இனமென்றே கூற வேண்டும். இதைப்போன்றே இந்தியாவின் ஒவ்வொரு பகுதியிலும் மொழி, பண்பாடு, மரபுப்பண்பு முதலானவற்றின் அடிப்படையில் பல வட்டார இனங்கள் காணப்படுகின்றன.

**நுண்ணினங்கள்**

வட்டார இனப்பெருக்க மக்கள் தொகையைக் கொண்ட மக்கள் குழுவே வட்டார இனங்களாகும். நுண்ணினங்கள் என்பன நெருக்கமான தொடர்பினைப் பெற்ற தனித்த இனப்பெருக்க மக்கள் தொகை (Isolated Breeding Population) ஆகும். சமூகம், சாதி, சமயம் முதலியவற்றின் அடிப்படையில் அமையப்பெறும் இனப்பெருக்கக் குழுவும் நுண்ணினமே. சமயம், சாதி முதலான சமூக அமைப்புகள் பல விலக்குகளையும் பல தடுப்புகளையும் விதித்து, நுண்ணினத்தின் தனித்தன்மைக் காத்து நிற்கின்றன.

மனித குலத்தைப் பாகுபடுத்துவதில் தலையான அலகாகக் காணப்படுவது இனமே. மனித இனங்களை அடையாளம் காணவும், வகைப்படுத்தவும் மனித இனங்களின் தோற்றத்தினை ஆழ்ந்து அறியவும் இனங்களுக்கிடையில் காணப்படும் வேற்றுமைகள் மனிதச் செயற்பாடுகளில் கொண்டுள்ள தொடர்புகளை அறியவும் மனித இனங்களின் உயிரியல் பண்புகளைக் கண்டறிய வேண்டும். உடல்சார் மானிடவியலார் மனித இனங்களை வகைப்படுத்தியதில் பல கருத்துக்களை ஏற்றுக் கொண்டுள்ளனர். இனத்தை வகைப்படுத்துவதில் பழைய அலகுகளாக நிறம், மயிர், வடிவம், மனித உடலளவு முதலியவற்றைக் கையாண்டனர். நெடுங்காலமாகவே புவியமைப்பு சார் இனங்களும், வட்டார இனங்களும், கண், தோல், மயிர் முதலானவற்றின் நிறங்களை அடிப்படையாகக் கொண்டே பாகுபடுத்தப்பட்டன. வெள்ளை மனிதன், கறுப்பு மனிதன், மஞ்சள் மனிதன், சிவப்பு மனிதன், தோல் நிறம், மயிர் வடிவம், தலையமைப்பு முதலானவையும் பழைய அலகுகளாகும். இனங்களை வகைப்படுத்துவதில் புதிய அலகுகளாக இரத்தக் கூறுகளையும் (Blood Traits) பிற மரபுப் பண்புகளையும் பெரிதும் கையாளுகின்றனர்.

**இனம் சொல்லும் பொருளும்**

பழந்தமிழ் இலக்கியங்களில் இனம் என்ற சொல் நூற்றுக்கும் மேற்பட்ட இடங்களில் காணப்படுகின்றது.[28]

*தொல்காப்பியம், திருக்குறளில் இடம்பெறும் 'இனம்' என்ற சொல்லை ஆராய்ந்தால் ஓரளவு இச்சொல்லுக்குரிய பொருள் காலந்தோறும் விரிவடைந்து வந்திருப்பதை அறிய முடிகிறது. குடி, குலம், திணை, உம்பல், தோன்றல், மருகன் போன்ற சொற்களும் 'இனம்' என்ற சொல்லோடு தொடர்புடையனவாதலின் அவையும் இங்கு ஆராயப்பெறுகின்றன.*

*தமிழில் கிடைக்கும் முதல் நூலான தொல்காப்பியத்தில் எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று அதிகாரங்களிலும் சில இடங்களில் 'இனம்' என்ற சொல் கையாளப்பட்டுள்ளது. இனம், இனப்பொருள், இனமணி, இனமொழி, இன ஒற்றுமை போன்ற சொற்கள் பயின்று வருகின்றன. வகை, நெருக்கம், உறவு போன்ற பொருள்களைக் குறிப்பதற்கு இச்சொல் பயன்பட்டு வந்துள்ளது. உயர்திணைப் பொருள்களின் கூட்டத்தைக் குறிப்பதற்கு இச்சொல் வரவில்லை. சங்க இலக்கியங்களில் நூற்றுக்கும் மேற்பட்ட இடங்களில் காணப்படும் இச்சொல் நேரடியாக மனித இனத்தைக் குறிக்காமல் விலங்கு, பறவை ஆகியவற்றின் தொகுதியைச் சுட்டிக்காட்டுவதற்குரிய குறியீடாகக் கையாளப்பட்டுள்ளது. ஒரு சில இடங்களில் மட்டுமே மாந்தர் குழுவைக் குறிக்கின்றது.*

நல்லத னலவனும் தீயதன் றீமையும்
இல்லை யென்போர்க் கின்னா கிலியர் (புறம்.29:12)
இருங்கிளை யினனொக்கல்
கருந்தொழில் கலிமாக்கள் (பட்.61:62)

*எனவரும் எடுத்துக்காட்டுகளில் 'இனன்' என்ற சொல் சுற்றத்தினைக் குறிக்கிறது.*

இனக்களமர் இசை பெருக (பொருந.194)

*எனவரும் எடுத்துக்காட்டில் 'இனம்' என்பது ஒத்த தொழில் செய்யும் ஒரு வகையினராகவும்,*

தகை மிகு தொகை வகை யறியுஞ் சான்றவரினம்
(கலி.39:47)

*எனவரும் இடத்தில் 'இனம்' என்பது சான்றோர் கூட்டத்தையும்*

விலை வேண்டா ரெம்மினத்தாயர் மகளிர் (கலி.103:71)

*எனவரும் எடுத்துக்காட்டில் 'இனம்' என்பது ஒரு குலத்தினரையும் சுட்டிக்காட்டுகின்றது. இவையன்றிப் பிற இடங்களில் வரும்.*

| | |
|---|---|
| இன நாரை | (பொருந. 204) |
| இன வண்டு | (முல்லை. 3) |
| இன நிரை | (நெடுநல். 4) |
| களிற்றினம் | (மதுரைக். 242) |
| எருமையினம் | (மலைபடு. 472) |
| உழையினம் | (குறுந். 68:2) |
| வெருகினம் | (குறுந். 139:2) |
| வண்டினம் | (ஐங். 240:2) |

*போன்ற சொற்கள் நீரிலும், நிலத்திலும் வாழும் விலங்குகளின் 'திர'ளைக் குறிப்பதற்கு வந்துள்ளன. விலங்குகளைச் சார்ந்து வரும் பொழுது இச்சொல் பொதுவாகத் 'திரள்' கூட்டம், 'நிரை' என்ற பொருள்களைத் தருகின்றது.*

*'இனம்' என்ற இதே சொல் பிற்கால இலக்கியங்களில் மனிதர்களைச் சார்ந்து வரும் பொழுது சிறிது வேறுபட்ட பொருள்களையும் தருகிறது. கூட்டம் (குறள்.401, 460, 462, 568, 822, 884) சுற்றம் (குறள் 793, 868, 1158) உற்றார் (குறள் 822) உறவுடையார் (குறள் 306) சார்பு (குறள் 446) நல்லோர் (குறள் 568) ஆகிய பொருள்களில் திருக்குறளில் கையாளப்படுகின்றது.*

*கூட்டம் என்பதை ஒரு வகையிலும், நல்லோர் என்பதை இன்னொரு வகையிலும் 'சுற்றம்', 'உறவு', 'சார்பு' ஆகியவற்றைப் பிறிதொரு வகையிலுமாகப் பிரிக்கலாம்.*

*கூட்டம் என்பது பொதுவாக மனிதர்களின் குழுவை, மனித திரட்சியைக் குறிக்கும். மற்ற இரண்டு வகைகளையும் நோக்க இது விரிந்துபட்ட பொருளினைக் கொண்டதாகும்.*

*நல்லவர், தீயவர் எனப்பண்பின் அடிப்படையில் நின்று பொருள் தரும் இரண்டாவது வகை முதல் வகையை விடச் சற்று சுருங்கிய பொருளுடையது. ஒரு பெருங்கூட்டத்தை அல்லது குழுவைச் சிற்சில கோணங்களில் பதித்துப் பார்த்து உணர்த்தும் தன்மை இதில் அமைகிறது.*

சுற்றம், உறவு, சார்பு என்ற பொருளைத் தரும் மூன்றாவது வகை ஏனைய இரண்டைவிடச் சுருங்கிய பொருளுடையன. ஒரு குடும்பம் அல்லது குடிவழி என்கின்ற வகையில் இவ்விடத்தில் பொருள் தருகின்றது. இன்னொரு வகையில் கூறின் இங்கே 'இனம்' என்ற சொல் இரத்தத் தொடர்புடைய ஒரு குழுவைக் குறிப்பதோடு நின்று விடுகின்றது.

இவ்வாறு இரத்தத் தொடர்புடைய பொருள்களையும் சுற்றம், உறவு, சார்பு ஆகிய விரிந்த பொருள்களையும் குறிப்பதற்குரிய சொற்கள் இலக்கியங்களில் பல பயின்று வருகின்றன. நிகண்டுகள் அவற்றைக் கீழ்வருமாறு தொகுத்துத் தருகின்றன.

> ஒக்கல், சுற்றம், உறவு, கிளை, கேள், நட்பு, மேவினர், சார்ந்தவர், உற்றார், பந்தம், கூளி, கடும்பு, குடும்பம், நந்தமர், சிறந்தோர், நட்டோர், இகுளை, நள்ளி, நண்பு, பற்றினர் ஆகிய சொற்கள் உறவு, சுற்றம் ஆகியவற்றைக் குறிக்கும் சொற்களாகவும்[29]
>
> தாயத்தர் ஞாதியர் ஆகிய சொற்கள் ஒரு குடிச்சுற்றத்தைக் குறிக்கும். சொற்களாகவும்[30]
>
> சங்கம், குழு, கூட்டம், கணம், அவை, சபை ஆகிய சொற்கள் திரண்டோர் பெயரைக் குறிப்பதற்குரிய சொற்களாகவும்[31]

நிகண்டுகளில் இடம் பெறுகின்றன.

> இனம் என்ற சொல்லுக்குத் தமிழ்ப் பேரகராதி வருக்கம், குலம், சுற்றம், நிரை என்ற பொருள்களைத் தருகிறது[32]

இதற்குரிய ஆங்கிலச் சொல்லான ரேஸ் (Race) என்னும் சொல்லுக்கு ஆங்கிலப் பேரகராதி பத்துக்கும் மேற்பட்ட பொருள்களைத் தருகிறது.

ஒரு பொது மூதாதையரிடமிருந்து தோன்றிய சில பொதுப்பண்பினையுடைய வரையறுக்கப்பட்ட குழுவினர் என்ற பொருள் தமிழ் இலக்கியங்கள் விளக்கும் பொருளுக்கு இணையானதாக உள்ளது. பல குலமரபுகள் (Tribes) இணைந்து பொதுவாக உருவான ஓர் இன மரபினர் (Ethnic) என்றும் சிறிது விரிந்த பொருளை ஆங்கிலப் பேரகராதி தருகிறது.[33]

இலக்கியங்களும் பேரகராதிகளும் இத்தகைய விளக்கங்களைத் தந்தாலும் இன்றைய மானிட இயல் சொல்லை உயிரியல் (Anthropologist) பெரும்பாலும் 'இனம்' என்ற சொல்லை உயிரியல் (Biology) சார்புப் பொருளிலும், விலங்கியல் (Zoology)

சார்புப் பொருளிலும் விளங்குகின்றது. குறைந்தபட்சம் உலகில் "பாதி மனித குலம் இன நோக்கில் பெரிதும் கலப்பானதே" என்றாலும் பௌதிக மானிட இயலார் (PhysicalAnthropologist) இன்னும் உடலியல் தன்மைகளை விடாது வற்புறுத்தியே வருகின்றன. உடலியல் தன்மைகளில் சில குறித்த சேர்க்கைகள் கணிசமாக நிலைத்த வம்சவழித்தன்மை கொண்டவை. இத்தகைய சேர்க்கைகள் பெற்றிருப்பவர்கள் ஒரு குறித்த இனத்தைச் சேர்ந்தவராக எண்ணலாம் என்று உருகிய மானிட இயல் அறிஞர்கள் இனத்தை விளக்குகின்றனர்.[34]

> இயல்பாய் அமைந்திருக்கும் (Innate) மாற்ற முடியாத (Unmutable) உடற்கூறுகளை உடைய பெருங்குழுவை ஓர் இனம் என்று கூறலாம் என்றும் கூறுவர்.[35]
>
> மானிட இயல் அறிஞர் பிறரும் இனத்தை இவ்வாறே விளக்குவர்[36]

இருப்பினும், தற்பொழுது இக்கொள்கைஓரளவு நெகிழ்வு பெற்று வருகிறது. கோபாலகிருஷ்ணன் என்னும் மானிடவியல் பேராசிரியர் 'இனம்' என்ற சொல்லுக்குரிய விளக்கத்தைக் கீழ்வருமாறு தருகிறார்.

மனித இனம் (Mankind) பல வேறுபாடுகள் உள்ள மக்களைக் கொண்டது. இந்த வேறுபாடுகள் உடல் அமைப்பையோ (Morphological feature) அல்லது உடல் அளவையோ (Metrical feature) அடிப்படையாகக் கொண்டிருக்கலாம். இவை இணக்கத்துக்கு உட்படாதவை (Non.adaptive)களாகவும், ஒரு பொதுக்கால் வழியில் (Commondecent) வந்தவைகளாகவும் இருக்கும். இப்படிப்பட்ட பிரிவுகளையே இனம் (Race) என்கிறோம். எனவே,

> இனம் என்பது மக்கள் இனத்தில் பெரும் பிரிவு, ஒரு பொதுத் தோற்றமும் (Common appearance) ஒரு பொதுக்கால் வழியும் அமைவது இயல்பு என நெகிழ்வுடைய பொருளில் இனம் என்ற சொல்லை விளக்குகிறார்.[37]

'இனம்' என்ற சொல்லுக்குப் பழந்தமிழரும் இன்றைய ஆய்வாளர்களும் கொண்டுள்ள பொருள் ஏறக்குறைய ஒத்துச் செல்வது இங்குக் சுட்டத்தக்கது. எனினும் ஒரு சொல்லுக்கு ஒரு பொருள் என்ற வரையறுக்கப்பட்ட தன்மை இரண்டிலும் காணப்படவில்லை. எனவே 'இனம்' என்ற சொல் மிகுந்த பொருள் விரிவுடையது எனலாம்.

*இரத்த உறவுடைய பொருள்களைச் சுட்டும் குடி, குலம், திணை என்ற சொற்கள் 'இனம்' என்ற சொல்லோடு நெருங்கிய தொடர்புடையன. தொல்காப்பியத்தில் 'திணை' என்ற சொல் பெரும்பாலும் 'ஒழுக்கம்' என்னும் நிலம் என்ற பொருளில் கையாளப்பட்டுள்ளது. எனினும் இச்சொல்லின் தொடக்கக் காலப்பொருள் மூலப்பொருள் குடும்பம், கணம், குடியிருப்பு என்பனவாகவே இருந்திருத்தல் வேண்டும். தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியத்திலும் இதற்குச் சான்றுகள் கிடைக்கின்றன.*

திணைதொறும் மரீஇய திணை நிலைப்பெயர் (தொல்.அகத்.20)
நின்முன் திணை முதல்வர் (பதிற்.14:20, 72:4)
துளங்கு குடி விழுத்திணை (பதிற் 31:13)
விளங்கு திணை வேந்தர் (புறம் 373:28)
ஆடுகுடி மூத்த விழுத்திணை (புறம் 24:28)
வேற்றுமையில்லா விழுத்திணை (புறம் 26:3)
வசையில் வான்திணைப் புரையோர் (குறிஞ்சிப் 205)
வசையில் விழுத்திணை (புறம் 159:27)

*எனவரும் பழந்தமிழ் எடுத்துக்காட்டுகள் குடி, குலம் ஆகிய பொருள்களைச் சுட்டிக்காட்டுவனவேயாகும். இத்திணையின் பொருள் காலப்போக்கில் விரிவடைந்து நிலத்தையும் நிலத்தைச் சார்ந்த ஒழுக்கத்தையும் சுட்டிக்காட்டியது எனலாம். 'திணை' என்ற சொல்லைப் போலவே 'குடி' என்ற சொல்லும், குடும்பம், கால்வழி என்ற பொருளில் சங்க இலக்கியங்களில் பல இடங்களில் கையாளப்பட்டுள்ளது. காலப்போக்கில் ஒரு நாட்டின் குடிமக்களையேக் குறிக்கும் அளவிற்கு இதன் பொருளும் விரிவடைந்து விட்டது.*[38]

நல்லிசை முதுகுடி (புறம் 58:3)
மன்பதை காக்கும் நீள்குடி (புறம் 335:8)
கெடா நல்லிசைத் தங்குடி (பதிற் 81:13)
சீர்மிகு சிறப்பின் தொல்குடி (கலித் 105:8)
பண்பின் முதுகுடி (புறம் 391:9)
முரசு கெழு முதுகுடி (புறம் 289:4)
பீடுபெறு தொல்குடி (கலித் 105:2)

*எனவரும் சங்க இலக்கிய எடுத்துக்காட்டுகள் குறிப்பிட்ட ஒரு குழுவினரின் தொன்மையினரையும் இரத்த உறவினையும் சுட்டுகின்றது.*

'குடி' என்ற சொல்லைப் போலவே கணம், குலம் என்ற சொற்களும் ஒரு குறிப்பிட்ட குழுவைக் குறிக்க வரும் சொற்களே எனினும் குடி என்ற சொல் உணர்த்தும் பொருளை விட விரிவுடைய பொருள்களைக் கொண்டவை.

குலம் என்ற சொல் கூடல் என்னும் கருத்துவேரின் அடிப்படையில் வந்தது[39]

என்பார் பாவாணர். குல்-குலம்-கூட்டம் எனப்பொருள் மலர்ச்சி பெறும். இச்சொல் பெற்றோரும், பிள்ளைகளும் கூடும் கூட்டத்தை மரபு வழிக்குடும்பத்தை, உயர் மரபு வழிக்குடும்பத்தை (குறள் 959) உறவினர் தொகுதியை நாடு, மொழி, தொழில், மதம் பற்றிய வகுப்பை ஆரியர் வகுத்த பிறவி வகுப்பை, வருணத்தை இனத்தை (Species) குடும்பம் குடியிருக்கும் வீட்டை (பிங்கலம்) குறிக்க எனப்பல வேறு நிலைகளில் வரும் என்கிறார்.

'கணம்' என்ற சொல்லும் கூட்டம் என்னும் பொருளைத் தரும்சொல்லே[40] ஆகும். தொல்காப்பியத்தில் இடம் பெறும் சாதி (மரபியல். 597, 618) என்ற வடமொழிச் சொல்லும் ஒரு பெருங்கூட்டத்தைக் குறிப்பனவே. பிறப்பை அடிப்படையாகக் கொண்டு இச்சொல் பிறந்ததாகும். மேலும்,

சங்க இலக்கியங்களில் வரும் உம்பல், மருகன் ஆகிய சொற்களும், இரத்தத் தொடர்புடைய பொருள்களைக் குறிக்கும் சொற்களே ஆகும். இச்சொற்களுக்கு வழித்தோன்றல் குடி[41]

என்ற பொருளைத் தமிழ் அகராதியும் நிகண்டும் தருகின்றன. முன்னோர்களின் வழித்தோன்றல் என்ற பொருளில் இச்சொற்கள் இலக்கியங்களில் கையாளப்படுகின்றன.

ஊழி உய்த்த உரவோ ரும்பல் (பதிற் 22:11)
கொற்றத்திருவின் உரவோரும்பல் (பதிற் 90:24)
ஒருதாமாகிய உரவோரும்பல் (புறம் 18:4)
தினாதரு மரபின் உரவோரும்பல் (பெரும்.31)
நல்லிசைச் சென்றோர் உம்பல் (மலைபடு 540)
நெடியோன் உம்பல் (மதுரைக் 61)

எனவரும் சங்க இலக்கிய எடுத்துக்காட்டுகள் மன்னர்களின் குடி வழிச்சிறப்பையே எடுத்துரைக்கின்றன.

மருக, மருகன்[42]

எனவரும் சொற்களும் இதே பொருளிலேயே கையாளப்படுகின்றன.

இவ்வாறாகப் பழந்தமிழ் நூல்களில் பயின்று வரும் திணை, குடி, குலம், கணம், இனம் ஆகிய சொற்கள் ஒன்றுக்கொன்று தொடர்புடைய பொருள்களை உடையனவாக விளங்குகின்றன. விழுத்திணை, தொல்குடி, நல்லினம் போன்ற செய்திகள் தொடக்கத்தில் கால்வழி என்ற பொருளைத் தந்தன. காலப்போக்கில் 'இனம்' என்ற சொல் மட்டும் மிக விரிந்த பொருளைத் தரும் சொல்லாக மாறிவிட்டது. குடி - குலம் - இனம் - பேரினம் என்பதன் வளர்ச்சி இவ்வாறே வரலாற்று வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்டு அமைகின்றது.

### சாதியம் விளக்கம்

இன்றைய சமூகம் பல்வேறு கட்டுமானங்களைக் கொண்டு இயங்குகின்றது. அக்கட்டுமானங்களில் முக்கிய அங்கம் வகிப்பது சாதியாகும். இச்சாதியே இன்றைய சமூகத்தில் பல்வேறு மாற்றங்களை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறது. இது தோற்றம் பெற்ற காலத்தில் இதன் தன்மை வலுப்பெற்று, சமூகக் கட்டுமானத்தை வலுவிலக்கச் செய்துவிட்டது. இன்றைய சமூகத்தில் சாதியின் கொடூரத்தன்மையால் மனிதன் மனிதநேய சிந்தனையிலிருந்து விடுபட்டு விலங்கின் தன்மைக்குச் செல்கின்ற நிலையைக் காணமுடிகிறது. அந்த அளவிற்குச் 'சாதி' என்ற கூறு சமூகத்தில் அங்கம் வகிக்கிறது.

இந்திய மானுட வாழ்வில் சாதி என்பது தவிர்க்க இயலாததாகிவிட்டது. இன்றைய நிலையில் சாதியே அனைத்திற்கும் அடிப்படை நிறுவனமாக விளங்குகின்றது. 'சாதி' எனும் சொல் பல்வேறு நிலைகளில் பல பொருள்களில் வழக்கில் இருந்து வந்துள்ளதை அறிய முடிகிறது. இதைக் குலம், வகுப்பு, வர்ணம், இனம் என்று வகைப்படுத்துவர். சாதியானது தொழில், பொருளாதாரம், சமயம், உடலியல் கூறுகள் போன்ற தன்மைகளால் உருவாக்கப் பெறுகிறது எனலாம். தமிழ்நாடு அரசுப்பணியாளர் தேர்வாணையம் வெளியிட்ட தகவல் சிற்றேட்டில் பட்டியல் வகுப்பினர் 76, பட்டியல் பழங்குடியினர் 36, பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் 143, மிகவும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் 41, சீர்மரபினர் 68 என மொத்தம் 364 வகுப்பினர் தமிழ்நாட்டில் இருக்கின்றனர்[43] என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

### சாதி சொல் விளக்கம்

'சாதி' என்ற சொல்லிற்குப் பிரிவு என்று பொருள். தொல்காப்பியம் நீரில் வாழும் உயிர்களை இப்பொருளில் 'நீர்வாழ் சாதி' (தொல்.மர.44-64) எனக் குறிக்கிறது.

தமிழ் இலக்கண, இலக்கியங்களுள் 'சாதி' என்ற சொல் ஆளப்பட்டுள்ள மிகப்பழைய இடம் இதுவே ஆகும். இச்சொல்லிற்குப் பொருளை வரையறுக்கும் தமிழ்ப் பேரகராதி காலந்தோறும் இச்சொல் அடைந்த பொருளைக் குறிப்பிடுகிறது.

ஆங்கிலத்திலும், பிரெஞ்சிலும் சாதி என்பதை 'காஸ்ட்' (Caste) என்ற சொல் வழியாகச் சுட்டுவர். இச்சொல் 'காஸ்டா' என்ற ஸ்பானிசு மொழிச் சொல்லில் இருந்து தோன்றியதாகும். 'காஸ்டா' (Casta) என்பதற்கு இனம், குலத்தூய்மை போன்ற தலைமுறைப் பண்புகளின் தொகுதி என்பது பொருளாகும். தொடக்கத்தில் இந்தியாவிற்கு வந்த போர்ச்சுகீசியர்கள் இந்தியரிடம் இருந்த சாதி அமைப்பை மேற்கண்ட சொல்லால் சுட்டியுரைத்தனர். மொழி அடிப்படையில் இச்சொல்லின் பொருள் எளிதாக இருப்பினும் சமூகவியலில் இச்சொல்லின் பொருளும் செயல்பாடும் ஆழ்ந்த பொருளுடையவையாக அமைந்திருக்கின்றன.

> சாதி என்ற சொல் குழப்பத்தை ஏற்படுத்துகின்ற சொல்லாகும். இச்சொல் வெவ்வேறு சூழ்நிலைகளில் வெவ்வேறு அர்த்தங்களையும் சமுதாயப் பிரிவுகளையும் குறிப்பிடப் பயன்படுத்தப்படுகிறது.[44]

சாதி என்ற சொல் பல்வேறு இடங்களில் பல பொருள்களைத் தந்து நிற்கிறது.

## சாதி பற்றிய அறிஞர்களின் கருத்துக்கள்

சாதி பற்றி பல்வேறான அறிஞர்களின் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளதை,

> சாதி என்பது ஒரு குறுகிய ஆட்சிமன்றம், கோட்பாட்டு அளவில் பரம்பரை பரம்பரையாக மிகக்கண்டிப்போடு இயங்குவது, ஒரு தலைவனையும், ஒரு ஆலோசனைக் குழுவையும் தன்னகத்தே கொண்ட ஒரு குறிப்பிடத்தக்க மரபு வழியிலான தன்னிச்சையான ஒரு அமைப்பாகும். இவ்வமைப்பு ஏறத்தாழ தன்னிறைவான அதிகாரங்களைக் கொண்ட அவைகளாகச் சில சமயங்களில் கூடும். ஒரு குறிப்பிட்ட விழாக்களின் போது ஒன்று சேரும். திருமணம், உணவு, மரபு ஒழுக்கங்களை மாசுப்படுத்துதல் பற்றிய கேள்விகள் ஆகியவற்றை நெருங்கிய அம்சங்களைக் கொண்ட பொது அலுவல்களால் பிணைக்கப்பட்டிருக்கும். நீதிமன்ற செயல்பாட்டால் தன் உறுப்பினர்களை ஆளும். இத்தகைய நீதிமன்றத்தின் வரம்பு எல்லைகள் வேறுபடலாம். அக்கூட்டத்தின் அதிகாரத் தலைமை உறுப்பினர்களுக்குக் குறிப்பிட்ட சில தண்டங்களை விதிப்பிலிருந்து எல்லாவற்றிற்கும் மேலாக இறுதியாக மாற்ற முடியாத வண்ணம்

உறுப்பினர்களைத் தன் கூட்டத்திலிருந்து நீக்கும் பெருந்தண்டனை விதிக்கும் எல்லை வரை சென்று தன் தலைமையை மற்றவர்களுக்கு உணர்த்தும்[45]

*என்பர் செனார்ட்.*

(சாதி என்பது சமூகத்தின் ஒரு வகுப்பு (Class) இவ்வகுப்பு இதுபோன்ற பிற வகுப்புகளுடனான எத்தகைய தொடர்பையும் மறுதலிக்கும். எந்தவொரு வகுப்பும் மற்ற எந்த ஒரு வகுப்புடனும் திருமணம் செய்து கொள்ளாது. தன்னுடைய சொந்த வகுப்பைத் தவிர்க்க வேறெந்த வகுப்பையும் சேர்ந்த எவருடனும் எதையும் உண்ணவோ அருந்தவோ செய்யாது[46]

*என்று சாதியைப் பற்றி நெஸ்பீல்டு குறிப்பிடுகிறார்.*

சாதி என்பது ஒரு பொதுப்பெயர் கொண்ட குடும்பங்களின் திரட்சியையோ அல்லது அவ்வாறான குடும்பங்களை உள்ளடக்கும் குழுக்களையோ குறிக்கும். இப்பொதுப் பெயரானது ஒரு குறிப்பிட்ட அலுவலைக் குறிப்பதாகவோ அல்லது ஒரு குறிப்பிட்ட அலுவலோடு தொடர்புடையதாகவோ இருக்கும் ஓரியல்பான ஒரு கூட்டத்தின் (Community) உருவாக்கமே சாதி[47]

*என்று சொல்லப்படும் என்கிறார் ரிஸ்லி.*

*சாதியைப்பற்றிக் குறிப்பிடும் கெட்கர் "சாதி என்பது இரு இயல்பொழுக்கங்களைக் கொண்ட சமூகக்குலாம்"[48] என்பர். 1. உறுப்பினராகும் உரிமை உறுப்பினர்களுக்குப் பிறந்தவர்களுக்கு மட்டுமே உரித்தானது. பிறப்பால் அத்தகையவர்கள் அனைவரும் உறுப்பினர்களே என்கிறார்.*

*2. தம் குழாம் தவிர்த்த வேறெந்த வெளிக்குழாத்தில் இருந்தும் மணம் புரிதலில் இருந்து உறுப்பினர்கள் சிறிதேனும் தளர்த்தப்பட முடியாத சமூகச் சட்டத்தால் தடை செய்யப்பட்டிருப்பவர்கள் எனப் பிரிக்கிறார்.*

**அம்பேத்கார்**

*இந்தியாவின் சாதிகள் அதன் அமைப்பியக்கம், தோற்றுவாய் மற்றும் வளர்ச்சி என்னும் நூலில் டாக்டர் பி.ஆர்.அம்பேத்கார் சாதி குறித்து,*

என்னிலும் அறிவுத்தன்மையும், எழுத்துவன்மையும் மிக்க எத்தனையோ பேர் சாதிகள் பற்றிய மர்மப் புதிர்களை அவிழ்க்கும் பெரும் பணியில் ஈடுபட்டனர். ஆனால் கெடு வாய்ப்பாக இப்புதிர் இன்னாள் வரை விளக்கப்படவும் இல்லை,

விளங்கிக் கொள்ளப்படவும் இல்லை. சாதி போன்ற மிகப்பழமையான நிறுவனம் பற்றிய குழப்பமான சிக்கல்களை நான் உணர்ந்தே இருக்கிறேன்[49]

*என வெளிப்படுத்துகிறார். மேலும், நடைமுறையில் சாதி என்பது மாபெரும் பின்விளைவுகளை முன்னறிவிக்கின்ற ஒரு நிறுவனமாகும். சாதி ஒரு வட்டாரப்பிரச்சனை ஆனால் பரந்த அளவில் தீங்களிக்கும் திறன் கொண்டது என்பர்.*

சாதி தான் இந்துக்களின் உயிர்மூச்சாக இருக்கிறது என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. இந்துக்கள் இந்த தேசம் முழுவதையும் சாதி அமைப்பால் மாசுப்படுத்திவிட்டார்கள்[50]

*என்று குமுறுகிறார் அம்பேத்கார்.*

நீண்டநெடுங்காலமாக இந்திய நாட்டிற்கும், மக்களுக்கும் பெரும்வேதனை தரும் பிரச்னையாகச் சாதியம் இருந்து வந்துள்ளது. இன்றும் ஜனநாயக அமைப்பிற்கே பெரும் சவாலாக இருந்து வருகிறது[51]

*என்ற உண்மையை மறுப்பார் கிடையாது என்கிறார்.*

*வர்க்கம், சாதி, நிலம், என்னும் நூலில் திருமதி.கெய்ல் ஓம்வெட்,*

சாதி என்பது ஒரு அமைப்பு முறை. இந்த அமைப்பில் ஒரு ஆண், பெண் எந்த ஒரு குறிப்பிட்ட குழுவில் பிறந்தாரோ, அக்குழுவின் மூலமாகவோ அவருக்குச் சமூகப் பிரதிநிதித்துவம் வழங்கப்படுகிறது. சமூகப்படிநிலை வரிசையில் ஒவ்வொரு குழுவுக்கும் ஒரு குறிப்பிட்ட 'மதிப்பு' வழங்கப்பட்டுள்ளது. இக்குழுவிற்கென ஒத்துக்கொள்ளப்பட்ட குறிப்பான தொழில் அல்லது தொழில்கள் உள்ளன. அக்குழுவிற்குள் மட்டுமே மேற்கொள்ள முடியும். சமபந்தி போஜனம் போன்ற நெருக்கமான சமூக உறவுகளை அக்குழுவுக்குள் மட்டுமே மேற்கொள்ள முடியும். (Roti-Beti-Vyavagar) உணவு-பெண்-விவகாரம் என்ற இக்குழுவானது கட்டுப்பாடானதொரு குழுவாகும். தன் உறுப்பினர்களுக்கென வரையறை செய்யப்பட்ட நடத்தை விதிகளைக் கொண்டது. தன் உறுப்பினர்கள் மீது ஆதிக்கம் செலுத்தவல்லது. குழு அதிகாரத்தை மீறுகிறவர்களை குழுவிலிருந்து நீக்குவதற்கு உரிமை பெற்றது. இப்படியொரு குழுவில் பிறந்த ஒருவர் தன் வாழ்நாள் முழுவதும் அக்குழு உறுப்பினர் ஆவார் (நீக்கப்பட்டாலொழிய) சட்டப்பூர்வமாக வேறொரு குழுவில் ஒருவர் தன்னை இணைத்துக் கொள்ளவே முடியாது[52]

*என்று சாதியைப் பற்றி விரிவாக விளக்கம் அளிக்கின்றார்.*

ஈ.ஏ.எச்.ப்ளண்ட் (E.A.H.Blunt) என்கிற சமூகவியலாளர்,

> பிறப்பினடிப்படையில் தோன்றிய உறுப்பினர்களையும் ஒரு பொதுவான பெயரையும் கொண்ட ஒரு அகமணக்குழுவோ அல்லது அகமணக்குழுக்களின் தொகுதியே சாதி[53]

என்கிறார்.

சாதி என்பதை விளக்க முயன்றோர் பலர் - பலவித வியாக்கியானங்கள் செய்துள்ளனர். பார்வையற்ற சிலர் யானைகளைப்பற்றி பேசிக் கொண்டனராம். ஒருவர் நான் தடவிப்பார்த்தேன். சுவர் மாதிரி யானை இருக்கும் என்றாராம். முதுகைத் தடவிப்பார்த்த ஒருவர் இல்லை இல்லை நான் தடவிப்பார்த்தேன். தூண் மாதிரி இருக்கிறது என்றாராம். காலைத் தடவிப் பார்த்த இன்னொருவர். தும்பிக்கையைத் தடவிப் பார்த்தவாரே உலக்கை மாதிரி இருக்கிறது என்றாராம். யாரும் முழு யானையின் வடிவத்தைக் கூறவில்லையாம். அது போலத்தான் சாதி பற்றிய விளக்கங்களும் அமைந்திருக்கின்றன எனலாம்.

**சாதியின் குணங்கள்**

சமூகவியல் அறிஞர்கள் சாதி முறையின் ஆறு இயல்புகளைப் பின்வருமாறு சுட்டுவர்.

1. சாதி, பிறப்பு வழியில் தீர்மானிக்கப் பெறுகிறது. ஒருவன் எந்தச் சாதியில் பிறக்கின்றானோ, அந்தச் சாதியை அவன் சார்ந்தவனாவான். அதில் இருந்து எக்காரணம் கொண்டும் மாற முடியாது.
2. எந்த உணவை உட்கொள்ளலாம், உட்கொள்ளக் கூடாது என்று சாதி வரையறை செய்கிறது. உணவு அடிப்படையில் சாதி ஒரு காலத்தில் வகுக்கப்பட்டு இருக்கலாம். புலால் உண்ணாதவர் மேல் சாதியினர் என்றும், உண்ணுபவர்கள் கீழ்சாதியினர் என்றும் பிரிக்கப்பட்டுள்ளது. மாட்டு இறைச்சியை உண்போர் மிகமிகக் கீழ் சாதியினர் என்றும் பகுக்கப்பட்டு இருக்கலாம்.
3. சாதிக்குள்ளேயே திருமணம் செய்து கொள்ளும் அகமணமுறை கண்டிப்பாகக் கடைப்பிடிக்கப் பெற்றது.
4. சாதி அமைப்பு உயர்சாதியினரான பிராமணர்களோடு கொண்டுள்ள உறவை மையமாக வைத்துப் பல்வேறு படிநிலைகளாகப் பிரிக்கப் பெற்றது.

5. ஒவ்வொரு சாதியினரும், குறிப்பிட்ட ஒரு தொழிலைத் தலைமுறை தலைமுறையாகச் செய்து வந்தனர். மற்றச் சாதியினர் அத்தொழிலைச் செய்ய அனுமதிக்கப்படுவது இல்லை. தொழில் இதன்வழிப் பேணப்பெற்றது.
6. சாதி தனது உறுப்பினர்கள் மீது அதிகாரம் செலுத்தும் ஆற்றல் வாய்ந்தது. சாதிப் பஞ்சாயத்துக்கு உறுப்பினரைத் தன் குழுவில் வைத்துக் கொள்ளவோ, மீறுபவர்களை விலக்கவோ உரிமை உண்டு.

**சாதியின் தோற்றக் காரணங்கள்**

சாதி என்ற பிரிவு, சமுதாயத்தில் ஒரே நாளில் தோன்றி விடவில்லை. நீண்ட நெடுங்காலத்தில் படிப்படியாகவே தோன்றியிருக்க வேண்டும். இக்கருத்துக்கு அளிக்கப்படும் விளக்கங்கள் பின்வருமாறு,

1. பரம்பரைத் தொழில்.
2. தம்மைச் சுத்தமானவர்களாக வைத்துக் கொள்ள வேண்டும் என்ற மேல்சாதியினரின் விருப்பம்.
3. பல்வேறு மதங்கள் தம்முள் மோதி ஒற்றுமையின்றி இருந்தமை.
4. எல்லார்க்கும் ஒரே விதமான சட்டங்களைக் கொண்டு வருதல், வேறு வேறு வழக்கங்களை வேறு வேறு அரசர்கள் கொண்டு வந்தது.
5. கர்ம வினைகளிலும், மறு பிறவியிலும் கொண்டிருந்த நம்பிக்கை.
6. மூதாதையரை வழிபடுவதும், புனித உணவுப் படையலும்.
7. தாய்வழி, தந்தைவழிப் பண்பாடுகளின் மோதல்கள்.
8. இன, நிற வேறுபாடுகளின் மோதல்கள்.
9. ஆதிக்கக்காரர்கள், ஆங்கிலேயர்கள் பின்பற்றிய பொருளாதாரக் கொள்கைகள்.
10. இந்தியத் துணைக் கண்டத்தின் நிலவியல் அமைப்பு

**இந்தியச் சூழலில் சாதியின் தோற்றம்**

மக்கள் இனக்குழுக்களைச் சாதி என்ற ஒன்றால் பாகுபாடு செய்து வைத்ததில் முக்கியப் பங்கு வகித்தவர்கள் ஆரியர்கள். ஆரியர்கள் இந்தியாவிற்குள் வருவதற்கு முன்பு இந்திய மக்களிடம் பிறப்பால் உடல் அமைப்பால், பண்பாட்டால், பழக்கவழக்கத்தால் பாகுபாடு இல்லை. இவர்கள் வந்த பின்னரே இவற்றில் பாகுபாடு செய்யப்பட்டுக் காலப்போக்கில் வருணப்பாகுபாடு புகுத்தப்பட்டது என்பதற்குக் கீழ்க்கண்ட கருத்து சான்றாக அமைகிறது.

கி.மு.1500இல் ஆரியர்கள் இந்தியாவிற்கு வந்த போது இங்கு வாழ்ந்த மக்களிடையே உடல் அமைப்பாலோ, நிற வேறுபாட்டாலோ, பிறப்பு, வாழ்க்கை நிலை போன்றவற்றாலோ எவ்வித உயர்வு தாழ்வு கற்பித்துக் கொண்ட குழுக்கள் செயல்முறையில் இல்லை. ஆனால் இங்கு வந்தேறிய ஆரியர்கள் உடலாலும் நிறத்தாலும், மொழியாலும், சமயத்தாலும் இந்நாட்டு மக்களிடமிருந்து வேறுபட்டனர். அவ்வேறுபாடுகளைப் பயன்படுத்தி இங்கு வாழ்ந்தோரை தஸ்யூக்கள் அல்லது தாசர்கள் என்று வேறுபடுத்திக் குறிப்பிட தொடங்கினர்.[54]

இந்த வேறுபாடே காலப்போக்கில் வருணப்பாகுபாடாக, சாதிப்பாகுபாடாக மாறியது.

பிராமணர்கள், சத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் என நான்கு வருணத்திராகப் புகுந்து இவர்களுக்கு வேதம் ஓதுதல், புரவி புரத்தல், செல்வம் ஈட்டல், ஏவல் புரிதல் எனத் தொழில் நான்கையும் பகுத்துக் காட்டினர். இப்பாகுபாட்டிற்குச் சான்றாக மனுதரும சாத்திரங்கள் போன்ற நூல்களையும் உருவாக்கினர். இவர்கள்மேற்கொண்ட தொழிலை அடிப்படையாகக் கொண்டு அத்தொழில் வேறுபாடுகளின் தன்மையால் தீட்டு, தூய்மை ஆகிய கருத்தாங்கங்களை ஏற்படுத்தி பல்வேறு வகுப்புகளை ஏற்படுத்தினர்.

ஆனாலும் சாதி என்ற வடிவம் தோற்றம் பெறுவதற்குத் தொழிற் கொள்கை மட்டும் முக்கிய அங்கம் வகிக்கவில்லை. உடல் அமைப்பு, நிறம், பழக்கவழக்கம் முதலிய கூறுகளும் முக்கிய அங்கம் வகித்தன. இக்கருத்துக்கு அரணாக ஹட்டன் (Hutton) பின்வருமாறு கூறுகிறார்.

சாதிகளின் படிநிலை வளர்ச்சிக்குத் தொழிற்பிரிவுகள் ஒரு காரணியாகத்தான் செயல்பட்டனவே தவிர அவை முழுமையான விளைவை ஏற்படுத்தவில்லை.[55]

இந்தியாவிற்குள் நுழைந்த ஆரியர்கள் தங்களின் வாழ்க்கையை மேம்படுத்திக் கொள்வதற்காகச் 'சாதி' என்ற ஒரு கருவியைக் கையில் எடுத்துக் கொண்டனர். இவ்வலுவான ஆயுதத்தைப் பயன்படுத்திக் கொண்டு இந்தியச் சமூகத்தின் பழங்குடிகளைச் சிறுசிறு கூட்டமாகச் சிதறடித்தனர் என்ற குர்ரேயின் (G.S.Churye) கருத்து இங்கு ஒப்புநோக்கத்தக்கதாக உள்ளது. பிராமணர்கள் சமுதாயத்தில் உயர்ந்த தகுதியைப் பெற்று அதன் மூலம் பல்வேறு சலுகைகளை அனுபவிக்கும் பொருட்டு அவர்கள் செய்த சூழ்ச்சியால் சாதிகள் தோன்றின.

*சமயச்செயல்களையும், சடங்குகளையும் செய்யும் பொருட்டு உணவு, குடிநீர், திருமணம் போன்றவற்றின் மீது சில கட்டுப்பாடான விலங்குகளை ஏற்படுத்திக் கொண்டு ஓர் அகமனக்குழுவினர் இவையனைத்தும் மற்ற பிரிவினரையும் அவர்தம் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர உதவின. அதன்பின்னர் பிராமணர்கள் மற்றவர்கள் மீது அதிகாரம் செய்யத் தொடங்கினர்.*

> சாதி என்பது இந்திய ஆரியப்பண்பாட்டில் ஏற்பட்ட பிராமணக்குழந்தை. சாதி என்னும் குழந்தை முதலில் கங்கைப்படுகையில் தவழ்ந்து வளர்ந்து பின்னர் அவர்களால் இந்தியாவின் பிற பகுதிகளிலும் வேரூன்றியது.[56]

*ஆகவே சாதி என்ற ஓர் அமைப்பு தோன்றுவதற்கு ஆரியர்கள் முக்கியப் பங்கு வகித்தனர் எனலாம். மேலும் இவர்கள் தங்களை உயர்த்திக் கொள்ள வேண்டும் என்ற நோக்கத்திற்கு மட்டுமே இச்சாதிப்பாகுபாட்டை உருவாக்கவில்லை. இந்நோக்கத்தோடு இந்தியப் பழங்குடிகளைப் பல்வேறு நிலைகளில் சிறுமைப்படுத்த வேண்டும் என்ற நோக்கமும் இருந்திருக்கிறது என்ற கருத்தையும் அறிந்து கொள்ள முடிகிறது.*

> சாதி அமைப்புடைய சமுதாயம் தோன்றியதற்குப் பல காரணிகள் செயற்பட்டிருந்தாலும் அவை அனைத்தும் பிராமணர்கள் முதன் முதலில் முதுகுடிகளைச் சமயச் செயல்களிலிருந்து நீக்க மேற்கொண்ட முயற்சிகளிலிருந்தும் சமுதாயத்தில் அவர்களோடு மற்றவர்கள் சேர்ந்து செயல்படுவதைத் தடுக்க மேற்கொண்ட முயற்சிகளிலிருந்தும் ஏற்பட்ட விரிவாக்கங்களே ஆகும். ஆரியர்கள் தங்களை உயர்ந்த இனத்தினர் என அவர்களாக எண்ணிக் கொண்டதுடன் திராவிடர்களை தஸ்யூக்கள் என்றும், கீழினமென்றும் அதனால் அவர்கள் தாழ்வான பணிகளையே செய்ய வேண்டும் என்றும் கூறிக் கொண்டனர். ஆரியர்களின் இவ்வாறான இனப்பண்பாட்டு உயிர்வாதங்கள் சாதி வேறுபாடுகளைத் தோற்றுவித்தன. தீண்டாமைச் சாதிகள் என்னும் மற்றொரு பிரிவையும் தோற்றுவித்தன[57]

*என்ற கருத்து இங்கு எண்ணத்தக்கதாகும்.*

*இவ்வாறு இந்தியாவிற்குள் நுழைந்த ஆரியர்கள் தங்கள் வாழ்க்கை மேம்பாட்டிற்கும் இந்தியப் பழங்குடிகளைப் பல்வேறு நிலையில் தாழ்மைப்படுத்துவதற்கும் சாதி என்ற பாகுபாட்டை உருவாக்கினர். இவர்கள் உருவாக்கிய சாதியக் கட்டுமானம் காலப்போக்கில் இந்தியப் பழங்குடிகளுக்குள்ளே உயர்வு தாழ்வை ஏற்படுத்திச் சமூக வளர்ச்சிக்குப் பெரும் இடையூறாக அமைந்தன. இதே நிலையே தமிழகத்திலும் நிலவியது. ஆரியர்களால் உருவாக்கி வைக்கப்பட்ட*

இச்சாதி தமிழ்ச்சமுதாயத்தையும் பல்வேறு படி நிலைகளில் தாக்கியது. மக்கள் ஒற்றுமையைச் சிதறடித்தது. சாதியால் உயர்வு, தாழ்வு ஏற்படுத்தப்பட்டுத் தீண்டத்தகாதவர்கள் என ஒதுக்கப்பட்ட சமூகம் பல கொடுமைகளுக்கு உள்ளாக்கப்பட்டது. தீண்டாமை மனித உணர்வுகளையே பாதித்தது.

**தமிழகச் சூழலில் சாதியின் தோற்றம்**

'சாதி' என்னும் சொல் தொல்காப்பியத்தில் காணப்படுகின்றது. ஆனால் இச்சொல் மக்களைக் குறிக்கும் சொல்லாக வழங்கப்படவில்லை.

'சாதி' என்னும் சொல் நீரிலே வாழும் உயிர்களையே குறிக்கின்றது. பிறப்பிலே வேற்றுமையுண்டு என்பதைக் குறிப்பதே சாதி என்னும் சொல். சாதி-ஜாதி; ஜம்-பிறப்பு, ஜனித்தல்-பிறத்தல், ஜன்மம்-பிறப்பு என்பன நோக்கத்தக்கன.

நீர்வாழ்சாதியுள் அறுபிறப்பு உரிய (தொ.பொ.மர.44)

நீரில் வாழும் பிறவிகளுள் ஆறு வகைப்பட்ட பிரிவுகள் உண்டு என்கிறார் தொல்காப்பியர்.

நீர்வாழ்சாதியுள் நந்தும் ஒன்றே (தொ.பொ.மர.64)

நீரில் வாழும் பிறவிகளிலே நத்தையும் ஒன்றாகும் என்று குறிப்பிடுகிறார் தொல்காப்பியர்.

பண்டைய பொதுமைச் சமுதாயத்தில் இத்தகு பிறப்பு அடிப்படை வேறுபாடுகள் எதுவும் இல்லை. பிரிவு ஆணுக்கும், பெண்ணுக்கும் இடையே அமைந்த வேலைப்பிரிவாகும். இதுவும் உயர்வு-தாழ்வு, ஆதிக்கம்-அடிமை என்ற நிலையில் தோன்றியிருக்க வாய்ப்பில்லை. தமிழகத்தில் உடல் உழைப்போடு தொடர்புடைய உழைப்பிற்கு மதிப்பு இருந்தவரை மாந்தரிடையே மேலோர், கீழோர் என்ற பிரிவு தொடக்கத்தில் ஆளுவோர், அவர் கீழ் வாழுவோர் என்ற அடிப்படையில் தோன்றியிருத்தல் கூடும். ஒருவன் குழுவின் தலைமையை வலிமை, திறமை, முதுமை ஆகியவற்றால் அடைந்தான். ஆண்மகன் அப்பொறுப்பை நிலையாக்க அல்லது வாரிசு உரிமையாகத் தலைமையை அனுபவிக்க, தான் சேர்த்த உடைமையைத் தன் வாரிசில் உள்ளோர் நுகர்தற்குரிய வாய்ப்பாகத் 'திருமணம்' என்ற சடங்கு முறையை முதலில் அமைத்துக் கொண்டிருக்க வேண்டும்.

இம்முறையால் ஒரு தலைவனுக்குப் பிறகு பிறிதொரு தலைவனை வலிமை, முதுமை, திறமை எனும் அடிப்படையில் தெரிவு செய்யும் முறைமை மாறித் தலைவனின் மகன் தலைவன் என்ற வாரிசு உரிமை தோன்றியது. தந்தை அரசனாயின் அவன் மகனும் அவ்வுரிமைக்குரியவன் எனும் வாரிசுரிமை ஒரு கோட்பாடு போல் ஆயிற்று. தலைமை உரிமை பிறப்பு வழித் தீர்மானிக்கப் பட்டது போல சாதியின் ஊற்றுக்கண் பிறப்பு வழி அமைந்துவிட்டது. தான் முதற்கட்ட நிலையாகும். அடுத்தக்கட்ட விரிவாக்கமாகத் திருமண முறையால் கிடைக்கிற சொத்துரிமையால் சொத்து வெளியே செல்லாதவாறு, அடுத்துள்ள குழுவின், குழுத்தலைவனின் அல்லது இரத்தத்தொடர்புடைய உறவில் திருமணம் முடிக்க வேண்டும் என்ற நிலைமை தோன்றியது. தமிழகத்தில் சிலர் அக்காள் மகளை மணந்து கொள்ளும் முறை இன்றளவும் உள்ளது. இது சொத்து வெளியே போகாமல் தடுப்பதற்கு அமைந்தது. வாரிசு உரிமைக்காகவும், சொத்து உரிமைக்காகவும் பிறப்பு அடிப்படையில் உருவான தலைவன் குடிவழி அகமணமுறை அரசியல் கட்டாயமாயிற்று. சாதியின் முதல் இறுக்கம், பிறப்பு என்றால் அதன் இரண்டாவது இறுக்கம் அகமண முறையாக அமைகிறது.

தமிழகத்தைப் பொறுத்தவரைத் தலைமைக்குடி வழி அல்லது அரசக்குடி வழியே சாதியத் தோற்றத்திற்குத் தொடக்கமாக இருந்திருக்க வேண்டும். தலைவனின் மகன் தலைவன் என்ற பிறப்புரிமை, அதற்காக அமைந்த அகமண முறை ஆகிய மேல்நிலை ஆதிக்கம் ஏனைய மக்களாலும் காலப்போக்கில் மெல்ல, மெல்ல பின்பற்றப்பட்டிருத்தல் வேண்டும்.

சாதி, சமுதாயத்தில் மிக ஆழமாக வேர்விட்டுள்ளது. ஒவ்வொரு மனிதனும் மதத்தால், இனத்தால், சாதியால் பிறந்த சார்புடையவராகவே விளங்குகின்றான். உறவு நிலைகள் சாதி அடிப்படையிலேயே அமைந்துள்ளன. மனிதர்களிடையே பிளவினை ஏற்படுத்திச் சண்டைகளுக்கும், தீய செயல்களுக்கும் காரணமாகச் சாதி அமைந்துள்ளது.

தற்காலத்தில் மனிதநேயம் மறைந்து, வெறுப்பும், விரோதமும் வளரச் சாதி துணை செய்து வருகின்றது. சாதியினால் உயர்வு, தாழ்வு கற்பித்து மக்களை ஒடுக்குவதும், ஒதுக்குவதும் சமூகச் சீர்கேடுகளாக நடைபெற்று வருகின்றன. தொழில் அடிப்படையில் பிரிந்த சாதிப்பாகுபாடு பிறப்படிப்படையாகக் கருதப்பட்டுக் கேடுகளுக்கு வழி செய்து வருகிறது.

**இதழ்களின் தோற்றம்**

மனிதன் கூடி வாழத்தொடங்கிய காலத்தில் தமது எண்ணங்களை வெளிப்படுத்தவும் பரிமாறிக் கொள்ளவும் வேண்டிய தேவை ஏற்பட்டது. பேச்சு மொழி உருவாவதற்கு முன்பே செய்கைகள் மூலமும், ஒலிக்குறிப்புகள் மூலமும், மனிதர்கள் செய்திகளைப் பரிமாறிக் கொண்டனர். சீழ்க்கை ஒலியாலும், பறையறைவித்தும், மணியடித்தும், புகையெழுப்பியும், தீயம்புகளை வானத்தில் எறிந்தும் ஓரிடத்தில் நடப்பதைச் சுற்று வட்டாரத்து மக்களுக்கு அறிவிக்கும் பழக்கம் கல்தோன்றி மண்தோன்றாக் காலத்துக்கு முன் தோன்றியது. இதழ்களின் தோற்றமும், வளர்ச்சியும் பற்றி ஆராய்வோம்.

பேச்சுமொழி வளர, வளர வாய்மொழியாகச் செய்திகளைப் பரப்ப முடிந்தது. ஒருவரையொருவர் பார்க்கின்ற பொழுது நடப்பு விவரங்களைக் கேட்டறிந்து, அறிந்தவற்றை மற்றவர்களுக்கும் கூறி வந்தனர். மனிதன் எழுதக்கற்றுக் கொண்ட பிறகு எழுத்தின் மூலமும், ஓவியங்களின் வாயிலாகவும் செய்திகளைப் பரப்பினான். ஆட்களை அனுப்பியும் புறாக்களின் கால்களில் ஓலைகளைக் கட்டி அனுப்பியும் செய்திகளைப் பரப்பினர்.

> பதினெட்டாம் நூற்றாண்டில் ஏற்பட்ட அச்செழுத்து அடுக்கலும் அமைத்தலுமே (Type composing and setting) அச்சுப்பதிப்புமே மக்கள் கூட்டத்தினை கருத்துக்கள் பல திசைகளில் பரவுவதற்கு அடிப்படையாக இருந்தன[58]

மேலும் பல புதிய முறைகளில் இதழ்கள் விரைவாகவும், விளக்கமாகவும் செய்திகளைத் தாங்கி மக்களை மகிழ்வித்தலால் இதழியல் துறை நாளுக்கு நாள் உலகமெங்கும் வாழையடி வாழையாக வளர்ந்தது. அறிவியல் வளர்ச்சியுறும் போது பல புதிய சாதனங்கள் கருவிகள் தோன்றுகின்றன. மக்களிடையே கருத்துக்களைப் பரப்புவதற்கு ஏற்றவாறு அறிவியல் வளர்ச்சியின் காரணமாகவும், மேனாட்டார் வருகையின் காரணமாகவும் இந்தியாவில் அச்சு இயந்திரங்கள் தோன்றலாயின. விடுதலைப் போராட்டக் காலத்திற்குப் பிறகு பல இதழ்கள் பற்பல நோக்கங்களுடன் வெளிவரத் தொடங்கின. நாளடைவில் இதழ்கள் பல்கிப் பெருகின.

**அச்சு இயந்திர வருகைக்கு முன்**

மனிதன் முதன்முதலில் பாறைகளில்தான் எழுதினான். மலை, குகைகளில் வாழ்ந்த மனிதன் இலை தழைகளின் சாறு கொண்டு இயற்கையாகக் கிடைத்த வண்ணக்கட்டிகளைக் கொண்டும் குகைச் சுவர்களில் ஓவியங்களைத் தீட்டினான்.

இரும்பைப் பயன்படுத்தப் பழகிக் கொண்ட பொழுது மலைப்படுகைகளில் உளிகொண்டு எழுத்துக்களைச் செதுக்கினான். கல்வெட்டுக்கள் மன்னர் காலத்தில் எழுதப்பட்டன.

**களிமண் சுவடி**

களிமண்ணை எடுத்து கற்களை நீக்கி நன்றாகப் பிசைந்து, சமப்படுத்தி அதன்மீது குச்சி கொண்டு எழுதியும் வரைந்தும் தகவல் பரிமாற்றம் செய்து வந்தனர்.

**மரப்பலகை**

அச்சு தோன்றிய பொழுது கூட மரப்பலகைகளில் தான் எழுத்துக்களைச் செதுக்கினார்கள். அறிவியல் வளர்ச்சியைக் கண்டறியாத பழங்கால மக்களிடையே செய்தி அனுப்பும் முறை இருந்தது. அவர்கள் செய்திகளை முரசறைந்தும், பறையடித்தும், சீழ்க்கை ஒலி எழுப்பியும் பரப்பினர். செய்தித்தாள் அச்சாகி வெளிவராத பண்டைக் காலத்திலும், போர்க்காலத்திலும் செய்திகளைப் பரிமாறப் புறாக்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன.

போர்க்காலத்தில் செய்திகளைப் பரிமாறப் புறாக்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை வடமொழி, தென்மொழி இலக்கியங்களின் வழி அறிய முடிகின்றது. காளிதாசரின் போத சந்தேசம், மேகசந்தேசம் போன்ற நூல்கள் புறாவையும், மேகத்தையும் தூது விடுவதாக அமைந்துள்ளன. தொல்காப்பியத்தில்,

தூதியிடையிட்ட வகையினானும் (தொல். நூ.987)

என்றக் குறிப்புக் காணப்படுகின்றது.

பறையறைந்தல்லது சொல்லற்க என்னா
இறையே தவறுடையேன் (குறிஞ்சிக்கலி.20: 32-33)

என்று குறிஞ்சிக்கலியும்,

யானை எருத்தத்து அணியிழையார் மேலிரீஇ
மாநகர்க் கீந்தார் மணம் (சிலம்பு.மங்கலவாழ்த்துப் பாடல் 43:44)

என்று சிலம்பில் காணப்படும் வரிகளும் மேற்கூறியக் கருத்தை உறுதிப்படுத்துவனவாக அமைந்துள்ளன.

**இந்திய இதழ்கள்**

மனிதன் எப்படியும் வாழலாம் என்று எண்ணிக் கொண்டிருந்த காலத்தில் தகவல் தொடர்புகள் பற்றி நினைத்துக்கூடப் பார்க்கவில்லை. இப்படித்தான் வாழ வேண்டும் என்று வாழ்க்கையை வரையறைப்படுத்திய போது பக்கத்தில் வாழும் மனிதர்களைப் பற்றி அறிய விரும்பியதன் ஆர்வம் தான் காலப்போக்கில் செய்திகளாகத் தோற்றம் பெற்றன.

நமது நாட்டில் தகவல் தொடர்புச் சாதனங்களின் சிந்தனை அசோகர் காலத்தில் ஏற்பட்டது. அசோகரின் கல்வெட்டுக்களைத் தகவல் தொடர்பின் முன்னோடியாகக் கொள்ளலாம். புத்தமதக் கொள்கைகளையும், அரசின் கட்டளைகளையும் பரப்புவதற்கு இக்கல்வெட்டுக்கள் பெரிதும் பயன்பட்டன. இதனை இந்திய இதழ்களின் முன்னோடி என்று இதழியல் அறிஞர் கூறுவர்.

முகலாயர் ஆட்சிக்காலத்தில் தான் அரண்மனை செய்தித்தாள் வெளியிடும் வழக்கம் கொண்டு வரப்பட்டது. இதற்கு வாக்கிய நாவிஸ் (Wakiah news) என்று பெயர். இதில் அரசாங்க நிர்வாகச் செய்திகள் மட்டுமே இடம் பெற்றிருந்தன.[59]

இதழ்களின் தாக்கத்திற்குத் தான் அனைத்துத் துறைகளும் அடங்கியுள்ளது.

இதழ்கள் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழிலும் பெற்றதாக வளர்ந்து கொண்டிருக்கின்றன. பத்திரிக்கையின் தன்மையைப் பற்றிப் பாவேந்தர் பாரதிதாசன்,

காரிருள் அகத்தில் நல்ல
கதிரொளி நீ தான்! இந்தப்
பாரிடைத் துயில்வோர் கண்ணிற்
பாய்ந்திடும் எழுச்சி நீ தான்
ஊரினை நாட்டை இந்த
உலகினை ஒன்று சேர்க்கப்
பேரறி வாளர் நெஞ்சில்
பிறந்த பத்திரிகைப் பெண்ணே!

(பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 1)

எனப் போற்றிப் புகழ்ந்துள்ளார்.

*இதழ்களின் தலையாயப்பணி மக்களிடம் செய்திகளைப் பரப்புவதாகும். எல்லாச் செய்திகளையும் உடனுக்குடன் உண்மையாகவும், விறுப்புவெறுப்பின்றியும் தெரிவிப்பதாகும்.*

> செய்திகளைப் பெறுவதும், பிறருக்குத் தருவதும் அதை செயல்படுத்துவதும் ஆகிய கலையே இதழியல் எனப்படும் (The art of collection and dissemination of current news and events).[60]

**இந்தியாவில் அச்சுக்கலை**

*'ஜான் கூட்டன்பர்க்கு' (1398-1468) என்னும் ஜெர்மானியரே முதன் முதலில் அச்சுப் பொறியைக் கண்டுபிடித்தார். அச்சு எந்திர வரவும் 'தாள்' கண்டுபிடிப்புக்கும் இதழ்கள் வளர்ச்சிக்கும் பெரிதும் துணை செய்தன. இதன் மூலம் உலகின் பல பாகங்களிலிருந்தும் பத்திரிகைகள் வெளிவந்தன. முதன் முதலில் ஜெர்மனியில் ஸ்ட்ராஸ்பர்க் நகரத்தில் கி.பி.1609இல் 'உறவு' என்ற பத்திரிகை தொடங்கப்பட்டது. இதைத் தொடர்ந்து ஐரோப்பாவிலும் பிற நாடுகளிலும் பத்திரிகைகள் மக்கள் புழக்கத்திற்கு வந்தன.*

*வாஸ்கோடகாமாவின் வருகைக்குப் பின் ஐரோப்பிய உறவு நம் நாட்டிற்குக் கிட்டியது. கிறித்துவ சமயத்தைப் பரப்ப வந்த மத போதகர்கள் தான் இந்தியாவிற்கு அச்சு இயந்திரத்தைக் கொண்டு வந்தனர்.*

> 1556 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 6 ஆம் தேதி கோவா நகருக்கு வந்த போர்த்துக்கீசிய கப்பல் தான் முதன் முதலில் அச்சுப் பொறிகளையும் அச்சடிப்பாளர்களையும் இந்தியாவிற்கு கொண்டு வந்தது[61]

*இப்பாதிரியார்கள் தான் அச்சுக்கலையை அறிமுகப்படுத்தினார்கள். இதன் விளைவாக 1780 ஆம் ஆண்டு சனவரி மாதம் 29 ஆம் நாள் ஜேம்ஸ் அகஸ்டஸ் ஹிக்கி* (James Augustus Hekey) *என்பவர் இந்தியாவின் முதல் செய்தித்தாளான*

> பெங்கால் கெஜட் அல்லது கல்கத்தா ஜெனரல் அட்வர்டைசர் பற்றி முதல் ஆங்கில வார இதழைத் தொடங்கினார்[62]

*இவ்விதழில் வணிகக் கடிதங்கள், விளம்பரங்கள் பொருளடக்கமாக அமைந்திருந்தன. ஜேம்ஸ் அகஸ்டஸ் ஹிக்கியைச் செய்தித்தாள்களின் தந்தை என்றழைத்தனர்.*

*இந்தியாவில் கி.பி.1498இல் கள்ளிக்கோட்டையில் காலடி வைத்த போர்த்துக்கீசியர் சென்னை, கோவா, மும்பை, இலங்கை போன்ற இடங்களில் மெல்ல மெல்லப் பரவினர். ஒரு நூற்றாண்டு வரை தமக்கு எதிர்ப்பின்றி போர்த்துக்கீசிய அரசின்*

சார்பில் ஆட்சி செய்து கிறித்துவ சமயத்தைத் தீவிரமாகப் பரப்பி வந்தனர். போர்த்துகீசியரை அடுத்து கி.பி.1600இல் ஒல்ல எந்தர், 1616இல் டச்சுக்காரர் 1620இல் ஆங்கிலேயர் என வணிகக் குழுவினர் கரையோரப் பகுதியில் இடம் பிடித்துச் சிறுகச் சிறுக ஆதிக்கம் பெற்று வந்தனர். இவர்களைத் தொடர்ந்து 1660இல் கத்தோலிக்கப் பிரெஞ்சுக்காரர்கள் இங்கு வந்தனர். இவர்கள் அனைவரும் முதலில் தம் வணிகத்தைப் பெருக்கிக் கொள்வதிலே பெரும் விருப்பம் கொண்டிருந்தனர்.

கல்கத்தாவை அடுத்து ஆங்கில அரசின் தலைமை இடங்களாகிய சென்னை, பம்பாயில் இதழ்களின் சீரான வளர்ச்சி காணப்பட்டது. அக்காலத்தில் வெளிவந்த செய்திகள் ஆங்கில அரசின் அறிவிப்புகள், ஆங்கிலப் பாடல்கள், அழகுக்குறிப்புகள், வணிக விளம்பரங்கள், ஐரோப்பாவிலிருந்து வருகின்ற இந்தியாவிலிருந்து புறப்படுகின்ற பிரமுகர்கள் பற்றிய செய்திகள், முக்கியமானவர்களின் திருமணம், மறைவு போன்றவைகள் பொருளடக்கங்களாக அமைந்தன.

பதினெட்டாம் நூற்றாண்டில் எழுந்து நிற்கத் தொடங்கிய இதழ்கள் இந்தியாவில் தங்கியிருக்கும் ஐரோப்பியருக்காக, ஐரோப்பியர் நடத்தும் இதழ்களாகவே அமைந்திருந்தன. 1818 அக்டோபர் 2இல் ஜேம்ஸ் சில்க் பக்கிங்ஹாம் என்ற ஆங்கிலேயர் "கல்கத்தா ஜெர்னர்" என்ற வாரம் இருமுறை இதழ் ஒன்றைத் தொடங்கினார். இதே போன்று 1818இல் "தீர்க்கதர்சன்" என்ற மாத இதழ் வங்காள மொழியில் செராம்பூரிலிருந்து வெளிவந்தது. இது தான் இந்திய மொழி இதழ்களின் முதல் மாத இதழாகும்.

அரசின் அறிவிப்புகள் அரசியல் செய்திகளுடன் வெளியிடப்பட்ட கிறித்துவ இயக்க இதழ்கள் இந்து சமயக் கோட்பாடுகளையும், வேதங்களையும் விமர்சிக்கத் தொடங்கியதன் விளைவாக இராஜாராம் மோகன்ராய் "பிராமணிக்கல் மெகசின்" என்ற இதழைக் கிறித்துவ இயக்கத்தாரின் தாக்குதலை எதிர்த்து இந்து சமயக் கொள்கைகளை நியாயப்படுத்துவது என்ற கொள்கை அறிவிப்போடு தோற்றுவித்தார். செராம்பூர் கிறித்துவ சமய இயக்க இதழ்களும், இராஜாராம் மோகன்ராய் அவர்களின் இந்து சமய இயக்க இதழ்களும் நடத்திக் கொண்ட சமயப் போட்டிகளால் இதழியல்துறை குதிரைப் பந்தயம் போல் தோற்றம் பெற்றுள்ளது.

1857இல் நடைபெற்ற சிப்பாய்க் கலகம் இந்திய விடுதலைக்கான முதல் போராட்டமாகும். இந்திய மக்களுக்கு எதிரான ஆங்கில அரசின் சமுதாய, சமய, அரசியல் கொள்கைகள் இந்திய போர் வீரர்களுக்கிடையே சுதந்திர வேட்கைப் போராட்டமாக மாற இந்திய இதழ்கள் துணை புரிந்தன. இந்திய இதழ்களின் அனல்பறக்கும் ஆதரவுக் கட்டுரைகள் போராட்ட வீரர்களுக்கு விழிப்புணர்வை ஏற்படுத்தின.

இந்தியாவிற்கு அரசியல் சுதந்திரம் பெறும் நோக்கத்துடன் 1885இல் அமைக்கப்பட்ட இந்திய தேசிய காங்கிரசின் தோற்றத்தாலும் புதிய தேசிய அலையின் பெருக்கத்தாலும் இந்திய பத்திரிகையியலில் புதிய கட்டம் ஆரம்பமாகியது. சுதந்திர வேட்கை உணர்வையும், நாட்டுப்பற்றையும் தூண்டக்கூடிய அறிக்கைகள் வெளிவந்தன. செய்திகளைப் பரப்புவதில் கவனத்தைச் செலுத்தியதை விடப் பத்திரிக்கைகள் அரசியலில் அதிக அக்கறை காட்டின.

1900இல் இலண்டனில் இயங்கிய உலகின் தலைசிறந்த செய்தி நிறுவனமான ராய்டர் (Reuter) செய்தி நிறுவனத் தொடர்பால் இருபதாம் நூற்றாண்டு இந்திய இதழ்கள் நிறைவான வளர்ச்சி பெற்றன. சூடான அரசியல் செய்திகளோடு சுவையான பிற செய்திகளும் இதழ்களின் பக்கங்களை அழகுப்படுத்தின. ஆங்கில அரசின் அலுவலர்களும் உயர் தகுதிகள் உடையோரும் மட்டுமே தூக்கி வைத்துக் கொண்டிருந்த நாகரிகப் பொருளான இதழ்களைப் பொதுமக்கள் அன்றாடம் படித்து அறிவை விரிவாக்கும் சாதனமாக உருவாகின.

18 ஆம் நூற்றாண்டில் மேலைநாட்டின் தேநீர் விடுதிகளில் மட்டும் இதழ்கள் படிக்கும் பழக்கம் கொண்டிருந்தனர். 19 ஆம் நூற்றாண்டில் தொடர் வண்டிகளில் படிக்கக்கூடிய அளவிற்கும் வளர்ச்சியடைந்தது. ஆனால் இன்றோ உந்துவண்டி, பேருந்துவண்டி, விமானம், வீடுகள், சாலையோரக் கடைகள் என எல்லா இடங்களில் படிக்கப்பட்டு வருகின்றன. மேலும் உலகின் நாலா பக்கங்களிலிருந்தும் புத்தறிவு கொளுத்திட புதிய பார்வையைக் கொடுத்தும், மக்கள் புதிய பாதையில் அடியெடுத்து வைக்கச் செய்திகளை வீறு கொண்டெழச் செய்கின்றது.

**தமிழ் இதழ்களின் வளர்ச்சி**

*தமிழ்நாட்டில் அச்சுக்கலை இடம் பெற்றதெல்லாம் 16 ஆம் நூற்றாண்டில் தான். கொச்சியிலுள்ள அம்பலக்காடு என்னும் இடத்திலிருந்து ஏசு சபையின் அச்சகத்தில் மரத்தில் செதுக்கப்பட்ட தமிழ் எழுத்துக்களைக் கொண்டு முதலில் தமிழ் நூல் வெளியிடப்பட்டது. இதற்கு முன்னர் இந்திய மொழிகளிலேயே தமிழ் மொழியானது ரோம வடிவில் கி.பி.1554இல் லிஸ்பன் நகரில் கார்டில்லா எனும் வெளியீட்டில் தான் அச்சில் பதிவானது.*

*1578இல் ஏசு சபைப் பாதிரியார்கள் திருநெல்வேலியிலுள்ள,*
புன்னைக்காயல் என்னும் இடத்திலும், வைப்புக் கோட்டையிலும் அச்சகங்களை ஏற்படுத்தினர். சீகன்பால்கு என்னும் பாதிரியார் 1713இல் தஞ்சையில் உள்ள தரங்கம்பாடியில் ஓர் அச்சகத்தை ஏற்படுத்தினர். சென்னையில் வேப்பேரியில் ஓர் அச்சகம் 1761இல் நிறுவப்பட்டது.[63]

*தமிழ் வரி வடிவில் ``தம்பிரான் வணக்கம்'' என்னும் நூல் கிறித்துவ சமய வெளியீடாக இந்தியாவிலே முதன் முதலில் 1578இல் அச்சிடப்பட்டது.*

*1557இல் கத்தோலிக்க பாதிரியார்களால் கொல்லம், கோவா ஆகிய இடங்களில் அச்சகங்கள் அமைக்கப்பட்டுத் தமிழ் வெளியீடுகள் கொண்டுவரப்பட்டன. பின்னர் கோவா, கொச்சி போன்ற இடங்களில் தமிழ் அச்சு எழுத்துக்கள் உலோகத்தில் வார்க்கப்பட்டன.*

*கி.பி.1761இல் ஆங்கிலேயர்கள் தமிழகத்தின் பல பகுதிகளைத் தமது ஆதிக்கத்தின் கீழ்க்கொண்டு வந்தனர். அதன் பின்னர் இலங்கையையும் 1775இல் கைப்பற்றி இந்தியாவுடன் இணைத்து ஆளத் தொடங்கினர்.*

1870இல் கொழும்பில் இலங்கைக் கத்தோலிக்கச் சபையாளரும் ஓர் அச்சகத்தை ஏற்படுத்தி தமது சமய வெளியீட்டைச் செய்து வந்தனர்[64]

*பட்டுக்கோட்டையில் 1823இல் ஏற்படுத்தப்பட்ட சமய ஊழிய அமைப்பானது சமய போதனைக் கலாசாலையை ஏற்படுத்தியும் அச்சகத்தை நிறுவியும் பல சமய நூல்களையும், பொது நூல்களையும் மக்களுக்கு அறிமுகப்படுத்தியது.*

*ஆங்கில இதழ்களில் தமிழில் விளம்பரங்களும், அறிக்கைகளும் அச்சாகியுள்ளன. கி.பி.1802இல் ``சிலோன் கெஜட்'' எனும் இதழ் தமிழ், சிங்களம், ஆங்கிலம் எனும்*

மூன்று மொழிகளில் அச்சிடப்பட்டு வெளிவந்திருக்கிறது. 1830இல் முதன் முதலில் தமிழ் மேகஸின் (The Tamil Magazine) என்னும் இதழ் முழுக்க முழுக்கத் தமிழ் செய்தி வடிவில் அச்சாகியுள்ளது. தமிழ்நாட்டில் முதலில் வெளிவந்த பத்திரிக்கை "சென்னை கூரியர்" (Madras Courier) என்பதாகும். இது 1785இல் அக்டோபர் 12 ஆம் நாள் வெளியிடப்பட்டது. இதனைத் தொடர்ந்து "இந்தியன் ஹெரால்டு" (Indian Herald) என்ற ஆங்கிலப் பத்திரிகையும் புழக்கத்திற்கு வந்தது.

18 ஆம் நூற்றாண்டில் தமிழ் இதழ்கள் தோன்றலாயின. 1833இல் "விருத்தாந்தி" என்ற பெயரில் வெளிவந்த இதழில் தமிழிலும் தெலுங்கிலுமாகச் செய்திகள் வெளியிடப்பட்டன. 1835இல் சென்னையில் வெளியான "மெட்ராஸ் கிராணிக்கல்" இதழில் தமிழ் மொழியும், தெலுங்கு மொழியும் இடம் பெற்றிருந்தன. 1852இல் ரெவ.பி.பெர்சிவல் பாதிரியாரால் சென்னையில் "தினவர்த்தமாணி" என்னும் வார இதழ் தொடங்கப்பட்டது. 1855இல் முதலாவது இந்திய கிளர்ச்சி (சிப்பாய் கலகம்) ஏற்படுவதற்கு முன்பு தமிழில் தோன்றிய இதழ்கள் மிகக் குறுகிய அளவினதாகும்.

1882இல் திரு.ஜி.சுப்ரமணிய ஐயர் அவர்களால் "சுதேசமித்திரன்" என்ற தமிழ் வார இதழ் தொடங்கப்பட்டது. பின்னர் இது நாளிதழாக மாற்றம் பெற்றது. எனவே இதனைத் தமிழில் வெளியான முதல் நாளிதழ் என்பர். இதே போன்று இலங்கையில் உள்ள யாழ்ப்பாணம், கொழும்பு போன்ற இடங்களிலிருந்த கிறித்தவ சமய இதழ்களும், சைவ சமய இதழ்களும், முஸ்லீம் சமய இதழ்களும், மாத, வார இதழ்களாகத் தோன்றின.

1886இல் வெளிவந்த இலங்கை "தினவர்த்தமானி" என்ற இதழ் இலங்கையில் தோன்றிய முதல் தமிழ் நாளிதழாகும். இதே போன்று மலேசியா, பர்மா, தென்னாப்பிரிக்கா, பிரான்ஸ், அமெரிக்கா, இலண்டன், பிஜித்தீவு போன்ற நாடுகளில் (18 ஆம் நூற்றாண்டில்) தமிழ் மொழி இதழ்கள் வார, மாத இதழ்களாகத் தோற்றம் பெற்று வளர்ந்து எழுச்சி பெற்றுள்ளன.

**தமிழ்நாட்டில் தோன்றிய தமிழ் இதழ்கள்**

1830 வரை தமிழில் தனி இதழ்கள் தொடங்கப் பெறவில்லை.

தமிழ் மொழியில் தோன்றிய முதல் தமிழ் இதழ் தமிழ்ப் பத்திரிக்கா[65]

என்பர். இவ்விதழ் 1831 ஆம் ஆண்டு சென்னை கிறித்துவ சமயப் பரப்புக் கழகத்தாரால் திங்களிதழாக வெளியிடப்பட்டது. அடுத்து ஜனசினேகன் என்ற இதழ் 1841இல் மாதம் இருமுறை இதழாக வெளிவந்தது. மேலும் 1844 ஆம் ஆண்டில் சென்னை மாநிலத்தில் இந்தியர் ஒருவரால் தொடங்கப்பட்ட முதல் பத்திரிக்கை "கிரான்ஜென்ட்" என்பதாகும். இப்பத்திரிக்கை மக்களின் உரிமைக்காக அறப்போர் நடத்தியது. 1855 ஆம் ஆண்டு வார இதழாக வெளிவந்த தினவர்த்தமானி என்ற இதழ் செய்தி, இலக்கியம், அறிவியல் போன்றவற்றை இணைத்து வெளியிட்டு முழுமை பெற்ற இதழாக வெளிவந்தது. அரசு சார்புடைய இதழான "ஜனவினோதினி" வரலாறு, சமூகம், அறிவியல் கட்டுரைகளை ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்த்துத் தந்ததோடு இராமாயணத் தொடரையும் உருவேற்றியது.

தமிழ் இதழ்கள் பிறப்பிடம் தமிழகத்தைத் தாண்டியும் வளர்ச்சி பெற்றிருக்கிறது. குறிப்பாகத் தமிழர்கள் குடியேறியுள்ள நாடுகளில் 19 ஆம் நூற்றாண்டு தொடங்கிய தமிழ் இதழ்கள் எண்ணிக்கையில் அதிகமாகத் தோற்றமளித்துள்ளன.

இலங்கையில் உள்ள யாழ்ப்பாணத்தில் 1841இல் தொடங்கப்பட்ட "உதய தாரகை" (The morning star) என்ற இதழ் முதல் தமிழ் மாத இதழாகும். இதனைத் தொடர்ந்து இந்து, கிறித்துவ, இஸ்லாமிய சமய இதழ்கள் பல உதித்தன.

மலேசியா உள்ள பினாங்கு நகரில் 1888இல் தொடங்கப்பட்ட "இந்து நேசன்" என்ற இதழ் மாதம் இருமுறை இதழாக முதன் முதலில் தொடங்கப்பட்டது. பர்மாவிலுள்ள இரங்கூனில் 1922இல் "தேசோபகாரி" என்ற வார இதழ் வெளியானது.

தென்னாப்பிரிக்காவில் உள்ள டர்பன் நகரில் "விவேகபானு" என்னும் வார இதழ் தொடங்கப்பட்டது. பிரான்ஸ் பாரீஸிலிருந்து "பாரீஸ் முரசு" "எரிமலை" எனும் இதழ்கள் வெளியிடப்படுகின்றன. இலண்டனில் இருந்து ஈழவிடுதலை எனும் மாத இதழ் தோன்றியது.

**விடுதலைக்கு முன் தோன்றிய இதழ்கள்**

இந்திய விடுதலை இயக்கம் 1920 ஆம் ஆண்டு தொடங்கிப் பல்வேறு போராட்டங்களைச் சந்திக்கத் தொடங்கியது. இப்போராட்டங்களில் இதழ்களின் பணி

முக்கியப்பங்கு பெற்றது. இத்தகைய போராட்டக் காலத்தில் தோன்றிய இதழ்கள் சுதேசமித்திரன் *(1882)* விவேக சிந்தாமணி *(1982)*, லோகோபகாரி *(1895)*, ஞானபோதினி *(1902)*, விவேகபானு *(1902)*, செந்தமிழ் பொழில் *(1925)*, குடியரசு *(1925)*, விமோசன் *(1929)*, சுதந்திரச்சங்கு *(1930)*, காந்தி *(1931)*, மணிக்கொடி *(1933)*, தினமணி *(1934)*, ஜோதி *(1937)*, ஹிந்துஸ்தான் *(1938)*, பாரததேவி *(1939)*, சக்தி *(1939)* போன்ற பல இதழ்கள் ஆங்கில அரசின் முதல் எதிரியாகக் காட்சியளித்தன. ஒத்துழையாமை இயக்கம், சத்தியாக்கிரகம், ரௌலட் சட்ட எதிர்ப்பு, சைமன்குழு எதிர்ப்பு, வெள்ளையனே வெளியேறு இயக்கம், கிலாபத் இயக்கம் போன்ற தேசிய போராட்டங்கள் அனைத்தும் இதழ்களின் சிறப்போடு செயல்பட்டு வெற்றிக்கொடி கட்டிப் பறந்தன.

விடுதலைப் போராட்டக் காலத்தில் தொழில் அடிப்படையில் இயங்காமல் அரசியல் பணியாற்றும் நிறுவனங்களாகப் பத்திரிகைகள் செயல்பட்டன. காந்தியடிகளின் அரசியல் நுழைவு மக்கள் மத்தியில் எழுப்பிய இந்திய மக்களை இதழ்களோடு ஒன்ற வைத்தன. முழுமையான விடுதலை பெற வேண்டும் என்ற எழுச்சிப்பாதையில் இந்திய மக்களை இதழ்கள் அடியெடுத்து வைக்கச் செய்தன.

**விடுதலைக்குப்பின் தோன்றிய இதழ்கள்**

இதழியல் துறை இந்தியர்களின் விடுதலை உணர்வோடு இணைந்திருந்தமையால் சிந்தித்து செயலாற்ற முடிந்தது. எனினும் நீண்ட காலமாக நசுக்கப்பட்டிருந்த இதழியல் துறைக்கும் விடுதலைக்குப் பின்பே விடிவு காலம் உதித்தது.

விடுதலைப் போராட்டக் காலத்தில் அரசியல் செய்திகளைப் பொருளடக்கமாகக் கொண்டிருந்த இதழ்கள் விடுதலைக்குப் பின்னர் இலக்கியம், அறிவியல், சமூக முன்னேற்றம் போன்ற பல துறைகளையும் இணைத்துச் செய்திகளை வெளியிடத் தொடங்கின. இதழியல் துறைக்கும் அதன் சார்பாளர்களுக்கும் சமுதாயத்தில் செல்வாக்கு மேலோங்கியதை அறியலாம்.

இதழியல் துறை முழுநேரத் துறையாக மாறியதன் விளைவாக இதழாளர்களுக்குக் கணிசமான ஊதியம் கிடைத்தது. எல்லாவற்றிற்கும் மேலாக இதழியல் துறைக்கு வணிக மதிப்புக்கூடியது. மிகப்பெரிய நிறுவனங்கள் பெரும் முதலீட்டில் இதழ்களைத் தொடங்கின. இவ்வாறு வாய்ப்புகள் பல பெருகிய

காரணத்தால் தலைசிறந்த முறையில் இதழியல் துறை விடுதலைக்குப் பின்னர் தான் நாளொருமேனி பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தது.

**இடைக்கால இதழியல் வளர்ச்சி நிலை (1916-1947)**

பத்தொன்பதாம் இறுதி மற்றும் இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்தில் ஏற்பட்ட இயந்திரமயமாதல் மற்றும் தொழில்மயமாதல் ஆகியவற்றினால் புதிய சமூக உருவாக்கம் ஒரு புறமும், பழைய ஆதிக்க மரபுகளுக்கு எதிராக சமூகம் மற்றும் தேசிய விடுதலை இயக்கங்கள் ஒரு புறமும் தோற்றம் கண்டன. இவைகளோடு புதிதாகத் தொழிலாளர் குழுக்களின் உருவாக்கமும், நிறுவனமயமான தொழிற்சங்கங்களின் வளர்ச்சியும் இணைந்து பல சமூகங்களில் புதிய அரசியல், பண்பாட்டு (Political culture) மரபுகளைத் தோற்றுவித்தன. சுதந்திரம், சமத்துவம் மற்றும் சகோதரத்துவம் என்கிற கோட்பாடுகளின் தாக்கம் பழைய இந்தியச்சமூக, அரசியல் கோட்பாடுகளில் மாற்றங்களைத் தோற்றுவித்தன. அதே வேளையில், தன் இன உயர்வு வாதமும் (Ethno centrism) நடைமுறையாயின.

கருத்துரீதியான போராட்டங்கள் நடத்தப்பெறுதற்கு அவசியமான கட்சி அமைப்பு மற்றும் சாதி அமைப்புகள் தோற்றம் பெற்றன. சமூக அமைப்புகள் மற்றும் அரசியல் அமைப்புகள் ஆகியவற்றின் நடவடிக்கைகள் விரிந்து பரந்த இந்தியாவின் ஒரு மூலையில் இருக்கின்ற மக்களிடம் சென்றடைந்ததில் இதழ்கள் இன்றியமையாப் பங்குபெற்றன. குறிப்பாக, இக்காலத்தில் தோன்றிய இதழ்கள் அரசியலை ஓர் அறிவார்ந்த இயக்கமாக மாற்றவும், மக்கள் இயக்கமாக அதைப் பரிணமிக்கச் செய்யவும் பயன்பட்டன. இதழ்கள் சாதி, சமயம், மற்றும் அரசியல் நிறுவனங்களோடு இவை நெருங்கிய தொடர்புடையனவாக இருந்தன. எனவே அக்கால இதழ்களின் தோற்றம் அரசியல் உருவாக்கத்திலிருந்து பிரிக்க முடியாதபடி அரசு, சமூகம், சமயம், ஆகியவற்றுடன் பின்னிப்பிணைந்திருந்தன.

**தேசிய இதழ்களுள் இதன் சமூக வரலாற்றுப் பின்புலமும்**

சமய மறுமலர்ச்சியை நோக்கமாகக் கொண்டு செயல்பட ஆரிய சமாஜம் மற்றும் பிரம்ம சமாஜம் ஆகிய இயக்கங்களைத் தொடர்ந்து நாட்டு விடுதலையை மையமாகக் கொண்டு தோற்றுவிக்கப்பட்ட இந்திய தேசிய விடுதலை இயக்கம், அன்னிபெசன்ட்

அம்மையாரின் ஹோம் ரூல் இயக்கம் உட்பட இவ்வியக்கங்களில் இந்திய அளவிலும், தமிழக அளவிலும் பிராமணர்களே தலைமை வகித்தனர்.

ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஆங்கிலேயர் மீதான எதிர்ப்புணர்வை மையமாகக் கொண்ட இயக்கங்களிலும், இயக்க இதழ்களிலும் தேசியச் சிந்தனைகளோடு பிராமணர்களின் சமூக அரசியலும் வெளிப்பட்டன. காந்தியடிகளால் காங்கிரசு இயக்கம் மக்கள் இயக்கமாக மாற்றி அமைக்கப்பட்டதாலும், அது மேட்டுக் குடியினரின் மேலாண்மையின் கீழ் செயலாற்றியது என்பதை 1937 ஆம் ஆண்டு வெளிவந்த 'ஜனசக்தி' இதழின் வாயிலாக அறிய முடிகிறது. சான்றாக, நமது சுந்திரப் போராட்டம் வலுப்பெற வேண்டுமென்றால் தேசிய காங்கிரசு இயக்கம் நாட்டிலுள்ள தீவிரச் சக்திகள், விவசாயிகள், தொழிலாளர்கள் மற்றும் இளைஞர்கள் ஆகியோரை ஒன்று திரட்டி, தேசிய ஐக்கிய முன்னணியைத் தோற்றுவித்து ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடுவது அவசியம் என்று கூறுகிறது. (ஜனசக்தி, நவம்பர் 6-11 1937.5) மேற்குறித்த கூற்று காங்கிரசு இயக்கம் உழைக்கும் மக்களிடமிருந்து விலகி இருந்ததையும், அதே வேளையில் மேட்டுக் குடியினரின் இயக்கமாக இருந்து வந்ததையும் இதன் மூலம் அறிய முடிகிறது.

இந்தியத் தேசிய கருத்தியல் சார்ந்த இதழ்களான தேசபக்தன் (1917) நவசக்தி (1920) ஆனந்த விகடன் (1926) தமிழ்நாடு '1927) சுதந்திரச் சங்கு (1930), காந்தி (1932), தினமணி (1933) மணிக்கொடி (1933) போன்ற இதழ்கள் தேசிய உணர்வை வளர்த்துள்ளன. ஆனால் இவை மக்கள் பிரச்சனைகளை வெளிப்படுத்தாமல் பார்ப்பன. பார்ப்பனரல்லாத மக்களிடையே உள்ள இடைவெளியைக் குறைத்து அனைத்து மக்களையும் ஒன்று திரட்டும் முயற்சியில் ஈடுபடாமல், ஆங்கிலேய ஆட்சியாளரையும், அரசு எந்திரத்தையும் புலனாய்வு செய்து செய்திகளை வெளியிட்டன. நாளடைவில் காங்கிரசு இயக்கம் மற்றும் தேசிய இதழ்களின் மேற்குறித்த போக்கிற்கு எதிரான நிலையில் பார்ப்பனரல்லாத சமூக, அரசியல் நடவடிக்கைகளில் ஈடுபட்டனர்.

**திராவிட இயக்க இதழ்களும் சமூகவரலாற்றுப் பின்புலமும்**

ஒவ்வொரு இதழின் தோற்றத்திற்கும் பின்னணியில் சமூகக் காரணங்கள் முதன்மை வகிக்கின்றன. அந்த வகையில் இதழ்களில் தோற்றத்திற்கான காரணங்கள், வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகும். அரசுப் பணிகள், அரசியல், கல்வி, இதழியல் நீதி, கலை இலக்கியங்கள் போன்ற துறைகளில் பிராமணர்களின் செல்வாக்கு

மிகுந்திருப்பதையும், தக்க தகுதிகள் வாய்த்திருந்தும் தொடர்ந்து தாழ்ந்த நிலையை அடைய வேண்டியருப்பதையும், உணர்ந்த பிராமணர் அல்லாதவர்களால் தோற்றுவிக்கப்பட்ட இயக்கம் திராவிட இயக்கமாகும்.

1915 ஆம் ஆண்டு பி.டி.எம் நாயர், சி.நடேச முதலியார் மற்றும் 'பனகல் ராஜா' ஆகிய மூவரும் தனிமையான திராவிட நாடு இவற்றைத் தோற்றுவிக்க வேண்டும் என்னும் நோக்கில் திராவிடர் (Dravidian Association) என்ற அமைப்பை நிறுவினர். இதுவே 1917 ஆம் ஆண்டில் தென்னிந்திய நல உரிமைச் சங்கம் (South India liberal Federation) என்னும் அரசியல் அமைப்பாகத் தொடங்கப் பெற்றது. இவ்வமைப்பின் வெளியீடான 'ஜஸ்டிஸ்' என்ற இதழின் பெயரால் இவ்வியக்கம் ஜஸ்டிஸ் கட்சி (நீதிக்கட்சி) என்று பின்னாளில் பெயர்பெற்று நிலைத்தது.

சுதந்திர போராட்ட உச்சத்தில், பிற மாநிலங்கள் இந்திய தேசியத்தில் பிடிப்புக் கொண்டவையாகத் திகழ்ந்த பொழுது, தமிழகத்தில் தனிப்பண்பாடாகவே கொள்ள வேண்டும். ஏனெனில் தென்னிந்திய நல உரிமைச் சங்கத்தின் நீட்சியாக எழுந்த நீதிக்கட்சி, சுயமரியாதை இயக்கம், திராவிடர் கழகம், தொடக்ககால திராவிட முன்னேற்றக்கழகம் ஆகியவை தமிழகத்தில் இந்தியத் தேசியம் குறித்த சிந்தனையைப் பின்னுக்குத் தள்ளியது வரலாற்றில் பதிவு செய்ய வேண்டியதாகும்.

திராவிட இயக்கங்கள் தங்கள் இயக்கக் கருத்தியலை பொதுமக்களிடம் கொண்டு சென்றதில் இதழ்கள் பெரும்பங்கு வகித்தன. அரசியல் விடுதலையுடன் கூடிய சமுதாய விடுதலை, சீர்திருத்தப்பட்ட சமுதாய அமைப்பு என்ற குறிக்கோளில் பல்வேறு இதழ்களைத் திராவிட இயக்கங்கள் வெளியிட்டன. தீண்டாமை ஒழிப்பு, பார்ப்பனிய எதிர்ப்பு, பெண்விடுதலை மற்றும் மூடநம்பிக்கைகளை எதிர்த்தல், பகுத்தறிவினை முன்வைத்தல், தனத்திராவிட நாட்டுக் கொள்கையைப் பரவலாக்கல் போன்ற சிந்தனைகளைப் பெரியாரின் குடியரசு (1925), உண்மை (1931), புரட்சி (1933), பகுத்தறிவு (1934), விடுதலை (1955) ஆகிய இதழ்களில் காண முடிகிறது. இவற்றை அடிப்படையாகக் கொண்டே வி.பார்த்தசாரதி சமதர்மம் (1934) என்ற இதழையும், மு.கருணாநிதி முரசொலி (1942) என்ற இதழையும், ஜி.சீனிவாசன் இனஒலி (1944) என்ற இதழையும், முருகு சுப்ரமணியன் பொன்னி (1945) என்ற இதழையும் வெளியிட்டனர். தமிழ்மொழி இனத் தொன்மையையும் அரசியல் ரீதியாக நல்லாட்சியையும்,

சமூகச்சீர்திருத்தத்தையும், பொருளாதார புனரமைப்பும் வலியுறுத்தியே இவ்விதழ்கள் சமீன்களுக்கும், மிட்டா மிராசுதாரர்களுக்கும் எதிராகக் கருத்துக்களைப் பதிவு செய்தன.

திராவிட இயக்க இதழ்கள் அதன் கருத்தியல் நிலைகளுக்கு ஏற்றவாறு சமூக அடித்தளத்தில் இருந்த ஒடுக்கப்பட்டவர்களின் சிக்கல்களை அணுகின. குறிப்பாக ஒடுக்கப்பட்டோர் விடுதலைக் குறித்து மேடைகளில் பேசினர். தீர்மானங்களை இயற்றினர்; இதழ்களில் எழுதினர். இருப்பினும் சேரன்மாதேவி குருகுல விடுதியில் பிராமணர்களுக்கும், பிராமணர் அல்லாதவர்களுக்கும் இடையில் இருந்த பாகுபாட்டையும், தீண்டாமையும் நீக்கத்தீவிரம் காட்டியதைப் போன்று இரட்டை அடிமைத்தளையில் கட்டுண்ட ஒடுக்கப்பட்டோர்களைத் தீண்டாமை கொடுமையிலிருந்தும், பல்வேறு சமூக அநீதிகளில் இருந்தும் விடுபட சிறப்பு நிலையில் எந்தவொரு செயல்திட்டத்தையும் முன் வைக்கவில்லை. பிராமணர்களுக்கு அடுத்த நிலையில் இருந்த மேல்சாதிகளுக்குரிய இயக்கமாகத் திராவிட இயக்கம் மாறியதும் அதனால் ஒடுக்கப்பட்ட மக்களுக்கான விடுதலை உணர்வு நீர்த்துப்போனதும் வரலாறு.

**மார்க்சிய இதழ்கள்**

1917 ஆம் ஆண்டு நடந்த ரஷ்யப்புரட்சி, இந்தியா மற்றும் தமிழகத்தின் சமூக அரசியலில் மாற்றங்கள் ஏற்படுத்தியது. அதன் விளைவால் பொதுவுடைமைச் சிந்தனைகள் தமிழ்நாட்டில் கம்யூனிஸ்ட் (பொதுவுடைமை) இயக்கமாகத் தோற்றம் பெற்றது (1936). 1937 ஆம் ஆண்டு முதல் தோழர் ப.ஜீவானந்தம் அவர்களை ஆசிரியராகக் கொண்டு 'ஜனசக்தி' இதழ் பொதுவுடைமைச் சிந்தனைகளை வெளிப்படுத்தியது. ஜனசக்தி இதழ், தொழிலாளர் மற்றும் விவசாயிகளின் போராட்டங்களையும் அவர்கள் சந்தித்து வரும் பிரச்சனைகளையும் எடுத்துக் கூறியது. காங்கிரசு மற்றும் சோசியலிஸ்ட் கட்சிகளின் செய்திகள், மாணவர் இயக்கங்கள், விவசாயிகளின் கடன் பிரச்சினைகள், சமீன்குடிகளின் பிரச்சினைகள் மற்றும் மிகக் கொடூரமான குற்றப் பரம்பரைச்சட்டம் போன்றவை குறித்து அது பல செய்திகளை வெளியிட்டது. இந்த வகையில் பொதுவுடைமை இயக்கமும், அதன் இதழ்களும் ஒடுக்கப்பட்டவர்களின் வாழ்வியல் சிக்கல்களைத் தொழிலாளர்களுக்கான சிக்கல்களாக அடையாளம் கண்டனவே ஒழிய சாதிய ரீதியில் அணுகவில்லை.

இங்ஙனம் தமிழ்ச் சமூக வரலாற்றில் முக்கியத்துவம் பெற்ற திராவிட இயக்கங்கள், மற்றும் மார்க்சிய இயக்கங்கள் இந்தியச் சமூகத்தில் பின்னிப்பிணைந்திருந்த சாதியை ஒழிப்பதற்கான இலக்குகளை நிர்ணயிக்காமல் சமூக மாற்றத்திற்கான தேடலைத் துவங்கியமை ஒரு பெருந்தோல்வி எனலாம். அதனால், இன்றைய நிலையில் ஒடுக்கப்பட்டவர்களின் தன்னெழுச்சியான போக்கினால் இவ்விரு இயக்கங்களும் குற்றத்திற்கு ஆளாகின்றன.

### சிற்றிதழ்களின் தோற்றம்

சிற்றிதழ்கள் முதன்முதலாக ஆங்கிலேயக் கிறித்தவப் பாதிரிமார்களால் கிறித்தவ மதத்தைப் பரப்பும் விதமாகச் சிறுசிறு பிரசுரங்களாக வெளியிடப் பெற்றன. அவையே சிற்றிதழ்களின் மூலநிலை இதழ்களாக அமைந்திருந்தன. இவ்விதம் தொடங்கிய இதழ்களின் வரலாறு அச்சுக்கலைத் தொடங்கப்பட்டவுடன் அதிகளவு செய்தித்தாள்கள் வெளிவரும் வரலாறாக மாறியது. இதனை

> அச்சுக்கலை தொடங்கியதன் விளைவாக இதழ்கள் தோன்றின. கருத்துச் செய்தி பரிமாற்றத்திற்காகத் தொடங்கப்பட்ட இதழ்கள், அடிவருடிச் செய்திகளையும் கருத்துக்களையும் திரித்தபோது உணர்வோடு தொடங்கப் பெற்றவைகளே சிற்றிதழ்கள். கால ஓட்டத்தில் பல இதழ்களின் இடுப்பே மறைந்து போன நிலையில், தூக்கிப் பிடிக்கப்பட்ட சில இதழ்கள் மட்டுமே காட்டப்படுவது வரலாற்றுக்கான நமது இயலாத்தன்மையையே வெளிப்படுத்துவதாக உள்ளது. சாதி, சமய, வர்க்க ரீதியிலான ஒடுக்கப்படுதலுக்கும் எதிரான விழிப்புணர்வுக் குரலும், மாற்றுக்கலாச்சார முதன்மைப்படுத்தலும், மொழியின் விடுதலைக்கும் பாதுகாப்பிற்குமான இயங்குதலும், அச்சுவடிவில் நிகழ்ந்ததையே பொதுவாக சிற்றிதழ்களின் தொடக்கமாகக் கொள்ளலாம்[66]

என்பர் பொள்ளாச்சி நசன்.

தமிழ்ச் சிற்றிதழ்களை வரலாற்று நோக்கில் அணுகும் போது கீழ்க்கண்ட நிலைகளைத் தெளிவாக அறிந்து கொள்ளுதல் தேவையான ஒன்றாக அமைந்திருக்கின்றது. ‘சிற்றிதழ்’ எனும் பெயரமைப்பு, அதன் வரைவிலக்கணம், சிற்றிதழ்களின் வகைப்பாடுகள் போன்றவை விரிவாக விளக்கப்பெற வேண்டும்.

**சிற்றிதழ்களின் வகைமைகள்**

இதழ்கள் அவை வெளிவரும் காலத்தின் அடிப்படையில் நாளிதழ்களாகவும், கிழமை இருமுறை இதழ்களாகவும், கிழமை மும்முறை இதழ்களாகவும், திங்களிதழ்களாகவும், கிழமை இதழ்களாகவும், திங்களிலிருமுறை இதழ்களாகவும், இரு திங்கட்கொருமுறை இதழ்களாகவும், காலாண்டு இதழ்களாகவும், அரையாண்டு இதழ்களாகவும் ஆண்டு இதழ்களாகவும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இவற்றில் நாளிதழ்கள், வணிக இதழ்கள் எனும் பகுதிக்குள் வந்துவிடும். கிழமை இருமுறை இதழ்கள், கிழமை மும்முறை இதழ்கள், கிழமை இதழ்கள், ஆகியவை துணைமை இதழ்களாக வணிக இதழ்களுக்கு வருபவையாகவும், அல்லது இதழ்களாகவும் பெருமளவில் வெளிவருகின்றன. திங்களிதழ்கள், இரு திங்கட்கொருமுறை இதழ்கள், காலாண்டு இதழ்கள் அரையாண்டு இதழ்கள், ஆண்டு இதழ்கள் என்பவைகள் பெரும் பகுதியாகச் சிற்றிதழ்களாக அமைந்திருக்கின்றன.

கொள்கை, கோட்பாடுகளின் அடிப்படையில் அவற்றின் உள்ளடக்கம் அமைந்திருக்கும். அதனடிப்படையில் அவை செய்தி இதழ்கள், அரசியல் இதழ்கள், சமய இதழ்கள், இலக்கிய இதழ்கள் தனிப்பட்ட இன முன்னேற்ற இதழ்கள், அறிவியல் இதழ்கள், கலை இதழ்கள், பொழுதுபோக்கு இதழ்கள், சிறுவர் இதழ்கள், வணிக இதழ்கள், இணைய இதழ்கள் எனப்பல வகைப்பாடுகளைக் கொண்டு விளங்குகின்றன. ஒவ்வொரு அடிப்படையிலான தலைப்புகளில் வெளிவரும் இதழ்களும் அதனுள் பல பிரிவுகளைக் கொண்டதாக அமைந்திருக்கின்றன. எடுத்துக்காட்டாக இலக்கிய இதழ்களில் சிறுகதைகளுக்கு, கவிதைக்கு, திறனாய்வுக்குப் பல்சுவைக்கு எனப் பல வகைப்பட்ட பத்திரிகைகள் வருகின்றன. இதேபோல் இன இதழ்களில் ஒவ்வொரு இனம் சார்பான இதழ்கள் வெளிவருவது குறிப்பிடத்தக்கதாகும்.

சிற்றிதழ்களின் வடிவத்தை அடிப்படையாகக் கொண்டு அவற்றைப் பல விதமாகப் பிரிப்பார். அதை

> சிற்றிதழ்கள் உருவத்தையும், உள்ளடக்கத்தையும் பொறுத்து அவைகளைப் பல வகைப்படுத்தலாம். கையெழுத்து, உருட்டச்சு, ஒளிப்படப்பிரதி, அச்சு, கணினி அச்சு, அஞ்சலட்டை, உள்நாட்டு அஞ்சல், நீண்ட வடிவம், 1/8, ¼, ½ எனவும் கதை, கவிதை, கட்டுரை, நாடகம் எனவும், அமைப்பு, இயக்க இதழ்கள் எனவும் வகைப்படுத்தலாம்[67]

என்பார் சிற்றிதழ் சேகரிப்பாளர் பொள்ளாச்சி நசன்.

சிற்றிதழ்களின் வகைமைகள் இன்று கணினித்துறை மேம்பாட்டால் பல முன்னேற்றங்களைப் பெற்று மாறுபாடுகளைக் கொண்டிருக்கின்றன. இணையத் தளங்களில் பல இதழ்கள் நடத்தப் பெறுகின்றன. சிற்றிதழ்களின் வகைமைகளுக்குத்தக அதைப்படிக்கும் வாசகர்கள் அமைந்திருக்கின்றார்கள் என்பதால் சிற்றிதழ்கள் தொடர்ந்து தனித்துவம் பெற்றுத் திகழ்கின்றன.

**சாதிச் சங்கங்களின் தோற்றம்**

தமிழ்ச் சமூகத்தில் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே பல்வேறு சாதி மற்றும் சமயங்களின் பின்புலத்தில் ஒவ்வொரு சாதியச் சங்கமும் மக்களை ஒருங்கிணைப்பதிலும், அவர்களிடையே கருத்துக்களைப் பரிமாறிக் கொள்வதிலும் கவனம் செலுத்தின அவை ஒவ்வொன்றும்,

1. சாதிய ஒடுக்கு நிலையில் கற்பிக்கப்பட்ட இழிவுகளைப் போக்கி, புராண இதிகாசங்களுடன் பாரம்பரிய வரலாறுகளை மீட்டுருவாக்கம் செய்து புனிதத்தன்மையைக் கற்பித்துக் கொண்டன.
2. சங்க அமைப்பாகத் திரட்டப்பட்டு, சாதியாகத் தம்மை உருவாக்கிக் கொள்ள, வட்டார உட்சாதிப் பிரிவுகளை ஒன்றிணைக்க வேண்டிய அவசியம் அச்சாதிகளுக்கு ஏற்பட்டது. ஆதலால் இவ்வேலையைச் செய்ய இதழ்கள் தொடங்கப்பட்டன. வரலாற்று நூல்களும் எழுதப்பட்டன.
3. சாதிய அடிப்படையில் மக்களைத் திரட்டி, அந்தப் பலத்தில் அரசுப் பதவிகளில் தங்களை உயர்த்திக் கொள்ளவும், தமது மக்களுக்கான சலுகைகளைப் பெறவும் முயன்றன. இம்முயற்சிகள் முதன் முதலில் நிலவுடைமைப் பிரிவினரிடமிருந்து தான் ஆரம்பமாயின.
4. இடைநிலைச் சாதிகளின் சாதியப் பெருமிதம் நாடார்கள் மற்றும் ஒடுக்கப்பட்ட சாதிகள் மீதான சாதி ஆதிக்கமாக வளர்ச்சியடைந்தது.

இவை போன்ற காரணிகளை அடிப்படையாகக் கொண்டே சாதி அமைப்புகள் அல்லது சங்கங்கள் தங்கள் இனத்தை மேம்படுத்திக் கொள்கின்றன.

ஆங்கில அரசின் கீழ் மக்கட்தொகை கணக்கு எடுத்த உயர்நிலை அலுவலரான ஹெர்பர்ட் ஹெச்.ரிஸ்லி I.C.S. என்பவர் 1901இல் இந்திய நாட்டின் மக்கட் தொகை கணக்கினைச் சாதி அடிப்படையில் (சாதி வாரியாக) தயார் செய்ய ஆணையிட்டார். இந்த முறை, 1911, 1921 மற்றும் 1931-ஆம் ஆண்டுகளிலும் தொடர்ந்தது. நான்கு கணக்கெடுப்பில் பின்பற்றப்பட்ட சாதியவாரியான கணக்கெடுப்பு 1941இல்

நிறுத்தப்பட்டது. மேற்கண்ட கணக்கெடுப்பில் மேல்சாதி, கீழ்சாதி என பிரித்தறிய ஓர் கொள்கை புகுத்தப்பட்டது. பிராமணர்கள் எந்த சாதியிடம் தண்ணீரும் உணவும் ஏற்றுக் கொள்கிறார்களோ அவர்கள் உயர்ந்த சாதிக்காரர்கள் என்றும் (அதாவது வைசியர் சத்திரியர் உயர்ந்த சூத்திரர் ஆகியோரிடம்) எந்த சாதியினரிடம் பிராமணர்கள் தண்ணீரும் உணவும் எடுத்துக் கொள்வதில்லையோ அவர்கள் கீழ்சாதி மக்கள், அதாவது இழிந்த சூத்திரர் என்றும் இரு வகையாக பிரிக்கப்பட்டனர். மக்கட்தொகைக் கணக்கெடுப்பிற்குப் (1901) பிறகு கீழ்மட்டத்தில் இருந்தவர்கள் கூட தாங்கள் உயர்ந்த சாதிக்காரர்களாகக் கருதப்பட வேண்டும் என்பதற்காகச் சாதி அமைப்புகள் ஏற்படுத்தி அதற்கான கோரிக்கை வைக்கத் தலைப்பட்டனர்.

உயர்சாதி சூத்திரன் என்கிற அந்தஸ்து கிடைத்தால் சமுதாயத்தில் உயர்நிலை கிடைக்கும் எனக்கருதியதால் எல்லா இனத்தாரும் தாங்களும் உயர்சாதியினராகக் கருதப்பட வேண்டும் என்று வேண்டுகோள் விடுக்கலாயினர். உயர் வர்ணத்தான் என்கிற பெயர் பெற நுழைவு வாயிலாகக் கருதப்பட்டது. ‘போர் வீரன்’ என்கிற முத்திரையாகும். சூத்திரர்களில் சிலர் அரசின் போர்ப்படையில் அங்கம் வகித்தனர். இதைப் பயன்படுத்திச் சூத்திரர்கள் (போர் வீரர்கள் என்கிற போர்வையில்) சத்திரியர் எனக்கூறிக் கொண்டு உயர்சாதி சத்திரியர் என்கிற பெயர் பெறுவதற்காக வர்ண அமைப்பின் ஏணியின் கீழ்ப்படியிலிருந்து (நான்காவது படியிலிருந்து இரண்டாவது படிக்கு) மேல்படிக்குச் செல்ல முயற்சிகள் மேற்கொண்டனர். படையாச்சிகள், அகமுடையார், கள்ளர்கள், மறவர்கள் ஆகிய பிரிவினர் சத்திரியர்கள் என்று தங்களைக் கூறிக்கொண்டனர். இதைக்கண்ட முதலியார்கள் சூத்திரர் பிரிவில் தாங்கள் முதல்நிலையில் இருப்பதாகக் கூறிக்கொண்டு ‘வெள்ளாளர்கள்’ என்கிற புதுப்பிரிவினை அமைத்தனர். இந்தக் கணக்கெடுப்பின் காரணமாகச் சாதி அமைப்புகள் வலுப்பெறத் துவங்கின.

> இந்த மக்கட் தொகையின் அடிப்படையில் ஆங்கில அரசிடமிருந்து தங்கள் தங்கள் சாதிக்கானச் சலுகை பெற அரசாங்கத்தை நிர்பந்திக்கத் துவங்கினர். சூத்திரர், வைசியர், சத்திரியர் என்கிற உயர்நிலைக்கு செல்ல இரண்டு வழிகள் இருந்தன. ஒன்று போர் வீரனாகி சத்திரிய அந்தஸ்து பெறுதல், மற்றொன்று வியாபாரம் செய்து வைசியர் என்கிற அந்தஸ்து பெறுதலாகும்[68]

என்பர்.

தென் தமிழகத்தில் மறவர், கள்ளர், முக்குலத்தோர் ஆகியோர் அரசர்களின் போர்ப் படையில் சேர்ந்து தங்களை சத்தியர்கள் என்று சொல்லிக் கொண்டு சமூகத்தில்

உயர்நிலை பெற முயற்சி மேற்கொண்டது போல ஆந்திராவில் ரெட்டியார்களும், குஜராத்தில் படேல் இனத்தவரும் வியாபாரம் செய்யத் தொடங்கி வைசியர் எனக் கூறிக்கொண்டு உயர் அந்தஸ்து பெற முனைந்தனர்.

ஒவ்வொரு சாதி அமைப்பும் பிற சாதிகளை விடத் தாங்கள் உயர்ந்தவர் எனக்கூறி வர்ணமுறையில் உயர்நிலையை அடைந்தவர் என்கிற கோரிக்கையை அரசிடம் வைத்துப் போராட்டம் நடத்தத் துவங்கினர். இதைக்கண்ட ஆங்கில அரசு 1931க்குப் பின்னர் சாதி அடிப்படையில் கணக்கெடுக்கும் முறையைக் கைவிட்டது. தற்பொழுது பல சாதிகள் 1931 ஆண்டு மக்கட் தொகை கணக்கெடுப்பை அடிப்படையாகக் கொண்டு தங்கள் இன மக்கள் பல்கிப் பெருகி அதிக எண்ணிக்கையில் உள்ளதாகக் கூறி அரசை நிர்பந்திக்கத் துணிகின்றனர். தமிழகத்தின் தற்போதைய மக்கட் தொகை 9.30 கோடியாகும். சாதிச் சங்கங்கள் கூறும் மக்கட் தொகை எண்ணிக்கையைக் கூட்டிப் பார்த்தால் இது தமிழகத்தின் மொத்த மக்கட் தொகை எண்ணிக்கையை விட பல மடங்கு அதிகமாக உள்ளது. இது தங்களுக்குச் சாதகமான அனுமானமான ஆதாரமற்ற கற்பனைக் கணக்கே தவிர உண்மையான ஒன்றல்ல என அறியலாம்.

**தமிழ்நாட்டில் சாதி அமைப்புகளும் அரசியலும்**

தமிழகத்தில் சாதி அமைப்பினைப் பார்ப்பணர், பார்ப்பணர் அல்லாதோர், தாழ்த்தப்பட்டோர் என மூவகைப்படுத்தலாம். சுயமரியாதை இயக்கம் தோன்றிய துவக்கத்தில் முஸ்லீம்கள், கிறித்தவர்கள், ஒடுக்கப்பட்டவர் ஆகியோர் பிராமணர்கள் அல்லாதோர் என்ற பிரிவில் சேர்க்கப்பட்டிருந்தனர். ஆனால் தற்போதைய நிலையில் மேற்கண்ட மூன்று பிரிவினரும் தனித்தனிப் பிரிவினர்களாகவே செயல்படுகின்றனர். 2001இல் நடைபெற்ற பொதுத் தேர்தலின் போது பிராமணர்கள் அல்லாத பிற சாதியினர் தங்களது சாதிக்கெனத் தனித்தனி அமைப்பினை ஏற்படுத்திக் கொண்டனர்.

தமிழகத்தில் சாதிச்சங்கங்களில் முக்கியமானவை கீழ்வருமாறு.

1. நகரத்தார் சங்கம்
2. தேவர் பேரவை
3. தமிழ்நாடு யாதவ மகாசபை
4. மீனவர் நலச்சங்கம்
5. தமிழ்நாடு செங்குந்தர் மகாசங்கம்
6. மாநில மருத்துவர் சங்கம்

7. கொங்கு வேளாளக் கவுண்டர் பேரவை
8. தமிழ்நாடு நாடார் மகாஜன சங்கம்
9. தெலுகு நாயுடு பேரவை
10. தெலுகு நாயக்கர் சம்மேளனம்
11. வன்னியர் சங்கம்
12. இருளர் பாதுகாப்பு மக்கள் இயக்கம்
13. அனைத்து முதலியார் பேரவை
14. தேவேந்திரகுல வேளாளர் சங்கம்
15. பறையர் பேரவை
16. அருந்ததியர் சங்கம்

மேற்கண்ட சாதி அமைப்புகள் அனைத்தும் அரசியல் அரங்கின் அதிகாரத்தில் பங்கு பெற வேண்டுமென்ற ஒரே நோக்கத்தில் இதர சாதி அமைப்புகளுடன் இணைந்து செயல்படுகின்றன. சாதி பற்றிய விழிப்புணர்வும், இதர அமைப்புகளின் தோழமையுடன் அதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டுமென்ற வேட்கையும் பஞ்சாயத்துராஜ் அமைப்புகளான ஊராட்சி ஒன்றியம் மாவட்ட ஊராட்சிகளுக்கான தேர்தலின் போது வெளிப்பட்டது. பிராமணர்களும், ஆதிக்கம் செலுத்தி வந்த உயர்சாதி சூத்திரர்களும் அதிகாரத்திலிருந்து அகற்றப்பட்டு மறவர்கள், படையாச்சிகள் முதலான பிற்படுத்தப்பட்ட சமுதாயத்தைச் சார்ந்தவர்கள் உள்ளாட்சி அமைப்புகளின் தலைவர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

சாதி அமைப்புகளின் தலைவர்கள் தங்களது சாதியைச் சார்ந்தவர்களுக்கே ஓட்டளிக்க வேண்டுமென்று வற்புறுத்தினர். 'வன்னியர் ஓட்டு அந்நியர்க்கல்ல' என்ற தாரக மந்திரத்தைத் தமிழ்நாடு உழைப்பாளர் கட்சியின் தலைவரான எஸ்.எஸ்.இராமசாமி படையாச்சியும், எம்.ஏ.மாணிக்கவேல் நாயக்கரும் 1952 ஆம் வருட பொதுத் தேர்தலின் போதே கூறியுள்ளனர். தேர்தலுக்கான வேட்பாளர்கள் அப்பகுதியில் உள்ள பெருவாரியான இனத்திலிருந்தே தேர்வு செய்யப்பட்டனர். வேட்பாளரின் தகுதி பற்றிச் சிறிதும் கருத்திற் கொள்ளாமல் சாதிய அடிப்படையிலே வேட்பாளர்களைத் தேர்வு செய்யும் நிலை மேலோங்கி நிற்கின்றது.

பிராமணர் அல்லாதோர் அரசியலில் அதிகாரத்தைக் கைப்பற்றியதும் அவர்களுக்குள் இருந்த பல்வேறு சாதி அமைப்புகளுக்கு இடையே கருத்து வேறுபாடும்

உட்பூசல்களும் போட்டிகளும் தோன்றின. இதன் காரணமாக மக்களுக்குச் சேவை செய்தல் என்ற மனப்பான்மை மாறி தங்களுடைய சமுதாயத்திற்கும், சுயலாபத்திற்கும், சுயமுன்னேற்றத்திற்குமான ஒரு தொழில் நிலை ஏற்பட்டது. சுயமுன்னேற்றம், சுயலாபம் என்ற எண்ணம் ஏற்பட்டதால் அதனை அடைய இதர சமூகத்தின் பல்வேறு அமைப்புகளுடன் ஒருங்கிணைந்து கொண்டு தங்களின் ஆசைகளையும், தேவைகளையும் நிறைவேற்றிக் கொள்கின்றனர்.

**இன இதழ்கள் விளக்கம்**

இந்தியாவில் வாழுகின்ற அனைத்து மக்களும் தங்களுக்கென மொழி, பண்பாடுகள், பழக்கவழக்கங்கள் போன்றவற்றைப் பெற்று வாழ்கின்றனர். பல்வேறு பகுதிகளில் வாழும் மக்களுக்கு இயக்கச் சார்பாளர்களுக்குத் தலைமையிடத்தில் இருந்து வழங்கும் செய்திகளை செயல்திட்டமாக மாற்றுவதற்கு இதழ்களே காரணமாக அமைகின்றன. இதழ்கள் 1. அறிவித்தல், 2. அறிவுறுத்தல், 3. மகிழ்வித்தல் என்ற மூன்றை முக்கிய நோக்கமாகக் கொண்டு செயல்படுகின்றன. அத்தகுக் குறிக்கோளில் செயல்படும் இதழ்கள் பல வகைப்படும் சமயம், பொருளாதாரம், வணிகம், சாதி, இனம், தொழிலாளர் நலம், ஆன்மீகம், திரைப்படம், அரசியல் என்று பல்வேறு துறைகளை உள்ளடக்கமாகக் கொண்டு வெளிவரும்.

ஒவ்வொரு இனத்தாரும் தங்கள் இனம் முன்னேற வேண்டும் என அவ்வின நல ஆர்வலர்கள் மூலமாக சங்கத்தினையும், பேரவையினையும் உருவாக்கிக் கொண்டு அதன் மூலமாகத் தமது இனத்தின் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ள இதழ்களை வெளியிடுகின்றனர். அந்த வகையில் சங்கச் செய்திகளை இனத்தார்க்கு அறிவிக்கவும், அறிவுறுத்தவுமாக ஆரம்பிக்கப்பட்டு இனத்தின் தேவையை மேன்மையை நிலை நாட்டுவதால் இவ்விதழ்கள் 'இன இதழ்கள்' என அழைக்கப்படுகின்றன.

இவ்வின இதழ்கள் பெரும்பாலும் வணிக நோக்கமில்லாது இன மேம்பாட்டை முன்னிறுத்தியே வெளிவருகின்றன. இன மக்களின் உணர்வுகளை பிரதிபலிப்பதாக அமைகின்றது. இன ஒற்றுமை, இன விழிப்புணர்வு. இன அடையாள மீட்டுருவாக்கம், இனப்படைப்பாளர் உருவாக்கம் போன்ற எண்ணற்ற செயல்களை உருவாக்குகின்றன.

**இன இதழ்களின் தோற்றப் பின்புலம்**

*1872 ஆம் ஆண்டு மக்கள் கணக்கெடுப்பின் போது தங்களைச் சூத்திரன் என்று குறிப்பிட்டதை எதிர்த்துச் சைவ வேளாளர்கள் இயக்கமாகத் திரண்டு போராடினர். இதன் விளைவாக மறைமலையடிகள் சைவ வேளாளர் வரலாற்றை எழுதினார். (க.பஞ்சாங்கம் 2002:86) பின்பு இச்சாதியினர். வேளாள மித்திரன் (1928), வேளாளர் நல்வாழ்வு (1929) போன்ற இதழ்களை வெளியிட்டனர். செட்டியார்கள் தங்களை வைசியர்கள் என்று அடையாளப் படுத்திக்கொண்டு 1923 ஆம் ஆண்டு 'தன வைசிய ஊழியன்' என்ற இதழை வெளியிட்டனர். 1871 ஆம் ஆண்டு நடைபெற்ற மக்கள் தொகை கணக்கெடுப்பு அதிகாரிகளிடம் தங்களை 'சத்திரியர்கள்' என்று அழைக்க வேண்டும் என வேண்டுகோள் விடுத்தனர். 1888 ஆம் ஆண்டு சென்னை வன்னிய குலச்சத்திரிய தீபம், வன்னிய குலச் சத்திரியன் (128) ஆகிய இதழ்களை வெளியிட்டனர். 1910 ஆம் ஆண்டு துவங்கப்பட்ட நாடார் மகா ஜன சங்கம் நாடார்களை சத்திரியர் என அழைக்க வேண்டும் என வலியுறுத்தியது. தேவர்கள், நாடார்களைத் தீண்டத்தகாதவர்களாக நடத்திய விதத்தை முடிவுக்குக் கொண்டு வர நாடார்களுக்குச் சத்திரிய மதிப்பு தேவைப்பட்டது. தேவர்கள் உள்ளிட்ட முக்குலத்தோர் தங்களை மூவேந்தர்களின் வாரிசு என அழைத்துக் கொண்டனர். இவர்கள், 1901 ஆம் ஆண்டில் சமூக ரீதியாகத் திரண்டு மறவர் மகா ஜனசங்கம் (1929), சென்னை அகமுடையார் சங்கம் (1932), கள்ளர் சங்கம் (1932) போன்ற அமைப்புகளை ஏற்படுத்தியுள்ளனர். இவர்களின் இன இதழ்களாக 1923 ஆம் ஆண்டு 'மறவர் குலத்தூதன்', 1928 ஆம் ஆண்டு 'கள்ளர் கோமான்' 1930 ஆம் ஆண்டு 'அகம்படியார் குல நேசன்' போன்ற இதழ்கள் வெளிவந்தன. இதே போல் கோனார்கள் தங்களை 'யாதவன்' என்றும் வலையர்கள் தங்களை 'முத்தரையர்' 'முத்துராஜா' என்றும், செங்குந்தர்கள் தங்களை 'முதலியார்' எனவும் அழைத்துக் கொள்ளத் துவங்கினர். இங்ஙனம், ஒவ்வொரு சாதியினரும் கடவுளோடு தங்களை இணைத்துப் புராணம் மற்றும் தமிழ் வரலாற்று மரபுப் பெயர்களோடு, தங்களை உயர்குடியாக்கம் செய்ய முயன்றுள்ளனர்.*

*இந்தியத் தேசிய உணர்வு ஒரு பக்கம் வளர்ந்து வந்த நிலையில், தென் இந்தியாவில் திராவிடத் தேசிய உணர்வும், திராவிடத் தேசிய உணர்வுகளுக்குள்ளே பல்வேறு சாதியச் சமூகங்கள் தனித்தனியாகப் பிரிந்து இயங்குவதில் வேகம் கொண்டிருந்தன. இந்த வேகமிகு சாதிய எழுச்சி, அரசியல், கல்வி, மதம், இலக்கியம் முதலியன பண்பாட்டுத் துறையில் மட்டுமல்லாமல் இதழியல் துறையிலும் எதிரொலித்தன.*

பார்ப்பனரல்லாதவர்களை ஒருங்கிணைக்கும் முயற்சியில் தோற்றம் பெற்ற நீதிக்கட்சியில் படிப்படியாக மேல் சாதிய மனோபாவம் வெளிப்படையாக மேலேழுந்தது. நீதிக் கட்சியைத் தோற்றுவித்த சங்கரன் நாயர் என்பவர் கட்சியின் தலைவராகவும். அரசியல் இன்றியமையாப் பதவியிலும் இருந்தபோது அவர் மலையாளிகளை முக்கியப் பதவிகளில் அமர்த்தினர். அதற்குப் பிறகு வந்த தியாகராயச் செட்டியாரும் அவருடைய குலத்தாரையே பல பதவிகளில் நியமனம் செய்தனர். அதைப் போல சர்.ஏ.இராமசாமி முதலியார் நிர்வாகத்தின் போதும் கட்சியிலும், ஆட்சியிலும் முதலியார்களுக்கே உயர் பதவிகள் கொடுக்கப்பட்டன என்பது போன்ற குற்றச்சாட்டுகள் எழுந்தன. மேலும் நீதிக்கட்சி ஆட்சிக்காலத்தில் கொண்டு வரப்பட்ட வகுப்புவாத பிரதிநிதித்துவம் பின்தங்கிய சாதிகளிடையே சங்கங்கள் வளர்வதற்கும், அதன் அடிப்படையிலான சாதி அரசியல் தலைதூக்குவதற்கும் உதவியது. இவ்வாறான சமூக வரலாற்றுப் பின்புலத்தில் 1916 முதல் 1947 ஆம் ஆண்டு வரையிலான காலகட்டத்தில் இந்தியத் தேசிய மற்றும் திராவிடத் தேசியம் ஒன்றுக்கொன்று முரண்பட்ட கருத்தியல்களுடன் பிளவுபட்டத் தளங்களில் இயங்கிவந்தன. சமூகநீதி, சாதி ஒழிப்பு, பகுத்தறிவு என்ற போர்வையில் இவை செயல்பட்டாலும், உண்மையில் பிராமணர் × பிராமணரல்லாதார் மற்றும் பிராமணரல்லாத இடைநிலைச் சாதிகள் × அடித்தளச்சாதிகள் என்ற எதிர்வுகளிலேயே இவை செயல்பட்டன. இந்தியர் என்ற கருத்தியலுக்குள்ளும், திராவிடர் என்ற கருத்தியலுக்குள்ளும், சாதிய மேலாண்மை ஓங்கி இருந்ததை எவரும் மறுக்க இயலாது. இதன் விளைவாக, 1916 ஆம் ஆண்டுக்குப் பிறகு, பார்ப்பனர் மற்றும் பார்ப்பனர் அல்லாத சாதி இந்துக்களின் மேலாண்மை எதிரான கருத்து நிலைகள் வளர்ப்பதிலும், சமூக அரசியல் ரீதியான எதிர் நடவடிக்கைகளை மேற்கொள்வதிலும் அடித்தளச் சாதிகள் பெரும்பங்கு வகித்துள்ளன.

### வீடுதலைக்குப்பின் இன இதழ்களின் தோற்றம்

விடுதலைக்குப்பின் இந்திய அளவில் கொண்டுவரப்பட்ட வறுமை ஒழிப்புத் திட்டங்கள், பசுமைப் புரட்சி, இடஒதுக்கீடு, கல்வி வளர்ச்சி, தொழி வளர்ச்சி, நகர மயமாக்கல் போன்றவை தமிழகத்தில் சாதி அமைப்பில் பல மாறுதல்களைச் செய்தன. இத்திட்டங்கள் முதலாளித்துவ வர்க்கங்களாய் உருவெடுத்து சாதி ஏற்பாட்டுக்குள் மக்கள் பிளவுபடுவதைத் தீவரமாக்கினவே ஒழிய ஒற்றுமை ஏற்படுத்த முடியவில்லை. அதாவது சாதி அமைப்பில் வர்க்க உருவாக்கமும், ஏழை × பணக்காரன் என்ற வேறுபாடுகளும் தீவிரப்பட்டன. இருப்பினும், சனநாயகத் தாக்கமும் நவீன மயமாக்கலும் பின் தங்கிய சாதிகளிலும் குறிப்பாக ஒடுக்கப்பட்டோர்களின் (தலித்)

மத்தியில் இத்திட்டங்களைப் பற்றிய விழிப்புணர்வு ஏற்பட வழி வகுத்தன. பழைய இனக்குழுத் தன்மையிலான சொந்த பந்த பாசவலை, பொருளாதார ஏற்றத்தாழ்வால் சிதைக்கப்பட்டன. பாரம்பரிய சாதிய பழக்கவழக்கங்கள், மரபுகள் யாவும் நவீனத்துவத்தின் தாக்கத்தால் கட்டுடையத் தொடங்கின. அதே சமயம் இக்காலத்தில் மைய நீரோட்ட அரசியல் கட்சிகளின் அரசியலுக்கு மாற்றாகப் புதிய சாதிய அரசியல் அணிகள் உருவாக்கம் பெறத்தொடங்கின. இத்தகைய சாதிய அரசியல் உருவாவதற்குப் பின்வரும் சமூக அரசியலே காரணங்களாய் அமைந்தன.

அரசியல் கட்சிகளின் தலைமைப் பொறுப்பைச் சிறுபான்மைச் சாதியினர் தம் வசம் வைத்துக் கொண்டதாலும், பெரும்பான்மைச் சமுதாய மக்களின் உரிமைகள் மறுக்கப்பட்டதாலும், பெரும்பான்மைச் சாதியைச் சேர்ந்தவர்கள் சாதிச்சங்க அரசியல் கட்சிகளின் நிலைப்பாட்டைத் தத்தமது சாதி மக்களிடையே எடுத்துச் சொல்லியதன் விளைவே, தமிழகத்தில் சாதிச் சங்கங்களின் பெருக்கத்திற்குக் காரணமாக அமைந்தது. மேலும் விவசாயச் சூழலில் ஏற்பட்ட தொடர்ச்சியான வறட்சி மற்றும் வேலையின்மை போன்ற காரணங்களும், இடதுசாரி இயக்கங்களால் ஏற்பட்ட சமூக அழுத்தமும், அவ்வியக்கங்கள் தமிழகத்தில் வலுவாக இல்லாததாலும் சாதிச்சங்கங்கள் நேரடி அரசியலுக்கு வரவேண்டிய தேவை ஏற்பட்டது.

புதிய சாதிய அரசியல், பசுமைப் புரட்சியின் விளைவாக எழுந்த விவசாய நெருக்கடியோடு தொடர்புடையதாகும். பசுமைப்புரட்சியின் போது பணப்பயிர்களின் விரிவாக்கமும், அவற்றின் உற்பத்தித்திறனும் பல மடங்கு கூடின. கிராமப்புறங்களில் நீர்ப்பாசன ஆதாரங்களைப் பெருக்கிக் கொண்டே சிறு, நடுத்தர விவசாயிகளுக்கும், விவசாயத் தொழிலாளர்களுக்கும் இடையிலான சாதிய முரண்பாடுகள் புதிய திசையில் முனைப்படைந்தன. அதாவது, பசுமைப் புரட்சியின் நெருக்கடியால் ஏழை விவசாயத் தொழிலாளர்கள் வேலை இழந்தனர். எனவே, இவர்கள் சமூக அரசியல் ரீதியாக அணி திரள முயன்றனர். இங்ஙனம் `சாதியுணர்வு! அனைத்துச் சாதிகளிடமும் விதைக்கப்பட்டது. இப்போக்கு அச்சியந்திரம் அறிமுகமான ஆங்கிலேய ஆட்சியின்போது ஒவ்வொரு சாதியும் தங்கள் சாதி வாசகர் வட்டத்தை நிலை நாட்டிக்கொள்ளவும் திரும்ப, திரும்பக் கூறிச் சாதியுணர்வை உருவேற்றவும் இதழ்களை வெளியிடத் தொடங்கின.

இடைநிலைச் சாதியினரின் இதழ்கள் சார்ந்துள்ள அவர்கள் சார்ந்துள்ள சாதியின் முரணாகவே அமைந்துள்ளன. நாயுடு சமுதாயம் (1973), கருணீகர் மித்திரன் (1982), செங்குந்த மித்திரன் (1952), முத்தரையர் முழக்கம் (1973) வேளாளர் துணை (1981). தேவர் முரசு (1980), கொங்கு நண்பன் (1981) போன்ற இதழ்கள் அந்தந்தச் சாதிய முன்னேற்றத்திற்கான ஆலோசனைகள், சங்க மாநாடுகள், கூட்டங்கள் மற்றும் தீர்மானங்கள் முதலானவை பற்றிய செய்திகளுக்கு இன்றியமையாமை கொடுத்து வெளியிட்டன. அரசாங்கம் ஒவ்வொரு சாதிக்கும் செய்கின்ற உதவிகள், செய்ய வேண்டிய சலுகைகள் ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றன. தமிழகத்தின் அனைத்துச் சாதிகளும், தனித்தனிச்சங்கம் அமைத்து அதிகார மையத்தை நோக்கித் தீவிரமாகச் செயல்பட்டு வருவதால், அச்சங்கங்களின் கருத்துக்களை வெளியிட இதழ்கள் தேவைப்படுகின்றன.

அந்தந்தச் சமூக மக்களிடையே ஒற்றுமையுணர்ச்சியைத் தோற்றுவித்து அதிகாரத்தைக் கைப்பற்றுவதே இச்சங்கங்களின் நோக்கமாய் உள்ளன. அதனால் அதிகார மையத்தை நோக்கிய குவியமே இவ்விதழ்களின் உள்ளடக்கச் செய்திகளாகின்றன. இந்நிலையில் தேசிய, சமூக, சமய இயக்கங்களும், இயக்கம் சார்ந்த இதழ்களும் ஒடுக்கப்பட்டோர் பிரச்சினைகள் மீது சிறப்புக் கவனம் செலுத்தவில்லை. விடுதலைக்குப் பிறகும் ஒடுக்கப்பட்டோர் மீது வன்முறைகள் மற்றும் தீண்டாமைகள் தொடர்ந்தன. மத்திய, மாநில அரசுகளும் ஒடுக்கப்பட்டோர்கள் மீது நடத்தப்படும் மனித உரிமை மீறல்கள் மீது சரியான நடவடிக்கை எடுக்கத் தவறின. எனவே மைய நீரோட்ட இயக்கங்களில் கீழ்மட்ட பொறுப்புகளை வகுத்த ஒடுக்கப்பட்டோர்கள், ஒடுக்கப்பட்டோர் பிரச்சினைகளை மைய நீரோட்ட இயக்கங்களின் கவனத்திற்குக் கொண்டு செல்லும் பொருட்டும், தீண்டாமை குறித்து ஒடுக்கப்பட்டோர்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்தும் விதமாகவும் இதழ்களை வெளியிட்டனர். ஆதிக்கச் சாதியினர் ஆதிக்கத்தை நிலை நிறுத்தும் பொருட்டும், இன்னும் சில குறிப்பிட்ட சாதியினர் பொருளாதாரத்தில் மென்மேலும் உயர்வு அடையவும் இதழ்களை வெளியிட்டதோடு; அந்தந்த வட்டார அளவில் தங்கள் சாதிய மக்களை ஓர் அணியில் திரட்டும் முயற்சியில் சிலர் ஈடுபட்டு இதழ்களை வெளியிட்டுள்ளனர் என்பன கவனத்தில் கொள்ளப்பட்ட வேண்டியவைகளாகும்.

குறிப்பாக, இந்திய விடுதலைக்குப் பிறகு காங்கிரசு பேரியக்கம், மாநிலங்களில் ஆட்சி அதிகாரத்தைத் தக்கவைப்பதில் முனைப்புக் காட்டியது. அதே சமயம்,

பிராமணர்களும் பிராமணர் அல்லாத உயர் சாதியினரும் உயர் கல்வி, அரசு வேலை ஆகியவற்றைப் பகிர்வதில் கவனம் செலுத்தின. அடிமைப்பட்டுள்ள ஒடுக்கப்பட்ட சாதிகள் மற்றும் சில சாதிகள் மீதான வாழ்வியல் சிக்கல்களைத் தீர்ப்பதற்கோ அல்லது ஊடகங்கள் வழியாக அவர்களின் சிக்கல்களை வெளிப்படுத்துவதற்குக் காங்கிரசு போன்ற பேரியக்கங்கள் முயற்சிக்கவில்லை. காங்கிரசின் இப்போக்கினால் அதிருப்தியுற்ற ஒடுக்கப்பட்டோர் காங்கிரசு இயக்கம் மற்றும் திராவிட கட்சிகள் போன்ற அமைப்புகளில் இருந்துகொண்டே இதழ்கள் வழியாகத் தங்களது இன உணர்வுகளை வெளிப்படுத்த முயன்றனர்.

**இன இதழ்களின் தோற்றக் காரணங்கள்**

ஆங்கிலேயரின் பிரித்தாளும் சூழ்ச்சியால் தமிழகத்தில் வாழ்ந்த சமூகத்தினரிடையே விழிப்புணர்ச்சி ஏற்பட்டது. நாட்டில் நிலவிய சாதிகள், அரசாங்கத் துறைகளில் பங்கு பெறவும், ஏனைய சாதியினரிடம் தங்களை உயர்த்திக் காட்டவும் இன இதழ்களைத் தோற்றுவித்தன.

இன இதழ் ஏதேனும் ஒரு வகையில் தங்கள் இனத்தை முன்னேறச் செய்திடும் என்ற நோக்கில் வெளியிடப்படுகின்றது. இன இதழ்கள் தோற்றத்திற்கு முக்கியக் காரணிகளாகக் கீழ்க்கண்டவற்றைக் குறிப்பிடலாம்.

1. தங்கள் இனத்திற்கெனத் தனி இதழ் வேண்டும்.
2. தங்கள் இனம் மற்ற இனத்தினை விட மேம்பாடு அடைய வேண்டும்.
3. இனத்திற்காக உழைத்த சான்றோர்களின் பணி, வீரம், பண்புநலன் ஆகியவற்றை எல்லோரும் அறிந்துகொள்ளுதல்.
4. இனத்தினர் விழிப்புணர்வு பெறவேண்டும்.
5. இனப் படைப்பாளிகளை வெளி உலகிற்குக் காட்டுதல்.
6. புதிய படைப்பாளிகளை உருவாக்குதல், இனம் காட்டுதல்.
7. தாங்கள் இன மக்களின் எண்ணிக்கையை வெளிக்காட்டல்.
8. இனமக்களை ஒன்று திரட்ட, அவர்களிடத்தில் ஒற்றுமையை ஏற்படுத்த ஓர் இணைப்புப் பாலமாகத் திகழ்ந்தது.
9. அதிகார வர்க்கத்தினருடன் போராட, வலிமையைக்காட்ட, இனநலனைப் பேணிக்காக்கப் பயன்படுகின்றது.

## இட ஒதுக்கீடு

தாழ்த்தப்பட்டவர்களுக்கும், பிற்படுத்தப்பட்டவர்களுக்கும், சிறுபான்மையினருக்கும், அரசுத்துறைகளில் வேலை பெற்றுத் தரவேண்டும். அவர்களின் வாழ்க்கைத் தரம் மேம்பட வேண்டும். பொருளாதாரப் பின்னடைவினால் சீர்குலையும் இவர்களின் வாழ்வை உயர்த்த வேண்டும் என்பதற்காக இட ஒதுக்கீட்டு முறையைக் கொண்டு வர இவ்வின இதழ்கள் வாயிலாகக் கோரிக்கை வைத்தனர். இதனால் இந்த இட ஒதுக்கீடானது தாழ்த்தப்பட்டவர்களுக்கு 1943இல் இருந்தும், பிற்படுத்தப்பட்டவர்களுக்கு 1994இல் இருந்தும் அளிக்கப்பட்டு வருகிறது. இடஒதுக்கீடு அளிக்கப்பட்டு வருவது உண்மை. ஆனால் இது முழுமையாக, முறையாகச் செயல்படுத்தப் படுகிறதா? என்றால் இல்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

## இனப்பிரதிநிதித்துவம்

தமிழ்நாட்டில் உள்ள ஒவ்வொரு இனமும் தங்களுக்கென, அதாவது தங்கள் இனத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ள 'இன அடையாளம்' என்பது மிகவும் முக்கியமான ஒன்றாக இருக்கிறது. இனத்திலுள்ள மக்களை ஒன்றுபடுத்தி, அவர்களின் எண்ணிக்கையை ஆட்சியில் உள்ளவர்களிடம் வெளிப்படுத்தி அதன் மூலமாகத் தங்கள் இனத்துக்குப் பங்கு கிடைக்கச் செய்கின்றனர்.

## ஆட்சி அதிகாரத்தில் பங்கு

இனத்தின் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளவும், அதிகார வர்க்கத்தினருடன் போராடவும், தங்கள் சமூக நலனைப் பேணிக்காக்கவும், தங்கள் சமூகம் மற்ற இனத்தினை விட மேம்பாடு அடையவும் இனப்பிரதிநிதியையும், அல்லது இனத்தின் முன்னோடித் தலைவர்களையும் ஆட்சி அதிகாரத்தில் பங்கு பெறச் செய்து அதன் மூலமாகத் தங்கள் இனத்தை உயர்த்த இன இதழ்கள் முக்கியப் பங்காற்றுகின்றன. ஆட்சி அதிகாரத்தில் பங்கு பெறச் சில இனங்கள் ஆட்சியாளர்களிடம் இத்தனை பதவி வேண்டும் என்று வெளிப்படையாகவே கேட்கின்றன.

## இன வலிமை

ஒவ்வொரு இனத்தினரும் தங்கள் இனத்தின் வலிமையையும், பெருக்கத்தையும் மற்றவர்களுக்கு உணர்த்த அவ்வப்பொழுது ஊர்வலங்கள், மாநாடுகள், பொதுக்கூட்டங்கள், கருத்தரங்குகள் எனப் பல்வேறு நிகழ்ச்சிகளை ஏற்பாடு

செய்கின்றனர். இதற்குப் பெரிய அளவில் விளம்பரங்கள் செய்யப்பட்டு இனத்தினருக்கு அறைகூவல் விடுக்கின்றனர். இதன் காரணமாக மற்ற இனத்தாரும் தங்கள் இனத்தின் பெருமையையும், பெருக்கத்தையும், வலிமையையும் காட்ட முடியும் என்று நினைக்கின்றனர். 'வன்னியர் மாநாடு' 'தேவேந்திரர் மாநாடு', 'முக்குலத்தோர் மாநாடு', 'செங்குந்தர் மாநாடு' என மாநாடுகள் மூலமாகத் தங்கள் இனத்தின் வலிமையை வெளிப்படுத்துகின்றனர்.

## பண்பாடு

ஒவ்வொரு சமூகமும் தங்களுக்கென்று தனித்த பண்பாடு, கலாச்சாரம் போன்றவற்றைப் பெற்று விளங்குகின்றன. தங்கள் சமூகத்தின் பழங்கால வரலாறு, இனம் தோன்றிய வரலாறு, இனத்தின் முன்னோடித் தலைவர்களின் செயல்பாடுகள் போன்றவற்றையும் இன இதழ்களின் மூலமாக வெளிப்படுத்துகின்றன.

இவை மட்டுமல்லாமல் வேலைவாய்ப்புப் பற்றிய செய்திகளையும், தங்கள் இனத்தின் கல்வி நிறுவனங்கள், மருத்துவமனைகள், வர்த்தக நிறுவனங்கள், தங்கள் இனத்தில் நிகழும் திருமணங்கள், பிறப்பு, இறப்பு, ஆன்மீகம், நினைவு அஞ்சலி, அலுவலக அறிவிப்புகள், பிறந்த நாள் வாழ்த்துக்கள், பணி ஓய்வு, பதவி உயர்வு, திருவிழா, புதுமனை புகுவிழா பற்றிய அனைத்து வகையான நிகழ்வுகளையும் இவ்வின இதழ்கள் வெளிப்படுத்துகின்றன. இவ்வாறு பல்வேறு காரணகாரியங்களை அடிப்படையாகக் கொண்டு இன இதழ்கள் தோற்றம் பெற்றன எனலாம்.

## இன இதழ்களின் வகைப்பாடு

தற்காலத்தில் எண்ணற்ற இதழ்கள் வெளிவருகின்றன. அவற்றின் இயல்புகளையும், பணிகளையும், பயன்களையும், வீச்சினையும் புரிந்துக்கொள்ள அவற்றை வகைப்படுத்திப் பார்ப்பது துணை செய்யும். ஆனாலும் பெருகும் இதழ்களைப் போலவே அதன் வகைகளும் பெருகிக்கொண்டே போகும். இருப்பினும் இவற்றை வகைப்படுத்துவது இதழ்களைப் பற்றிய தெளிவினை வழங்கும்.

இதனடிப்படையில் இதழ்களின் இயல்பாலும் வெளிவரும் காலத்தாலும், உள்ளடக்கத்தாலும் வேறுபடுவதால் இவைகளைக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தலாம்.

**1. கால அடிப்படைப் பகுப்பு**

இதழ்களை அவை வெளிவரும் கால அடிப்படையில் நாளிதழ் - பருவ இதழ் என்றும், பருவ இதழ்களை வார இதழ், திங்களிருமுறையிதழ், திங்களிதழ், காலாண்டிதழ், அரையாண்டிதழ், ஆண்டிதழ் என்றும் வகைப்படுத்தலாம்.

**2. தன்மை அடிப்படைப் பகுப்பு**

வெளிவரும் செய்திகளின் கருப்பொருள்கள் அடிப்படையில் தரமான இதழ்கள், மக்கள் இதழ்கள், நச்சு இதழ்கள் என்று வகைப்படுத்தலாம்.

**3. உள்ளடக்க அடிப்படைப் பகுப்பு**

இதழ்களில் வெளிவருகிற செய்திகள், படைப்புகள் ஆகியவற்றின் உள்ளடக்க அடிப்படையில் வகைப்படுத்தலாம்.

இன இதழ்களைக் கால அடிப்படையில் பகுப்பு செய்யும் போது திங்களிருமுறை இதழாகவும், திங்களிதழாகவும், காலாண்டிதழாகவும் வெளிவருகின்றன.

இன இதழ்களைத் தன்மை அடிப்படைப் பகுதியில் பார்க்கிறபோது எல்லா இதழ்களும் இனச் செய்திகளுக்கு முன்னுரிமை அளிப்பதால் 'இன இதழ்கள்' என்றே பகுக்கலாம்.

உள்ளடக்க அடிப்படையில் 'இன இதழ்கள்' இன நிகழ்வுகளுக்கு முக்கியத்துவம் தருகின்றன. இனச் செய்திகளைத் தருவதில் ஒவ்வொரு இன இதழ்களும் வெவ்வேறான உத்தி முறைகளைக் கையாளுகின்றன.

இன இதழ்கள் பொருளாதார அடிப்படையில் இதழ்களின் புற வடிவம் முற்றிலும் மாறுபடுகின்றன. அத்துடன் தாள்களின் தரமும் அமைகின்றன. எனவே புறக்கட்டமைப்பு முறையிலும் வகைப்படுத்தலாம்.

**முதல் இன இதழ்**

அந்நியர்கள் ஆட்சியால் வாழும் நிலைகள் பலவாக அமைந்தன. மக்கள் தங்களுக்குள் உயர்ந்தவர் யார் என்பதை நிரூபிக்க முயற்சித்தனர். இதனால் சாதிப்

*பிரிவுகள் மேலும் வலுவடைந்தன. தத்தம் சமூகமே உயர்வானது என ஒவ்வொரு பிரிவினரும் கருதினர். இதனால் இதழ்களும் இந்நிலையை உணர்ந்து தமது வளர்ச்சியைச் இனப் பின்னணியாகக் கொண்டன. இதன் காரணமாக,*

தமிழ்நாட்டில் முதன் முதலில் சாதியை மையமாக வைத்துப் 'பறையன்' என்னும் வார இதழ், இரட்டை மலை சீனிவாசனை ஆசிரியாரகக் கொண்டு (22.9.1849) வெளிவந்தது[69]

*இதிலிருந்து தான் சாதிய ரீதியாகவும், இன ரீதியாகவும் ஒரு பொதுமையான மக்கள் தொகுப்பினர், தம் இன உரிமைகளைப் பெறக்குரல் கொடுக்க ஆரம்பித்தனர். இக்காலக் கட்டத்தில் பல இன இதழ்கள் வார இதழ்களாகத் தொடங்கப்பெற்று நிலை நிறுத்த இயலாமையால் நின்று போன இதழ்கள் ஏராளம்.*

முதன் முதலில் தமிழில் மாதம் ஒருமுறை இன இதழாக "சான்றோர் குலதீபம்" 1889இல் சென்னையிலிருந்து வெளி வந்தது[70]

*என்று அ.மா.சாமி குறிப்பிடுகிறார்.*

*சான்றோர் குலத்தை விளக்க 'சான்றோர் குலவிவேக போதினி 1909இல் எ.டி.கோவிந்தசாமியை ஆசிரியராகக் கொண்டு தஞ்சையிலிருந்து வெளிவந்தது. வன்னிய இனத்தார்க்கென்று 'வன்னிய குல சத்திரிய தீபம்' 1912இல் கே.ஆலாலசுந்தரம் பிள்ளையை ஆசிரியராகக் கொண்டு காஞ்சிபுரத்திலிருந்து வெளிவந்தது. நாட்டுக்கோட்டை நகரத்தாரின் மேன்மைக்காக 'நாட்டுக்கோட்டை வைசியம்' எனும் இதழ் 1914இல் பி.எஸ்.ஆண்டியபப்பிள்ளையை ஆசிரியராகக் கொண்டு பாளையங்கோட்டையிலிருந்து வெளிவந்தது. இன்று 'நகரத்தார் மலர்' எனும் இதழ் அவ்வினத்தினரின் மேன்மைக்காக வெளிவந்து கொண்டிருக்கிறது. பரதவ இனத்தின் வெளியீடாக 'பரத போதினி' தூத்துக்குடியிலிருந்து 1918இல் பவுல் வி.ராயரால் வெளியிடப்பட்டது. வைசியர் இனத்திற்காக 'வைசியன்' அருப்புக்கோட்டையிலிருந்து வீரபத்திரச் செட்டியாரால் 1923இல் வெளியிடப்பட்டது.*

*வேளாளர் இனத்திற்காக உத்தமச்சேரியிலிருந்து 'குகவேளாளர்' எனும் இதழ் டி.பி.பரிமணப் பல்லவராயரால் 1922இல் வெளியிடப்பட்டது. வணிக இனத்தின் மேன்மைக்காக சென்னையிலிருந்து 1924இல் கே.ஏ.டி.ஞானசம்பந்த செட்டியாரால் 'வணிகமித்திரன்' வெளிவந்தது. பிராமண இனத்தினருக்காக 'பிராமணன்' எனும் இதழ் 1925இல் சென்னையிலிருந்து டி.கே.ஜகன்னாதச்சாரியாரால் வெளிவந்தது. 'ரெட்டிகுலராணி' எனும் இதழ் பி.பாலசுந்தர ரெட்டியரால் விழுப்புரத்திலிருந்து*

1929இல் வெளிவந்தது. 'கருணீக மித்திரன்' கருணீக குலத்திற்கும், 1925இல் வெளியிடப்பட்ட 'பிராம்மணன்' பார்ப்பன் இனத்திற்கும் 1929இல் வெளியான 'யாதவமித்திரன்' ஆயர் இனத்திற்கும், 1937இல் வெளியான 'சாலியர் நேசன்' சாலியர் இனத்திற்கும், 1973இல் வெளிவந்த 'கம்மவார் ஊழியன்' கம்மவார் இனத்திற்கும், முதன் முதலாக வெளிவந்த இன இதழ்களாகும்.

## தொகுப்புரை

ஆய்வுப் பொருளான இனம், இனத்தின் தோற்றம், அதன் சொற்பொருள் விளக்கம், இலக்கண வரையறை போன்றவை ஆய்வுப் பொருளைத் தெளிவுப்படுத்தும் முகமாக முதற்கண் சுட்டப்பட்டுள்ளன.

சமூகம், சமுதாயம் இரண்டிற்குமான புரிதலைத் தரும் நோக்கில் இவற்றிற்கு அகராதிகள், நிகண்டுகள், அறிஞர்கள் தரும் விளக்கங்கள் ஆங்காங்கே கொடுக்கப்பட்டுள்ளன.

சமூக நிறுவனங்கள் அவற்றின் நோக்கங்கள், இயங்குநிலைகள் ஆய்வின் நோக்கில் சுருக்கமாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

'இனம்' என்னும் சொல் ஆய்வுக்குக் கையாளப்பட்டுள்ளதன் சூழல் தெளிவுப்படுத்தப்பட்டுள்ளது.

தமிழ்ச் சமூகத்தில் இயங்கும் சாதிகளின் தோற்றம், தோற்றக் காரணங்கள், தன்மைகள் இவற்றைப் பற்றிய அறிஞர்களின் கருத்துக்கள், சாதி சமுதாயத்தின் மீது ஏற்படுத்தியுள்ள தாக்கங்கள், சமூகப் பிரிவுகள் ஆகியவை எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

இனங்களின் தொழில்கள் தொழிற் பிரிவுகள் போன்றவை சமூகத்திலும் ஏனையவற்றிலும் புகுத்திய மாறுதல்கள் சான்றுகளிலும் பதிவு செய்யபட்டிருப்பமை எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

இந்தியாவுக்கு ஆங்கிலேயர்களின் வருகை, அதனால் விளைந்த அச்சுக்கலையின் தோற்றம், இதழ்களின் தோற்றம், இவற்றின் வரலாறுகள் ஆய்வு நோக்கில் புலப்படுத்தப்பட்டுள்ளன.

தமிழகச் சூழலில் செய்தித்தாள்கள், இதழ்கள் சமயப்பரப்பல், சுதந்திரப்போராட்டம், வணிக நிறுவனங்களின் வெளிப்பாடு போன்ற காரணங்களால் தோற்றம் பெற்று வளர்ந்து இன்றைய நிலைமையை எட்டியுள்ளமை தெளிவுப்படுத்தப்பட்டுள்ளது.

சிற்றிதழ்கள் சமய, அரசியல் மற்றும் சமூகப் பின்புலத்துடன் தோற்றம் பெற்று வளர்ந்தமை, அவற்றிற்கான இலக்கண விளக்கம், வகைமைகள் சுட்டிக்காட்டப்பட்டு; இன இதழ்களின் தோற்றம், நோக்கங்கள், வளர்ச்சி, வகைகள், அகப்புற அமைப்புகள் இன்றைய நிலை ஆகியன ஆய்வு நோக்கில் தெளிவுப்படுத்தப்பட்டுளன.

இவ்வின இதழ்களின் பெருக்கத்திற்குச் சாதிய உணர்வுகளும், அமைப்புகளும், அரசுகளும், ஊடகங்களும் காரணமாய் அமைந்த சூழல்களும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. பெங்குவின், சமூகவியல் அகராதி, ப.202.
2. சி.இ.மறைமலை, இலக்கியமும் மார்க்சியமும், ப.19.
3. மேலது., ப.19.
4. மேலது., ப.19.
5. மேலது., ப.19.
6. மேலது., ப.20.
7. மேலது., ப.20.
8. கா.சிவத்தம்பி, நாவலும் வாழ்க்கையும், ப.16.
9. சி.இ.மறைமலை, இலக்கியத் திறனாய்வு அறிமுகம், ப.64.
10. இரா.தண்டாயுதம், நாவல் வளம், ப.63.
11. சி.இ.மறைமலை, இலக்கியத் திறனாய்வு அறிமுகம், ப.53.
12. Chidamparanatha Chettiar (Ed.), **Eng-Tamil Dictionary**, p.961.
13. கௌமாரீஸ்வரி (பதி.), கௌரா தமிழ் அகராதி, ப.331.
14. கு.வே.பா., சங்க இலக்கியங்களில் சமூக அமைப்புகள், ப.1.
15. மேலது., ப.1.
16. கலம்பகம், சமூகவியல், ப.31.
17. க.கைலாசபதி, ஆக்க இலக்கியமும் சமூகவியலும், ப.29.
18. ஏங்கெல்ஸ்-பிரடெரிக், இயற்கையின் இயக்க இயல், ப.8.
19. மேலது., ப.44.
20. மேலது., ப.44.
21. ஜெ.சியாமளா, திலகவதி நாவல்கள், குடும்பச் சிக்கல்களும், சிதைவுகளும், ப.1.
22. கலம்பகம், சமூகவில், ப.31.
23. Earl Reaband Gertude, J.Sclzickrow, **Major Social Problems**, p.14.
24. C.N. Shankar Rae, Priary, **Principles of Socialogy with an Indroduction to social through**, p.542.
25. ஜெ.நாராயணன் (மொ.பெ.ஆ.), சமூகவியல் அடிப்படை கோட்பாடுகள், ப.7.
26. க.நா.சுப்பிரமணியன், நாவல் கலை, ப.18.
27. அ.மு.பரமசிவானந்தம், சமுதாயமும் பண்பாடும், ப.59.
28. IDLT, Vol.1, pp.229.230.

29. அ.சேந்தன் திவாகரம், ப.37.

ஆ. பிங்கலம், நூற்பா.900, 901.

இ. சூடாமணி நிகண்டு, நூற்பா.53.

30. பிங்கலம் 902, சூடாமணி நிகண்டு-84.

31. அ.சேந்தன் திவாகரம், ப.28.

ஆ. பிங்கலம்-2235.

இ. சூடாமணி நிகண்டு-II.

32. **Tamil Lexicon**, Vol.I, p.870.

33. **The Oxford English Dictionary**, Vol.VII, pp.30, 31.

34. மிஹயீல் நெஸ்தூர்வர், மு.நூ., ப.52.

35. Leo Kuper (Ed.), **Race Science an Society**, p.235.

36. E.K. Francis, **Inter ethnic Relations**, p.400.

Ashely Montagu (Ed.), **The Concept of Race**, p.33.

37. ம.சு.கோபாலகிருஷ்ணன், மானிடவியல், ப.19.

38. தாதின் அனையர், தன்டமிழ்க்குடிகள், பரி.திரட்டு.7.

39. ஞா.தேவநேயப்பாவாணர், வேர்ச்சொற் கட்டுரைகள், ப.132.

40. **Tamil Lexicon**, Vol.I, p.430.

41. பிங்கலம், நூற்பா.3200.

42. பெரும்.454; மதுரைக்.23; பதிற்.63:16; 88:14; 90:13; புறம்.3:5; 37:6; 43:8; 66:2; 126:4; 139:7; 151:8; 166:9; அகம்.356:12; பரி.19:57.

43. தமிழ்நாடு அரசுப்பணியாளர் தேர்வாணயச் சிற்றேடு, ப.12.

44. சியாமா சரண்துபே, இந்தியச் சமுதாயம், தமிழாக்கம் ஸ்ரீதரன், ப.64.

45. அம்பேத்கர், இந்தியாவில் சாதிகள், ப.10.

46. மேலது., ப.10.

47. மேலது., ப.12.

48. மேலது., ப.12.

49. மேலது., ப.13.

50. ச.பொ.அகத்தியலிங்கம், சாதியம் வேர்கள், விளைவுகள் (சவால்கள்), ப.10.

51. மேலது., ப.11.

52. மேலது., ப.15.

53. மேலது., ப.14.

54. சீ.பக்தவச்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.318.

55. J.H. Hutton, **Caste of India**, pp.190-193.

56. G.S. Chruye, **Caste and Class in India**, pp.141-160.

57. D.N. Majumdas, **Rales and Cultures of India**, p.326.

58. மா.சு.சம்பந்தன், **தமிழ் இதழியல் வரலாறு**, ப.4.

59. மேலது., ப.6.

60. கி.ராசா, **இதழியல்**, ப.1.

61. க.குளத்தூரான், **தமிழ்ப் பத்திரிகைகள்**, ப.8.

62. இரா.கோதண்டபாணி, **இதழியல்**, ப.10.

63. க.குளத்தூரன், **தமிழ்ப் பத்திரிகைள்**, ப.8.

64. மா.சு.சம்பந்தன், **அச்சும் பதிப்பும்**, ப.129.

65. சிவ.சதிரேகா, **தமிழ் இதழ்கள் காட்டும் மகளிர்நிலை**, ப.1.

66. பொள்ளாச்சி நசன், **தமிழில் சிறு பத்திரிகைகள்**, ப.5.

67. மேலது., ப.5.

68. வி.கண்ணுப்பிள்ளை, **தமிழகத்தில் சாதி அமைப்புகளும், அரசியலும்**, ப.32.

69. கே.எம்.கே.கோமதி சங்கர், **தமிழக மறுமலர்ச்சி**, ப.323.

70. அ.மா.சாமி, **19 ஆம் நூற்றாண்டு தமிழ் இதழ்கள்**, ப.24.

71. **இதழியல்**, அண்ணாமலைப் பல்கலைக்கழகம் வெளியீடு, பக்43, 44.

# இயல் 2

## இன இதழ்களில் உள்ளடக்கக் கூறுகள்

உலக இயக்கத்தை இருக்கும் இடத்திலேயே அறிந்து கொள்ள உதவுவதில் ஊடகங்களின் பங்கு சிறப்பிற்குரியதாக அமைகின்றது. மக்கள் மத்தியில் விரைவாகவும் விரிவாகவும் செய்திகளைக் கொண்டு செல்வது இதழியல் துறையேயாகும். அச்சு இயந்திர வளர்ச்சியின் காரணமாக இன்றைய நிலையில் எண்ணில்லா இதழ்கள் பல்வேறு துறை சார்ந்து வெளி வருகின்றன. கொள்கைகள் அடிப்படையிலும், தனி எழுத்தார்வம் அடிப்படையிலும், இதழ்கள் பல்கிப் பெருகியுள்ளன.

இவ்விதழ்கள் அனைத்தையும் வாங்கி வாசிப்பது என்பது வாசகனுக்கு இயலாத காரியமாகும். அனைத்தையும் வாங்கிப் படிக்கும் அளவுக்குச் சிறு இதழ்கள் எல்லா இடங்களிலும் கிடைப்பதில்லை. பொருளாதார ஏற்றத்தாழ்வுகளினால் வாசகன் தனக்குப் பிடித்த, தன் கொள்கைக்கு ஒத்த, தன் மகிழ்ச்சிக்குத் தீனி போடுகின்ற, இதழ்களையே விரும்பிப் படிப்பான். அவை எங்குக் கிடைத்தாலும் வாங்கிப்படித்து பயன்பெறுவான். வாசகனைத் தன் இதழை வாங்கிப் படிக்க வைக்க இதழ்கள் போதுமான அளவிற்கு மாற்றங்களையும், புதுமைகளையும் புகுத்தி வெளியிடுகின்றன. படைப்புகளில். வடிவமைப்பில். பக்கக் கவர்ச்சியில் வாசகனைத் தன் பக்கம் இழுக்க முயற்சிக்கின்றன. ஒவ்வொரு இதழ்களும் இதழியல் உள்ளடக்க உத்திக் கூறுகளைப் பெரிதும் மதித்து அதைப்பயன்படுத்துகின்றன.

### உருவமும் உள்ளடக்கமும்

உருவம், வடிவம் இரண்டும் ஒரே பொருளில் ஆளப்படுகின்றன. உருவம் பற்றிய பல்வேறு அறிஞர்களின் கருத்துக்கள் சுட்டத்தக்கது.

> எந்த ஒரு நிகழ்வும் அல்லது பொருளும் ஏதாவது ஒன்றின் மூலம் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது. இதுவே அதன் வடிவம் ஆகும்[1]

என்பர் கோ.கேசவன்.

> உருவமும் உள்ளடக்கமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. இணை பிரியாதவை. அதற்கு உள்ளடக்கம், உருவம் என்ற பிரிவினை கிடையாது. உயிர் தோலால் முடியும் இடம் உடம்பு. அதே போல் உள்ளடக்கம் சொற்களால் முடியும் இடம் உருவம். உள்ளடக்கத்தின் ஒருமைப்பாடே உருவத்திற்கு அடிப்படை. உள்ளடக்கம் மாறுவதால் சொல்லின் அமைப்பு முறை அல்லது உருவம் மாறுகிறது[2]

என்று உருவம் - உள்ளடகத்தின் ஒற்றுமையை விளக்குவர்.

உள்ளடக்க உத்தி என்பது மேற்கொண்ட செயலைச் சிறப்பாகவும் செம்மையாகவும் செய்திடவும், அதை வெற்றிகரமாக்கிடவும் மேற்கொள்ளப்படும் செயல்முறைகள் என்றழைக்கலாம். இன இதழ்களில் உள்ளடக்கம் என்பது வெளிவருகின்ற முறையில் அமையும் பாகுபாடு, பொருள் வெளிப்பாட்டு முறையில் அமையும் பாகுபாடு என இரு வகைப்படுத்திப் பகுப்பாய்வு செய்ய இயலும்.

**இன இதழ்களின் கட்டமைப்பு**

கட்டமைப்புடன் கட்டப்பட்ட கட்டிடமே சிறந்த வீடெனப்படும். அதுபோல இதழும் சிறந்த கட்டமைப்புடன் அமையும் போது வாசகர்கள் விரும்பிப் படிப்பர். கட்டமைப்பினை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை,

1. புற வடிவம்
2. அக வடிவம்

**1. புற வடிவம்**

புற வடிவம் என்பது இதழ்களின் வடிவம், அட்டை, தாளின் தரம், எழுத்தமைப்பு, இதழ் பெயர், முகப்போவியம், முகப்பு வாசகம், விளம்பரம், பக்க அமைப்புகள் முதலியவற்றைச் சுட்டலாம். ‘அகத்தின் அழகு முகத்தில் தெரியும்’ என்பதற்கேற்ப இன இதழ்களின் உள்ளடக்கச் சிறப்பை வெளிப்படுத்த புற வடிவம் இன்றியமையாதாகின்றது. எனவே, புறத் தோற்றத்தைச் செழுமைப்படுத்த உத்திகளும் அவசியமானதாக அமைகின்றன.

**2. அக வடிவம்**

இதழ்களின் புற வடிவத்தைப் போல அகவடிவமும் மிகமிக இன்றியமையாததாகும். இதழின் உள்ளடக்கத்தில் உள்ள அனைத்துப் பிரிவுகளும் இதில் அடங்கும். இதழ்களின் உள்ளடக்கத்தையும் இரண்டாகப் பகுக்கலாம்.

1. கற்பனை (புனைவு)
2. கற்பனையல்லாதன (புனைவிலி)

**கற்பனை**

கலைச் செல்வமே ஒரு நாட்டின் செல்வத்துள் எல்லாம் தலைசிறந்த செல்வம். காவியம், ஓவியம் முதலிய கலைகள் கற்பனை நயத்தால் இன்பம் பயக்கும் கற்பனை,

நாட்டின் தன்மைக்குத் தக்கவாறு அமையும். கலையும் இலக்கியமும் மக்களின் உணர்வுகளோடு ஒன்றி, வாழ்வில் இன்பத்தையும், மலர்ச்சியையும் தரும் அற்புதப் பெட்டகமாகும். கலை, இலக்கியம் என்பன மக்களின் பண்பாட்டுச் சாளரமாகவும், சமூகத்தின் மேலோங்கிய தன்மையை எடுத்துரைக்கும் வாயிலாகவும் அமைகின்றன.

> உலகில் நடைபெறும் அன்றாட நிகழ்ச்சிகளைத் தம் மனத்தில் உணர்ந்து, சிறிது கற்பனைக் குழைத்து, வெளிவரும் படைப்புகளைச் சிறுகதை, நெடுங்கதை, தொடர் கதை, குறு நாவல், கவிதை, கோலம், ஓவியம் போன்ற பல்வேறு படைப்புகளைக் குறிப்பிடலாம்[3]

என்பதற்கேற்ப இவைகளை இன இதழியல் படைப்புகளாக வகைப்படுத்தலாம்.

### கற்பனையில்லாதன (புனைவிலி)

இன இதழ்களில் பேரவை நிகழ்வுகள், மாநாடு நிகழ்வுகள், இன இல்ல நிகழ்வுகளான பிறப்பு, திருமணம் - வாழ்த்து - வரன் - அழைப்பிதழ், பதவி உயர்வு - பணி மாற்றம், பணி ஓய்வு, புதுமனை புகுவிழா, குடும்ப விழா, இறப்பு - வருத்தம் - வருந்துகிறோம் - மறைவு - இரங்கல் செய்தி அஞ்சலி, வர்த்தகம், ஆன்மீகம், அரசியல், கல்வி, வரலாறு, தேர்தல், மருத்துவம், அறிவியல், வேளாண்மை, கடலியல், ஆளுமை, தன்னம்பிக்கை, திரை, சமையல், சோதிடம், உடல்நலம் போன்ற பல பொருண்மைகளின் அடிப்படையில் அமைகின்றது.

> படைப்புகளில் படைப்புக்குத் துணை சேர்க்கும் படங்கள், தலையங்கம், விளம்பரம், கட்டுரை, துணுக்குகள், பெட்டிச் செய்தி, திறனாய்வு, மதிப்பீடு, செய்திகள் சில, பேட்டி, சமையல், கேள்வி பதில் போன்றவை கற்பனையில்லாதன வகையைச் சார்ந்தவை எனலாம்.[4]

இதன்படி கற்பனையல்லாத படைப்புகளை இன இதழியல் கூறுகள் எனலாம். இதன்படி இன இதழ் கூறுகளை ஆய்வு செய்வது இன இதழ்களின் ஆய்வு முழுமைபெறத் தேவையானதாகும்.

### பேரவை, சங்கச் செய்திகள்

தொடக்கக் காலத்தில் தமிழ் ஆராய்ந்த புலவர் இருக்கைக்குத் தமிழகத்துச் சான்றோர்கள் கூடல், அவை, மன்றம் என்ற பெயர்களிட்டு வழி வழியாக அழைத்திருக்கின்றனர்.

> பிற்காலத்துத் தமிழகத்தில் சமண, புத்த சமயங்கள் செல்வாக்குப் பெற்றன. புதிய சமயங்களுடன் வடபுலத்துச் சான்றோர்களும் தமிழகம் வந்தனர். எனவே

வடபுலத்துச் சொற்கள் இங்கே பயன்படுத்தப்பட்டன. 'சங்கம்' என்ற சொல் புத்த சமயத்துடன் இணைந்தது. புத்த சமயம் தமிழகத்தில் பரவிய பின்னர் கூடல் என்ற புலவர் அவைகளைச் 'சான்றோர்கள் சங்கம்' என்ற சொல்லால் அழைத்தனர். எனவே கூடல், மன்றம் போன்ற சொற்களால் வழங்கப்பட்ட 'அறிஞர் அவைகள் சங்கம்' என்ற சொல்லைப் பெற்றன. சங்கம் என்ற சொல் பிந்தியது. அச்சொல் குறிக்கும் நிறுவனம் முந்தியது. தொன்மையானது[5]

*என்பதற்கேற்ப 'சங்கம்' என்கிற சொல் ஒரே இனத்தைச் சார்ந்த பலர் ஒன்று கூடுகின்ற நிலையைச் சுட்டுவதாக அமைகின்றது.*

*பிற்படுத்தப்பட்ட மற்றும் அட்டவணை இனத்தைச் சார்ந்தவர்கள் தங்களுக்கென ஒரு தனித்தன்மையினையும் சமுதாயத்தில் மதிப்பினையும் பெற முயற்சிக்கின்றனர். அரசியலில் அதிகாரத்தைப் பெறுவதென்பது வர்ண அமைப்பில் இருந்து விலகி சமுதாயத்தில் உயர்ந்த நிலைக்குச் செல்லும் வழியாகக் கருதப்பட்டது. இதனால் தங்களுக்கென தனி அமைப்புகளை உருவாக்கிக் கொண்டனர். இதனைப் பேரவை, இயக்கம், மன்றம், அமைப்பு போன்ற பல பெயர்களில் சுட்டுகின்றனர். அத்துடன் இனத்தையும் சேர்த்து அழைத்துக் கொண்டனர். இதனை மெய்ப்பிக்கும் படியாக, இன இதழ்களுள் ஒன்றான 'கொங்கு' கேள்வியும், பதிலும் எனும் தலைப்பில் தன்னிலை விளக்கமாக "சாதிப் பேரவை எதற்காக? எனும் வினாவுக்கு,*

1. *சாதிப் பேரவை இருந்த காரணத்தினால் தான் நமது சாதியை முற்பட்டோர் பட்டியலில் இருந்து பிற்பட்டோர் பட்டியலில் சேர்க்க முடிந்தது.*
2. *நமது சாதியைச் சேர்ந்த தேச விடுதலைக்காகப் போராடிய தீரன் சின்னமலையின் பெயரை அரசு மறைத்துவிட்டது. அதை வெளியில் கொண்டு வந்தது இந்தப் பேரவை தான்.*
3. *நமது சாதியை மிகவும் பிற்பட்டோர் பட்டியலில் சேர்ப்பதற்காகப் பாடுபட்டுக் கொண்டிருக்கின்றது.*

**பேரவை எங்களுக்கு என்ன செய்யும்?**

*பேரவை தனிப்பட்ட ஒருவருக்குச் செய்வதை விட இந்த சாதிக்குத்தான் செய்ய முடியும் எனக் குறிப்பிட்டுள்ளனர்.*

**நாங்கள் என்ன செய்ய வேண்டும்?**

நீங்கள் இந்த சாதியில் பிறந்த காரணத்தினால் இந்த பேரவைக்கு ஆதரவாகவும், பேரவை பொறுப்பாளர்களுக்கு ஆலோசனை சொல்பவராகவும், பேரவையில் தவறு

> நடந்தால் அதைச்சுட்டிக் காண்பிப்பவராகவும், பேரவையின் தீவிர உறுப்பினராகவும் இருக்க வேண்டும். அப்படித் தங்களைப் போல் எல்லா கொங்கு மக்களும் பேரவையில் இருந்தால் அரசிடம் நமக்குக் கிடைக்க வேண்டிய அனைத்தும் கிடைக்கும். ஆட்சியிலும் கூட பங்கு கிடைக்கும்[6]

எனக் குறிப்பிடுவதன் வாயிலாக இன இதழ்கள் இன வாசகர்களுக்கு பேரவையின் நோக்கையும், அதன் போக்கையும் தெரிவிப்பதைத் தெளிவாக அறிய முடிகிறது.

சமுதாயத்தின் அடித்தளத்தில் இருக்கும் சாதிய அமைப்புகளை, உயர்நிலையில் இருந்து ஆதிக்கம் செலுத்தக் கூடிய சாதிகள் தங்களுடைய பெரும்பான்மைப் பலத்தினைத் திரட்டுவதற்காக அவர்களையும், அரசியலில் ஈடுபடுத்தினர். ஏற்கனவே இருந்த நிலைமாறி இப்போதைய சூழ்நிலையில் அரசியலில் ஒரு தலைவருக்கு, தன்னுடைய ஆதரவாளர்களை ஒருங்கிணைத்துத் தனது சக்தியைக் காட்டக்கூடிய அளவில் பேரவை, அமைப்பு, இயக்கம், கூட்டமைப்பு, மன்றம் போன்றவைகளை நிறுவிக் கொள்கின்றன. இதைப் பயன்படுத்தி மாநிலத் தலைநகரிலோ அல்லது மண்டல அளவிலான பெருநகரங்களிலோ பேரணிகள் நடத்தி இன மக்களின் கவனத்தை ஈர்த்துத் தங்களது செல்வாக்கினையும் ஆதரவையும் பெருக்கிக் கொள்ள வேண்டிய நிலையும் ஏற்படுகிறது.

கடந்த காலத்தில் இனத் தலைவர்கள் இன மக்களின் குறைகளைத் தீர்க்க அரசினரிடம் மனுக்கொடுத்துக் கொண்டிருந்தார்கள். அந்நிலை மாறி தங்களுடைய செல்வாக்கும் மக்களின் பெருவாரியான ஆதரவும் தங்களுக்கு உள்ளன என்பதை வெளிப்படுத்தும் வகையில், பெருங்கூட்டத்தைக் கூட்டி தீர்மானங்கள் நிறைவேற்றி அரசாங்கத்திற்கு அனுப்புவதே தற்போதைய அரசியலாகி விட்டது. இவற்றை அடிப்படையாக வைத்துப் பேரவை, சங்கம் போன்றவை செயல்படுகின்றன.

இப்பேரவை, சங்கங்கள் தங்கள் இனம் பற்றிய விழிப்புணர்வையும், இதர அமைப்புகளின் தோழமையுடன் அதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டுமென்ற வேட்கையையும் வெளிப்படுத்துவதோடு; கருத்துக்களையும் பரிமாற்றம் செய்ய இதழ்களைத் தொடங்குகின்றன. அவ்வாறு தொடங்கப்பட்ட இதழ்கள் மூலமாக பேரவை, சங்கச் செய்திகளை வெளியிடுகின்றன.

**இன இதழ்களில் பேரவை, சங்க நிகழ்வுகள்**

*இன இதழ்களில் மிகுதியாக இனப் பேரவை, சங்கம் தொடர்பான நிகழ்வுகளும், இடம் பெறுகின்றன. இதில் தங்கள் இனத்திற்கென்று உள்ள பேரவையின் மாதாந்திர கூட்டத்தில் நடைபெற்ற நிகழ்வுகள், அக்கூட்டத்தில் விவாதிக்கப்பட்ட பொருள்கள், கூட்டத்தில் கலந்து கொண்ட பிரமுகர்கள், இனப்பற்றாளர்கள் விபரம், கூட்ட தீர்மானங்கள் ஆகியன இடம் பெறுகின்றன.*

*'சிறப்பாகச் செயல்படும் டெக்கோரம் அமைப்பு' எனும் தலைப்பில் (மருதமலர், மார்ச்-2008, ப.24) அமைப்பின் நோக்கம், பன்முகப்பணி, செயல்பாடுகள், அதன் வளர்ச்சி நிலைகள் போன்றன இடம் பெறுகின்றன. 'துபாய் வாழ் தேவேந்திரர் அமைப்பு இறந்தவருக்கு ரூ. 50,000 நிதியுதவி' எனும் துபாயில் இறந்தவர்க்குச் சங்கத்தின் சார்பாக நிதி உதவி அளிக்கப்பட்ட செய்தியை வெளியிட்டுள்ளது. 'ஒரு அமைப்பின் அசத்தல் சாதனை' எனும் தலைப்பில் (மருத மலர், ஆகஸ்டு-08, ப.17) பரமக்குடியில் செயல்படும் மத்திய மாநில பட்டியலின கூட்டமைப்புகள் சார்பில் இனமக்களுக்குச் செய்யப்பட்ட பணிகளைப் பட்டியலிடுகிறது. 'தேவேந்திரர் பண்பாட்டு சங்கமம்-2008' என்னும் அமைப்புப் பற்றிய செய்தியில் (மருதமலர், நவ-2008, ப.21) தேவேந்திரர்களின் பண்பாட்டு இலக்கியத்தைப் பதிவு செய்வதாக நடைபெற்ற நிகழ்வைச் சுட்டிக் காட்டுகிறது.*

> *'சிக்கலில் தட்சண மாற நாடார் சங்கம்' எனும் தலைப்பு,*
>
> தட்சண மாற நாடு நாடார்கள் என்பது வடக்கே வைப்பாறு, மேற்கே அரபிக்கடல், கிழக்கே வங்காள விரிகுடா கடல், தெற்கே இந்து மகா சமுத்திரம் ஆகியவைகளால் சூழப்பட்ட எல்லைப் பகுதிக்குள் வாழும் முஸ்லிம் மதத்தை தவிர மற்ற மதங்களைச் சார்ந்த நாடார் சமூகத்தைக் குறிக்கும்[7]

*எனக் குறிப்பிடுவதோடு சங்கத்தில் தலைவர்களுக்குள் ஏற்பட்டுள்ள பிரிவினையைச் சான்றுகளுடன் விவரிக்கிறது. மேலும் 'சங்கத்தைக் கைப்பற்றியே தீருவோம்' எனும் தலைப்பில் சங்க முன்னாள் செயலாளர் D.R.சபாபதி நாடார், 'சங்கத்தை மீட்போம்' என்று வைகுண்ட ராஜன், 'சங்க சொத்துக்களை விற்றேனா...' என்று நெல்லை நெடுமாறன் மற்றும் சிலர் அளித்த விளக்கங்களை வெளியிட்டுள்ளது. 'நெல்லை தூத்துக்குடி நாடார் மகமை பரிபாலன 'சங்கத் தேர்தலில் வாக்களித்த நல் இதயம்*

கொண்டோருக்கு நன்றி' எனும் (இ.நா.முரசு, அக்.2008, ப.28) தலைப்பில் சங்கத் தேர்தல் பற்றிக் குறிப்பிடுகிறது.

'கொங்கு வேளாளக் கவுண்டர்கள் பேரவையின் நிறுவனத் தலைவர் அமரர் கோவைச் செழியனார் அவர்களின் 8-ஆம் ஆண்டு நினைவஞ்சலி, நம் இனப்பாதுகாப்புப் பேரணி மற்றும் பொதுக்கூட்டம்' எனும் தலைப்பின் (கொங்கு, மார்ச்-08, ப.5) உட்தலைப்புகளாக நினைவஞ்சலி, பொதுக்கூட்டம், கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள், பொது என பேரவையின் செய்திகளை வெளியிட்டுள்ளது. 'பேரவை நிகழ்ச்சிகள் நடந்ததும் - நடப்பதும்' எனும் தலைப்பில் (கொங்கு, ஏப்ரல்-08, ப.13) ஒவ்வொரு மாதத்தின் பேரவை நிகழ்வுகளும், அடுத்த மாதத்தின் பேரவை நிகழ்வுகளும் இடம் பெறுகின்றன. 'தகவல் அறியும் உரிமைச் சட்டத்தின் மூலம் பேரவை எடுத்த நடவடிக்கை' எனும் தலைப்பில் (கொங்கு, மே-2008, ப.11) கொங்கு நாட்டின் வாழ்வாதார திட்டங்களான அவினாசி-அத்திக்கடவு திட்டம், குழாய் மூலம் சாயக்கழிவு நீரைக் கடலுக்கு எடுத்துச் செல்லும் திட்டம் போன்றவற்றின் இன்றைய நிலைப்பாடு என்ன என்பதைப் பேரவை சார்பாகக் கேட்டுப் பெற்றுள்ளதைச் செய்தியாக வெளியிட்டுள்ளது.

'தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் செயற்குழு கூட்டம்' எனும் தலைப்பில் (செங்குந்த மித்திரன், ஏப்.2008, ப.5) இக்கூட்டத்தில் நடைபெற்ற உரை வீச்சுகள், தீர்மானங்கள், கலந்து கொண்டவர்கள் விவரம் பற்றிய செய்திகளை விரிவாக எடுத்துரைக்கிறது. இவ்விதழில் ஆண்டு வரவு-செலவுக் கணக்கு விபரம், பேரவை நிகழ்வுகளின் புகைப்படங்கள் மாவட்ட, வட்ட அளவில் நடைபெற்ற செயற்குழு கூட்டங்கள் பற்றிய விபரமும் இடம் பெறுகின்றன. சங்க, பேரவை நிகழ்வுகளைச் செய்தித் தொகுப்பாக உருவாக்குகின்றது.

'மருத்துவ சங்க செயல்திட்ட ஆலோசனைக் கூட்டம்', 'திண்டுக்கல் மாவட்டத்தில் தமிழ்நாடு முடிதிருத்தும் தொழிலாளர் மத்திய சங்கம் உதயம்' (பண்டிதம், பிப்-2008, ப.9) எனும் தலைப்பில் இதன் மூலம் திரு பாண்டியன் தலைமையில் சென்னையைத் தலைமையிடமாகக் கொண்டு செயல்படும் தமிழ்நாடு முடிதிருத்தும் தொழிலாளர் மத்திய சங்கம் தென் தமிழ்நாட்டில் வலுவாக்கப்படுகிறது

என வெளியிட்டுள்ளது. 'தலைமைச்சங்க அறிவிப்பு' எனும் தலைப்பு புதிய சங்க நிர்வாகிகள் நியமனம் குறித்து இடம் பெறுகிறது.

'கடற்கரையைக் காப்போம்-மீனவர்களைக் காப்போம்!' எனும் தலைப்பில் (கடலார், ஜுன்-2008, ப.5) தேசிய மீனவர் பேரவை ஜுன் 1 முதல் 10 வரை தமிழ்நாடு, பாண்டிச்சேரி கடற்கரை மாவட்டங்களில் பிரச்சாரப் பயணம் மேற்கொண்ட செய்தியைக் குறிப்பிடுகிறது. அனைத்து மீனவச் சங்கங்களும் இணைந்து 'இலங்கைத் தூதரகம் முன் மீனவர் ஆர்ப்பாட்டம்' (கடலார், நவ-2008, பக்.19), விசைப்படகு உரிமையாளர்கள் கூட்டம்' (கடலார், டிச-2008, பக்.14) நாகையில் நடைபெற்ற செய்தியும் இடம் பெறுகிறது.

உப்புத் தொழிலுக்கும் கடனுதவி வேண்டும் எனும் தலைப்பு (விளக்கு, பிப்-2008, ப.2) தூத்துக்குடியில் நடைபெற்ற தென் மாநில இயக்கத்தின் தூத்துக்குடி மாவட்டச் செயற்குழு தீர்மானம் பற்றியசெய்தியை விளக்குகிறது. 'தென் மாநிலம் உருவாக்க மத்திய அரசுக்கு வலியுறுத்தல்' எனும் தலைப்பு சென்னையில் நடந்த 27 ஆவது மாநில செயற்குழுவில் எடுக்கப்பட்ட தீர்மானத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறது.

'துபாய் நகரத்தார் சங்கம்' எனும் தலைப்பில் புதிய சங்கம் துவங்கப்பட்டதை (பூச்சரம், ஜுன்-2008, ப.26) குறிப்பிட்டு நிர்வாகக் குழுவினர் பெயர்கள், சங்கத்தின் வாயிலாகச் செய்யப்படும் பணிகள் குறித்தும் விளக்கப்படுகிறது. மேலும் 'நகர் வலம்' எனும் பகுதி நகரத்தார் சங்கங்களின் நிகழ்வுகளைச் செய்தித் தொகுப்புகளாக ஒவ்வொரு இதழிலும் வெளியிடுவதை வழக்கமாகக் கொண்டுள்ளது.

'சிறுபான்மையினருக்குத் தனி இட ஒதுக்கீடு சட்டத்தை எதிர்த்து யாதவ மகாசபை' எனும் தலைப்பு (புதிய யாதவம், சன-2008, ப.6) இட ஒதுக்கீட்டு முறையால் தன் இன மக்களுக்கு ஏற்படும் பாதிப்புகளை விளக்குகிறது. 'யது குலச்செம்மல் அய்யா டாக்டர் ம.கோபாலகிருஷ்ணன் அவர்களுக்கு நெல்லை கிழக்கு மாவட்ட யாதவ மகாசபை நிர்வாகிகளும், யாதவ பொது மக்களும் தந்த நெஞ்சம் நிறைந்த வரவேற்பு 'மத்திய சென்னை மாவட்ட யாதவ மகாசபை சார்பில் கிருஷ்ண ஜெயந்தி விழா மற்றும் செயல் வீரர்கள் கூட்ட நிகழ்ச்சிகள்' மற்றும் 'தேர்தலில் போட்டியிட வாய்ப்பளிக்கும் கட்சிக்கே ஆதரவு அளிக்கப்படும் யாதவர் சங்கம் அறிவிப்பு' எனும் தலைப்பில்,

ஒவ்வொரு இனத்தைச் சேர்ந்த மக்களும் தங்களது பிரதிநிதித்துவத்தை கேட்டு பெறும் போது யாதவ இனம் சும்மா இருப்பது நல்லது இல்லை[8]

*எனப் பேரவைக் கூட்டம் வாயிலாக உணர்த்துகிறது.*

*'சங்க நடவடிக்கைகள்' எனும் தலைப்பு (இருளர் செய்தி, மார்ச்-2008, ப.8) பழங்குடி, இருளர் பாதுகாப்பு சங்கம் எனும் அமைப்பு இருளர் இன மக்களுக்குத் தேவையானவற்றைப் போராட்டம் வாயிலாக பெற்றுத் தருகிறது என்பதைக் குறிப்பிடுகிறது. மேலும் 'பழங்குடி இருளர் பெண்கள் சக்தி அமைப்பு தொடக்கம்' எனும் செய்தி அமைப்புக்கு நிர்வாகிகள் யார், யார் என்பதை அறிய முடிகிறது.*

*'பெங்களூரில் கட்டபொம்மன் சிலை திறப்பு விழா' எனும் தலைப்பு (வீ.பா.க.பொ., ஜூலை-2008, ப.15) கர்நாடக மாநில பாளையக்காரர் சங்கத்தின் சார்பாக நடைபெற்ற கட்டபொம்மன் பிறந்த நாள் விழா பற்றிய புகைப்படத்தோடு செய்தியை வெளியிட்டுள்ளது. 'ஆலோசனைக் கூட்டம்' (வீ.க.பொ., ஆகஸ்ட்-2008, ப.12) எனும் தலைப்பு வீரபாண்டியன் கட்டபொம்மன் விழாவில் கலந்து கொண்டவர்கள் பெயரும், புகைப்படமும் இடம் பெறுகிறது.*

*'நாகை மாவட்ட நாயுடு மகாஜன சங்கத்தின் யுகாதி விழா' எனும் தலைப்பில் (தெலுங்கர் கீதம், ஏப்-2008, ப.28) விழாவில் நாட்டிய நிகழ்ச்சி, மாணவ, மாணவியர் பரிசளிப்பு, ஜாதக பரிமாற்றம், செயற்குழு உறுப்பினர்களுக்குப் பாராட்டு விழா என பல்வேறு நிகழ்வுகள் நடைபெற்றதைக் குறிப்பிடுகிறது. 'திண்டுக்கல்லில் யுகாதிவிழா' பற்றிய செய்தியில் இன வட்டாரத் தலைவர்கள் பலர் கூடினர். மாவட்ட தெலுங்குக் கிளை பொது மக்கள் திரளாக கலந்து கொண்டதும் சிறப்பிற்குரியதென வெளியிட்டுள்ளது. மேலும் 'திருப்பூர் நாயுடு சங்க முப்பெரும் விழா'. சோழ மண்டல நாயுடுகள் நலச் சங்க விழா', திருப்பூர் சங்கம் திறப்பு விழா வண்ணப் புகைப்படங்களையும் வெளியிடுகிறது (தெலுங்கர் கீதம், அக்-2008, பக்.8, 41, 48).*

*இன இதழ்கள் பேரவை, சங்கச் செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுப்பதை அறிய முடிகிறது. சில இன இதழ்களில் மிகுதியாகவும் (செங்குந்த மித்திரன், கொங்கு இ.நா.மு., ஒலிக்கும் யாதவர் முரசு, புதிய யாதவம்) சில இதழ்களில் (அச்சமில்லை,*

தேவேந்திரர் மலர், மருதமலர்) குறைவாகவும் இடம்பெறுகின்றன. சில இதழ்களில் பேரவை, சங்க நிகழ்வுகள் பற்றி வெளியிடவில்லை என்பதையும் அறிய முடிகிறது.

**மாநாட்டு செய்திகள்**

தங்கள் இனத்தாரிடையே விழிப்புணர்வை ஏற்படுத்தவும், மற்ற இனத்தாரிடையே தம் இனத்தை அடையாளப்படுத்தவும், அரசிடம் எண்ணிக்கை வலிமையைக் காட்டவும் பேரவை சங்கம் சார்பாக 'இன மாநாடுகள்' என்ற பெயரில் பேரணி, பொதுக்கூட்டம், கலை பண்பாட்டுக் கூறுகளை வெளிப்படுத்தல் என பல நோக்குகளைக் கொண்டு நடத்தப்படுகின்றன. மேலும் இம்மாநாட்டில் இனத்தின் முன்னணித் தலைவர்களை அழைத்து அவர்கள் மூலமாக மக்களிடத்தில் இனநிலை இயங்கும் தன்மை, இனம் முன்னேற்றம் பற்றியும் எதிர்கால சூழ்நிலைக் குறித்தும் எடுத்துரைக்கின்றனர். இம்மாதிரியான மாநாடுகள் மூலமாகத் தங்கள் பலத்தை ஆளும் ஆட்சியாளர்களிடத்தில் வெளிப்படுத்துகின்றனர். அடிக்கடி நடத்தப்படுவதால் தங்கள் இன மக்களிடத்தில் ஒற்றுமையை ஏற்படுத்தவும், அவர்களை உற்சாகப்படுத்தவும் பயன்படுகின்றன.

மாநாடு நடைபெறுகிற பொழுது அம்மாநாடு பற்றிய சிறப்பு மலரையும் வெளியிட்டு அந்தச் சிறப்பு மலர் மூலமாகப் பல்வேறு வகையான இனச் சிந்தனை பற்றிய கட்டுரைகளையும், இன வரலாறு குறித்தச் செய்திகளையும், வெளியிட்டு இன மக்களை உற்சாகப்படுத்துவதோடு இன அறியாமையை நீக்க முயலுகின்றனர். மாநாடுகள் மூலமாகத் தங்கள் இனத்தவரின் கோரிக்கையை அரசுக்குத் தெரியப்படுத்துகின்றனர். தங்கள் இன மக்களின் எண்ணிக்கையையும், வலிமையையும் காட்டித் தங்களுக்கென்று தனிவாக்கு வங்கி இருப்பதைக் காட்டி இனத்தேவைகளை நிறைவு செய்கின்றனர். இம்மாநாடுகள் குறித்த துவக்க அறிவிப்புகள், மாநாட்டு நிகழ்வுத் தொகுப்புகள், மாநாட்டுத் தீர்மானங்கள் போன்றனவற்றை வெளியிடுவதை இன இதழ்கள் முக்கிய கடமையாகக் கொண்டுள்ளன.

'புதிய தமிழகம் மாநாடு மதுரையில் கோலாகலம்' (மருதமலர், ஏப்-2008, ப.9), தேவேந்திரர்களின் அரசியல் அமைப்பான புதிய தமிழகம் மதுரையில் நடத்திய மாநாடு பற்றிய நிகழ்வுகளைச் செய்தித் தொகுப்பாக அமைத்துள்ளது. 'எல்.ஐ.சி. எஸ்.சி. எஸ்.டி. பௌத்த ஊழியர்கள் சார்பில் நடந்த இட ஒதுக்கீடு பாதுகாப்பு மாநாடு' (மருதமலர், நவ.2008, ப.11) எனும் தலைப்பில் மாநாட்டில் இடம் பெற்ற தீர்மானங்கள், கலந்து

கொண்டவர், அமைப்பினர், உதவித்தொகை பெற்றோர் போன்ற விபரங்களை வெளியிட்டுள்ளது. 'மதுரையில் தே.கு.வே.ச மாநில மாநாடு' (மருதமலர், செப்-2008, ப.7) எனும் தலைப்பில் எதிர்வரும் பிப்ரவரி 2009 மதுரையில் நடைபெற இருக்கும் மாநாடு குறித்த அறிவிப்பும், இந்த மாநாட்டின் வாயிலாக இன மக்களிடம் ஒற்றுமையையும், விழிப்புணர்வையும் ஏற்படுத்த வேண்டும் என்பதே நோக்கமாகும் என மாநாடு அமைப்பாளர் வழக்கறிஞர் கலிய பெருமாள் குறிப்பிடுகிறார். 'கடலூரில் தி.மு.க.மகளிர் அணி மாநாடு' (மருதமலர், ஜூலை-2008, ப.9) எனும் செய்தியில் தேவேந்திர குலத்தைச் சார்ந்த தி.மு.க.மகளிர் அணி செயலாளர் திருமதி சங்கரி நாராயணன் எம்.எல்.ஏ மாநாட்டு அரங்கைத் திறக்கும் பொறுப்பு வழங்கப்பட்டதைப் பெருமையாகக் குறிப்பிடுகிறது.

'கேரள மாநில கொங்கு வேளாளக் கவுண்டர்கள் சங்கம் சார்பில் நடைபெற்ற முதலாவது மாநாட்டுச் செய்தி' (கொங்கு, சன-2008, ப.20) மாநாட்டில் பேசிய தலைவர்களின் உரைச் சுருக்கங்களும், இறுதியில் முடிவு செய்யப்பட்ட தீர்மானங்களும் இடம் பெறுகின்றன. 'சரித்திரம் படைத்த நாமக்கல் மாநாடு', 'உரிமைக்கும் உயர்வுக்கும் குரல் கொடுத்த நாமக்கல் மண்டல மாநாடு' (கொங்கு, செப்-2008, ப.2) குறித்த செய்தியை மையமிட்டு தலையங்கமும், செய்தி தலைவர்களின் உரைவீச்சுகளில் பதிவைச் செய்தியாக விளக்குகிறது.

'கேரள செங்குந்தர் சங்கம் 19 ஆவது ஆண்டு மாநாடு' (செ.மி.டிச.2008, ப.21) கேரள மாநிலம் திருச்சூர் மாவட்டம் திருவில்லா மலையில் நடைபெற்ற செங்குந்தர் மாநாடு குறித்த செய்தியும், மாநாட்டில் வழங்கப்பட்ட கல்வி உதவித்தொகையும், நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் ஆகியவை இடம் பெற்றுள்ளன. மாநாட்டுச் செய்தியில் பொறுப்பாளர் பெயர்கள் தடித்த எழுத்துக்களில் இடம் பெற்றுள்ளன.

மாநாட்டு நிகழ்வுகள் குறித்த செய்திகள் முதன்மையாக மருதமலரில் சிறப்பாகப் பதிவு செய்யப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். கொங்கு, செங்குந்தமித்திரன் போன்ற இன இதழ்கள் தவிர மற்றவைகளில் மாநாட்டுச் செய்திகள் இடம் பெறவில்லை.

**இன இல்ல நிகழ்வுகள்**

இன மக்களோடு நெருக்கத்தை ஏற்படுத்திக் கொள்ள இன இதழ்கள் இரு வகைகளில் ஈடுபடுகின்றன. ஒன்று அவர்களைப் படைப்புகள் வாயிலாக இதழ்களுக்கு ஈர்ப்பது. மற்றொன்று இன மக்களின் இல்ல நிகழ்வுகளை இதழ்களில் வெளியிடுவது என இரு முறைகளைப் பின்பற்றுகின்றன. இதில் இரண்டாவது முறையைச் சிறந்த உள்ளடக்க உத்தியாகப் பயன்படுத்துகின்றன. இனத்தவர்களின் இல்லங்களில் நடைபெறும் திருமணம் - வரவேற்பு - வரன் - வாழ்த்து - செய்தி - பிறப்பு - காதணிவிழா - புதுமனை புகுவிழா - பணியேற்பு - பதவி உயர்வு - பணி ஓய்வு - பணி மாற்றம் - குடும்ப விழா - இறப்பு - இரங்கல் செய்தி - நினைவு அஞ்சலி - வருந்துகிறோம் போன்றவைகளுக்கு இன இதழ்கள் முக்கியத்துவம் அளிப்பதை அறிய முடிகிறது.

**பிறப்பு**

இன இதழ்களில் பிறப்புப் பற்றிய நிகழ்வுகள் இடம் பெறுகின்றன. இதில் அவ்வினத்தவர் குழந்தைகளின் பிறந்த நாள் விழா பற்றிய நிகழ்வு இடம் பெற்றுள்ளது. பிறந்த நாள் வாழ்த்து எனும் தலைப்பில்,

> கீழநத்தம் வடக்கூரை சேர்ந்த இராமச்சந்திரன் - முருகம்மாள் தம்பதியரின் புதல்வி ரமாதேவியின் 10வது பிறந்த நாள் 14.08.2008 அன்று அவர்களுடைய இல்லத்தில் கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. குழந்தையை மலர் வாழ்த்துகிறது[9]

என வெளியிட்டுள்ளது.

'தலைவர் பிறந்த நாள் விழா' எனும் தலைப்பு (செ.மீ. அக்-2008, ப.14) இதழாசிரியரும். சங்கத் தலைவருமான ஜெ.சுத்தானந்தம் அவர்களின் பிறந்த நாள் விழா சிறப்புக்களைக் கட்டுரைச் செய்தியாகப் புகைப்படத்துடன் தொகுத்து வெளியிட்டுள்ளது. 'பிறந்த நாள் வாழ்த்து' எனும் தலைப்பில்,

> நம் இன வள்ளலும் சமூக நல்லிணக்கத் தலைவருமான டாக்டர் சேதுராமன் அவர்களின் 64வது பிறந்த நாளாகிய 30-12-2007 ஞாயிற்றுக்கிழமையன்று நம் சங்க நிருவாகிகள் அவரது இல்லத்திற்குச் சென்று மலர்க் கொத்துக் கொடுத்து நமது சங்கத்தின் சார்பாக வாழ்த்துக்களைத் தெரிவித்தனர்[10]

எனக் குறிப்பிடுகிறது.

'பிறந்த நாள்விழா' எனும் தலைப்பில் (பூச்சரம், மார்ச்-2008, ப.20) கோவை கங்கா, யமுனா திரையரங்கு உரிமையாளர் திரு.சுப.சண்முகம் செட்டியார்-லெட்சுமி ஆச்சி தம்பதியினரின் மகள் வழிப்பெயரன் அருண் அண்ணாமலையின் முதல் பிறந்த நாள் விழா சென்னை ரெசிடென்சி டவர் ஹோட்டலில் 26-12-2007 ஆம் நாள் நடைபெற்றதாக வண்ணப்பு கைப்படத்துடன் வெளியிட்டுள்ளது. 'பிறந்த நாள் வாழ்த்து' பகுதி (புதிய யாதவம், ஆகஸ்ட்-2008, ப.12) கருப்பு வெள்ளைப் புகைப்படத்துடன் கீழே பயோடேட்டா வடிவில் பெயர், பிறந்ததேதி, தந்தை, தாய், பெயர்கள், ஊர், வாழ்த்துபவர்கள் என புதுமையாக அமைத்துள்ளது.

இந்திய நாடார் முரசு, கொங்கு, அச்சமில்லை, தேவேந்திரர் மலர், கடலார், விளக்கு, ஒலிக்கும் யாதவர் முரசு, வீரபாண்டிய கட்டபொம்மன், தெலுங்கர் கீதம், இருளர் செய்தி போன்ற இன இதழ்களில் பிறந்த நாள் செய்திகளோ, வாழ்த்துக்கள் இடம் பெறவில்லை.

**காதணி விழா**

குடும்ப விழாக்களுள் காதணி விழா முக்கியமானதாகும். தாய்மாமன் மடியில் குழந்தையை இருத்திக் காது குத்தும் வழக்கம் தொன்று தொட்டு கடைபிடிக்கப்பட்டு வருகிறது. இல்லங்களில் நடைபெற்ற இன மக்களின் காதணி விழா குறித்த செய்திகளை இதழ்கள் சில வெளியிடுகின்றன.

> சிவகிரி வட்டம், துரைச்சாமியாபுரம் அருகில் உள்ள மீனாட்சிபுரத்தைச் சேர்ந்தவர் கணேஷ்ராஜ். இவரது மனைவி ஜீலியட், மருதமலர், மே-2008, ப.31) இவர்களின் குழந்தை சுவாதியின் காதணி விழா 16-4-2008 அன்று நடந்தது[11]

என்றும் மதுரை மாநகர் மாவட்டம் 1வது வார்டு பொருளார் ஆர்.கார்த்திகை சாமி, கே.பாண்டியம்மாள் இவர்களது குழந்தைச் செல்வங்கள் கே.விஜயலெட்சுமி, கே.தனலெட்சுமி (எ) பவித்ரா ஆகியோரது காதணி விழாவை ஜனவரி 26 அன்று தத்தனேரி ஸ்ரீனிவாசா திருமண மகாலில் நடைபெற்றதை குறிப்பிட்டுள்ளது. இவ்விரண்டு இதழ்கள் பற்றிய செய்திகள் இடம்பெறவில்லை.

இன இதழ்கள் குழந்தைகள் குறித்து தகவல்களுக்கு முக்கியத்துவம் தராமைக்கு இனப் பெரியோர்களை மையமிட்டே செயல்படுகின்றன என்பதைக் காரணமாக அறிய முடிகிறது.

**திருமணம்**

*திருமணம் என்பது மனித வாழ்க்கையின் முக்கியமான நிகழ்வாகும்.*

உணர்வு உந்தும் வழி கூடி வாழ்தல் என்ற நிலை மாறி உணர்வு ஓர் ஒழுக்கமாக ஒழுகலாறாக, திருமணம் என்ற அமைப்பின் வழி ஆக்கப் பெற்றது. மனித சமூகத்தில் மிகக் குறிப்பிடத்தக்க வளர்ச்சிக் கட்டமாகும்[12]

*என்பர்.*

*தமிழர்கள் தொடக்கக் காலத்தில் ஓலைகள், பறைகள், ஆட்கள் போன்றனவற்றின் மூலமாகத் திருமணச் செய்தியைத் தெரிவித்தனர். அச்சு வருகைக்குப்பின் வண்ண வண்ணத்தாள்கள் வழியாக அச்சுப்பதிப்பித்தனர். பின் சுவரொட்டிகளில் இடம் பெற்றன. இவ்வாறு பல முறைகளில் திருமணம் தொடர்பான நிகழ்வுகளை வெளிப்படுத்தினர். இம்முறைகளில் திருப்தியடையாத பலர் தங்கள் இன ஊடகங்களைப் பயன்படுத்திக் கொள்கின்றனர். அவ்வகையில் இன இதழ்கள் முன்னிற்கின்றன.*

*இல்ல நிகழ்வுகளுள் முதன்மையானதாக இன இதழ்கள் கருதுபவை திருமண நிகழ்வுகளாகும். திருமண வரன் அறிவிப்பு, அழைப்பிதழ், வாழ்த்து, வரவேற்பு என பல நிலைகளில் திருமண நிகழ்வுகள் இன இதழ்களில் வெளியிடப் பெறுகின்றன. திருமண வரன் குறித்த விபரங்களை வெளியிடுவதற்கு ஒவ்வொரு இன இதழும் தனித்தனி உள்ளடக்க உத்திமுறைகளைப் பின்பற்றுகின்றன.*

*மணமகன் தேவை, மணமகன் தேவை (மருதமலர், மே-2008, ப.6) எனும் தலைப்பின் கீழ், கல்வி-ஜி.என்.எம் (நர்சிங்), வயது-25. உயரம்-156 செ.மீ, இந்து தேவேந்திர குலம், ராசி-மேஷம், நட்சத்திரம்-பரணி, பணி-திருப்பூர் தனியார் மருத்துவமனை, தனியார் அல்லது அரசுப் பணியில் இருக்கும் பொருத்தமான மணமகள் தேவை. தொடர்புக்கு 04636-289239, 9865134722 என பத்தி பத்தியாக அமைக்கிறது.*

*'திருமணத்தகவல்' எனும் தலைப்பில் (இ.நா.மு., அக்-2008, ப.16) இந்திய நாடார் முரசு இலவச சேவை என அறிவித்துக் கொண்டு அட்டவணைப் பட்டியலாகத் திருமணத்தகவலை அளிக்கிறது. காட்டாக மணமகன் தேவை.*

| | எண் | ஊர் | வயது | கல்வித் தகுதி | தேவையான தகுதி | உயரம் | இருப்பிடம் | விவரம் | பெண் உரிமை |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| இந்து நாடார் | 1. | சாத்தாள் குளம் | 28 | D.E.C.E | Good job | 5.3 | சென்னை | 1082 | 30+35 |
| | 2. | சென்னை | 25 | B.Com | வியாபாரம் | 5.6 | சென்னை | 1084 | நேரில் |
| CSI நாடார் | 1. | நெல்லை | 27 | M.Sc. B.Ed | படித்து வேலையிலுள்ள | 155c.m | சென்னை | 630 | 30+30 |
| | 2. | தூத்துக்குடி | 33 | M.A | படித்து வேலை | 5.5 | சென்னை | 631 | 15 |
| RC நாடார் | 1. | வடக்கள் குளம் | 25 | M.Com., M.B.A. | B.E/ M.E/ M.Com | 155.c.m | சென்னை | 666 | 100+100 |
| | 2. | குளச்சல் | 28 | M.Sc., B.Ed | M.Sc. B.Ed | 5.3 | சென்னை | 684 | 50+1 |

இதே அட்டவணைப் பட்டியலாக மணமகள் தேவை பகுதியும் இதழில் இடம் பெறுகிறது.

'மணமகள் தேவை' என்பதை (கொங்கு அக்-2008, ப.27) பயோடேட்டா வடிவில் அமைக்கிறது.

பெயர் - ப.செந்தில்குமார்

கூட்டம் - காடை குலம்

வயது - 38

கல்வி - B.E (Computer Science)

தொழில் - Programme Manager

ஊர் - ஈரோடு, தற்சமயம் பெங்களூர்

போன் - 080-25450181, 9845995712

தேகநிலை - ஊனம் இடதுகால் முட்டிக்குக் கீழே

திருமணம் - மறுமணம்

சம்பளம் - ஒரு லட்சம், per month

குடியிருப்பது - சொந்த வீடு

மணமகள் தகுதி - SSLC மட்டும் குடும்பப்பெண் அன்புகலந்த குடும்பம்

**மணமகன் தேவை**

எண் 152

சோ.வினிபா B.Com, M.B.A

பிறந்த தேதி : 11-12-81

நட்சத்திரம் : ரோகிணி ராசி : ரிஷபம்

தொழில் : HR Exective மாத வருமானம் : 30,000 /-

த/பெ ஆ.கோமையா

75, மாண்டியத் சாலை, எழும்பூர் சென்னை-600008

தொ.பேசி:04428416577

- அகச்சுடர், டிச:2008, ப.3.

'மணமகன் விபரம் ஏப்ரல்-2008' எனும் தலைப்பில் (தேவேந்திரர் மலர், மே-2008இு ப.15) திருமணத்தகவல் விபரத்தை 'சுருக்கமாக சதுர வடிவில் வெளியிடுகிறது.

| | |
|---|---|
| மதம் / பிறந்த தேதி /<br>உயரம் / படிப்பு / வேலை /<br>சம்பளம் / நிறம் /<br>நட்சத்திரம் /<br>சொந்த மாவட்டம் /<br>சொந்த மாவட்டம் /<br>தற்பொழுது மாவட்டம். | ஆ 716<br>இந்து / 6.1.77 / 175 cm<br>/ B.Sc., MBA<br>Assistant / LIC-Madvra<br>/ 12,000 / மாநிறம் /<br>திருவாதிரை / துலாம் / மதுரை /<br>/மதுரை |

- (தேவேந்திரர் மலர், மே-2008, ப.15)

**திருமண மாலை**

**மணமகள் தேவை**

இந்து பட்டினவர் B.Tech. (I.T) வயது 26, உயரம் 5.6, நல்ல சிகப்பு, ஆயில்யம் - கடகம், சொந்த Software Consultancy நிறுவனம்.

**மணமகள் தேவை**

இந்து பட்டினவர் M.Sc., M.Phil., வயது 24, உயரம் 5'.6" சிவப்பு, மூலம்-தனுசு.

- கடலார், ஜன-2008, ப.21.

**மணவறை - திருமணச்சரம்**

| எ | மணமகளின் பெயர் | கோயில் | பிரிவு | பிறந்த தேதி | ஊர் | படிப்பு | நட்சத்திரம் |
|---|---|---|---|---|---|---|---|
| 1212<br><br>1214 | தேனம்மை,<br>கரு<br>மீனா, வ | வயிரவன் கோயில்<br>வயிரவன் கோயில் | | 25.03.1981<br>30.03.1975 | ஒ.சிறுவயல்<br>தேவகோட்டை | B.E<br>+2 | விசாகம்<br>விசாகம் |
| 1135<br><br>1157 | சரவணன், வ<br>சிவலிங்கம்,<br>சீ | மாத்தூர்<br><br>இளையாத்தங்குடி | கருப்பூர்<br><br>- | 20.05.1979<br><br>18.12.1978 | தேவகோட்டை<br><br>வேந்தன்பட்டி | M.Sc<br><br>L.Tech | அஸ்வினி<br><br>பூசம் |

- (பூச்சரம், பிப்-2008, ப.87)

**மணமாலை**

| எண் | பெயர் | நட்சத்திரம் | வயது | கல்வி | தொழில் | முகவரி | தொலைபேசி |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | A.T. அருண் | ரோகிணி | 28 | B.E | Working is Software Company, Chennai. | சி.பி. ஆனந்த கிருஷ்ணன் பெங்களூர் | 9840163762 |

- (ஒலிக்கும் யாதவர் முரசு, சன 2008, ப.28, 29)

இன இதழ்களில் ஆங்கிலத்தில் திருமண வரன்களை வெளியிடும் ஒரே இதழாக அமைவது தெலுங்கர் கீதம் என்பனவாகும்.

Groum 84/A, Balija,

04.09.79/ Thiruvonam,

B.E, MBA Bank Manager Dubai,

Rs 2.10 Lakh per month

BP: Chennai, 01.45 Am, 177cm

One Younger brother.

| | | | |
|---|---|---|---|
| Ma | | | Sev Lag |
| Kedhu | Rasi | | |
| Chend | | | Sury,Bhud Sukr,Viya Sani,Rahu |
| | | | |

| | | | |
|---|---|---|---|
| Lag Ma | Chend Viya | Sevvai | Bhud |
| Kedhu | Amsan | | |
| | | | Rahu |
| | | Sani | |

- (தெலுங்கர் கீதம், மார்ச்-2008, ப.23)

இவ்விதழ் இவ்வினம் சார்ந்த மக்கள் பிற மாநிலங்களில் இருப்பதனால் அவர்கள் தெரிந்து கொள்ளுவதற்காக ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ளனர்.

பண்டிதம், விளக்கு, வீரபாண்டிய கட்டபொம்மன், இருளர் செய்தி போன்ற இன இதழ்களில் திருமண வரன் குறித்த செய்திகள் இடம்பெறவில்லை. பல இன இதழ்கள் திருமண வரன் விபரங்களை இனமக்களை ஈர்ப்பதற்கும், விளம்பரங்களாகவும் பயன்படுத்திக் கொள்வதை அறிய முடிகிறது.

**திருமண அழைப்பிதழ் - வாழ்த்து**

இல்லற வாழ்வின் அடித்தளமாக விளங்கும் திருமண விழாவைச் சிறப்புற நடத்த எல்லோரும் விரும்புவர். அந்த வகையில் திருமண அழைப்பிதழை ஊடகங்களில் வெளியிட்டுப் பெருமை கொள்கின்றனர். இன ஆர்வலர்கள் தம் சொந்தங்கள் வாசிக்கும் இன இதழ்களில் திருமண அழைப்பிதழை விளம்பரமாகக் கொடுக்கின்றனர். இதனால் தொலை தூரத்தில் உள்ளவர்கள் அறிந்து கொள்ள முடிகிறது.

'மணமக்களை மருத மலர் வாழ்த்துகிறது' எனும் (மருதமலர், ஜுன்-2008, ப.36) தலைப்பில் மணமக்கள் தளபதி க.பிச்சையா, ஜெயபாரதி புகைப்படங்கள் திருமண விழா தலைமை, முன்னிலை, நடத்தி வைத்தவர் பெயர்களோடு அமைந்துள்ளது. 'சுமதி டிரேடர்ஸ் G.உமாபதி நாடார் இல்லத் திருமண விழா' எனும் தலைப்பில் (இ.நா.மு., மார்ச்-2008, ப.3) மணமக்கள் புகைப்படமும், வாழ்த்தியவர்கள் படங்களும், இறுதியில் திருமணத்திற்கு வருகை தந்த அனைவருக்கும் நன்றி என்று மணமக்களின் பெற்றோர் பெயர்களும் இடம்பெறுகின்றன.

திருமண அழைப்பிதழ் பத்திரிகையை முழு பக்க அளவில் (கொங்கு, நவ-2008, ப.14) வெளியிட்டு பக்க இறுதியில் கொங்கு மாத இதழ் வளர்ச்சிக்காக மணமகன் வீட்டு சார்பாக ரூ.1,000 /- நன்கொடை வழங்கியுள்ளார்கள் என அறிவிக்கின்றது. 'இலங்கை செல்வரத்தினம் திருமண விழா' எனும்,

> இலங்கை செங்குந்தர் முன்னேற்ற ஆலோசகர் கொழும்பு ஆ.சு செல்வரத்தினம்-திருமதி சற்குணதேவி அவர்களின் மகள் காவேரி, கோவை சி.முருகேசன்-திருமதி மகேஸ்வரி அவர்களின் மகள் இளவேனில் இவர்களது திருமணம் 10.02.2008 ஞாயிற்றுக்கிழமை கோவை ஜி.வி.டி.திருமண மண்டபத்தில் நடைபெற்றது[13]

எனவும் திருமணவிழாவில் கலந்து கொண்ட முக்கியஸ்தர்கள் பெயர்களும் இடம் பெறுகின்றன.

'வாழ்க மணமக்கள்' என (அகச்சுடர், ஏப்-2008, ப.4) தஞ்சாவூர், மானாமதுரை ஆகிய இடங்களில் நடைபெற்ற திருமண நிகழ்வுகளின் மணமக்களை வாழ்த்துகிறது. மேலும் இல்லறம் ஏகிய என் இளைய புதல்வரின் நல்மணவிழாவிற்கு வருகை புரிந்து வாழ்த்திய நிகழ்வில் உள்ளத்தில் மகிழ்ச்சி உள் உணர்வுகளில் நெகிழ்ச்சி! நன்றி!

அன்புடன் M.A. ரகுபதி Dy.Collector (Rtd) சென்னை-600 062 என புகைப்படத்துடன் இன வாசகர் வாழ்த்துகிறார்.

'வாழ்த்துகிறோம் வாழ்வாங்கு வாழ!' (கடலார், ஏப்-2008, ப.20) எனும் தலைப்பில் இரா.அன்பழகனார் இல்லத்திருமண வரவேற்பு விழா, ஜெயபால் இல்லத்திருமண வரவேற்பு விழா, சேம.நாராயணன் இல்லத்திருமணம், நிச்சியத்தாம்பூலம் என்ற பெயர்களில் மணமக்கள் விபரம் திருமணம் நடைபெற்ற நாள் போன்றவை குறிப்பிட்டு மணமக்களைக் கடலார் இதழ் வாழ்த்துகிறது.

நகரத்தார் இனம் சார்பாக வெளிவரும் பூச்சரம் இதழ் திருமண வாழ்த்து. திருமண விழா நிகழ்வுகள் இதழின் நடுப்பக்கங்களில் வண்ணப் புகைப்படங்களுடன் 'கவித்தென்றல் காசுமணியன் இல்லத் திருமணவிழா, சொக்கலிங்கம் புதூர் மு.அரு.சுப அருணாசலம் செட்டியார். இல்லத் திருமண விழா' எனும் (பூச்சரம், நவ-08, பக்.45,46, 47) தலைப்புகளில் வழு, வழு வண்ணத்தாள்களில் அழகுறப் புகைப்படங்களோடு அமைந்துள்ளன. 'திருமணச்செய்தி' எனும் தலைப்பில் (வீ.பா.க, பிப்-2008, ப.21) திருமண நிகழ்வை பத்தியாக வெளியிட்டுள்ளது. இதில் மணமக்கள், பெற்றோர், தலைமை, முன்னிலை வகித்தோர் பெயர்கள் தடித்த எழுத்துக்களில் அமைக்கிறது.

தெலுங்கர் கீதம் இதழாசிரியர் மகள் திருமண வரவேற்பை (அக்-2008, ப.29) புகைப்படமாக வெளியிட்டுள்ளது. இருளர் இன விடுதலைக்குத் தொடர்ந்து பணியாற்றும் பழங்குடி இருளர் அறக்கட்டளைப் பொறியாளர் மு.தேவேந்திரன்-இர.சுதா திருமணம் 05-11-08 புதன்கிழமை அன்று நடைபெற்றது என புகைப்படத்துடன் திருமண விழா நிகழ்வை வெளியிட்டு இருளர் செய்தி வாழ்த்துகிறது எனக் குறிப்பிடுகிறது.

இல்லங்களில் நடைபெறும் திருமண நிகழ்வுகளைப் பல இன இதழ்கள் வெளியிட்டு மகிழ்கின்றன. இதனால் இனத்தாரோடு நெருங்கிய தொடர்பும் வருமானமும் கிடைப்பதால் இன இதழ்களில் வண்ண, வண்ணப் புகைப்படங்களோடு திருமண நிகழ்வுகளான வாழ்த்து, அழைப்பிதழ் வரவேற்பு வெளியிடுவதை அறிய முடிகிறது. அச்சமில்லை, பண்டிதம், தேவேந்திரர் மலர் போன்ற இதழ்களில் அரிதாகவே திருமண நிகழ்வுகள் அமைகின்றன. பூச்சரம் இதழில் திருமண வரவேற்பு வண்ணப்புகைப்படங்கள் அதிகளவில் இடம் பெறுவது குறிப்பிடத் தக்கதாகும்.

**பணி குறித்த நிகழ்வுகள்**

*அரசு, மற்றும் தனியார் நிறுவனங்களில் பணிபுரியும் இன மக்களை இனத்தின் மற்றவர்களுக்கு அறிமுகப்படுத்தும் விதமாக பணி ஏற்பு, பணி மாற்றம், பதவி உயர்வு, பணி ஒய்வு போன்ற தலைப்புகளில் இன இதழ்கள் வெளியிடுகின்றன. இச்செய்திகளை வெளியிடுவதால் தம் இனத்தவர் எந்தெந்தப் பணிகளில் இருக்கின்றனர் என்பதைத் தெரிந்து கொள்ளவும் அதன் வழியாக இனத்தார் தம் தேவைகளை நிறைவு செய்து கொள்ளவும் வழி வகுக்கிறது.*

*`பதவி உயர்வு' எனும் தலைப்பில்,*

> பாளையங்கோட்டை டிவிசனல் அலுவலகத்தில் பணியாற்றிய பிச்சை என்பவர் பரமக்குடி ஆயுள் காப்பீட்டுக் கழக கிளை மேலாளராக பதவி உயர்வு பெற்றுள்ளார். இவரின் சொந்த ஊர் மதுரை அனுப்பானடி செல்:9442769250[14]

*என்றும், 'பணி மாற்றம்',*

> பொதுப் பணித்துறையில் உத்தம பாளையம் 18 ஆம் கால்வாய்த் திட்டத்தில் உதவி செயற்பொறியாளராக பணியாற்றியவர் ராஜமாணிக்கம். பணி மாறுதல் செய்யப்பட்டுத் தற்போது சங்கரன் கோவில் வடிநில உபகோட்டத்தில் மேல வைப்பாறு உதவி செயற் பொறியாளராக பணிபுரிகிறார்[15]

*என பணி ஓய்வு, பணி நிறைவு எனும் தலைப்புகளில் (மருதமலர், ஜுன்-2008, ப.22) விஸ்வநாதபுரத்தில் குடியிருந்து வருபவர் செல்லையா. 35 ஆண்டுகளுக்கு மேலாக ஸ்டேட் பேங்க் ஆப் திருவாங்கூர் கிளையில் பணியாற்றியவர். குறிப்பாகச் செங்கோட்டை கிளையில் நீண்ட காலமாக பணியாற்றியவர். கடந்த ஏப்ரல் மாதம் பணி ஓய்வு பெற்றார். எனினும் ஓய்வின்றி நம் குலத் தொழிலான விவசாயத்தைத் தொடர்ந்து செய்து வருகிறார். என் இனமக்கள் பணி தொடர்பான செய்திகளை வெளியிடுகின்றது.*

*'எம்.மகேந்திரன் பணி ஓய்வு', 'இசைமாமணி சி.ராஜலிங்கம் ஓய்வு' (கடலார், ஆகஸ்ட், ஏப்ரல்-2008, பக்.16,10) பணியாற்றிய நிறுவனம், இடம் சிறப்புகளைப் பதிவு செய்கிறது. 'வாழ்த்துகிறோம்' (வீ.பா.க., ஜுலை-2008, ப.10) என இனத்தின் பேராசிரியர் பெ.சௌந்திர பாண்டியன், அண்ணாமலைப் பல்கலைக் கழக கடல் வாழ் உயிரியல் உயராய்வு மையத்தில் இணைப் பேராசிரியராக பணியாற்றி வருவதைக் குறிப்பிட்டு, இவரின் ஆராய்ச்சித்திறம், விருதுகள், சிறப்புகள் போன்றவற்றை வெளிப்படுத்துகிறது. `எழுத்தாளர் முத்தமிழ் விரும்பி நியமனம்' (தே.மலர், ஆகஸ்ட்-*

*2008, ப.3) பாரதியார் பல்கலைக்கழக ஆட்சிப்பேரவை (செனட்) உறுப்பினராக நியமித்து இருப்பதைச் சுட்டிக் காட்டுகிறது.*

*'பாராட்டுகிறோம்' (பூச்சரம், பிப்-2008, ப.58) மதுரை இராஜாஜி மருத்துவமனையில் சிறந்த மருத்துவராக மகிபாலன்பட்டியைச் சேர்ந்த இராம.சேது செட்டியார் மகன் டாக்டர் மீனாட்சி சுந்தரத்திற்கு மாவட்ட ஆட்சியர் எஸ்.எஸ். ஜவஹர் விருது வழங்குவதைப் பெருமையாகக் குறிப்பிடுகிறது. 'வாழ்த்துகிறோம்' (ஒ.யா.மு., ஜுன்-2008, ப.26) திருநெல்வேலி தமிழ் நாடு நுகர் பொருள் வாணிப கழகத்தில் சிறந்த முறையில் பணியாற்றி 30-4-08 அன்று பணியிலிருந்து ஓய்வு பெற்ற எழுத்தர் இ.சுப்பையா யாதவ் அவர்கள் எல்லா வளமும் பெற்று பல்லாண்டு காலம் வாழ நெல்லை மாவட்ட யாதவ பேரவை சார்பில் வாழ்த்துகிறோம்" எனக் குறிப்பிடுகிறது.*

*பணி ஏற்பு மாற்றம், ஓய்வு போன்றவற்றை வெளியிடும் இதழ்களில் மருதமலர் நிறைவாக அமைந்திருப்பது சிறப்பிற்குரியதாகும். தேவேந்திரர் மலர், கடலார், வீ.பா.க. பூச்சரம் முதலிய இதழ்களும் பணி பற்றிய செய்திகளைத் தருகின்றன.*

**இறப்பு**

*வாழ்வின் இன்ப நிலைகளைப் பகிர்ந்து கொள்வது போல துன்பங்களையும் பகிர்ந்து கொள்வது மனதுக்கு ஆறுதலைத் தரும். அவ்வகையில் இன மக்களின் சுக துக்கங்களில் இன இதழ்கள் துணை நிற்கின்றன. பிறப்பு பற்றிய நிகழ்வுகள் போலவே இறப்பு பற்றிய நிகழ்வுகளும் இன இதழ்களில் இடம் பெறுகின்றன. மறைவு, வருந்துகிறோம், இரங்கல், கண்ணீர் அஞ்சலி, காலமானார், இறைவனடி சேர்ந்தார், வருத்தம், இரங்கல் செய்தி, கண்ணீர் அஞ்சலி என்னும் தலைப்புகளில் இது அமைகிறது. இறப்பு பற்றிய நிகழ்வுகள் இறந்தவர் பெயர், அவருடைய தாய், தந்தை பெயர், ஊர், அவருடைய பணி விபரம், எப்போது இறந்தார். யார் நினைவாக அஞ்சலி, என்ற விபரம் போன்ற பல செய்திகளை உள்ளடக்கி அமைகின்றன.*

*நினைவஞ்சலி, நினைவுநாள், கண்ணீர் அஞ்சலி, மறைவு, இரங்கல் என பல தலைப்புகளில் காட்டாக,*

பரமக்குடி நேரு நகரில் குடியிருப்பவர். திருமதி அரசம்மாள். தலைமை ஆசிரியை. இவரின் கணவர் முத்துமணி ஆடிட்டராகப் பணிபுரிந்தவர். இவர் 30-7-2007

அன்று மரணம் அடைந்தார். 30-07-2008 அன்று அவருடைய வீட்டில் அனுஷ்டிக்கப்பட்டது[16]

என (மருதமலர், அக்-2008, ப.25) வெளியிட்டுள்ளது. மேலும் இவ்விதழில் கண்ணீர் அஞ்சலி என்னும் பெயரில் முழுப்பக்க அளவில் இறந்தவரின் புகைப்படம் நினைவு செய்வோர் பெயர்கள் இடம் பெறுகின்றன. 'கண்ணீர் அஞ்சலி' யாக (இ.நா.மு., செப்-2008, ப.28) திரு S.காளியப்ப நாடார் 5-08-2008 அன்று இறைவனடி சேர்ந்தார்கள். அவரது ஆன்மா சாந்தியடைய பிரார்த்திக்கிறோம் என்றும் அவர் நினைவில் வாழும் மனைவி K.செல்லத்தாய் அம்மாள்" எனக் குறிப்பிடுகிறது.

வருந்துகிறோம்' என இராயபுரம் முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் இரா.மதிவாணன் அவர்களின் தந்தையும் தி.மு.க தீவிர செயல் வீரருமாகிய மிசாக்படா கே.ராஜீ (வயது 86) அவர்கள் 9-10-2008 அன்று இயற்கை எய்தினார். அவர் குடும்பத்திற்கு ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறோம்[17]

எனத் தெரிவிக்கிறது. 'கண்ணீர் அஞ்சலி' என வண்ணப் புகைப்படத்துடன்,

சொக்கலிங்கம் புதூர் ஆ.வீரப்பன் B.A.,(Hons) உடல் நலமில்லாமலிருந்து 12-11-2008 அன்று இறைவனடி சேர்ந்து விட்டார்கள் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்[18]

இப்படிக்கு மகன், மருமகள், மற்றும் பெயரன்கள் பெயர்களில் அமைந்துள்ளது. 'கண்ணீர் அஞ்சலி' எனும் தலைப்பில்,

விருதுநகர் சட்ட மன்ற உறுப்பினர் R.வரதராஜன் அவர்களின் மாமனார் வெங்கைய நாயக்கர் மற்றும் விருதுநகர் முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் சுந்தரராஜன் புதல்வர் M.S.கண்ணன் ஆகியோர் இயற்கை எய்தினார்கள். மாநில மாவட்ட நிர்வாகிகள் கண்ணீர் அஞ்சலி செலுத்தினர்[19]

என அறிவிக்கிறது.

'வருந்துகிறோம்' எனும் தலைப்பில் (இருளர் செய்தி, டிச.2008, ப.11) விழுப்புரம் மாவட்டம் குண்டலப்புலியூரை சேர்ந்த சுப்ரமணியன் செங்கல் சூளை வேலைக்குச் செல்லும்போது சாலை விபத்தில் மரணமடைந்தார் எனவும், விபத்து நடத்ததிலிருந்து இறுதி அடக்கம் வரை உடன் இருந்து உதவிய பஞ்சாயத்துத் தலைவர் கி.ராஜாராம் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறோம் எனக் குறிப்பிடுகிறது. பெரும்பாலான இன இதழ்களில் இறப்புப் பற்றிய செய்திகள் இடம் பெறுகின்றன. இதில் இறப்பு நிகழ்வை வெளியிடுவதில் மருதமலர் இதழ் மற்ற இதழ்களை விட பல தலைப்புகளை செய்தியாகவும், விளம்பரமாகவும் அமைத்திருப்பதை அறிய முடிகிறது.

இவ்வகையான இல்லத்தின் நிகழ்வுகளை இன இதழ்களில் வெளியிடுவதால் இன மக்களும், அவர்களைச் சார்ந்த உறவினர்களும், தம் உறவினர் சிறப்புகளையும், இனத்தின் நடப்புகளையும், விபரங்களையும் தெரிந்து கொள்ள இன இதழ்கள் உதவுகின்றன.

**வர்த்தக நிகழ்வுகள்**

பொருளாதாரம், வர்த்தகம், தொழில் போன்றவற்றில் ஈடுபட்டு இருக்கும் இனத்தவர்களின் இதழ்களில் உள்ளடக்கம், வெளியீட்டு முறை மாறுபடுகிறது. ஒடுக்கப்பட்ட, பிற்படுத்தப்பட்ட மக்களின் இதழ்களுக்கும், மேம்பட்ட இனத்தினர் இதழ்களுக்கும் உள்ளடக்கம், வெளியீட்டு முறையில் மாற்றங்கள் காணப்படுகின்றன. ஒடுக்கப்பட்ட, பிற்படுத்தப்பட்ட இனத்தவரின் இதழ்கள் இன விடுதலை நோக்கிலும், மேம்பட்ட இனத்தவரின் இதழ்கள் தொழில் பற்றிய நிகழ்வுகளையும் வெளியிடுகின்றன.

'கிறிஸ்துவ தொழிலாளர் மற்றும் அமைப்பு சாரா தொழிலாளர் ஒருங்கிணைப்பு மாநாடு' எனும் தலைப்பில் சென்னையில் நடைபெற்ற மாநாட்டில்,

> உழைப்புக்கு எற்ற ஊதியத்தை ஒவ்வொரு தொழிலாளியும் பெற வேண்டும். அரசாங்கம் வழங்கும் சலுகைகள் இந்த அமைப்பு சாரா தொழிலாளர்களுக்கும் கிடைக்க வேண்டும். அதற்கு கிறித்துவ தொழிலாளர் இயக்கம் சிறப்பாக செயல்படும்[20]

என்று உறுதியாக நம்புவதாக நிகழ்வில் பேசிய டாக்டர் குமரி அனந்தன் குறிப்பிடுவதாக அமைத்துள்ளது. "தவணை முறை பிறந்த கதை" எனும் தலைப்பு (இ.நா.மு., செப்-2008, ப.24) தொழிலதிபர் வர்த்தக ரீதியாக தான் அடைந்த முன்னேற்றம் குறித்த அனுபவத்தைப் பகிர்ந்து கொள்கிறார். 'வர்த்தகச் சூதாட்டமும், வணிகனின் அவலநிலையும்' எனும் (இ.நா.மு., மே-2008, ப.23) கட்டுரை இன்றைய நிலையில் வர்த்தகம் குறித்தும் அதில் தன் இனம் எவ்வாறு வஞ்சிக்கப்படுகிறது என்பதையும் எடுத்துரைக்கிறது.

'காலாணா மை முதல் கண்ணம்மை பில்டிங் வரை' (பூச்சரம், நவ-2008, ப.29) எனும் தலைப்பில் பழனியப்பா பிரதர்ஸ் பதிப்பகத்தின் தொடக்க நிலையையும், சிறப்புகளையும், தொழில் நுணுக்கங்களையும் பத்மஸ்ரீ நல்லி குப்புசாமி செட்டியார் விவரிக்கிறார். 'வைரமான பதிப்பு பணி' (பூச்சரம், மார்ச்-08, பக்.24) எனும் தலைப்பு

குமரன் பதிப்பக உரிமையாளர் திரு.வைரவன் அவர்களின் பதிப்பு உலகம் எவ்வாறு வர்த்தக ரீதியாக வெற்றி பெற்று இன்று தலைசிறந்த பதிப்பகமாகத் திகழ்கிறது என்பதைப் பறைசாற்றுகிறது. 'டைமண்ட் பார்க் திறப்பு விழா' என்னும் (பூச்சரம், ஆகஸ்ட்-2008, பக்.64, 47) தலைப்பு தஞ்சாவூரில் துவங்கப்பட்ட நட்சத்திர ஓட்டல் பற்றிய வண்ணப் புகைப்படங்களுடன் அழகு மிளிர வைக்கிறது.

'ஏழை மீனவர் வாழ்வு உயர, புது முயற்சி' (கடலார், ஆகஸ்ட்-2008, ப.8) எனும் தலைப்பு இந்திய மீனவர்களுக்காக வியட்நாமில் மீன் பிடித்துறையில் 3 வார கால புதிய தொழிற்பயிற்சி-ரோட்டரியின் புது முயற்சி எனக் குறிப்பிடுகிறது. 'சிங் இறாலும், மத்திய கடல் மீன்வள ஆராய்ச்சி நிலையமும்' (கடலார், செப்-2008, ப.10) எனும் தலைப்பு சிங் இறால் வளர்ப்பு முறை, பிடிக்கும்போது கையாளப்படும் வழி, அரசின் திட்டங்கள், லாபம் குறித்து அலசுகிறது. 'முட்டுக்காட்டில் நவீன மீன்பிடி தொழில்நுட்ப பயிற்சி நிலையம்' (கடலார், அக்-2008, ப.6) எனும் தலைப்பு முதல்வர் முன்னிலையில் டாடா நிறுவனத்துடன் ஒப்பந்தம் ஏற்பட்டதையும், அதனால் மீனவர்களுக்கு ஏற்படும் நன்மைகள் குறித்தும் விளக்குகிறது. 'தமிழ்நாடு அரசின் சிறு, குறு மற்றும் நடுத்தரத் தொழில் கொள்கை 2008 சிறப்பம்சங்கள்' (கொங்கு, ஆகஸ்ட்-2008, ப.14) எனும் தலைப்பு குறுந்தொழில்களுக்கான மானியங்கள், நடுத்தரத் தொழில் நிறுவனங்களுக்கான மானியங்கள், வேளாண் சார் உற்பத்தி நிறுவனங்கள் அமைக்க மானிய உதவிகள், சிறப்புவகை உற்பத்தி நிறுவனங்களுக்கான மூலதன மானியம் போன்றன குறித்து அறிய வழி வகை செய்கிறது. 'வாழ்த்துகிறோம்' (கொங்கு, ஏப்-2008, ப.30) எனும் தலைப்பு சக்தி மசாலா இயக்குநர் சாந்தி துரைசாமி அவர்களுக்கு 2006 ஆம் ஆண்டிற்கான ஸ்திரி சக்தி புரஸ்கார் விருது தொழில் துறையில் சிறப்பு பெற்றதற்காக வழங்கப்பட்டதைப் பெருமை பாராட்டுகிறது.

'மைக்ரோ மின்னணுவியல் (Micro Electronics) கல்வி மூலம் லட்சாதிபதியாகலாம்.' (தே.மலர், அக்-2008, ப.22) எனும் தலைப்பு இன்றைய நிலையில் இந்தத் துறையில் உள்ள வேலை வாய்ப்பு குறித்தும், வர்த்தக ரீதியில் உள்ள நிலைப்பாடு குறித்தும் விளக்கி, தேவேந்திர இன இளைஞர்கள் இதில் ஈடுபட்டுப் பெருநிலை அடைய வாய்ப்பிருப்பதாக விளம்புகிறது.

இந்திய நாடார் முரசு, தெலுங்கர் கீதம், பூச்சரம், கடலார் போன்ற இன இதழ்களில் வர்த்த நிகழ்வுகள் குறித்த செய்திகள் மிகுதியாக இடம் பெறுகின்றன. வர்த்த

நிகழ்வுகள் இன இதழ்களில் மிகுதியாக இடம் பெறக் காரணம் பரம்பரை பரம்பரையாக செய்து வரும் தொழில்களை இன்னும் நவீன முறையில் செழுமைப்படுத்துவதற்கு நோக்கமாக கொண்டுள்ளதை என்பதை அறிய முடிகிறது.

**அரசியல் நிகழ்வுகள்**

இன இதழ்களில் பல அரசியல் நிகழ்வுகளை வெளியிடுகின்றன. தம் இன மக்கள் அரசியல் விழிப்புணர்வு பெற இவ்வகையான நிகழ்வுகளை அமைத்துக் கொள்கின்றன. தன்னிலை உயர்வு, பொருளாதாரத்தில் உயர்வு இவற்றின் அடுத்த கட்டமாக அரசியல் விழிப்புணர்வு பெறுவது தேவையான, கட்டாயமான ஒன்றாகும்.

இந்திய நாட்டிலுள்ள அரசியல் கட்சிகளெல்லாம் தனித்தன்மையோடு ஆட்சி நடத்தி வந்த காலம் மாறிப்போய் விட்டன. இன்றைய சூழ்நிலையில் பல கட்சிகள் கூட்டணி அமைத்துப் போட்டியிடும் காலம் உருவாகி விட்டது. ஒவ்வொரு கட்சிக்கும் ஒவ்வொரு கொள்கையுண்டு. ஆனால் தேர்தலில் போட்டியிடக் கட்சிகள் கூட்டணி அமைக்கும் போது கட்சியின் கொள்கையை எல்லாம் ஒரு புறம் ஒதுக்கி வைத்து விட்டு ஆட்சியைப்பிடிக்க வேண்டும். பதவியில் அமர வேண்டும் என்ற ஒரே கொள்கையோடு தேர்தலில் போட்டியிடுகிறார்கள்.

அதிக இடங்களில் வெற்றி பெறும் கூட்டணிக் கட்சிகள் கூட்டணியாக ஆட்சிக்கட்டிலில் அமர்ந்து ஆட்சி நடத்துகிற போது தான் கூட்டணி கட்சிகளில் கூத்து ஆரம்பமாகிறது பதவியில் அமர வேண்டும். பணம் சம்பாதிக்க வேண்டும் படாடோபமாக வாழ வேண்டும். தங்கள் இனத்தைப் பாதுகாக்கவும், தங்கள் இன மக்கள் முன்னேறி வாழவேண்டும் என்ற நோக்கத்தோடும், அரசியல் கட்சி என்ற போர்வையில் சாதிக்கட்சிகள் கூட்டணி அமைத்து, தேர்தலில் போட்டியிட்டு வெற்றி பெற்று சட்டமன்றத்திலும், பாராளுமன்றத்திலும் இடம்பிடித்து இன மக்களின் முன்னேற்றத்திற்குப் பாடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பதை இன இதழ்கள் வழி அறியமுடிகின்றது.

இது போன்ற அரசியல் நிலைப்பாடுகளை முன்னிறுத்தியே இன இதழ்கள் இன மக்களிடம் அரசியல் கட்சிகளால் தேர்ந்தெடுக்கப்படும் இன சட்டமன்ற, பாராளுமன்ற உறுப்பினர்கள் எவ்விதம் செயல்படுகின்றனர். என்பதையும், இன்றைய அரசியல் நிலை குறித்தும் விழிப்புணர்வை ஏற்படுத்த முயலுகின்றன.

*அச்சமில்லை, விளக்கு எனும் இரு இன இதழ்கள் அரசியல் குறித்த நிகழ்வுகளுக்கு அதிக முக்கியத்துவம் தருகின்றன. 'சூழல் பந்து வீச்சாளர் கருணாநிதிக்கு ஒரு திறந்த மடல்' எனும் தலைப்பு (அச்சமில்லை, மே-2008, ப.2) வன்னிய இன மக்களுக்கு இழைக்கப்படும் அரசியல் அநீதிகளை எதிர்த்து எழுதப்பட்ட கட்டுரையில் யூதர்களுக்கு ஹிட்லர் வன்னியர்களுக்குக் கருணாநிதியா? ஒப்பீட்டளவில் ஜெயலலிதாவைவிட வன்னியருக்கு அதிகத் துரோகம் செய்தது கருணாநிதியே! என்றும், வன்னியர் அதிகம் ஆதரித்த தி.மு.க. தான் வன்னியருக்கு அதிக துரோகம் செய்தது எனப் புள்ளி விபரங்களுடன் பட்டியலிட்டுக் காட்டுகிறது.*

> நிரேற்றுத்திட்டத்தை நிறைவேற்றுவதில் இமாலய சாதனையாளராய் இந்துத்வா மோடியும், திண்ணைப் பேச்சு அண்ணாச்சியாய் திராவிடக் கருணாநிதியும்[21]

*எனும் தலைப்பில் (அச்சமில்லை, மே-2008, ப.22) குடிநீர் திட்டம் செயல்படுத்துவதில் வடமாவட்டம் வஞ்சிக்கப்படுவதும், தென்மாவட்டம் செழிப்பாக்கப்படுவதாகக் குற்றஞ்சாட்டுகிறது. ஒவ்வொரு இதழிலும் இனத்திற்குத் துரோகம் விளைவித்ததாகக் கருதப்படும் அரசியல் தலைவர்களுக்குத் திறந்த மடல் எழுதுவதை இவ்விதழ் கடமையாகக் கொள்கிறது.*

*'மாயாவதியைக் குறி வைக்கும் ஆதிக்க அரசியல் தலைவர்கள்...' எனும் தலைப்பு (மருதமலர், பிப்-2008, ப.9) உத்திரபிரதேச முதல்வர் தலித் இனத்தைச் சார்ந்தவர் என்பதால் அவரை ஆதிக்கச் சாதி அரசியல் தலைவர்கள் பல வகையில் தொந்தரவு கொடுப்பதைக் கட்டுரை வாயிலாக வெளிப்படுத்துகிறது. 'அரசியல் கட்சிகளின் கூட்டணிகூத்து' எனும் தலைப்பு (கொங்கு, ஆக-2008, ப.2) இன்றைய கொங்கு இனத்தை அரசியல் சக்திகள் எந்தளவு மதிக்கின்றன என்பதையும், இன்றைய கூட்டணிக் கூத்தையும் விமர்சனப்படுத்துகிறது. 'பகுஜன் சமாஜ் கட்சி பொதுக்கூட்டம்' எனும் தலைப்பு (இருளர் செய்தி, டிச-2008, ப.3) முன்னாள் ஆட்சி பணி அதிகாரியும், எழுத்தாளருமான ப.சிவகாமி ஐ.ஏ.எஸ் அவர்களை வரவேற்றதையும் எடுத்துரைக்கிறது.*

*'பாகிஸ்தானின் மறைந்த தலைவிக்குக் கண்ணீர் அஞ்சலி' எனும் தலைப்பு (தெலுங்கர் கீதம், சன-2008, ப.19) முன்னாள் பிரதமர் பெனாசீர் பூட்டோவின் மரணம் அவர் ஆட்சிகால சிறப்புக் குறித்து விளக்குகிறது. 'பாரதத்தின் இடைத்தேர்தலை நிறுத்தியவர்' எனும் தலைப்பு உ.பி.யைச் சேர்ந்த முலாயம் சிங் யாதவ் இந்திய கூட்டணி அரசுக்கு நெருக்கடி ஏற்பட்ட சமயம் 21.7.08இல் கம்யூனிஸ்ட்டுகள் ஆதரவை*

*வாபஸ் பெற்று அரசு கவிழும் நிலையில் சோனியா அவர்களுக்கு ஆதரவு கொடுத்தார் என பெருமை பேசுகிறது. இன இதழ்கள் பல திராவிட அரசியலையும், தேசிய அரசியலையும் வெளியிடுகின்றன. அரசியல் நிகழ்வுகளை வெளியிடுகையில் தம் இனம் சார்ந்த தலைவர்களை அறிவுறுத்துவதை, இன விழிப்புணர்வு ஏற்படுத்துவதை நோக்கமாக கொண்டுள்ளன என்பதை அறிய முடிகிறது. அச்சமில்லை, விளக்கு இதழ்கள் அரசியல் செய்திகளைப் புள்ளி விபர ஆதாரத்துடன் சிறப்பாகக் கட்டுரையை அமைத்துள்ளன.*

**ஆன்மீக நிகழ்வுகள்**

*'மனம் நடத்துவிக்கும் மணக் கோல நாதர்' முன்னோடி கருப்பர் திருக்கோயில், செங்கீரை (பூச்சரம், பிப்-2008, பக்.5, 37) எனும் தலைப்புகளில் வேண்டுதல் தலம், திருநாமங்கள், தலவரலாறு, கோவிலழகு, நகரத்தார் வழிபடல், திருமணம் சேரி என உட்தலைப்பு அமைக்கப்பட்டுத் திருக்கோயில் சிறப்புகளை விளக்குகிறது. 'நடைபெறவுள்ளவை' (பூச்சரம், பிப்-2008, ப.53) எனும் தலைப்பு மாசி மக பெருவிழா, குடமுழுக்கு விழா என நடைபெற இருக்கும் விழா நிகழ்வுகளைக் குறிப்பிடுகிறது. 'நகர்வலம்' (பூச்சரம், பிப்-2008, ப.73) எனும் தலைப்பில் தைப்பூச விழா, குடமுழுக்கு விழா, கனுப்பொங்கல், பழனி பாத யாத்திரை வழிபாடு, சதாபிஷேகம் என நடைபெற்ற நிகழ்வுகளை வரிசைப்படுத்துகிறது.*

*'திருச்செங்கோடு அர்த்த நாரீஸ்வரர் திருக்கோவில் வரலாறு' (கொங்கு, ஏப்-2008, ப.11) எனும் தலைப்பில் திருக்கோயில் பற்றிய சிறப்புகள், தல வரலாறு குறித்தும் விளக்குகிறது. மேலும் தேவாரம், திருவாசகம், பெரிய புராணம், திருப்புகழ், கந்தர் அனுபூதி, கந்தர் அலங்காரம் போன்ற நூல்களில் இத்திருக்கோவில் போற்றப்படுவதாகவும் குறிப்பிடுகிறது. 'இராஜபாளையத்தில் வெண்குடைத்திருவிழா',*

> இராஜபாளையம் பஸ் நிலையத்திற்கு எதிரே உள்ள 7 தெரு தேவேந்திரர்களால் நடத்தப்படும் வெண்குடைத்திருவிழா (இந்திர விழா) சித்திரை முதல் நாள் நடத்தப்படுகிறது. இந்த விழா ஒரு ஆண்டு அதிவீரன் (மன்டையன்) தெரு (சீனிவாசன் புதுத்தெரு) தலைமையிலும், மறு ஆண்டு செல்லம் வடக்குத் தெரு தலைமையிலும் பலநூறு ஆண்டுகளாக நடத்தப்பட்டு வருகிறது[22]

*என விழா குறித்து விளக்குகிறது.*

'108 திவ்ய தேச வரலாற்றுத்தொடர்' (தெலுங்கர் கீதம், பிப்-2008, ப.10) திருமாலின் திருத்தலங்களை அடிப்படையாகக் கொண்டு ஒவ்வொரு இதழிலும் ஒரு திருத்தலத்தின் சிறப்புகளைப் பக்திப்பரவசத்துடன் குறிப்பிடுகிறது. இந்து தர்ம சாஸ்திரம் கூறும் ஒன்பது பயனுள்ள அறிவுரைகள்' (ஒ.யா.மு., மே-2008, ப.11) எனும் தலைப்பில் பெற்ற தாய் சாபம், செய்நன்றி கொல்லுதல், பிறன்மனை கூடுதல் இவை மூன்றுமே பிராய்ச்சித்தமேயில்லாமல் அனுபவித்தே தீர வேண்டிய பாவங்களாகும் என்பது உள்ளிட்ட சில இந்துசமய நடைமுறைகளைக் குறிப்பிடுகிறது.

இன இதழ்களில் ஆன்மீகம் சில இதழ்களில் காட்டாக பூச்சரம், புதிய யாதவம், ஒலிக்கும் யாதவர்முரசு போன்றவைகளில் மிகுதியாக இடம் பெறுவதை அறிய முடிகிறது. யாதவ இன மக்களின் கடவுளான கோகுலக் கண்ணனை முன்னிறுத்தி கட்டுரை, கவிதைகள் இடம்பெறுகின்றன. இன ஆன்மீகத்தில் அதிக ஈடுபாடுள்ள நகரத்தார்கள் தாங்கள் நகர்ந்து செல்லும் இடங்களில் உற்ற துணையாக இறைவனைக் கருதுகின்றனர். எனவே பூச்சரம் இதழ் அதிக ஆன்மீகச் செய்திகளை உள்ளடக்கி அமைகிறது. மருதமலர், இந்திய நாடார் முரசு, செங்குந்தமித்திரன், அகச்சுடர், பண்டிதம், கடலார், அச்சமில்லை, விளக்கு, இருளர் செய்தி போன்ற இன இதழ்களில் ஆன்மீகம் குறித்த செய்திகள் அரிதாகவே இடம் பெறுகின்றன.

**இலக்கிய நிகழ்வுகள்**

ஒரு சமுதாயத்தின் புலப்பாடே இலக்கியம் என்பார் ரிபோனால்ட். சமுதாயத்தின் உறுப்பினராக வாழும் மனிதன் தன்னைச் சுற்றி நடைபெறும் சமூக நிகழ்ச்சிகளால் தாக்கப்படுகிறான். அவ்வாறு அவன் தாக்கப்படும் பொழுது அவன் உணரும் உணர்ச்சிகளை இலக்கியமாகப் படைத்துத் தருகிறான். 'சமுதாயத்தைச் சொல்லில் வடித்தளிப்பதே இலக்கியம்' என்று ரெனவெலக் ஆஸ்டின் வாரன்.

> எழுத்தாளர் வாழ்வதும், உணர்வதும், பார்ப்பதும் எல்லாம் சமுதாயத்திலிருந்து தோன்ற முடியும்[23]

என்பர். இலக்கியமும், சமூகமும் ஒன்றோடு ஒன்று தொடர்புடையவையாக விளங்குகின்றன. இலக்கியம் என்பது சமூக நிறுவனமாகக் கருதப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தில் சமூகம் எவ்வாறு இருந்தது என்பதை அறிவதற்குச் சிறந்த இலக்கியப் படைப்பாளர் படைத்த நூல்கள் பெரிதும் துணைபுரிகின்றன.

> இலக்கியம் என்பது சமுதாய உண்மைகளையும், கொஞ்சம் கற்பனைகளையும், கலந்து வெளிப்படுத்தும் கலையாகும். படைப்பாளனுடைய

> சமுதாயவுணர்வினையும், உலக கண்ணோட்டத்தினையும் பொறுத்தே அவனது இலக்கியமும் அமைகின்றது. அது தன்னிலைகளினாலும், புறவயதாக்கங்களினாலும், மாறுதலுக்கு உரியது. இம்மாற்றம் முன்னோக்கி அமைவது. நல்ல இலக்கியம் என்பது சமுதாய மாற்றத்தை உள் வாங்கியிருக்கும்[24]

*என்று தி.சு.நடராஜன் குறிப்பிடுகின்றார்.*

*இன இதழ்கள் இன உணர்வுகளை ஊட்டுகிற வகையில் அமைந்தாலும் இலக்கிய செய்திகளுக்கும் முக்கியத்துவம் அளிக்கின்றன. 'வள்ளுவரை அலைய வைத்தத் தமிழ் சங்கம்' (மருதமலர், மார்ச்-2008, ப.25) எனும் தலைப்பு திருவள்ளுவர் தான் இயற்றிய திருக்குறளை மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்ற விடாமல் செய்ததையும், பின் ஔவையார், இடைக்காடரிடம் ஓலை பெற்று அவையில் அரங்கேற்றம் செய்தார் என்பதையும் விளக்குகிறது. தேவேந்திரர் இலக்கிய மன்றம் சார்பாக நடைபெற்ற நிகழ்வுகள் பல இதழ்களில் காணப்படுகின்றன. 'கொங்கு குல மகளிர்-16' (கொங்கு, சன-2008, ப.9) எனும் தலைப்பில் கொங்கு மண்டலத்துக் காங்கேய நாட்டுக் காடையூரில் வெள்ளையம்மாள் வழிவந்த முழுக்காது பொருளந்தைக் குலத் தலைவனுக்கு மகள் ஒருத்தி இருந்தாள். ஏராளமான காடைக்குருவிகள் வளர்த்து வந்தாள். அப்போது கொங்கு நாடு பாண்டியனுக்குட்பட்டிருந்தது. காடையூர் அருகே கஜபதி என்னும் மன்னனுக்கும், பாண்டிய மன்னனுக்கும் போர் மூண்டது. கஜபதி யானைப்படையை வைத்துப் போர் செய்தான். அப்போது பாண்டியன் படைகள் பின் வாங்கிய நிலையில் திடீரென கோழிகள், காடைக் குருவிகள் உட்புகுந்து யானைகளைக் கொத்த ஆரம்பித்தன. இதனால் கஜபதி யானைப்படை பின் வாங்கி ஓடத்துவங்கியது. இறுதியில் பாண்டியன் வெற்றிபெற முழுக்காது பொருளந்தைக் குலத்தலைவனையும், மகளையும் பாராட்டிய செய்தி கொங்கு இனத்தவர்க்குப் பெருமை அளிப்பதாகக் குறிப்பிடுகிறது.*

*'வேளாளர் பெருமையும் அரிய உதவும் கருவூலமாகச் சென்னைப் பல்கலைக் கழகத்தமிழ் அகராதியும்!' (கொங்கு, சன-2008, ப.10) எனும் தலைப்பு கொங்கு வேளாளர் என்னும் சொல்லுக்குப் பொருள் விளக்கம் குறித்து ஆராய்கிறது. நோபல் பரிசு பெற்ற ஜெர்மன் எழுத்தாளர் குந்தர் கிராஸின் எழுத்தனுபவத்தை நேர்காணலாக வெளியிட்டுள்ளது. இதில்,*

> மூன்று நான்கு முறை திருத்தி எழுதாமல் எந்தப் புத்தகத்தையும் நிறைவு செய்வதில்லை[25]

*எனக் குறிப்பிடுகிறார். இவர் தீவிரமான நாஜி எதிர்ப்பாளராக அறியப்படுபவர் என கட்டுரையில் சுட்டப்படுகிறது. 'நமது படைப்பாளி விந்தனின் எழுத்தோவியம்' (அச்சமில்லை, நவ-2008, ப.13) எனும் தலைப்பில் 'பாலும் பாவையும்' நாவலில் இடம் பெற்ற "ஓடினாள் ஓடினாள் வாழ்க்கையின் ஓரத்திற்கே ஓடினாள்" என்ற வசனத்தை கலைஞர் தம்முடைய பராசக்தி படத்தில் பயன்படுத்திக் கொண்டதைப் பெருமை பேசுகிறது.*

*'மள்ளரிய இலக்கிய போக்குகள்' (தே.மலர், ஜூலை-2008, ப.7) மள்ளரிய இயக்கம் அறிமுகம், வளர்ச்சி நிலைகளை விவரித்து,*

> இந்த மள்ளர் இலக்கியங்களை ஒரு வகையில் அரசியல் என்று நாம் சொல்லி விட முடியும். காரணம் பெண்ணியம் ஒரு அரசியல், தலித்தியம் ஒரு அரசியல், காரணம் பெண்களையும், தலித்துகளையும் சமூக விடுதலைக்குத் தயார் செய்வது போல மள்ளரியமும் ஒரு சமூகத்தை சமூக விடுதலைக்கு தயார் செய்கிறது[26]

*என விளக்கமளிக்கிறார் தே.ஞானசேகரன். சவரக்கத்தி (பண்டிதம், ஆக-2008, ப.9) எனும் தலைப்பில் அமையும் சிறுகதை இனத்தின் கருவியைக் குறிப்பதோடு இனவிழிப்புணர்வுக் கருவியாகவும் செயல்படுகிறது. 'குறளும் குரலும்' (பூச்சரம், பிப்-2008, ப.12) எனும் தலைப்பில் குறளும் அதற்குரிய விளக்கமும், குறளுக்குத் தொடர்புடைய கதை, சமகால நடப்பு, கவிதை போன்றவைகளை உள்ளடக்கமாகக் கொண்டது.*

*இன இதழ்களில் இலக்கியச் சிந்தனைகள் என்பது இனப்படைப்பாளர்களை ஊக்குவிக்கும் பொருட்டும் இன வாசகப் பெருமக்களுக்குக் கட்டுரை, கவிதை, கதை வாயிலாக இன உணர்வூட்டவும் பயன்படுகின்றன. மருதமலர், கொங்கு போன்ற இன இதழ்களில் இலக்கியச் செய்திகள் அதிகமாகவும், அச்சமில்லை, தேவேந்திரர் மலர், பண்டிதம், கடலார், பூச்சரம், ஒலிக்கும் யாதவர் முரசு, வீரபாண்டிய கட்டபொம்மன், தெலுங்கர் கீதம், இ.நா.மு., செ.மி, அகச்சுவடர் முதலிய இன இதழ்கள் அவ்வப்போதும் வெளியிடுவதைக் காண முடிகிறது.*

**கல்விப் பணி நிகழ்வுகள்**

*இன முன்னேற்றத்திற்கு இன்றியமையாத ஒன்றாகக் கல்விப் பணியும் அமைகின்றது. கல்வி பற்றித் திருவள்ளுவர் குறிப்பிடுகையில்,*

கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை (குறள்.400)

*ஒருவனுக்கு அழிவில்லாத சிறந்த செல்வமாக அமைவது கல்வியே ஆகும் என்கிறார். இதைத்தவிர மற்றவை செல்வங்கள் ஆக மாட்டாது என்றும் குறிப்பிடுகிறார்.*

தேசத்தின் மக்கள் சமுதாயத்தினுடைய பாதுகாப்பும், கதியும் மக்களுக்கு அளிக்கும் நிறைவுள்ள கல்வியைப் பொறுத்தேயுள்ளன[27]

*என்பர் நாட்டு வளர்ச்சிக்கு அடிப்படைக் கல்வி வளர்ச்சி என்பது போலக் ஒவ்வொரு சமூகத்தின் வளர்ச்சிக்கும் கல்வி இன்றியமையாத ஆகும்.*

மனிதர்களுடைய வாழ்க்கையில் கல்வியின் பங்கு மிகப் பெரியதாகையால் மனிதர்களின் முன்னேற்றத்தில் அக்கறை கொண்டவர்கள் எல்லாம் கல்வியைப் பற்றி ஆழ்ந்தறிந்து கருத்துக்களை வெளியிட்டிருக்கின்றனர்[28]

*என்ற கருத்திற்கேற்ப இனங்கள் இதழ்களில் வேலை வாய்ப்புப் பற்றிய செய்திகளையும், மாணவ, மாணவிகளின் தேர்வுக் காலங்களில் சிறந்த ஆசிரிய, ஆசிரியைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்ட வினாவிடைகளையும் வெளியிடுகின்றன. இவை தவிர சங்கத்தின் சார்பாகக் கல்விப் பணிகள் நடைபெறுகின்றன. சங்கப் பணிகளில் பாராட்டிற்கும், போற்றுதலுக்கும் உரியதாய்த் திகழ்வது கல்விப் பணியாகும்.*

*'மாணவர் மன்ற விழா' (மருதமலர், ஜூன்-2008, ப.20) எனும் தலைப்பில் இராமநாதபுரம் மாவட்டம் கமுதிவட்டம் பேரையூர் கிராமம் பூவைசிய இந்திர குலமாணவர் மன்றம் சார்பில் 29வது ஆண்டு விழாவில் சாதனைப் படைத்த மாணவ மாணவியர்க்குப் பரிசு, விளையாட்டுப் போட்டியில் வெற்றி பெற்றோருக்குப் பரிசு என இன மாணவ மாணவியரை உற்சாக மூட்டுவதாக அமைந்தது எனக் குறிப்பிடுகிறது. 'பள்ளி மாணவ மாணவியர்க்கு நோட்டு, சீருடை வழங்கு விழா' (கொங்கு ஜூலை-2008, ப.16) கொங்கு வேளாளக் கவுண்டர் பேரவையின் கோவை மாவட்டம் S.S. குளம் ஒன்றியம், சிவானந்தபுரம் கிளையின் சார்பாக 15-06-08 அன்று அங்குள்ள பள்ள்யில் பயிலும் 150 மாணவ மாணவியர்க்கு நோட்டுகளும், சீருடைகளும் வழங்கப்பட்டன என வெளியிடுகிறது.*

*'நமது மாணவர்கள்' எனும் தலைப்பில் 10, +2 தேர்வில் வெற்றிபெற்ற மாணவர்களின் புகைப்படங்களை வெளியிட்டு,*

பொருள் கொண்டு, விற்று முதல் கண்டு கொண்டார்கள் என்ற காலம் மலையேற நமது முன்னோர்களின் காலம் போக, தற்பொழுது கல்வி கொண்டு வாழ்கிற

காலமாகி விட்டது. இன்றைய இளையவர்களின் எதிர்கால வாழ்க்கை கல்வியில் உள்ளது என்பதை நினைவில் கொள்ளுங்கள். கல்வித் தகுதி கொண்டே பணியமைகிறது என்பதை மறந்துவிடாதீர்கள் விழிப்போடு இருங்கள்[29]

*என்று ஆலோசனை பகிர்கிறது.*

*'மாணவ மாணவியர்க்குப் பரிசளிப்பு விழா' (அகச்சுடர், ஜீலை-2008, ப.4) சென்னை வியாசர் பாடி பக்தவத்சலம் நகரில் உள்ள மாமன்னர் மருதுபாண்டியர் பேரவை 10, 12 ஆம் வகுப்புப் பொதுத்தேர்வில் வெற்றிபெற்ற மாணவர்களுக்குப் பரிசுத் தொகை வழங்கப்பட்ட செய்தியை வெளிப்படுத்துகிறது. கல்வி நிறுவனங்களில் பள்ளு நூலைத் தடை செய்வது சரியா?,*

கல்வி நிறுவனங்கள் பள்ளுவை ஏசல் முறையில் நடத்தாமல் அதை ஓர் இசை நூலாகக் கருத்திற் கொண்டு 2000 ஆண்டுகட்கு முன்பு வள்ளுவர் வகுத்த 'உழவு' அதிகாரத்தில் வகுக்கப்பட்டுள்ள இலக்கணப்படி வேளாண்குடி உயர்ந்த குடி, உழைத்த - உழைக்கும் குடி, பல குடை நிழலும் தம் குண்ட கீழ்க்காணும் குடி, ஈரம் மிக்ககுடி, நெல்லின் மக்கள் குடி, வேந்தன் குடி, தமிழ் நாகரீகத்தின் தொப்புள் கொடி இந்த மள்ளர் குடி என்று பொருள் கொண்டு நடத்த வேண்டும்[30]

*என கட்டுரையாசிரியர் குறிப்பிடுகிறார். 'பொறியியல் கல்லூரி தொடங்க மதுரை யாதவர்கள் முடிவு' தலைப்பில் மதுரை யாதவர் கல்வி நிதியின் கூட்டத்தில்,*

நமது யாதவர் கல்லூரியுடன் இணைந்து பி.எட் கல்லூரி பொறியியல் கல்லூரி தொடங்க பூர்வாங்க வேலைகள் நடந்து வருகிறது. இதற்கு அனைத்து யாதவர்களும் முழு ஒத்துழைப்பு நல்க வேண்டும்[31]

*என முடிவு செய்யப்பட்டது என விளக்குகிறது.*

*'10, +2 மாணவ மாணவிகளுக்குக் கல்வியும் வேலைவாய்ப்பும்' (தெலுங்கர் கீதம், மே-2008, ப.12) எனும் தலைப்பில் ரூ.10,000 கல்வி உதவித்தொகை தெலுங்கர் இன மாணவர்களுக்கு உடனடி வேலை தரும் கேட்டரிங் படிக்க அளிக்கிறோம் என அறிவிக்கிறது. 'யாதவர் கல்வி உதவி நிதி உங்கள் கவனத்திற்கு' (ஒலிக்கும் யாதவர் முரசு, ஏப்-2008, ப.8) நலிந்த நிலையில் உள்ள யாதவ மாணவ, மாணவிகளுக்குக் கல்வி உதவித்தொகை வழங்கி வருகிறோம். கடந்த ஆண்டில் மட்டும் 20க்கும் மேற்பட்ட மாணவ, மாணவிகள் எனவும், உதவித்தொகை வேண்டுவோர் யாதவர் பேரவை தொடர்பு கொள்ளவும் எனக் கீழே அலுவலக முகவரியைப் பிரசுரித்துள்ளது. 'இருளர்கள் மத்தியில் கல்விப் பணி...' (இருளர் செய்தி, அக்-2008, ப.12) 2001 மக்கள்*

தொகை கணக்கெடுப்பின்படி தமிழகத்தில் எழுத்தறிவு 73.4 சதவீதம் என்றும், இருளர்கள் மத்தியில் எழுத்தறிவு 12 சதவீதம் மட்டுமே என்றும் குறிப்பிட்டு இருளர் மாணவர்களின் கல்வி முன்னேற்றத்தில் மேலும் கவனம் செலுத்த வேண்டும் என அறிவுறுத்துகிறது. 'விண்ணப்பித்து 7 ஆண்டுகள் கழித்து இனச்சான்று பெற்ற இருளர் மாணவி' (இருளர் செய்தி, அக்-2008, ப.4) எனும் தலைப்பில் இன மாணவ, மாணவியர்கள் கல்விக்காகப் படும் இன்னல்களை எடுத்துரைக்கிறது.

உள்நாட்டு வேலைவாய்ப்புத் தகவல்கள், வெளிநாட்டு வேலை வாய்ப்புத் தகவல்கள், மாணவ, மாணவியர்க்கான பயிற்சி முகாம், உதவித்தொகை, பரிசு வழங்கி ஊக்குவித்தல், இதழில் புகைப்படத்துடன் பிரசுரித்தல், தேர்வுகால ஆலோசனை, என பன்முக நோக்கோடு கல்விப் பணி தொடர்பான செய்திகளை வெளியிடுகின்றன. ஆய்வுக்குட்பட்ட எல்லா இன இதழ்களும் கல்வி தொடர்பான செய்திகளுக்கு முக்கியத்துவம் அளிப்பதைக் காண முடிகிறது.

**வரலாற்று நிகழ்வுகள்**

> வரலாறு என்பது முழுமையாக்கிக் கூறப்பட்ட ஏதேனும் ஒரு நிகழ்ச்சி அல்லது கடந்த கால நிகழ்ச்சிகளின் விளக்கமாகும். கடந்த காலத்தைப் பற்றிய எந்தச் செய்தியும் பின்னர் வரலாறாகப் பரிணமிக்கிறது. இதனையே இன்றைய செய்தி, நாளைய வரலாறு என்பர். இந்தியச் சூழலில் ஒவ்வொரு இனத்திற்கும் ஒரு வரலாறு இருக்கிறது. சொந் வரலாறு தெரியாத மக்களால் தலை நிமிர்ந்து, தளையறுத்துத் தன்னுரிமையுடன் வாழ முடியாது. சொந்த வரலாறு தெரியாத தேசிய இனத்திற்கு விடுதலை இல்லை[32]

என்னும் குணாவின் கருத்திற்கேற்பத் தம் மக்களுக்கு இன வரலாறு தெரிய இன இதழ்கள் உதவுகின்றன.

இன இதழ்களில் வரலாற்று நிகழ்வுகள் அதிகளவு இடம் பெறுகின்றன. தம் இனத்திற்குப் பெருமை சேர்த்த முன்னோடிகளை அடிப்படையாகக் கொண்டு, தம்முடைய இனம் முன்பிருந்த நிலையையும், இன்றைய நிலையையும் குறிப்பிட்டு அமைவதாக வரலாற்று நிகழ்வுகள் அமைகின்றன. இந்நிகழ்வுகள் மூலமாகத் தம் இன மக்கள் இன வரலாற்றைத் தெரிந்து கொள்ளவும், அவர்களிடத்தில் விழிப்புணர்வை ஏற்படுத்தவும் இம்மாதிரியான நிகழ்வுகளை வெளியிடுகின்றன.

'இந்திர மள்ளர்' (மருதமலர், ஏப்-2008, ப.18) எனும் தலைப்பில் இடம் பெறும் வரலாற்றுத் தொடர் இந்திரனைத் தலைவனாகக் கொண்ட வரலாற்றுப் புதினமாக அமைகிறது 'புரட்சி வீராங்கனை பூலான்தேவி' (ஏப்-2008, ப.4) எனும் உத்திரபிரதேசத்தில் ஒடுக்கப்பட்ட இனத்தில் தோன்றி வாழ்வில் பல இன்னல்களைக் கடந்து பொது வாழ்வில் வெற்றி பெற்றவர். பூலான் தேவியின் வாழ்க்கையை வரலாற்றுத் தொடராக அமைக்கிறது. 'மருதத்தில் பூத்த குறிஞ்சி'யாக (ம.மலர், ஏப்-2008, ப.34) இதழாசிரியரின் இன விடுதலை அனுபவப் பயணத்தொடர் வாழ்க்கை வரலாறாக விரிகிறது. '15 ஆம் நூற்றாண்டில் நாடார் வரலாறு' (இ.நா.மு., டிச.2008, ப.28) எனும் தலைப்பில் தொடராக அமையும் இக்கட்டுரையில் தொடக்க கால நிலையில் தமிழ் இனங்கள், மக்கள் தோற்றம் குறித்து விளக்குகிறது. மேலும் நாடார் இனங்கள் குறித்தும் விவரிக்கிறது. ஆதித்தனார் குறித்து 'ஆதித்தனார் ஓர் ஆலமரம்' எனும் தலைப்பில்,

> ஆதித்தனாரின் சிறை வாழ்க்கையினால் அவரது உடல்நிலை கெட்டதே தவிர, அவரது உள்ளத்தின் உறுதி கிஞ்சிற்றும் அசையவில்லை. காங்கிரஸ் அரசாங்கம் எதிர்பார்த்தபடி, அவர் சிறைவாசத்துக்கு அஞ்சவும் இல்லை. அவர்களுக்கு அடிபணியவும் இல்லை[34]

என்கிறார் கட்டுரையாசிரியர்.

'கொங்கு வேளாளக் கவுண்டர்களின் குலங்கள்' (கொங்கு, அக்-2008, ப.22) எனும் தலைப்பில் ஒவ்வொரு குலத்திற்கும் ஒவ்வொரு காணிக் கோயில்களும், காவல் தெய்வங்களும் உண்டு. கொங்கின இளைஞர்களும், இளைஞிகளும் இவற்றைக் கண்டிப்பாகத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற அறிவிப்போடு வரலாற்றுத்தொடர் இடம் பெறுகிறது. மேலும் ' கொங்கு நாடு காலிங்கராயன் வரலாறு', 'தம்பிக்கலை ஐயன் கோவில் தலவரலாறு' எனும் தலைப்புகளில் இன, ஆன்மீக வரலாற்று நிகழ்வுகளுடன் அமைகிறது. இந்திய விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்ட உயர்சாதித் தலைவர்களின் தியாகங்கள் போற்றப்பட்டது போல விளிம்பு நிலைத் தலைவர்களின் தியாகங்கள் போற்றப்படவில்லை அந்த வகையில் 'சுதந்திரப் போராளி கடலூர் அஞ்சலையம்மாளின் தியாகங்கள்' (அச்சமில்லை, சன-2008, ப.26) எனும் தலைப்பில் அஞ்சலையம்மாளின் வாழ்க்கைக்குறிப்பு, போராட்டக் குணம், ஆகியனவற்றை எடுத்துரைப்பதோடு தென்னாட்டின் ஜான்சிராணியென காந்தியடிகளால் பாராட்டப்பட்ட அஞ்சலையம்மாளுக்குத் தமிழக அரசு நினைவுச் சின்னம் அமைக்க வேண்டும் என கோரிக்கை விடுக்கிறது.

'அகமுடையார் வரலாறு' (அகச்சுடர், சன-08, ப.4) எனும் தலைப்பில் மாமன்னர் மருது பாண்டியர்களின் கோட்டைகள், குளங்கள் போர்த் தந்திரங்கள் முதலியன குறித்து மருதுபாண்டியர்கள் நமது சீமை மீட்பின் போது தீமை எதிர்த்து ஆற்காட்டு நவாப்பின் காரியதரிசி மல்லாரிராவின் தலையை மரிக்கொழுந்தாய் கிள்ளி எறிந்தார்கள். சின்ன மருது சீமை மீட்பின்போது தம்மை எதிர்த்த சின்னராயன், ரெங்கராயன் என்பவர்களை, வளரி கொண்டு தலை அறுத்தார் எனப் பெருமை பேசுகிறது. 'போற்றிப் பாடடி பெண்ணே! தேவேந்திரர் காலடி மண்ணே! போர்ப்படை தளபதி மாவீரன் சுந்தரலிங்கம்' (தே.மலர், மே-2008, ப.11) எனும் தலைப்பு சுதந்திரப் போராட்டத்தில் வீரபாண்டிய கட்டபொம்மனின் ஒற்றர்படைத் தளபதியாக இருந்து மதி நுட்பமாகச் செயல்பட்டதையும், வீரத்திற்குச் சான்றாக,

> யாருமே அடக்க அஞ்சிய எட்டப்பனின் "பேய்க்குதிரையை" (அரபுக் குதிரை) மாவீரன் சுந்தரலிங்கம் துணிந்து சென்று அடக்கியதோடு மட்டுமல்லாமல் அழகாக அமர்ந்து சவாரி செய்தார்[34]

என விளம்புகிறது. இந்திய சுதந்திரப் போராட்டத்தில் சர்வோதையத் தலைவராக விளங்கிய அ.அவையன் தேவேந்திரர் பற்றி குறிப்பிடுகையில்,

> அகில இந்திய அரிசன சேவர சங்கத்தின் தலைவி நிர்மலா தேஷ்பாண்டே என்பவரின் உதவியாளராகவும், துணைத் தலைவராகவும் இருந்தார்[35]

எனக் குறிப்பிடுகிறது. 'தொண்டி கல்வெட்டு கூறும் தேவேந்திரர் தொன்மை' எனும் தலைப்பு இராமநாதபுரம் மாவட்டம் தொண்டி என்றும் ஊரிலுள்ள காளி கோவிலுக்குப் பாண்டிய வம்ச சடையவர்மன் வீரபாண்டியன் காலத்தில் கி.பி.1192இல் உய்ய வந்தான் சுந்தரரான தேவேந்திர வல்லப சமஞ்சிதனான பிற சமய கோளரி என்பவரிடம் நிலக்கொடை பெற்று ஊருக்குப் பொதுவாகக் குளம் ஒன்றை வெட்டினர் என்றும், அதற்கு 'காளி கணத்தார் குளம்' என்று பெயர் சூட்டியதாகவும் கல்வெட்டுக் குறிப்பிடுவதாகக் கட்டுரையாசிரியர் பத்ரகாளி குடும்பனார் தெரிவிக்கிறார்.

'சுதந்திர வீரன் அழகு முத்து யாதவ்' (ஒ.யா.மு., அக்-08, ப.16) கட்டபொம்மனுக்கு முன்னால் அந்நியனை எதிர்த்து முதல் முழக்கமிட்ட சுதந்திர வீரன் எனப் பறைசாட்டுகிறது. மேலும் 'தேசத்துக்கு உழைத்த தியாகச் செம்மல் எஸ்.கோபாலகிருஷ்ண யாதவ் அவர்களின் வரலாற்றுத் தொடர்' இவ்விதழில் இடம் பெறுகின்றது.

'ஆதி மருத்துவர் சவரத் தொழிலாளர்களான வரலாறு' (பண்டிதம், டிச-2008, ப.7) எனும் தலைப்பு இழிவுகளுக்கெதிரான மருத்துவரின் முதல் போராட்டமாக திருநெல்வேலி மருத்துவர் இன மக்கள் சமூக இழிவுகளுக்கு எதிரான நடைபெற்ற சுயமரியாதைப் போராட்டக் களம் குறித்து விவரிக்கிறது. தங்கள் குல தெய்வமாகப் போற்றப்படும் ஜக்கம்மாளை இன மக்களுக்கு அறிமுகப்படுத்தும் விதமாக (வீ.பா.க., ஜுன்-2008, ப.9) அருள்மிகு ஜக்கம்மாள் சரித்திரம் எனும் தலைப்பில் ஜக்கம்மாளின் தோற்றம், சிறப்புகள் பற்றி புராணத்தன்மையுடன் விளக்குகிறது. 'பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம்' (வீ.பா.க., ஜீன்-08, ப.18) கட்டபொம்மன், அவனுடைய தளபதி தானாபதியின் சிறப்புப் பற்றி குறிப்பிடுகிறது. 'மதுரை நாயக்க மன்னர்கள் வரலாற்றுத் தொடர்' (தெ.கீ., டிச-08, ப.13) எனும் தலைப்பில் மதுரையை ஆண்ட நாயக்க வம்ச மன்னர்களின் ஆட்சித்திறம், கொடைத்தன்மை, படைத்தன்மை போன்றவற்றை இனமக்களுக்கு வரலாறாகப் படைக்கிறது.

தம் இனமக்களிடம் இன மேன்மைக்குப் பாடுபட்ட மறைந்த இனப்போராளிகள், நடப்புக் காலச் செயல் தலைவர்கள், குழுப் போராட்ட வரலாறு முதலியவற்றை மருதமலர், கொங்கு, அச்சமில்லை. அகச்சுடர், தேவேந்திரர் மலர், இந்திய நாடார் முரசு, பூச்சரம், பண்டிதம், புதிய யாதவம், வீரபாண்டிய கட்டபொம்மன், தெலுங்கர் கீதம், ஒலிக்கும் யாதவர் முரசு என ஆய்வுக்குட்பட்ட இன இதழ்களில் பெரும்பாலானவை வெளியிட்டு வரலாற்று விழிப்புணர்வு கொள்ளச் செய்கின்றன.

### வேளாண்மை நிகழ்வுகள்

உலகம் இயங்குவதற்கு உழவன் இன்றியமையாதவனாகிறான். உழவின் அவசியத்தைத் திருவள்ளுவர்,

சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்
உழுந்தும் உழவே தலை (குறள்.1031)

என்பதற்கேற்ப உழவுத்தொழில் உலகின் முக்கியத்துறைகளுள் முதன்மையானதாக அமைகிறது. இவ்வுழவின் தன்மையை இயற்கை விஞ்ஞானிகள் வேளாண்மை என பெயரிட்டு அழைத்தனர். உலகத்தின் தேவைகள் பல இருந்தாலும் மனிதன் உயிர் வாழ உழவாகிய வேளாண்மை மிக மிக அவசியமாகிறது. நாகரிகம் பல இடங்களில் தோன்றினாலும் மருதநில நாகரிகமே மனித வாழ்வுக்குச் சிறப்புச் சேர்த்தது எனலாம். ஏனெனில் வறுமையை விலக்கி வளமையைத் தந்ததாகும். மண்ணின் மகத்துவத்தைச்

*சில இனங்களே அறிந்திருந்தன. எந்த மண்ணில், எந்த காலத்தில் எதை விதைத்தால் அறுவடை செய்ய முடியும் என்கிற உத்தியைச் சிலரே பெற்றிருந்தனர்.*

*இன இதழ்கள் பல நவீன வேளாண்மை செய்திகளை வெளியிட்டு உதவுகின்றன. இதன் காரணமாக அவர்களின் பொருளாதார வாழ்வுக்கு உரம் சேர்க்கின்றன. உழவனை உற்சாகப்படுத்தும் விதமாக 'உழவனின்றி உலகில்லை' எனும் தலைப்பில் உழவுத் தொழிலின் பெருமையைக் குறிப்பிடுகையில்,*

> உனது வயல் வெளிப்பயணம் நின்றிருந்தால் இந்தியனின் அயல்வெளிப் பயணம் ஏதடா! நான் ஏன் கோவணம் கட்ட வேண்டும் என்று நீ நினைத்தால் உலகமே அம்மணம் ஆகிவிடுமடா! விஞ்ஞானத்தை விட விவசாயம்தான் நாட்டிற்கு முதல் தேவையடா![36]

*என குறிப்பிடுவதோடு 'கசக்கும் கரும்பு விவசாயம்' (கொங்கு, நவ-2008, ப.19), 'விதை உற்பத்திக்கு அரசு வழங்கும் மானியங்கள்' (அக்-2008, ப.19), 'மூலிகைத் தாவரங்களைப் பயிரிடுவதற்கான மானியங்கள்' (ஆகஸ்ட்-2008, ப.12) எனும் தலைப்புகளில் வேளாண்மை சார்ந்த அரசு, அரசு சாராத அமைப்புகளின் திட்டங்களை இன விவசாயிகளுக்கு இதழ்களில் வெளியிட்டு உழவுத் தொழில் மேன்மையுற பாடுபடுகிறது.*

*'விவசாயி வெற்றி கொண்டார்' (வீ.பா.க., ஏப்-2008, ப.15) எனும் தலைப்பில் நெல்லை மாவட்டம் புளியங்குடியைச் சேர்ந்த விவசாயி அந்தோணிசாமி இயற்கை உரங்களைப் பயன்படுத்தி நவீன விவசாயப் புரட்சி செய்ததை வெளியிட்டுள்ளது. 'அதிசய மூங்கில் சாகுபடி' (வீ.பா.க., அக்-2008, ப.16) எனும் தலைப்பு மூங்கில் வளர்ப்பு, லாபம், குறித்து இன விவசாயி சதாசிவம் எடுத்துரைப்பதை விளக்குகிறது.*

*தேவேந்திரர் மலர், கொங்கு, மற்றும் வீரபாண்டிய கட்டபொம்மன் என மூன்று இதழ்களில் மட்டுமே மிகுதியாக வேளாண்மை குறித்த செய்திகள் இடம் பெறுவதை அறிய முடிகிறது. தேவேந்திரர், கொங்கு வேளாளர், கம்பளத்தார் இன மக்கள் தொன்று தொட்டு செய்து வரும் வேளாண்மை அவ்வினத்திற்குரிய தொழிலை வெளிப்படுத்துவதாகவே அமைகிறது.*

**மருத்துவ நிகழ்வுகள்**

*ஆரோக்கியம் தான் அனைத்திலும் சிறந்தது என்பார்கள். 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்பதற்கிணங்க இச்செல்வத்தைப் பெற இன மக்களுக்கு இதழ்கள் உதவுகின்றன. பலவற்றை முன்னிறுத்தினாலும் மருத்துவச் செய்திகளுக்கும் முன்னுரிமை அளிக்கின்றன. இன மருத்துவர் அறிமுகம், மருத்துவ ஆலோசனைகள், குறிப்புகள், நவீன மருத்துவமுறை பற்றிய கட்டுரை போன்றவைகளை வெளியிட்டு மருத்துவம் செய்கின்றன.*

*ஒவ்வொரு மாத இதழிலும் சித்த மருத்துவர் K.P.பால்ராஜ் 'செலவில்லா சித்த மருத்துவம்' (மருதமலர், ஆக்-2008, ப.31) எனும் தலைப்பில் சித்த மருத்துவ மூலிகைகள் பற்றிய விளக்கமும், அதன் மூலம் தீரும் நோய்கள் குறித்தும் விவரிப்பதையும் அறிய முடிகிறது. 'மருத்துவ உலகின் மாமேதை' எனும் தலைப்பு இன மருத்துவர் டாக்டர் அன்பழகன் அவர்களை அறிமுகப்படுத்தும் நோக்கத்தை,*

> டாக்டராக உயர்ந்தாலும் இந்தச் சமூகம் இன்னும் உயர வேண்டும் என்ற சிந்தனையிலும் அதற்குத் தான் இந்த சமூகத்திற்கு என்ன செய்ய வேண்டும் என்ற உந்துதலிலும் உள்ள டாக்டர் அன்பழகனை இந்த மலரில் அறிமுகம் செய்ததில் ஆனந்தம் அடைகிறோம்[37]

*எனக் குறிப்பிடுகிறது. அன்னையர்க்கு முக்கிய ஆலோசனைகள் என (இ.நா.மு., டிச-08, ப.27) 'மருத்துவ ஆலோசனைகள்' எனும் தலைப்பில் தாய்மார்களுக்குத் தாய்ப்பாலின் மகத்துவத்தை எடுத்துரைக்கிறது. 'சர்க்கரை நோய் சில அடிப்படைகள்' (கொங்கு, மே-08, ப.27), 'வாயுத்தொல்லை மற்றும் மலச்சிக்கல் ஏன் ஏற்படுகிறது? மருத்துவம் என்ன?' (கொங்கு, அக்-08, ப.26) எனும் தலைப்புகளில் நோய்களின் தன்மை, அதற்கான காரணம், தடுப்பு முறைகள், நோயைத் தீர்க்கும் ஆங்கில, சித்த, ஆயுர்வேதச் சிகிச்சை முறைகள் குறித்தும் விளக்குகிறது.*

*'மருந்தில்லா மருத்துவம்' (செ.மி., பிப்.08, ப.39) எனும் தலைப்பில் மிளகின் மகத்துவத்தைக் காய்ச்சல் வந்தா மிளகாலே ஏதாவது பரிகாரம் கிடைக்குமா பாட்டி? ஏன் கிடைக்காது? சுக்கு, மிளகு வகைக்கு 10-15 கிராம் வீதம் எடுத்துக் கொண்டு, நல்லா அரைச்சி 800 மில்லி தண்ணீரில் இட்டு, அது 100 மில்லியா சுண்டக்காய்ச்சி வடிகட்டி, தினம் ரெண்டு வேளை கொஞ்சம் தேனோ சர்க்கரையோ சேர்த்துச் சாப்பிட்டு வந்தா சர்வ காய்ச்சலும் குணமாகும்" என பாட்டி, பேத்தியிடம் கூறுவது போல் கதை*

வடிவத்தில் அமைந்துள்ளது. விபத்து பற்களிலும் ஏற்படுமா? (பூச்சரம், பிப்-08, ப.29) எனும் தலைப்பில் பல் மருத்துவர் மணிகண்டன் குறிப்பிடும் பற்களின் பாதுகாப்புமுறைகள் குறித்தும், 'டிஸ்லெக்ஸியா ஜாக்கிரதை' (பூச்சரம், நவ-08, ப.71) எனும் தலைப்பு குழந்தைகளுக்கு ஏற்படும் டிஸ்லெக்ஸியா பாதிப்பால் ஏற்படும் விளைவுகளை விளக்குகிறது.

'இலவச முகாம்' எனும் தலைப்பு (ஓ.யா.மு., பிப்-08, ப.21) பல் மற்றும் மகளிர் - மகப்போறு பரிசோதனை இலவசமாகச் சிகிச்சை அளிக்கப்படும் என இன மக்களுக்கு அறிவுறுத்தும் விளம்பரம் அமைந்துள்ளது என்ன சாப்பிடுவது? எப்படிச் சாப்பிடுவது? (பு.யா., டிச-08, ப.78) எனும் தலைப்பு உடல் நலத்துக்கு உகந்த உணவு முறைகளையே சாப்பிட வேண்டும் என்பதையும், எந்த உணவோடு எதைச் சேர்த்துச் சாப்பிடக்கூடாது என்கிறது. உதாரணமாக சாம்பார் சாதம் சாப்பிட்டு பேரீச்சம்பழம் சாப்பிடக் கூடாது. ஏன்னா இரும்புச் சத்தைக் கிரகிக்கிற தன்மை இல்லாமல் போய் விடும் என்பது போன்ற தகவல்களைத் திரட்டித் தருகிறது. 'நோய் தீர்க்கும் மூலிகைச் சூப்புகள்' (வீ.பா.க., ஜூலை-08, ப.14) எனும் தலைப்பில் தூதுவளைச் சூப்பு செய்யும் முறை செயல் விளக்கமும் இதைக் குடிப்பதால் நாள்பட்ட இருமல், மாந்தம் நீங்கும், ஆண்மை பெருகும், தொண்டை கம்மல், சளி நீங்கும், உடல் வலிமை பெறும் என விளக்கமளிக்கிறது. 'உடல் நலம் தரும் ஊட்டச்சத்து' (தெ.கீ, நவ-08, ப.28) உடலுக்குத் தேவையான ஊட்டச் சத்துக்கள் எவை? புரதம், கார்போஹைட்ரேட், தாதுச்சத்து, கொழுப்புச் சத்து போன்றவை என்னென்ன உணவு வகைகளை உட்கொள்ள வேண்டும் என்பதை வலியுறுத்துகிறது.

சித்த மருத்துவக் குறிப்பு, அலோபதி மருத்துவ ஆலோசனை, ஆயுர்வேத சிகிச்சை முறைகள் போன்றவற்றை வெளியிட்டு இன ஆரோக்கியத்துக்கு வழிவகை செய்கிறது. மருத்துவச் செய்திகள், கட்டுரைச் செய்தி, கதை, உரையாடல், விளம்பரம் போன்ற வடிவங்கள் வாயிலாகப் பதிவு செய்யப்படுகின்றன. பெரும்பாலும் சித்த மருத்துவம் குறித்த தகவல்கள் அதிகளவில் இடம்பெறுவதை அறிய முடிகிறது ஆய்வுக்குட்பட்ட பெரும்பாலான இன இதழ்கள் கடலார், அச்சமில்லை, பண்டிதம் தவிர மருத்துவச் செய்திகள் அடங்கிய தகவல்களை வெளியிடுவதைக் கடமையாகக் கொண்டுள்ளன.

**ஆளுமை - தன்னம்பிக்கை**

*அன்றாட வாழ்க்கையின் தேவைகளையும், சவால்களையும், சமாளிக்க உதவும் ஆக்கப் பூர்வமான நடவடிக்கைகளை வாழ்க்கைத் திறமைகள் என்று கொள்ளலாம். வாழ்க்கையில் வெற்றி அடைய படிப்பு சம்பந்தமான தகுதிகள் மட்டும் போதாது. சமுதாய நோக்கிலான நல்ல மனத்தகுதியும் தேவைப்படுகிறது. இதனை நோக்கமாகக் கொண்டு இன இதழ்கள் தங்கள் இனத்தவர்களை மன ரீதியாகவும், அதன் வழி ஆளுமைத் திறனையும் செழுமைப்படுத்த விளைகின்றன.*

*'தூக்கி எறியுங்கள் தாழ்வு மனப்பான்மையை' (ம.மலர், பிப்-2008, ப.23) எனும் தலைப்பில் இன மக்களுக்கு,*

> இன்று உடல் பலத்தை விட மூளை பலம் உடையவனே வெற்றி பெற்று உயர்ந்து கொண்டே செல்கிறான். மனோதத்துவப்படி கத்தியின்றி இரத்தமின்றி எதிரியை முறியடிக்க நம்மை நாமே பல்லன் என்று விளம்பரப்படுத்த வேண்டும்[38]

*என அறிவுறுத்துகிறது. 'மௌனப்புரட்சிக்குத் தயாராவோம்' எனும் தலைப்பில் ஒவ்வொரு மாத பிரதியிலும் இனத்தின் பெருமை, அடையாளம் விழிப்புணர்வு அடிப்படையில் தன்னம்பிக்கையை விதைக்கிறது. மனித ஆற்றலை மாற்றி அமைக்க முடியுமா? (கொங்கு, மே-08, ப.28) எனும் தலைப்பில் உலகப்பொது மறையான திருக்குறளில் இடம் பெறும் ஆளுமை சார்ந்த கருத்துக்களை முன் வைத்தும், அறிவாற்றலை மேம்படுத்த ஐந்து வகையான ஆளுமைத்திறனை வளர்க்க வேண்டும். 1. தனது ஆளுமை வளர்க்க 2. தன்னைச் சார்ந்தவர் ஆளுமை வளர்க்க 3. தனது இன ஆளுமை வளர்க்க 4. தனது நாட்டு மக்கள் ஆளுமை வளர்க்க 5. உலகளாவிய ஆளுமை வளர்க்க எனவும் வலியுறுத்துகிறது.*

*'முடிவெடு... மடியும் முன்னே!' எனும் தலைப்பில்,*

> முடிவெடு நண்பா இதற்கொரு முடிவெடு...கலாம் சொன்னது போல் கலத்தில் நீ ஏற வேண்டும். அதுவும் நமது சொந்தக் கப்பலில் நீ ஏற வேண்டும். கப்பல் இலக்கை போய் அடையுமா என்ற ஐயம் உனக்குள் வேண்டாம். கப்பலில் மாலுமி சிறந்தவரா, வல்லவரா, சிப்பந்தி நல்லவரா, கெட்டவரா என்கிற ஐயம் உனக்குள் வரவேண்டாம் சமுதாயம் காக்க தனித்துவம் காக்க நீ நமது சகோதரன் ஆர்.சரத்குமார் மாலுமியாய் உள்ள அகில இந்திய சமத்துவ மக்கள் கட்சி என்கிற கப்பலில் நீ எறித்தான் ஆக வேண்டும்[39]

*என விளக்கமளிக்கிறது. 'வெற்றி எளிதல்ல!' இன தொழிலதிபர் திரு எஸ்.சி.பாண்டியன் அவர்களிடைய வாழ்க்கை வரலாற்றுத் தொடரில் அவர் குறிப்பிடுகையில்,*

உங்கள் வெற்றி உங்கள் கைகளில் தான் இருக்கிறது. எந்தவொரு தொழிலிலும் வெற்றி பெற வேண்டும் என்றால் உழைப்பு, தன்னம்பிக்கை, நேர்மை, சிக்கனம், விடாமுயற்சி, முழுமையான ஈடுபாடு, அவசியம் மேலும் ஆடம்பரத்தையும், வீண் செலவையும் தவிர்த்தால் வெற்றி உறுதியாகி விடும். வெற்றியில் மிகுந்த மகிழ்ச்சியை வெளிக் காட்டிக் கொள்வதும், தோல்வியில் துவண்டு போய் நிற்பதும் நிச்சயம் தவிர்க்கப்பட வேண்டும்[40]

*என இன மக்களுக்கு வெற்றிக்கனி பறிக்க வித்திடுகிறார்.*

*'மறைந்திருக்கும் உண்மைகள்' எனும் தலைப்பில் ஓஷோவின் போதனைகளாக,*
மூன்றாவது விழியின் இரகசிய விஞ்ஞானம் பற்றி குறிப்பிடுகையில், மூன்றாம் விழி திறப்பதற்காக நீங்கள் மகிழ்ச்சியைப் பயன்படுத்தியதை உணரவேண்டும். இந்த மகிழ்ச்சி நீரோட்டத்தை, மூன்றாம் விழிச் சக்கரத்தைத் தூண்டுவதற்காக நாம் பயன்படுத்தலாம். பல திசைகளிலும் நாம் பயன்படுத்தினால் பயனும் பலவாக இருக்கும்[41]

*எனக் குறிப்பிடுகிறது.*

*'வெற்றியின் இரகசியம்' (புதிய யாதவம் டிச-08, ப.81) எனும் தலைப்பு தன்னம்பிக்கை தான் நமது வாழ்க்கையின் ஆணி வேர். ஒரு மரம் தன்னுடைய இலைகளை இழக்கலாம். கிளைகளை இழக்கலாம். ஆனால் தனது வேர்களை மட்டும் இழக்கக் கூடாது. 'அந்த வேர்தான் தன்னம்பிக்கை' என இனத்தை இங்கு தன்னம்பிக்கையாக பதிவு செய்கிறது. ஆளுமைத் திறத்தைப் பற்றி 'சான்றோர் இயல்பு' எனும் தலைப்பு,*

நம் நெஞ்சத்தை எளிமை, பொதுமை, தூய்மை எனும் நற்குணங்களால் பண்படுத்திக் கொள்ளுதல் வேண்டும். மனமும், செயலும், சொல்லும், தூய்மையும் உடையவராகக் காத்துக் கொள்ள வேண்டும். இத்தகைய பண்பில் ஒரு சிறிதும் மாறாமல் நடப்பவரே பண்புடையவராவார்[42]

*என வலியுறுத்துகிறது.*

*இன மக்களை மன ரீதியாகப் பண்படுத்தி அவர்களிடம் விழிப்புணர்வை ஏற்படுத்துவதற்காக ஆளுமைத் திறம், தன்னம்பிக்கை பற்றிய செய்திக்கட்டுரைகளை*

இன இதழ்கள் முன்னோடியாக பயன்படுத்துகின்றன. தாழ்வு மனப்பான்மையை போக்குவதற்கும், எழுச்சிக் கொள்ள செய்வதற்கும் பிரபல உளவியல் அறிஞர், பேராசிரியர் கருத்துக்களைத் தாங்கி வெளி வருகிறது. மருதமலர், தேவேந்திரர் மலர், இந்திய நாடார் முரசு, கொங்கு போன்ற இன இதழ்களில் மிகுதியாகவும், மற்ற இதழ்களில் குறைவாகவும் காணப்படுகிறது.

**தேர்தல்**

வெள்ளையர்கள் ஆட்சி அகற்றப்பட்டபின் நம் இந்தியத் திருநாட்டில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களின் பிரதிநிதிகளால் நாட்டில் மக்களாட்சி நடந்து கொண்டிருக்கிறது. நம் இந்திய நாடு சுதந்திரம் அடைந்த போது சுதந்திர நாட்டின் இந்திய அரசியல் சட்டத்தை எழுதியவர்கள் நாட்டு மக்களை முற்படுத்தப்பட்டோர், பிற்படுத்தப்பட்டோர், ஒடுக்கப்பட்டோர் என்று பட்டியலிட்டு நாட்டு மக்களைச் சாதி வாரியாகப் பிரித்து சாதிக்கொரு சட்டத்தை வகுத்து, வலுவாக மிகத் தெளிவாக எழுதி தந்திரமாக அரங்கேற்றி விட்டார்கள். அதனால் எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் ஏற்கனவே எழுதி வைத்துள்ள அரசியல் சட்டப்படி தான் ஆட்சி நடத்த முடியும் என்பது தான் உண்மை நிலையாகும். தேர்தல் காலத்தில் எல்லா அரசியல் கட்சிகளும் நாங்கள் ஆட்சிக்கு வந்தால் சாதி, மத பேதமின்றி சமதர்ம சமநீதி வழங்கி நல்லாட்சி நடத்துவோம் என்று மக்கள் மத்தியில் பிரச்சாரம் செய்கின்றனர். இதனை நம்பும் மக்கள் தேர்தலில் தங்கள் வாக்குகளை அளித்து விடுகின்றனர். பிரதான கட்சிகளின் உள்ளாட்சி, சட்டமன்ற, பாராளுமன்ற உறுப்பினர்கள் தேவைகளை நிறைவேற்றாததால் விரக்தி நிலைக்கு ஆட்படுகின்றனர். இவை போன்ற பிரச்சினைகளை எதிர்கொள்ள இனத் தலைவர்கள், உள்ளாட்சி பிரதிநிதிகள் போன்றவர்களை இன இதழ்கள் 'நம்மவர்' என்ற மறைமுக அடையாளத்துடன் தேர்தல் செய்திகளை வெளியிடுகின்றன.

'தேர்தல்-2008' (ஓ.யா.மு., நவ-08, ப.4) எனும் தலைப்பு பேரவை 2008-2011 மாநில செயற்குழு உறுப்பினர் தேர்தல் "YADAV 14000 PLUS" அமைப்பதற்கான முதல் கட்டப் பணிகள் குறித்துத் தேர்தல் அதிகாரி திரு பிரசாத் தேர்தலின் போட்டியிட தகுதி, வேட்பு மனு தாக்கல் பற்றி விளக்கமளிக்கிறார். 'சமுதாயத் தேர்தல் வாக்களித்தவர்களுக்கு நன்றி' (இ.நா.மு., அக்-08, ப.29) எனும் தலைப்பு நடந்து முடிந்த தேர்தலை மூன்று பிரிவாகத் தேர்தலுக்கு முன் தேர்தல் நேரம், தேர்தலுக்குப் பின், தேர்தலுக்கு முன் எனப் பகுத்து இன சங்கத் தேர்தல் பொதுத் தேர்தல் போன்று பணத்தை முன்னிருத்தி நடப்பதைத் தோலுரித்துக் காட்டுகிறது. மேலும்,

சமுதாய உணர்வோடு வாக்களித்த அனைத்து உறுப்பினர்களையும் வாழ்த்துகிறேன். யாருக்கு வாக்களித்தீர்கள் என்பது முக்கியமில்லை. ஏனென்றால் நீங்கள் வாக்களித்தது நம் சமுதாயத்தில் உள்ள ஒருவருக்குத்தான் இதையே பொதுத் தேர்தலிலும் காட்டுங்கள் சமுதாய உணர்வு கொள்ளுங்கள்[43]

என அறிவுறுத்துகிறது.

உள்ளாட்சி தேர்தலில் வெற்றி (ம.மலர், ஏப்-08, ப.12) இன மக்கள் பிரதிநிதிகளாக வெற்றி பெற்றவர் விபரத்தைக் கவர்னகிரி ஊராட்சி மன்றத் தலைவராக செ.பாலமுருகன் வெற்றி பெற்றுள்ளார். கொல்லங்கிணறு ஊராட்சி மன்ற தலைவராக பொன்னுச்சாமி வெற்றி பெற்றுள்ளார் எனவும், நாடாளுமன்ற தேர்தலில் ஜெயிக்கப் போவது யார்? எனும் தலைப்பு (மருதமலர், செப்-08, ப.23) 15-வது இந்திய நாடாளுமன்றத் தேர்தலில் யாருக்கு அறுதிப் பெரும்பான்மை கிடைக்கும், கிடைக்காது என அலசி ஆராய்கிறது. தேர்தல் செய்திகள் புகைப்படத்துடன் விளம்பரமாகவும் இடம் பெறுகின்றன.

தேர்தல் செய்திகளாக பொதுத் தேர்தல் நிகழ்வுகள் உள்ளாட்சித் தேர்தல் நிகழ்வுகள், இன சங்க பேரவை தேர்தல் நிகழ்வுகள் என மூன்று வகைகளாக இன இதழ்களில் அமைகின்றன. ஒலிக்கும் யாதவர் முரசு, புதிய யாதவம், இந்திய நாடார் முரசு முதலிய இன இதழ்களில் சங்கப் பேரவை தேர்தல் தொடர்பான செய்திகள் அதிகளவில் இடம் பெறுவதை அறிய முடிகிறது.

## இட ஒதுக்கீடு

இட ஒதுக்கீடு ஏழ்மையைப் போக்குவதற்கான கருவி அல்ல. பல ஆண்டுகளாகச் சமூக, கல்வி நிலையில் உரிய வாய்ப்புகள் மறுக்கப்பட்ட பிற்படுத்தப்பட்ட, மிகவும் பிற்படுத்தப்பட்ட, ஒடுக்கப்பட்ட வகுப்பினருக்கு இந்திய அரசியல் சட்டம் வழங்கிய உரிமையே இட ஒதுக்கீடாகும். அதாவது பொருளாதார நிலையில் பின் தங்கியுள்ள மக்களுக்கு அளிக்கப்படும் இனிய வரப்பிரசாதமாக விளங்குகிறது. பொருளாதார, சமூக நிலையில் அனைவரும் சமத்துவ நிலையைப் பெறுவதற்காக ‘இட ஒதுக்கீடு’ என்னும் முறையைக் கொண்டு வரப்பட்டது. இதில் பல ஏற்றத் தாழ்வுகள் இருப்பதனால் பல இனப்பிரிவினருக்கும் இன்னல்கள் விளைகின்றன. இதைக் களைவதற்கு இன ரீதியாக மக்கட்தொகைக் கணக்கெடுப்பு முறையை நடத்தி அதன் வழியே இன மக்கள்

*தொகைக்கேற்ப இட ஒதுக்கீட்டை நடைமுறைப்படுத்த வேண்டும் என்பதை இன இதழ்கள் வலியுறுத்துகின்றன.*

> பிராமணர்கள் ஆக்ரமித்து அனுபவித்து வந்த நூறு சதத்தில் பங்கு கேட்டு பிராமணரல்லாதோர் காலங்காலமாக நடத்தியப் போராட்டமே இடஒதுக்கீட்டின் வரலாறாகும்[44]

*என்பர்.*

*‘ஆதிக்கச் சாதியினருக்கு வேண்டாம் இட ஒதுக்கீடு எனும் தலைப்பில் (மருதமலர், ஏப்-08, ப.11) ஆதிக்கச் சாதியினருக்கு உத்திரப் பிரதேசத்தில் 10 சதவீத இட ஒதுக்கீடு வழங்கப்படும் எனவும் இதை மத்திய அரசும் பின்பற்ற வேண்டும் என அம்மாநில முதல்வர் மாயாவதி அறிவித்திருப்பதை,*

> ஆதிக்க சாதியினால் ஒடுக்கப்பட்ட நாம் இன்னும் முழுமையாக முன்னேறி அவர்கள் நிலையை எட்டாத நிலையில் ஆதிக்க சாதியினருக்கு இட ஒதுக்கீடென்றால் இவ்விரு சமுதாயத்திற்கிடையேயுள்ள இடைவெளி எத்தனை ஆயிரமாண்டுகளானாலும் குறைய வாய்ப்பில்லை. உயர்ந்தவன் நம்மைவிட மேலும் உயரவே செய்வான். நாம் அவர்கள் அளவிற்கு உயரவே முடியாது[45]

*என்ற உண்மையை உணர்த்துகிறது ‘இடஒதுக்கீடு-இன்னலா? இன்கமா?’ (கொங்கு, ஏப்-08, ப.9) மத்திய அரசின் உயர்கல்வி நிறுவனங்களான ஐ.ஐ.டி. ஐ.ஐ.எம், எ.ஐ.ஐ.எம்.எஸ் போன்றவற்றில் பிற்படுத்தப்பட்ட மாணவர்களுக்குச் சமீபத்தில் அளிக்கப்பட்ட 27 சதவீத இட ஒதுக்கீடு முழுமையாகக் கிடைக்காமல் கிரிமீலேயர் என்னும் உச்சவரம்பு (ஆண்டு வருமானம் 2.5. லட்சம் உள்ளவர்கள்) உள்ளவர்களுக்கு இட ஒதுக்கீடு இல்லை எனும் நிலையை எடுத்துரைப்பதாக அமைகிறது. பத்திரிகைச் செய்தியைக் குறிப்பிட்டு ‘சிதறிய எண்ணங்களைச் சேகரித்து வையுங்கள்’ எனும் தலைப்பில் கிறிஸ்தவர்களுக்கான தனி இட ஒதுக்கீடு ரத்து முதல்வர் கருணாநிதி அறிவிப்பு என்பதைச் சுட்டிக்காட்டி,*

> இட ஒதுக்கீடா? இன ஒதுக்கீடா? சிறுபான்மை கிறிஸ்துவர்களுக்கு கேட்காமல் கிடைத்தது 3½ சதவீதம் கேட்டதும் கிடைத்தது 26½ சதவீதம் பெரும்பான்மை கொங்கு வேளாளர்களுக்கு கேட்டும் கிடைக்காதது MBC. கொங்கு இனமே, ஒன்று சேர்வோம், போராடுவோம், வெற்றி பெறுவோம். அருந்ததியருக்கும் கேட்டவுடன் கிடைக்கக்கூடிய சூழல் உள்ளதையும் நாம் அறிவோம்[46]

*என ஒப்புமைப்படுத்தி விளக்குகிறது.*

'இட ஒதுக்கீடு தெரிந்த விபரமும், தெரியாத செய்திகளும்' (கடலார், ஜூலை-08, ப.6) இட ஒதுக்கீடு குறித்த தொடக்க கால செய்திகளும், தற்போதைய நிலையில் மத்திய அரசின் உயர் கல்வி நிறுவனங்களில் இட ஒதுக்கீடு பிற்படுத்தப்பட்டவர்களுக்கு வழங்கப்படாமைக்குரிய காரணங்கள் குறித்தும் அலசி ஆராய்கிறது. 'இட ஒதுக்கீடும், சமூக நீதியும்' எனும் தலைப்பு (தே.மலர், சன-2008, ப.7) இந்திய அரசியலமைப்பு சட்டம் குறித்தும், அதன் ஒரு பகுதியாக வழங்கப்படும் இட ஒதுக்கீடு குறித்தவரலாறு, பற்றி குறிப்பிடுகையில் இந்தியாவில் உயர்கல்வி அளிக்கும் அரசு மற்றும் தனியார் நிறுவனங்களில் இடஒதுக்கீட்டை நடைமுறைப்படுத்துவதில் பல்வேறு குறைபாடுகள் இருப்பதைச் சுட்டிக்காட்டி விளக்குகிறது. மேலும் பட்டியல் சாதி இட ஒதுக்கீட்டில் தேவேந்திரர்களுக்குக் கிடைத்த பலன் என்ன? (தே.மலர், நவ-08, ப.3) எனும் தலைப்புத் திருமண தகவல் பதிவில் உள்ள 100 மணமகள் பதிவுகளை மட்டும் எடுத்துக் கொண்டு ஆய்வுக்குப்படுத்தியதில் அரசு மற்றும் தனியார் நிறுவனங்களில் வேலை வாய்ப்பு பெற்றவர்கள் 73% பேர் தனியார் துறை மற்றும் சுயதொழிலும், 27% பேர் அரசுப் பணிகளிலும் அமர்ந்து உள்ளார்கள் என புள்ளிவிபரத்துடன் அறிவிக்கிறது.

'சமூக நீதி கிடைத்திட சாதி வாரியான கணக்கெடுப்பை அரசே நடத்தி தொகுப்பு இட ஒதுக்கீட்டை அமல்படுத்த வேண்டும்' என (புதிய. யாதவம், டிச-08, ப.16) சாதி வாரியாகக் கணக்கெடுப்பு நடத்தினால் மட்டுமே உண்மையான இடஒதுக்கீடு அமையும் என இனத்தின் சார்பாக நீதிமன்றத்தில் வழக்கு தொடர்ந்துள்ளதை எடுத்துரைக்கிறது. சிறுபான்மை சமூகத்தினரான தொட்டிய நாயக்கர் பிரிவைச் சோந்தவர்கள் மற்றவர்களோடு போட்டி போட்டு இட ஒதுக்கீட்டின் பலனை எளிதில் பெற முடியாத அளவுக்குப் பல்வேறு இன்னல்களுக்கு இரையாகி வருகிறார்கள். ஆதலால் தொட்டிய நாயக்கர் மற்றும் இராஜ கம்பளம் என்ற மிகப் பிற்பட்ட வகுப்பினருக்கென அரசு கல்வி, வேலை வாய்ப்பில் தனி உள் ஒதுக்கீடு உடனடி தேவை என்பதை (வீ.பா.க. நவ-08, ப.2) வலியுறுத்துகிறது.

'அரசியல் வாதிகளின் நினைவெல்லாம் கனவெல்லாம் சிறுபான்மையினரே' (அச்சமில்லை, மே-08, ப.1) கல்வி வேலைவாய்ப்பில் சிறுபான்மையினருக்கு இட ஒதுக்கீடு வழங்க வேண்டும் என்ற கோரிக்கையை மத்திய அரசு பரிசீலத்து வருகிறது எனவும், அரசியல்வாதிகள் சிறுபான்மையினர் மூச்சுவிட்டால் போதும் - எள் என்பதற்கு முன்பே எண்ணையாக நின்று அவர்கள் கோரிக்கைகளை நிறைவேற்றக்

காத்துக்கிடப்பதும் பிற்படுத்தப்பட்ட, மிகவும் பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு இழைக்கப்படும் அநீதியாகும் என குற்றஞ்சாட்டுகிறது. '27 சதவீத இட ஒதுக்கீடு' எனும் தலைப்பு,

> இட ஒதுக்கீட்டில் பொருளாதார அளவு கோலைத் திணிப்பதை நாம் ஏற்றுக் கொள்ள இயலாது. பொருளாதார ரீதியாக என்று இந்திய அரசியல் சட்டத்தில் இடம் பெறாத சொற்றொடரைப் பயன்படுத்தி பிற்படுத்தப்பட்டோருள் பொருளாதார ரீதியாக முன்னேறிய பிரிவினரை இட ஒதுக்கீட்டிலிருந்து விலக்கிட வேண்டும் எனச் சொல்வது பிற்படுத்தப்பட்டோருக்கான இட ஒதுக்கீட்டினை நீர்த்துப் போகச் செய்து விடும்[47]

என இடஒதுக்கீடு குறித்து விமர்சிக்கிறது.

மருதமலர், கொங்கு, அச்சமில்லை, அகச்சுடர், தேவேந்திரர் மலர், புதிய யாதவம், வீரபாண்டிய கட்டபொம்மன், ஒலிக்கும் யாதவர் முரசு, கடலார் முதலிய இன இதழ்களில் இட ஒதுக்கீடு பற்றிய செய்திகள், இதுவரை வழங்கப்பட்ட இட ஒதுக்கீடு குறித்த விமர்சனங்கள் இடம் பெறுவதை அறிய முடிகிறது. இவை இட ஒதுக்கீடு தொடர்பாக இன மக்களுக்கு அறிவுறுத்தும் விதமாக இச்செய்திகள் அமைகின்றன. மேலும் சிறுபான்மையினருக்குப் பிற்படுத்தப்பட்ட மக்களின் இட ஒதுக்கீட்டைப் பிரித்துக் கொடுப்பதைப் பல இன இதழ்கள் ஓரணியில் நின்று விமர்சிப்பதைக் காண முடிகிறது.

**சோதிடம்**

சோதிடவியலில் ஜாதகப் பலனையும், கோசாரப் பலனையும், பார்த்து வருங்காலத்தில் நிகழப் போவதையும், நடந்து முடிந்தவற்றைத் தொகுத்துரைப்பதுமே சோதிடமாகும். சொன்ன சில விபரங்கள் பலிப்பதும், சில விசயங்கள் நடக்காமல் இருந்தால் அதற்குரிய பரிகாரம் செய்வதும் சோதிடர்களின் வழக்கமாக அமைகின்றது. மக்களின் நம்பிக்கையை அடிப்படையாக வைத்துத் தொழிலை நடத்தி வருகின்றனர். இம்மாதிரியான மக்களைத் திருப்திப்படுத்தும் முகமாகச் சோதிடச் செய்திகள், சோதிடத்தில் சிறப்பு பெற்ற சோதிடர்கள் அளித்த தகவல்களை இன இதழ்கள் வெளியிடுவதை வழக்கமாகக் கொண்டுள்ளன.

'முன்னுரைத்தது, பின் நடந்தது' (பூச்சரம், ஏப்-08, ப.14) எனும் தலைப்பு காரைக்குடி அருகிலுள்ள அரியக்குடி கிராமத்தில் வெங்கடாச்சலம் அய்யங்கார் என்பவர்

*சோதிடத்தில் திறமை பெற்றவர். பெரும்பாலான நகரத்தார்களின் நன் மதிப்பைப் பெற்றவராக விளங்கினார். எனக் குறிப்பிடுகிறது. 'தம்பி சோதிடத்தில் கூறப்பட்டவை எல்லாமே என் வாழ்வில் நூறு சதவீதம் அப்படி நடந்து வருகின்றன. பிர்லா நிறுவனத்துடனான ஹோட்டல் தொழிலில் சம்பாதிக்கும் போது அதில் வரும் வருமானத்தைக் கொண்டு கல்வி அறக்கட்டளை ஒன்றை நிறுவி நகரத்தார் சமூகத்துக்காகக் கல்லூரி ஒன்றைக் கட்டப் போகிறேன்'' என கோட்டையூர் சுப.மு.சுப்ரமணியம் செட்டியாரிடம் அழகப்பா செட்டியார் குறிப்பிட்டதாக தனது தந்தையின் நினைவைப் பகிர்ந்து கொள்கிறார் வள்ளி பனையப்பன். 'நாம் வல்லரசாகும் வாய்ப்பு-ஒரு பார்வை' (பூச்சரம், மார்ச்-08, ப.28) எனும் தலைப்பு நம் நாட்டின் ஜாதகமாக பிறந்த தேதி-15-08, 1947, பிறந்த நேரம்-நடு இரவு நேரம் 00.01 நிமிடம், பிறந்த இடம்-டெல்லி, ஜென்ம நட்சத்திரம்-பூசம், லக்கினம்-ரிஷபம், பிறந்த மகாதிசை இருப்பு-சனி, மகா திசையில் 18 வருடங்கள், 0 மாதங்கள் 14 நாட்கள் என இந்திய ஜாதகத்தைக் கணித்து விரைவில் வல்லரசாக மாறும் என்பதை கணித்து குறிப்பிடுகிறது.*

*'எண் எழுத்து வினோதங்கள்' எனும் தலைப்பில் கவித்தென்றல் கோதை என்பவர் எண் ஒன்பதின் பலா பலன்கள் பற்றி,*

வீரத்தின் பிறப்பிடம் இவரே ஆகும்
வேட்டைப் பிரியமும் இவரே ஆகும்
போராட்ட குணங்களும் அதிகமுண்டு
போட்டியில் பரிசுகளை வெல்வதுமுண்டு[48]

*பாடல் மூலமாக எண்கணித சோதிடத்தில் ஒன்பதாம் எண் குறித்து விவரிக்கிறார். 'சோதிடப் புலிகள்' (கொங்கு, மே-08, ப.26) எனும் தலைப்பு சோதிடம் என்பது ஒரு மாயை. வருங்காலத்தை முன்கூட்டிக் கூறக்கூடிய சோதிடம் தான் உண்மையானது மற்றவையெல்லாம் பொய் தான் எனக் குறிப்பிட்டு, எந்தச் சோதிடமும் வரப்போகிற சங்கதியைச் சொல்வதில்லை. சொல்லமுடியாத படியால் அமெரிக்க அணுகுண்டு விழப்போகிறது என்று அன்று ஜப்பான்காரர்களுக்குச் சோதிடர்கள் கூறியிருந்தால் எத்தனை ஆயிரம் பேர் பிழைத்திருப்பார்கள்? என வினா எழுப்பி சோதிடம் என்பது சொக்கட்டான் மாதிரி! ஒரு பொழுது போக்கு! என்றும் திருமணப் பொருத்தத்தை ஒரு சோதிடனிடம் பார்ப்பதோடு நிறுத்திக் கொள்ள வேண்டும். நான்கைந்து பேரிடம் பார்க்கக்கூடாது என அறிவுறுத்துகிறது.*

பூச்சரம், ஒலிக்கும் யாதவர் முரசு போன்ற இன இதழ்கள் சோதிடம் குறித்த செய்திகளை வெளியிட்டு இன மக்களை மகிழ்வடையச் செய்கின்றன. சோதிடத்தில் ஏமாற வேண்டாம். அதை அளவோடு பார்த்துக் கொண்டால் நல்லது. இல்லையேல் மன நிம்மதி கிடைக்காது என எச்சரிக்கை செய்கிறது. சோதிடச் செய்திகளுக்குச் சில இன இதழ்கள் முக்கியத்துவம் தருவதும் சில சோதிடத்தைக் கண்டித்தும் செய்திகள் வெளியிடுவதை அறிய முடிகிறது.

**அறிவியல்**

அறிவியல் என்பது உண்மையைக் கண்டறியும் கல்வி. பெருஞ்சொல்லகராதி அறிவியல் என்பதற்கு, பகுத்தறிவினாலும் சோதனையினாலும் இயற்கையில் அடங்கியுள்ள உண்மைகளைக் காணும் கல்வி, விஞ்ஞானம் என விளக்கம் தருகிறது.

இளம் விஞ்ஞானியின் சாதனை (ம.மலர், டிச-08, ப.10) எனும் தலைப்பில் இராமநாதபுரம் மாவட்டம், பரமக்குடி அருகே உள்ள கே.ஆர் பட்டணத்தைச் சேர்ந்த தனிக்கோடி மகன் ஜெயமுருகன் சைக்கிளைக் கொண்டு மின்சாரம் இல்லாமல், இதனைக் கொண்டு இயந்திரத்தின் மூலம் சைக்கிள் செயினை இணைத்து அதிக அளவு தண்ணீரை வயலுக்குப் பாய்ச்ச, எளிதில் எடுத்துச் செல்ல இயலும் என இன இளம் விஞ்ஞானியைப் பாராட்டி வாழ்த்துவதாகத் தெரிவிக்கிறது. ‘உடல், மன நலனுக்குத் தீங்கு ஏற்படாமல் அறிவியல் முன்னேற்றத்தைப் பயன்படுத்துவோம்’ (கொங்கு, டிச-08, ப.29) செல்போன், தொலைக்காட்சி போன்ற அறிவியல் சாதனங்களை முறையாக அளவோடு பயன்படுத்த வேண்டும். இதற்கு மாறாகச் செல்போனுக்கு அடிமை, தொலைக்காட்சிப் பெட்டிக்கு அடிமை என்ற போக்குத் தொடர்ந்தால், நம் சந்ததியினர் பண்பாடு, கலாச்சாரம் ஆகியவற்றை மறக்க நேரிடலாம்” என எச்சரிக்கை செய்வதாக அமைகிறது.

‘பிரகாசமான எதிர்காலத்திற்கு உதவும் நானோ டெக்னாலஜி’ எனும் தலைப்பு ‘நானோ’ என்றாலே மிகவும் நுண்ணிய பொருள் எனவும், உலகிலுள்ள அனைத்துப் பொருட்களுமே அணுவினால் ஆனவையாக இருந்தாலும், அணுக்களின் அமைப்பின் அடிப்படையிலேயே அவற்றின் தன்மை மற்றும் பயன்பாடுகள் அமையும். உதாரணத்திற்கு நிலக்கரியிலுள்ள அணு அமைப்பை மாற்றி அமைத்தால் அதை வைரமாக்க இயலும். இப்போதுள்ள தொழில் வளர்ச்சியின் அடிப்படையில் மூலக்கூறுகளையும், அணுக்களையும் தொகுப்பாக இடம் பெயர்ச்சி செய்ய

முடிந்தாலும், எதிர்ப்பார்க்கும் அளவு விளைவுகளை ஏற்படுத்த முடியாது. இந்தக் குறையை,

> நானோ டெக்னாலஜி தொழில் நுட்பம் தீர்க்கும் தன்மை கொண்டது என விளக்கமளிக்கிறது. மேலும் இவ்விதழில் இனத்தின் விஞ்ஞானி மயில்சாமி அண்ணாதுரை பற்றிக் குறிப்பிடுகையில் தமிழ்வழிக் கல்வி அறிவியல் முன்னேற்றத்துக்குத் தடையில்லை என்பதை நிரூபித்து, அறிவியல் அறிஞர் மேனாள் ஜனாதிபதி அப்துல் கலாமுடன் அந்நியோந்நியப்பட்டு சாதனைபுரிந்துள்ள அண்ணாத்துரையின் ஆற்றல் வளரும் நம்குலக் குருத்துக்களுக்கு ஒரு வழிகாட்டியாக இருக்கும்[49]

என நம்பிக்கையை விதைக்கிறது. 'ஐஸ் வேகமாக உருகுகிறது-விஞ்ஞானிகள் கவலை' (கடலார், செப்-08, ப.21) எனும் தலைப்பு வட துருவத்தில் உள்ள ஆர்க்டிக் பகுதியில் பனிப்பாறைகள் உருகி வருவதைக் குறித்து அமெரிக்காவின் கடற்படை சூப்பர் கம்யூட்டர் அளித்துள்ள தகவல்களை அடிப்படையாகக் கொண்டு பேராசிரியர் வியஸ்லாமஸ் லோவ்ஸ்கி இத்தகவலை வெளியிட்டுள்ளதாக லண்டனில் வெளியாகும். 'அப்சர்வர்' நாளேடு செய்தி வெளியிட்டுள்ளதைக் குறிப்பிட்டு செய்தியாக அமைத்துள்ளது. 'யுரேனியக் கதிர்வீச்சு!' (தெ.கீ, மார்ச்-08, ப.33) ஜார்க் கண்ட மாநில ஜாது கோடாவில் தான் இந்திய அணுசக்தி துறையின் யுரேனிய கார்ப்பரேஷன் நிறுவனம் அமைந்துள்ளதால் அதைச்சுற்றியுள்ள கிராம மக்கள் கைகால் முடமாக, கண்ணில்லாமல், மூக்கு போன்ற உறுப்புகள் இல்லாமல், போதுமான வளர்ச்சியின்றி, மூளை வளர்ச்சி குன்றி, உடல் உறுப்பு குறைபாடுகளுடன் குழந்தைகள் பிறப்பதையும் எடுத்துரைத்து யுரேனியத்தின் பாதிப்பு குறித்தும் விளக்குகிறது.

வியக்கதகு அறிவியல் செய்திகள், இனத்தின் விஞ்ஞானிகளின் கண்டுபிடிப்புகள், உலக அறிவியல் செய்திகள், அறிவியல் ஆபத்துகள் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு மருதலர், கொங்கு, செங்குந்த மித்திரன், கடலார், தெலுங்கர் கீதம் போன்ற இன இதழ்களின் அறிவியல் செய்திகளுக்கு முக்கியத்துவம் தந்து வெளியிடுகின்றன.

**சட்டம்**

மனிதனின் அறிவு வளர்ச்சி பெற்ற நிலையில் அவனை நெறிப்படுத்த தனக்குத்தானே ஏற்படுத்திக் கொண்ட வரைமுறைகள் அந்த வரையறைகள் யாரையும் பாதிக்காத வண்ணம் ஒருவருக்கு ஒருவர் கேடு விளைவிக்காமல் ஒரு நெறிமுறையோடு வாழ மனிதன் ஏற்படுத்திக் கொண்ட விதிமுறைகள் தான் சட்டம் மனிதன் பிறந்தது

முதல் ஆதிகாலத்தில் இருந்தே இயற்கையோடு ஒன்றி இயற்கை நியதிக்கு உட்பட்டுத்தான் வாழ்ந்து வருகிறான். அப்படி விதிமுறைகளுக்கு உட்பட்டு வாழ்கின்றபோது அச்சம் நீங்கி, அது உண்மையாக, நேர்மையாக வாழ்வதற்கு உதவுகிறது. மனிதன் உண்டானது முதல் சட்டங்கள் மனிதனைக் கட்டுப்படுத்தி செயல்படுத்தித்தான் வந்துள்ளன. பிற்காலத்தில் மனிதன் நாகரீகம் வளர்ந்து தனக்கு ஒரு கட்டுப்பாடு வேண்டும் என்ற நிலையில் தனக்கு ஒரு தலைவன் வேண்டும். அரசன் வேண்டும் என்று முடிவு செய்தான். அரசர்கள் உருவானார்கள். அப்படி உருவான அரசர்களின் தங்கள் மக்களை நல்வழியில் நடத்திச் செல்ல இட்ட ஆணைகள் சட்டமாயின.முற்காலத்தில் பின்பற்றப்பட்டு வந்த சில சமுதாய நடைமுறைகள், பிற்காலத்தில் (மேலே) சட்டமுறைகளாக மாறின.

> சட்டம் என்பது மனிதன் மீது விதிக்கப்பட்ட உரிமை, கடமை இரண்டையும் உள்ளடக்கியதாகும். உரிமையும், கடமையும் மீறப்படும் பொழுது, அதற்குத் தகுந்தாற்போல தண்டனை உண்டு என்றம் கூறுவது தான் சட்டமாகும்[50]

என்பர்

ஒரு நாட்டின் அமைதி அந்த நாடு செழித்துச் சீராக வளர அடிப்படையாக அமைகிறது. அந்த அமைதியை நிலை நாட்டுவதில் சட்டம் தான் முக்கிய பங்காற்றுகிறது. சமுதாய வளர்ச்சியிலும், பொருளாதாரத் துறையிலும் சட்டம் மிக மிக முக்கிய அவசியம். சட்டம் ஒழுங்காக இல்லாத நாடு அமைதியற்று, மக்கள் நிம்மதியற்று போகிறார்கள். சட்டம் மக்களின் ஒரு அங்கமாகத் தேவைப்படுகிறது மக்களின் வாழ்வு நிலையானதாக, சீராக விளங்குவதற்குச் சட்டத்தின் பங்கு மேலானது. சிறப்பானதாகும்.

'சித்ரவதைக்கு எதிரான பொது விசாரணை முகாம்' (ம.மலர், ஏப்-08, ப.20) எனும் தலைப்பில் மதுரையில் உள்ள மக்கள் கண்காணிப்பகம் என்னும் நிறுவனம் சார்பில் நெல்லை கொக்கிரக்குளம் அலுவலகத்தில் மே மாதம் 22 மற்றும் 23 தேதிகளில் சித்ரவதைக்கு எதிரான பொது விசாரணை முகாம் நடைபெற உள்ளதைத் தெரிவித்து இந்த முகாம் மூலம் அரசுக்குச் சித்ரவதைக் குறித்த பிரச்சினைகளை எடுத்துச் சொல்லவும் விழிப்புணர்வு ஏற்படுத்தவும், அரசு பதில் சொல்ல வேண்டிய அவசியத்தை ஏற்படுத்தவும் நியாயங்கள் பெறவும் விரும்புகிறோம். இதன் மூலம் அரசினைச் சித்ரவதைக்கு எதிரான சட்டங்களை உருவாக்க, சித்ரவதையால் பாதிக்கப்பட்டோருக்கு மறு வாழ்வு கிடைப்பதற்கான நிலையை உருவாக்க முடியும் என்ற உறுதியை இன

மக்களுக்கு அறிவுறுத்துகிறது. 'வன்கொடுமைச் சட்டம்' தம் இன மக்கள் மீது வன் கொடுமை என்றும் தீண்டாமை சட்டத்தின் வாயிலாக எடுக்கப்படும் நடவடிக்கைக்கு,

> கொங்கினமே விழித்தெழுங்கள், நம் சமுதாயத்தின் மீது பொய்யாக போடப்படும் வன்கொடுமை தடுப்புச் சட்டத்தை, சட்டதிருத்தம் கொண்டுவர மத்தியு, மாநில அரசுகளுக்கு நம் கோரிக்கையை வலியுறுத்த முதல் நடவடிக்கையில் இறங்க வேண்டும். பொய் வழக்கு நம் மீது போடப்படுவதை தடுக்க நாம் ஒற்றுமையுடன் செயல்பட வேண்டும்[51]

என வன்கொடுமைச் சட்டம் குறித்து இன மக்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்துகிறது.

'சட்டங்களுக்குக் கட்டுப்படாத சட்டம்' (பண்டிதம், அக்-2008, ப.12) எனும் தலைப்பில் ஒவ்வொரு கிராமத்திலும் தீண்டத் தக்கவர்கள் சில விதிகள் வைத்திருக்கின்றனர். அவற்றைத் தீண்டத்தகாதவர்கள் பின்பற்றி நடக்க வேண்டும் என்பதற்கு உதாரணமாக நிலம், கால் நடைகள் போன்ற செல்வங்கள் சேர்ப்பது, ஓட்டுக்கூரை உள்ள வீடு கட்டுவது, சுத்தமான உடை உடுப்பது, தங்கம், வெள்ளி ஆபரணங்கள் அணிவது போன்றவைகள் இம்மக்கள் மீது சுமத்தப்படும் குற்றங்களாகும். தீண்டாதவர்கள் தீண்டத்தக்கவர்கள் முன் சமமாக அமர்வதும், தங்களின் குழந்தைகளுக்கு அழகான பெயர் வைப்பதும் கூட குற்றப்பட்டியலில் சேரும் இந்திய அரசியலைப்புச் சட்டத்தில் இவை யாவும் குற்றங்களாக இல்லை, என்றாலும் இந்த விதிகளில் ஒன்றை மீறினாலும் தீண்டாதவர்களுக்குத் தண்டனை உண்டு என்பதை எடுத்துரைத்து பெரும்பாலான கிராமங்களில் இன்னும் நடைமுறையில் உள்ளதைக் குறிப்பிடுகிறது. சட்டம் என்பது என்ன? (ஓ.யா.மு., மார்ச்-2008, ப.13) எனும் தலைப்பு சாதாரண குடிமகன் அறியும் வகையில் சட்டம் விளக்கம். சட்டத்தின் தன்மைகள் குறித்துத் தொடராக ஒவ்வொரு மாத இதழிலும் இடம் பெறுகின்றது. 'இருளர் மீது தொடரும் வன்கொடுமைகள்' எனும் தலைப்பு (இருளர் செய்தி, ஆக-2008, ப.7) 2008இல் வன்கொடுமை தடுப்புச் சட்டத்தில் 12 வழக்குகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. விக்கிரவாண்டி காவல் நிலைய என்.ரமேஷ் போன்ற மோசமான காவல் அதிகாரிகளால் 7 புகார்களில் வன்கொடுமை தடுப்புச் சட்டம் 1989இன் கீழ் வழக்குப் பதிவு செய்யவில்லை என்பதை அதிகாரிகளின் மேலான கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறோம்' என உறுதியளிக்கிறது.

மருதமலர், கொங்கு, பண்டிதம், ஒலிக்கும் யாதவர் முரசு போன்ற இன இதழ்கள் அடிப்படை சட்டத்தால் பாதிக்கப்படும் நிலை, அவற்றை எதிர் கொண்டு தீர்வு

காணுதல், முக்கிய சட்ட ஆலோசனை அமைப்புகள், போன்றவைகளைச் சட்டச் செய்திகளாக அமைத்துக் கொள்கின்றன. இதன் வாயிலாக இன ரீதியாக எதிர் கொள்ளும் பிரச்சினைகளுக்கு இன மக்கள் தீர்வு காண வழி வகுக்கின்றன. மேலும் சட்டத்தின் மறுபக்கமாக கருதப்படும் நீதித்துறை குறித்த நிகழ்வுகளாக, 'நெஞ்சில் நிறைந்த நீதியரசர் அசோக்குமார்' (மருதமலர், ஜுன்-08, ப.15), 'புதிய தலைமை நீதிபதி' (அகச்சுடர், ஜுன்-08, ப.6), 'நீதிபதி மேல் நம்பிக்கை வேண்டும்' (இ.நா.முரசு, ஏப்-08, ப.18) போன்ற செய்திகள் நீதித்துறைத் தொடர்பான விசயங்களை இனமக்களுக்குத் தெரிவிக்கிறது.

**விளம்பரம்**

தகவல் தொடர்புச் சாதனங்கள் பலவற்றிலும் விளம்பரத்திற்குச் சிறப்பான இடம் இருந்து வருகிறது. அவ்வகையில் இதழ்களிலும் விளம்பரப் பகுதிக்குத் தனி இடம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. விளம்பரத்தின் வழி வருவாய் கிடைக்க வழி இருப்பதையும் இவ்விதழ்கள் கவனத்தில் கொள்கின்றன. இன இதழ்கள் வருவாயைப் பெருக்க, தங்களை நிலைநாட்டிக் கொள்ள இவ்வருவாய் மூலங்கள் பயன்படுகின்றன. விளம்பரம் இன்றைய தொழில் வளர்ச்சியில் உயிர்மூச்சு, வேகமான பொருளாதார வளர்ச்சிக்கு வேண்டிய இரத்த ஓட்டம் என்றெல்லாம் விளம்பரத்திற்கு விளக்கம் அளிப்பர்.

இன இதழ்களில் விளம்பரம் அதிகஅளவில் இடம் பெறுகிறது. தங்கள் இனத்தவர் நடத்தும் வர்த்தக நிறுவனங்கள், பேரவை நிகழ்ச்சிகள், மருத்துவம், பிறப்பு, இறப்பு, மண நிகழ்ச்சிகள், பணி ஓய்வு, கல்வி நிறுவனங்கள் போன்றவற்றின் விளம்பரங்கள் அதிகளவில் இடம் பெறுகின்றன. இன இதழ்களில் வரும் விளம்பரங்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

1. வர்த்தக விளம்பரங்கள்
2. இன விளம்பரங்கள்

**வர்த்தக விளம்பரங்கள்**

இவ்வகையான விளம்பரங்கள் தாம் நடத்தும் தொழில் நிறுவனங்களைத் தம் இன மக்கள் அறிந்து கொள்ளவும், வியாபார நோக்கத்தோடும் வெளியிடப்படுகின்றன. வர்த்தக விளம்பரங்களில் தங்கள் இனம் சம்பந்தப்பட்ட செய்திகளும் இடம் பெறுகின்றன. 'தேவேந்திரர் ஐ.டி.ஐ' (மருதமலர், ஜுன்-08, ப.35) எனும் தலைப்பில்

தூத்துக்குடி மாவட்டம் புளியம்பட்டியில் உள்ள தொழிற்கல்வி நிறுவனம் குறித்த முழுபக்க விளம்பரம் தேவேந்திரர் மழலையர் (LKG, UKG) மற்றும் 1 முதல் 5 வரை தொடக்கப்பள்ளி செயல்படுகிறது என விளம்பரம் இடம் பெற்றுள்ளது. 'ஸ்ரீஅம்மன் ஜீவல்லரி (கொங்கு, ஜுன்-2008, ப.33) கொங்குத் தங்கங்களின் அங்கம் ஜொலிக்கும் தங்க கலெக்ஷன் எனவும், விளம்பரத்தின் பக்க இறுதியில் இந்த கட்டிங் கொண்டு வரும் கொங்கு மக்களுக்கு ஒரு பவுன் ஆபரண தங்கத்திற்கு ரூ.120/- சிறப்பு தள்ளுபடி வழங்கப்படும் என இன வர்த்தக விளம்பரமாக அமைகிறது.

செங்குந்த இன மக்கள் சார்பாக வெளிவரும் செங்குந்த மித்திரன் இதழின் ஒவ்வொரு இடது பக்கங்களில் விளம்பரங்களும், வலது பக்கங்களில் இனச் செய்திகளும் இடம்பெறுகின்றன. காட்டாக 'புளுமவுண்டன் சிட்ஸ் பிரைவேட் லிமிடெட்' (செ.மி., செப்-2008, ப.4) எனும் தலைப்பில் 30,000 சந்தாதாரர்கள் இதுவரை எங்கள் குரூப்புகளில் பெரும்பயன் அடைந்து வருகின்றனர் என்பதும் மேலும் மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும் என விளம்பரப்படுத்துகிறது. ஸ்ரீ எம்.எம்.மெய்யப்பா ஜீவல்லரி A/C (பூச்சரம், ஆக-08, ப.21) விளம்பரம் சென்னையில் செட்டிநாட்டு நகைக்கடை எனும் வாசகத்துடன் உங்கள் கனவு பூக்கள் எல்லாம் தங்கமாக மாற நியாயத்தின் இழையெடுத்துத் தொடுக்கப்பட்டிருக்கிறது! எங்கள் டிசைன் என்றும் நியூ டிசைன் என அறிவிக்கிறது.

புதிய ஸ்வரங்கள் இசைச்சாரல் (புதிய யாதவம், மார்ச்-08, ப.68) எனும் விளம்பரத்தில் இசையால் இணைவோம் சினிமா புகழ் இசையமைப்பாளர் வி.ரகுயாதவ் அவர்களின் ஆர்க்கெஸ்ட்ரா விளம்பரமாக அமைகிறது. ஸஃபையர்... வலைகளில் தங்கம் (கடலார், செப்-08, ப.24) மற்ற வலைகளை விட சபையர் வலைகள் கூடுதல் வலிமை மற்றும் தேய்மானம் தாங்கும் தன்மை கொண்டவை. எனென்றால் இவை அதி நவீன இயந்திர திறன் மற்றும் உன்னத தொழில் நுட்பத்துடன் தயாரிக்கப்படுகின்றன என விளம்பரப்படுத்துகிறது. 'ஜனதா அப்பளம்' (தெ.கீதம், சன-08, ப.46) எனும் விளம்பரம் இடம் பெறுகிறது.

இந்திய நாடார் முரசு இதழ்களில் வர்த்தக விளம்பரங்கள் மிகுதியாகவும், அடர்த்தியாக பேரவை, சங்கம் சார்பான விளம்பரங்கள் அமைகின்றன. செங்குந்த மித்திரன் இதழ்களில் இடது பக்கங்களில் மட்டுமே விளம்பரங்களும், பூச்சரம் இதழ்களில் ஜவுளி, நகைக்கடை, சுற்றுலா தொடர்பான விளம்பரங்களும், ஒலிக்கும்

யாதவர் முரசு இதழ்களில் செய்திகளும், ஆங்கில விளம்பரங்களும் சம விகிதத்தில் கலந்து அமைகின்றன. கடலார் இதழ்களில் மீனவர்கள் தொடர்பான விளம்பரங்கள் இடம் பெற்றுள்ளன. பூச்சரம், தெலுங்கர் கீதம், வீரபாண்டிய கட்டபொம்மன், ஒலிக்கும் யாதவர் முரசு போன்ற இன இதழ்களில் ஒவ்வொரு மாதமும் தொடர்ந்து ஒரு வர்த்தக நிறுவனத்தின் விளம்பரமே இடம் பெற்றுள்ளதை அறிய முடிகிறது. குறிப்பாக பூச்சரம் இதழ்களில் நகரத்தார் இன பண்பாட்டோடு தொடர்புடைய ஜீவல்லரி, சுற்றுலா, விளம்பரங்கள் மிகுதியாக காணப்படுகின்றன. கடலார் இதழ் மீனவர் இனம் சார்பாக வெளி வருவதால் வலைகள், படகு இன்ஜின்கள் குறித்த விளம்பரங்களை வெளியிடுகிறது. இவ்வாறாக வர்த்தக விளம்பரங்கள் இனத்தை தொடர்புபடுத்தி வெளிவருவதை உறுதி செய்ய முடிகிறது.

**இன விளம்பரங்கள்**

வர்த்தக விளம்பரங்களுக்கு இணையாக பிறப்பு, இறப்பு, திருமணம், பணி போன்ற இன நிகழ்வுகளை இன விளம்பரங்களாக இன இதழ்கள் கட்டமைக்கின்றன. ஒவ்வொரு இன இதழ்களும் போட்டிப் போட்டுக் கொண்டு இன விளம்பரங்களை வெளியிடுகின்றன. இதற்கு இன இதழ்கள் தரும் முக்கியத்துவத்திற்குக் காரணத்தை இரு வகைப்படுத்தலாம். 1. இன விளம்பரங்கள் மூலம் இதழ்கள் இன மக்களிடம் நெருக்கம் ஏற்படுத்தல் 2. இன மக்கள் கொடுக்கும் இன விளம்பரங்கள் தம் உறவினர்களிடம் சென்று சேரும் என்ற நம்பிக்கை ஏற்படல் இந்த இரு காரணிகளை அடிப்படையாகக் கொண்டே இன விளம்பரங்கள் அமைகின்றன.

'தியாகியை உறவு சொல்லி அழைக்கும் பிஞ்சு குழந்தை' (மருதமலர், நவ-2008, ப.36) எனும் தலைப்பு இதழாசிரியர் தன் சுற்றுப்பயணத்தின் போது தேனி என்.ஆர்.டி நகரிலுள்ள காளிராஜ் அவர்களின் பேத்தி சஞ்சுஸ்ரீ வீட்டிலுள்ள இனப்போராளி இம்மானுவேல் சேகரன் படத்தைக் காட்டி 'தாத்தா' என்று அக்குழந்தை உச்சரித்ததைப் பெருமையாகச் சுட்டிக் காட்டுகிறார். பிறப்பு, இறப்பு நிகழ்வுகள், பணி போன்ற விளம்பரங்கள் மிகுதியாக இவ்விதழ்களில் அதிகப் பக்கங்கங்களில் இடம் பெறுகின்றன. 'வாழ்த்துகிறோம்' (இ.நா.மு., ஜுன்-08, ப.11) இதழில் நெல்லை தக்ஷ்சன மாற நாடார் சங்க பொதுச் செயலாளராகத் தேர்வு செய்யப்பட்ட எஸ்.எஸ்.எஸ்.நாதன் அவர்களை வாழ்த்தி வரவேற்கிறோம்! நலிந்து கிடக்கும் தென்னக நாடார்களுக்கும் நற்பணியாற்ற வாழ்த்துகிறோம் என இன விளம்பரத்தை அடைக்கிறது. இவ்விதழ்களில் சங்க தேர்தல்

நிர்வாகிகள், பெயர் பட்டியல், வாழ்த்து போன்றவைகளை இன விளம்பரங்களாக வெளியிடப் பெறுகிறது.

திருமண வாழ்த்து, கண்ணீர் அஞ்சலி, என (செ.மி., ஜூலை-08, பக்.89) இதழ்களின் இறுதி பக்கங்களிலும் வர்த்தக விளம்பரங்கள் முன் பக்கங்களிலும் இடம்பெறுவதைக் காணலாம். 'கோவை, கங்கா, யமுனா திரையரங்க திரு. ப.சண்முகம் செட்டியார் உக்ர ரத சாந்தி' (பூச்சரம், மார்ச்-08, பக்.18-20) விழாவில் நடைபெற்ற நிகழ்வுகளை வண்ணப் புகைப்படங்களாக வழுவழு தாளில் வெளியிட்டுள்ளது. (ஒ.யா.மு., மார்ச் 08, பக்.26) எனும் தலைப்பில் திருமண வரன் குறித்த விளம்பரங்கள் இதழின் இறுதியி பக்கங்களில் அமைந்துள்ளன. மணமேடை (பு.யா., மார்ச்-08, ப.22) எனும் தலைப்பில் இவ்விதழின் பெரும்பாலான பக்கங்களில் திருமண வரன் பற்றிய தகவல்கள் இடம் பெற்றுள்ளன.

கொங்கு, அச்சமில்லை, அகச்சுடர், தேவந்திரர் மலர், பண்டிதம், வீரபாண்டிய கட்டபொம்மன், இருளர் செய்தி, விளக்கு வேண்டி இன இதழ்களில் இன விளம்பரங்கள் அரிதாகவே காணப்படுகின்றன. மருதமலர், இந்திய நாடார் முரசு, பூச்சரம், செங்குந்தமித்திரன், புதிய யாதவம், ஒலிக்கும் யாதவர் முரசு, கடலார் ஆகிய இன இதழ்களில் மிகுதியாகவே இன விளம்பரங்களை வெயியிடுவதை அறிய முடிகிறது. மருத மலர் என்னும் இன இதழில் இன விளம்பரங்கள் அடர்த்தியாகக் காணப்படுகின்றன.

**சுற்றுச் சூழல்**

இந்த நூற்றாண்டின் மிகப் பெரிய பிரச்சினையாக உள்ளது சுற்றுச்சூழல் பாதிப்பு, நம் அடிப்படைத்தேவையான நீர், தொழிற்சாலைக்கழிவுகள் கலப்பதால் மாசுபடுகிறது. நீர்மட்டுமல்லாது நிலம், காற்று, ஆகாயம் போன்றவையும் மாசுபடுத்தப்படுகின்றன. மேற்கண்ட ஐம்பூதங்கள் தூய்மையாக அமைந்தால் தான் உயிர்களின் வாழ்க்கை சிறப்பாக அமையும். எனவே, அனைவரும் தாம் வாழும் சுற்றுப்புறங்களைப் பேணிக் காப்பது அவசியமாகிறது. உலக சுகாதார நிறுவனமும், சுற்றுச்சூழல் பாதுகாப்பு அமைப்புகளும், சுற்றுச்சூழல் ஆர்வலர்களும் இதில் மிக முக்கியக் கவனம் செலுத்தி வருகின்றன. வெகுசன இதழ்களும், சுற்றுச் சூழலுக்கென வெளிவரும் இதழ்களும் சுற்றுச்சூழல் தடுப்பு முறைகள் குறித்த செய்திகளை

வெளியிடுகின்றன. சில இன இதழ்கள் தங்கள் பங்குக்குச் சுற்றுச் சூழலுக்கென சில பக்கங்களை ஒதுக்குகின்றன.

'சுற்றுச்சூழல் மாசுபாடு அதனால் ஏற்பட்ட விளைவுகளும்' (பண்டிதம், ஜுன்-2008, ப.5) எனும் கட்டுரையில் பகைவர் நாட்டுச் சுற்றுச் சூழலை நாசம் செய்வதன் மூலம், அங்கு வாழும் மக்களின் நல்வாழ்வுக்கு ஊறுவிளைவித்து அவர்கள் வாழ்க்கையில் பல துன்பங்களை மேற்கொள்ள வைத்து அவர்கள் நாட்டின் பொருளாதாரத்தை முடங்கச் செய்தல் சூற்றுச் சூழல் பயங்கரவாதத்தை விளக்கும் காரணிகளாக வேதிய ஆயுதங்கள், அணு ஆயுதங்கள், உயரிய ஆயுதங்கள், நெருப்பு ஆயுதங்கள் என நான்கு வகைப்படுத்தி ஆராய்கிறது. 'சபரி மலையில் சுகாதார சீர்கேடு' (வீ.பா.க., மே-2008, ப.5) எனும் சிறு குறிப்பில் 2005 ஆண்டு சபரி மலைக்கு 2 கோடி பக்தர்களும், 2006இல் 3-5 கோடி பக்தர்களும், 2007இல் 5 கோடி பக்தர்களும் வந்ததைச் சுட்டிக்காட்டி சுகாதார சீர்கேட்டால் பம்பை நதிப் பகுதிகளில் 2004 ஆம் ஆண்டில் 28 பேர்களும், 2005இல் 30 பேர்களும், 2006இல் 31 பேர்களும் பலியாகி இருப்பதாக ஒரு புள்ளி விபரம் குறிப்பிடுவதை வெளியிட்டுள்ளது. 'முத்து நகர் ஈந்த முத்து (கடலார், பிப்-08, ப.6) 2007இல் நோபல் பரிசு பெற்ற இந்திய விஞ்ஞானி சுகுமார் டிவோட்டா பற்றிக் குறிப்பிடுகையில் உலகளவில் வழங்கப்படும் இவ்விருதை இருவர் சமமாகப் பெற்றுள்ளனர் என்றும், ஒருவர் சுகுமார் டிவோட்டா, மற்றொருவர் முன்னாள் அமெரிக்கத் துணை ஜனாதிபதி ஆல்பர்ட் அர்னால்ட் கோர் (Albert Arnold Gore) என குறிப்பிட்டு இவ்வளவு சிறப்பு பெற்ற சுற்றுச் சூழல் ஆய்வுக்கான விருது பெற்றதைத் தமிழ் ஊடகங்கள் பாராட்டாததைக் கண்டித்தும் அமைகிறது.

'நெடிதுயில் கொள்ளும் (கொல்லும்) மாசுக்கட்டுப்பாடு வாரியம்' (கொங்கு, ஏப்-08, ப.10) எனும் கட்டுரையில் கரும்பு ஆலை, மின் உற்பத்தி நிலையம் வெளிவிடும் கரிப்புகைத்துகள்கள் 0.5.மி.மீ தடிமனுடன் 1 சதுர அங்குலத்தில் சுமார் 50க்கு மேற்பட்ட துகள்கள் காணப்படுகின்றன. இக்கார்பன் துகள்கள் மரம் செடி, கொடி போன்ற தாவரங்கள் மீது படிவதனால் அவற்றை உண்ணும் கால்நடைகள் மலட்டுத் தன்மை அடைகின்றன. மேலும் மனிதனுக்குக் கண் நோய் உண்டாக்குவதையும் மாசுக்கட்டுப்பாட்டு வாரியம் கண்டு கொள்ளாததையும் எடுத்துரைக்கிறது. பண்டிதம், வீரபாண்டிய கட்டபொம்மன், கொங்கு, கடலார் போன்ற இன இதழ்களில் சுற்றுச்சூழல் குறித்த சிந்தனைகள் கட்டுரைகளாக இடம் பெறுவதை அறிய முடிகிறது.

சுற்றுச்சூழல் குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்தி அதனால் ஏற்படும் தீங்குகள் குறித்த சிந்தனையை இன மக்களுக்கு விதைக்கும் பணியில் சில இன இதழ்கள் சில ஈடுபாடு கொண்டுள்ளதை உறுதி செய்ய முடிகிறது.

**பெண்ணியம்**

> பெண்ணியம் என்பது ஆண்களை எதிர்ப்பது அன்று. சமூக அரசியல் துறைகளில் சுதந்திரமாகச் செயல்பட்டு பெண்ணின் அடிமைச் சங்கிலிகள் விடுபட விழிப்பை, உணர்வை ஏற்படுத்துவதேயாகும்[52]

என்று பெண்ணியத்திற்கான நோக்கை வரையறுப்பார் ப.தமிழரசி அவர்கள் எவ்வகையிலேனும் தங்களுக்கான உரிமைகளையும், சுதந்திரங்களையும் பெற்று கல்வி, கேள்வி, ஞானம் போன்றவைகளில் தன்னிறைவை அடையச் செய்வதே பெண்ணியம் ஆகும். பெண்களின் வாழ்வு ஒரு கட்டுக்குள் அடக்கி ஒடுக்கப்பட்ட நிலையிலிருந்து அவர்களின் சமூகப் பொருளாதாரப் பண்பாட்டு உரிமைக்காகப் போராடுவதையும், அதிலிருந்து விடுபடுதலையும், அதற்கான இருத்தலையும் வெளிப்படுத்தலே பெண்ணியமாகும்.

பெண்ணுக்கும், பெண்ணியத்திற்கும் எதிராக நிகழும் பல ஒடுக்குமுறை கொடுமைகளுக்கு எதிராக தொலைக்காட்சி, வானொலி, நாளேடுகள் பரவலாகப் பேசினாலும் குறிப்பாகப் பெண்களுக்கும் பெண்ணியத்திற்கும் என்றே பல இதழ்கள் வெளிவருகின்றன. இன இதழ்களும் பெண்களுக்கென சில பக்கங்களை ஒதுக்குவதை அறியலாம்.

‘தேவேந்திரகுல பெண்கள் உலகிற்கு உணர்த்திய பெண்ணியப் புரட்சி’ மதுரைக்கு அருகிலுள்ள உத்தபுரத்தில் ஏற்பட்ட இனக்கலவரத்தில் ஊரில் ஆண்கள் காவல்துறைக்குப் பயந்து இடம்பெயர்ந்து செல்கின்றனர். இந்நிலையில் சித்ரா என்ற இளம் பெண் இறந்துவிட இறுதிச் சடங்குகளைப் பெண்களே முற்றிலும் செய்து முடிப்பதை இதழில்,

> காலங்காலமாக இருந்த நம்பிக்கைகளையும், மரபுகளையும் சடங்குகளையும் தூக்கி எறிந்துவிட்டு பெண்களே இறுதி ஊர்வலத்தை நடத்தியதும், நல்லடக்கம் செய்ததும், சனாதன மரபுகளைத் தூக்கிப்பிடிக்கும் தலைமைகளுக்கு ஒரு சவுக்கடி பகுத்தறிவு வேடம்போடும் போலிகளுக்கு உண்மையான பகுத்தறிவு இது

தான் என்று காட்டும் படிப்பினை் மொத்தத்தில் இது ஒரு சமூகப்புரட்சி பெண்ணுலகின் விடியலுக்கான உதயம்[53]

என வெளியிட்டுள்ளது.

*பெண்களுக்கான அழகு சிகிச்சை மையம் தாங்கள் நடத்தும் பயிற்சி வகுப்புகள் குறித்து (பண்டிதம், நவ-08, ப.12) விளம்பரத்தை அமைத்துள்ளது. இது இனப் பெண்கள் தங்கள் பரம்பரைத் தொழிலான முகச்சவரத்தோடு இதையும் செய்ய வேண்டும் என்னும் எதிர்பார்ப்போடு அமைகிறது. பெண்கள் என்றாலே கண்ணீர்தானா? பெண்களின் வேலைத்திறன் என்னும் தலைப்புகளில் பெண்களைப் பற்றி குறிப்பிடுகையில்,*

உண்மையில் உங்கள் மனைவியை வேலைக்காரியாக, திருட்டுப் போகாமல் பொருட்களைப் பாதுகாக்கும் காவலாளியாக, சமையல் செய்து, இரவில் படுக்கை துணையாக இருக்கும் ஒரு சாதாரணப் பெண்ணாக மட்டும் பார்க்காமல் அவளுக்குள்ளும் திறமைகள் இருக்கும் என்று எண்ணி அதை வெளிக்கொண்டுவர வழிகாட்டுங்கள்[54]

*எனக் குறிப்பிடுகிறது.*

பெண்ணை உடலாக மட்டும் இல்லாமல், உடமையாக இல்லாமல், சகமனுசியாக, உணர்வுகளும் அறிவும் உள்ளவளாக எல்லா வகையிலும் ஆணுக்குச் சமமானவளாக சமூகம் ஏற்றுக் கொள்ளும் போதே குடும்ப அமைப்பு பெண்ணுக்கு ஒரு விதமாய் ஆணுக்கு ஒரு விதமாய் இல்லாமல் ஜனநாயகப்படுத்தப்படும்[55]

*என்று பெண்களும், பெண்கள் மட்டுமல்ல பெண் சார்ந்த குடும்ப அமைப்பும், குடும்பம் சார்ந்த சமூகமும் ஒழுங்கமைவும் நெறியை எடுத்துக் கூறுகிறது. இதையே இன இதழ்களும் தங்கள் இதழ்களில் பிரதி பலிக்கின்றன. குறிப்பாகத் தேதேவந்திரர் மலர், தெலுங்கர் கீதம் போன்ற இன இதழ்கள் பெண்கள் குறித்துச் செய்திகளை வெளியிடுவதைக் காண முடிகிறது.*

**தமிழ்ப் பண்பாடு**

திங்களோடும் செழும்பரிதி தன்னோடும்
விண்ணோடும் உடுக்களோடும்
பொங்கு கடல் இவற்றோடும் பிறந்த தமிழ்[56]

*என்கிறார் பாவேந்தர் பாரதிதாசன். உலகின் முதல் மொழியாக அல்லது உலகில் தோன்றிய சில மொழிகளில் உயர்ந்த மொழியாகத் தமிழ் விளங்குகிறது. ஆதலால் தான் “சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே” என்று கூறினார்.*

உலகத்தில் எந்த மொழிக்கும் இல்லாத சிறப்பு ஒன்று தமிழுக்குண்டு, காலத்திற்கேற்பக் காலத்தின் தேவைக்கேற்ப அந்தந்தக் காலத்துத் தமிழ் மக்களின் வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் உரிய எதிர்ப்பார்ப்புகளுக்கேற்ப, உணர்வுகளுக்கேற்ப உருமாற்றிக் கொள்ளும் உயிர்ப்புச் சக்தி தமிழுக்குண்டு என தமிழின் சிறப்பைப் பற்றி பலர் குறிப்பிடுவர்.

உள்ளத்தில் தோன்றும் கருத்தை வெளிக்காட்டுவதற்குத் தமிழை விட எந்த மொழியும் இயைந்ததாக இல்லை என்று பெர்சிவல் கூறுகிறார். மொழியறிஞர் ‘விடனே’ எண்ணுவதற்கும், பேசுவதற்கும் எந்த ஐரோப்பிய மொழியையும் விடத் தமிழ் சிறந்தது எனத் தாம் அறிந்துள்ளதாகக் கூறுகின்றனர். இவ்வாறு பல்வேறு நாட்டவர்களும் பாராட்டப் பெற்ற தமிழ்மொழி உலகத்தின் ஒப்புமை மிக்க மொழியாக விளங்குவதோடு சிறந்த பண்பாட்டையும், கலாச்சாரத்தையும் பெற்று விளங்குகிறது. பன்முகப் பண்பாட்டை மற்ற நாட்டு மக்களுக்கு எடுத்துரைக்கும் வண்ணம் சிறப்பு பெற்று இயங்குகிறது. தமிழ்ப்பண்பாடு, தமிழ் மொழிப்பயன்பாடு குறித்த பல செய்திகள் இன இதழ்களிலும் இடம் பெறுகின்றன.

‘தைப் பொங்கல் தினமே தமிழ் புத்தாண்டு தினம்’ (மருதமலர், ஏப்-08, ப.7) எனும் கட்டுரைத் தமிழர்களின் திருநாளானதைப் பொங்கல் தினம் சமய விழாவா? சமயமற்ற விழாவா? என்ற விவாதம் 1935இல் திருச்சியில் நடைபெற்ற அனைத்துத் தமிழர் மகாநாட்டில் விவாதிக்கப்பட்டதையும், அதில் இடம்பெற்ற திரு.வி.க., பெரியார் போன்றோர் கருத்துகளையும் எடுத்துரைத்து இன்றைய நிலையில் தமிழ்ப் புத்தாண்டு தினத்தைப் தைப்பொங்கல் தினத்தன்றே கொண்டாடலாம் என முதலமைச்சர் கலைஞர் அறிவித்திருப்பதும் பராட்டுக்குரியதாகும் என வரவேற்கிறது. ‘‘சித்திரை முதல் தேதி தான் தமிழ்ப் புத்தாண்டு’ எனும் கட்டுரை,

> நமது தமிழ் முன்னோர்களின் கூற்றுப்படி மகர ரேகையில் இருந்து சூரியன் புறப்படும் நாள் தை 1 ஆம் நாள் அதுவே பொங்கல் பண்டிகை, உழவர் திருநாள் என்று கொண்டாடி வந்ததையும், இப்போது தை 1 ஆம் தேதி தான் தமிழ் மாதம் தொடக்க நாள் என்று சட்டம் இயற்றியவர்கள் சூரியன் மகர ரேகையில் இருந்து தான் புறப்படுகிறது. எனவே தை 1 ஆம் தேதி தான் புதிய சூரியன் உதய நாள் அன்று தான் தமிழ் வருடப்பிறப்பு[57]

என அறிவிக்க வலியுறுத்துகிறது.

'சித்திரை கசப்பான காரணம் என்ன?' (கொங்கு, பிப்-08, ப.13) எனும் கட்டுரையில் ஆங்கிலேயர்கள், அரேபியர்கள், மொகலாயர்கள் போன்றவர்கள் பாரதம் வந்து நமது செல்வங்களையும், கலாச்சாரத்தையும் பண்புகளையும் கொள்ளையடித்துச் சென்றது போக மிச்சம் வைத்துச் சென்ற அவர்களின் கோட்பாடுகள் அனைத்தும் அப்படியே இருக்க வேண்டும். ஆனால் பாரத பூமிக்கென ஒரு கோட்பாடு உண்டு. தமிழர்கள் என்ற பாடம், பண்பாடு, கலாச்சாரம், வீரம், விருந்தோம்பல் போன்றவற்றில் முன்னோடியாக இருப்போம் என தெரிவிக்கிறது. 'தை முதல் நாள்' 'சித்திரை முதல் நாள்' (பண்டிதம், பிப்-08, ப.2) எனும் கட்டுரை பருவங்களின் சுழற்சியை அடிப்படையாகக் கொண்டு இயற்கையை ஒட்டிச் சித்திரை மாதத்தைத் தொடக்க மாதமாகக் கொண்டமைந்த ஆண்டுக் கணக்கீடு தான் பூர்வீகத் தமிழ் மரபாகவும் இருக்க முடியும் எனவும், ஜீலியஸ் ஆண்டு கணக்கிற்கு பரிந்துரை செய்த அலெக்சாண்டரிய விஞ்ஞானி சொன்ன ஒரே காரணம் ஆரிய தென் கோடு சென்று நின்று திரும்பி நம்மையெல்லாம் நோக்கும் நாள்தான் உலக உயிர்கள் புத்துணர்ச்சி பெறும் நாள். அந்த நாள் ஜனவரி 14 (தை முதல் நாள்) அந்த நாளைக் கொண்டு துவங்குவது தன் வானியல் வழியான சரியான ஆண்டுத் துவக்கம் எனவும் இரு தரப்பு விவாதங்களை வெளியிட்டுத் தமிழ்ப் பண்பாட்டு சிந்தனையைத் தோற்றுவிக்கிறது.

'தமிழ் மொழியைச் சொல்லித் தாருங்கள்' எனும் கட்டுரை நகரத்தார் இன மக்கள் பலர் வெளிநாடு, வெளி மாநிலங்கள், வெளியூர்களில் வணிகத்திற்குச் செல்கின்றனர். அவ்விடம் தம்பிள்ளைகளை ஆங்கில வழி பள்ளிகளில் சேர்த்து விடுவதனால் தமிழ்மொழி, கலாச்சாரம், பண்பாடு போன்றவை இன்றைய தலைமுறைக்குத் தெரியாமலே போய்விடும் ஆபத்து இருப்பதைச் சுட்டிக் காட்டி,

> எந்த வழிக் கல்விப் பள்ளிகளில் நீங்கள் உங்கள் குழந்தைகளைப் படிக்க வைத்தாலும் பரவாயில்லை. தாயோ, தந்தையோ அரைமணி நேரம் மட்டும் ஒதுக்கி பிள்ளைகளுக்கு தமிழ்ப் பாட்டுக்களை பாடக் கற்றுக் கொடுங்கள். ஆங்கிலம், பிரெஞ்சு, ஸ்பானியம், சப்பானியம், இந்தி எந்த மொழியில் வேண்டுமானாலும் பள்ளியில் படிக்கட்டும், வீட்டில் தொல்காப்பியம், திருக்குறள், சங்கப்பாடல்கள், சிலப்பதிகாரம், கம்பராமாயணம் போன்ற நூல்களை வாங்கி வைத்து தினமும் ஒரு அரைமணி நேரம் சொல்லிக் கொடுங்கள்[58]

என தமிழ்ப்பண்பாட்டை போதிக்கிறது.

மருதமலர், இந்திய நாடார் முரசு, கொங்கு, பண்டிதம், பூச்சரம் போன்ற இன இதழ்கள் சித்திரை மாதத்திலிருந்து தமிழ்ப்புத்தாண்டு மாற்றப்பட்டதையும் தைத்திருநாள் தமிழ்ப்புத்தாண்டு என அறிவித்ததையும், இன வரலாற்று இலக்கியச் சான்றுகளுடன் விவரிப்பதையும், பூச்சரம் இன இதழ் தமிழ்ப்பண்பாட்டை இன்றைய தலைமுறைக்குத் தொடர்ந்து செல்ல பெற்றோர்களுக்கு வலியுறுத்துவதை அறிய முடிகிறது. இன இதழ்களும் தமிழ்ப் பண்பாட்டை பேணிக் காப்பதைக் கடமையாகக் கொள்கின்றன.

**திரை**

திரைப்படம் என்பது நம்மைச் சுற்றி சூழ்ந்துள்ளது. சினிமாவே பார்க்காதவர்கள் கூட சினிமாவைப் பற்றி ஏகப்பட்ட தகவல்களைத் தெரிந்து வைத்திருக்கிறார்கள். சாலை வழியெங்கும் சினிமா போஸ்டர்கள், தொலைக்காட்சியில் சானலுக்குச் சானல் சினிமா நிகழ்ச்சிகள், பேட்டிகள், அரசியலில் கூட சினிமாவின் செல்வாக்கு அதிகமாகக் காணப்படுகிறது. கடந்த கால நான்கு முதல்வர்களும் சினிமா உலகிலிருந்து வந்தவர்கள் என்பது அனைவரும் அறிந்ததே. ஆக நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் நம்மைச் சுற்றி காற்று, நீர், ஆகாயம் போல சினிமாவும் இருக்கிறது. அந்த வகையில் சினிமாவையும் ஒரு சூழல் எனலாம்.

> எல்லா தொடர்பு சாதன வெளிப்பாடுகளையும் போலவே திரைப்படமும் ஒரு பிரதி. இந்தப் பிரதிக்கு பல்வேறு அர்த்தங்கள் வாசிப்பும் உண்டு. ஒவ்வொரு காலக் கட்டத்திலும் சமூக கலாச்சார பின்னணியில் இந்த வாசிப்புகளும் அர்த்தங்களும் மாறிக்கொண்டே இருக்கும். வாசிக்கும் பார்வையாளரின் இன குழு, சாதி மற்றும் பிற சமூக அம்சங்கள் வாசிப்பில் பல்வேறு வேறுபாடுகளை ஏற்படுத்துகின்றன[59]

என்பர். இக்கூற்றிற்கேற்ப இன இதழ்களும் தங்கள் இனம் சார்ந்த நேர்மறை பதிவுகள், எதிர்மறைப் பதிவுகள் குறித்து அலசி ஆராய்கின்றன.

'அய்யா வழி - சான்றோர் குலத்தை சிறுமைப்படுத்த எடுக்கப்பட்ட திரைப்படம்' எனும் கட்டுரை,

> அய்யா வழி திரைப்படத்தில் சாணார்கள் நிரந்தர அடிமைகள் என்றும், இவர்கள் தொட்டாலே தீட்டு என்பது போலவும் பல இடங்களில் சொல்லப்படுகிறது. ஒரு பழம் பெருமைமிக்க மாபெரும் சாதியின் வரலாற்றை கூறும்போது அவர்களது பழைய பெருமைகளையும் கூறி அதன் பின் இன்று கொடுமைக்காரர்களின் ஆட்சியில்

இந்த நிலைக்கு தள்ளப்பட்டார்கள் என்று உண்மையைச் சொல்லி இருக்க வேண்டும்[60]

என தன் இன ஆதங்கத்தை வெளிப்படுத்துகிறது. ‘திரைப்படத்தில் இசையமைக்கும் - நமது ரகு யாதவ்’ (புதிய யாதவம், சன-08, ப.9) எனும் கட்டுரை இன்று திரைப்படத்தில் இசையமைப்பாளராக அறிமுகமாகும் நமது ரகு யாதவ் நமது குலத்துக்கு மேலும் பெருமை தேடித் தந்துள்ளார். இதற்கு அவரது முயற்சியும், உழைப்பும் காரணமாகும் என்று புகழாரம் கூறினர் மற்றும் பல யாதவ பெரு மக்கள் ரகு யாதவைப் பாராட்டி பேசினார்கள் என பெருமைப் பாராட்டுகிறது.

‘பிரிவோம் சந்திப்போம்’ நகரத்தார் சமூகத்தின் ஒரு பொக்கிஷம் (பூச்சரம், பிப்-08, ப.39) எனும் தலைப்பு அத்திரைப்பட இயக்குநர் கரு.பழனியப்பனைப் பாராட்டிக் குறிப்பிடுகையில் பிரிவோம் சந்திப்போம். திரைப்படத்தில் கதாபாத்திரங்களின் மூலம் நீ சொல்லியிருப்பது வெறும் வசனங்களை அல்ல. செட்டி மக்களின் சிட்டான பண்புகளை! ஏழு நாட்கள் நடந்த திருமண வைபவம், இன்றைய சூழலில் ஏழு மணி நேரச் சிறுகதையாய் சுருங்கிவிட்டது ஆனால் ‘இரு விழியோ’ பாடலை நீ படம் பிடித்திருக்கும் அழகைப்பார்த்தபோது. குறைந்த பட்சம் எனது மகளின் திருமணத்தையேனும் ஏழு நாட்கள் நடத்திப்பார்த்து விட ஆர்வம் பிறக்கிறது என இராங்கியத்தை எம்.அருணாசலம் தனக்கு ஏற்பட்ட உணர்வை வெளிப்படுத்துகிறார். ‘சிரிப்பு, குணச்சித்திர நடிகர் மிமிக்ரி மன்னர் சின்னி ஜெயந்த்’ (தெ.கீ., மே-08, ப.24) எனும் செய்தியில் ‘காமெடிங்கிறது சினிமாவில் லைட்டாதான் இருக்கணும். அது டக்குனு ஜனங்கள் மனதில் போய் சேர வேண்டும். இது அதிகமானால் கருவேப்பிலையைப் போல தூக்கி போட்டு விடுவார்கள் எனக் குறிப்பிடும் சின்னி ஜெயந்தை இவ்விதழ் மிமிக்ரி மன்னரின் இயற்பெயர் கே.நாராயண சாமி நாயுடு என அறிவிக்கிறது.

இனத்தின் பெருமையை அவமானப்படுத்தி வெளிவந்திருக்கும் திரைப்படத்தைக் கண்டித்து இந்திய நாடார் முரசு, இன கலாச்சாரத்தை வலியுறுத்திய திரைப்படத்தை பாராட்டி பூச்சரம் இதழும் அமைகின்றன. இன இசையமைப்பாளரைப் பாராட்டி புதிய யாதவமும், இன நடிகரை அடையாளப்படுத்தித் தெலுங்கர் கீத இதழும் செய்திகளை வெளியிட்டுள்ளன. ஆக திரைத்துறைச் செய்திகள் இன இதழ்களில் தங்கள் இனம் சம்பந்தப்பட்ட கருத்துக்கள் நடிக, நடிகையர்களை வலியுறுத்தும் செய்திகளையே பிரதிபலிக்கின்றன.

மேற்கண்ட செய்திகள் தவிர சமையல், மது, மத்திய அரசு திட்டம், மாநில அரசு திட்டம், பொது அறிவு, விளையாட்டு, அறிஞர் கருத்துகள் நேர்காணல், புதிர்கள், வீட்டுக் குறிப்புகள் போன்ற பன்முக பொருண்மை அடிப்படையில் இன இதழ்கள் தம் மக்களுக்கு உலக கிராமம் (Global Village) என்ற கட்டமைப்பை உருவாக்குவதை மிக முக்கியக் கடமையாகக் கொண்டு இயங்குகின்றன.

## தொகுப்புரை

இன இதழ்களின் கட்டமைப்பு அகவடிவம், புற வடிவம் என இரு நிலைகளில் அமைகின்றன.

இவ்விதழ்கள் இனப்பேரவை, சங்கச் செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கின்றன. செங்குந்த மித்திரன், கொங்கு, இந்திய நாடார் முரசு, ஒலிக்கும் யாதவர் முரசு ஆகிய இதழ்களில் பேரவை, சங்கச் செய்திகள் மிகுதியாக இடம்பெறுகின்றன.

இன அமைப்புக் கூட்டங்கள், மாநாடுகள் மூலமாகத் தங்கள் இனத்தவரின் கோரிக்கையை அரசுக்குத் தெரியப்படுத்தி, தங்கள் பலத்தை ஆளும் ஆட்சியாளர்களுக்கு வெளிப்படுத்துகின்றனர். மாநாட்டு நிகழ்வுகள் குறித்த செய்திகள் முதன்மையாக மருதமலரில் சிறப்பாகப் பதிவு செய்யப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இன மக்களோடு நெருக்கத்தை ஏற்படுத்திக் கொள்ள இன இதழ்கள் இல்லங்களின் நிகழ்வுகளான பிறப்பு, காதணி விழா, புதுமனை புகுவிழா, பணியேற்பு, பதவி உயர்வு, பணிஓய்வு, பணிமாற்றம், குடும்ப விழா, இறப்பு, இரங்கல் செய்தி, நினைவு அஞ்சலி போன்ற செய்திகளை வெளியிடுகின்றன. இதில் மருதமலர் சிறப்பிடம் பெறுகிறது.

இல்லங்களில் நடைபெறும் திருமண நிகழ்வுகளை ஆய்வுக்குட்பட்ட பெரும்பாலான இன இதழ்கள் வெளியிட்டு மகிழ்கின்றன. இதனால் இனத்தாரோடு நெருங்கிய தொடர்பும், வருமானமும் கிடைப்பதனால் முக்கியத்துவம் தருவதை அறியமுடிகிறது. இனத்தார் வெளிநாட்டில், வெளிமாநிலத்தில் இருப்பதால் தெலுங்கர் கீதம் இதழ் ஆங்கிலத்தில் திருமண வரன்களை வெளியிடுகிறது.

பொருளாதாரம், வர்த்தகம், தொழில் போன்றவற்றில் ஈடுபட்டு இருக்கும் இனத்தவர்களின் இதழ்களில் உள்ளடக்கம், வெளியீட்டு முறை மாறுபடுகிறது. ஒடுக்கப்பட்ட, பிற்படுத்தப்பட்ட மக்களின் இதழ்களுக்கும், மேம்பட்ட இனத்தினர் இதழ்களுக்கும் உள்ளடக்கம், வெளியீட்டு முறையில் மாற்றங்கள் காணப்படுகின்றன.

ஒடுக்கப்பட்ட, பிற்படுத்தப்பட்ட இனத்தவரின் இதழ்கள் இன விடுதலை நோக்கிலும், மேம்பட்ட இனத்தவரின் இதழ்கள் தொழில் பற்றிய நிகழ்வுகளையும் வெளியிடுகின்றன.

நகரத்தார் இன இதழான ‘பூச்சரம்’ திருமணத் தகவல்களை வண்ணப் புகைப்படங்களுடன் செய்தியோடு வெளியிடுவதில் சிறப்பிடம் பெறுகின்றது. இவ்விதழ் ஆன்மீகச் செய்திகளுக்கு முதன்மை அளிப்பதை காணமுடிகிறது.

இன இதழ்களில் பல அரசியல் நிகழ்வுகளை வெளியிடுகின்றன. தம் இன மக்கள் அரசியல் விழிப்புணர்வு பெற வழிவகுக்கின்றன. தன்னிலை உயர்வு, பொருளாதாரத்தில் உயர்வு இவற்றின் அடுத்த கட்டமாக அரசியல் விழிப்புணர்வு பெறுவது தேவையான, கட்டாயமான ஒன்றாகும். வன்னியர் இன இதழான அச்சமில்லை, கள்ளர் இன இதழான விளக்கு என இரு இதழ்களும் அரசியல் செய்திகளைப் புள்ளிவிபர ஆதாரத்துடன் கட்டுரைகளை அமைத்துள்ளன.

இன இதழ்களில் இலக்கியச் சிந்தனைகள் என்பது இனப் படைப்பாளர்களை ஊக்குவிக்கும் பொருட்டு, இன வாசகப் பெருமக்களுக்குக் கட்டுரை, கவிதை, கதை வாயிலாக இன உணர்வூட்டவும் பயன்படுகின்றன. பொதுவாக எல்லா இன இதழ்களிலும் இலக்கியச் சிந்தனைகள் இனம் தொடர்பாகவே இடம்பெறுகின்றன. கவுண்டர்கள் இன இதழான கொங்கு, தேவேந்திரர்கள் இன இதழான மருதமலர் இலக்கியச் செய்திகளை மிகுதியாக அமைத்துள்ளது.

இன்றைய இன மாணவர்களின் எதிர்காலத்தில் தான் தங்கள் இனத்தின் எதிர்காலம் இருப்பதைக் கருத்தில் கொண்டு இன இதழ்கள் கல்விச் சிந்தனைகளுக்கு முக்கியத்துவம் தருகின்றன. படிப்பு உதவித்தொகை, பரிசு வழங்கி ஊக்குவித்தல், தேர்வுகால ஆலோசனை, வேலைவாய்ப்பு என பன்முகக் கல்விச்சிந்தனைகளை எல்லா இன இதழ்களும் வெளிப்படுத்துகின்றன.

இனத்தின் வீரத்தன்மையை வெளிப்படுத்த இன மேன்மைக்குப் பாடுபட்ட மறைந்த இனப்போராளிகள், நடப்புக்காலச் செயல் தலைவர்கள், குழு போராட்ட வரலாறு போன்றவற்றை வெளியிட்டு வரலாற்று விழிப்புணர்வை கொள்ளச் செய்கின்றன.

உலகம் இயங்குவதற்கு உழவன் இன்றியமையாதவனாகிறான். வேளாண்மை சார்ந்த அரசு, அரசு சாராத அமைப்புகளின் திட்டங்களை இன விவசாயிகளுக்கு இதழ்களில் வெளியிட்டு உழவுத்தொழில் மேன்மையுற பாடுபடுகிறது. தேவேந்திரர் மலர், கொங்கு, வீரபாண்டிய கட்டபொம்மன் என மூன்று இதழ்களில் மட்டுமே மிகுதியாக வேளாண்மை குறித்த செய்திகள் இடம்பெறுவதை அறியமுடிகிறது. தேவேந்திரர், கொங்கு வேளாளர், கம்பளத்தார் இன மக்கள் தொன்றுதொட்டு செய்துவரும் வேளாண்மை அவ்வினத்திற்குரிய தொழிலை வெளிப்படுத்துவதாக அமைகிறது.

தங்கள் இன மக்களின் எண்ணிக்கைப் பெருக வேண்டும். எனவே உடல்நலத்தில் இன இதழ்கள் கவனம் கொள்கின்றன. மருத்துவக் குறிப்பு, ஆலோசனை போன்றவை கட்டுரைகளாக இடம்பெறுகின்றன. ஆய்வுக்குட்பட்ட பெரும்பாலான இன இதழ்கள் கடலார், அச்சமில்லை, பண்டிதம், விளக்கு தவிர மருத்துவச் செய்திகள் அடங்கிய தகவல்களை வெளியிடுவதைக் கடமையாகக் கொண்டுள்ளன.

இன மக்களை மன ரீதியாகப் பண்படுத்தி அவர்களிடம் விழிப்புணர்வை ஏற்படுத்துவதற்காக ஆளுமைத்திறம், தன்னம்பிக்கை பற்றிய செய்திக் கட்டுரைகளை வெளியிட்டு தாழ்வு மனப்பான்மையைப் போக்குவதற்கும், எழுச்சிக் கொள்ளச் செய்வதற்கும் முயலுகின்றன.

தேர்தல் செய்திகளைப் பொதுத் தேர்தல் நிகழ்வுகள், உள்ளாட்சித் தேர்தல் நிகழ்வுகள், இனச்சங்கப் பேரவை தேர்தல் நிகழ்வுகள் என மூன்று வகைகளாக இன இதழ்களில் அமைகின்றன.

இடஒதுக்கீடு என்பது பொருளாதார நிலையில் பின்தங்கியுள்ள பிற்படுத்தப்பட்ட, மிகவும் பிற்படுத்தப்பட்ட, ஒடுக்கப்பட்ட மக்களுக்கு இந்திய அரசியல் சட்டம் வழங்கிய உரிமையாகும். இன மக்களுக்கு இடஒதுக்கீடு தொடர்பாக அறிவுறுத்தி விழிப்புணர்வு கொள்ளச் செய்கின்றன.

சோதிடவியலில் ஜாதகப் பலன், கோசாரப் பலன் பார்த்து வருங்காலத்தில் நிகழப்போவதையும், நடந்து முடிந்தவற்றைத் தொகுத்துரைப்பதுமே சோதிடமாகும். நகரத்தார் இன இதழான பூச்சரம், ஒலிக்கும் யாதவர் முரசு இன இதழ்களில் சோதிடம் குறித்த செய்திகள் இடம்பெறுகின்றன. சோதிடத்தில் ஏமாற வேண்டாம். அதை அளவோடு பார்த்துக் கொண்டால் நல்லது. இல்லையேல் மன நிம்மதி கிடைக்காது என 'கொங்கு' என்னும் இதழ் எச்சரிக்கை செய்வதும் குறிப்பிடத்தக்கது.

சட்டம் என்பது மனிதன் மீது விதிக்கப்பட்ட உரிமை, கடமை இரண்டையும் உள்ளடக்கியதாகும். இன மக்கள், இன ரீதியாக எதிர்கொள்ளும் பிரச்சனைகளைக் களைய சட்டம் குறித்த ஆலோசனைகள் இன இதழ்களில் இடம்பெறுகின்றன.

தகவல் தொடர்புச் சாதனங்களில் விளம்பரம் என்பது இன்றியமையாததையாகும். இன இதழ்கள் தங்களை நிலை நாட்டிக் கொள்ளவும் வருவாயைப் பெருக்கவும் விளம்பர வருவாய் மூலங்கள் பயன்படுகின்றன. திருமண வரன் குறித்த விளம்பரங்கள் தங்கள் இனத்தை விருத்தி செய்ய உதவும் வாயிலாக அமைத்துக் கொள்கின்றன. வர்த்தக விளம்பரம், இன விளம்பரம் என இருவகையில் அமைகின்றன. 'இந்திய நாடார் முரசு' வர்த்தக விளம்பரத்தைச் சிறப்பாகப் பெற்றுள்ளது.

பெண்ணியம் தொடர்பான செய்திகள் சில இன இதழ்களில் மட்டும் இடம்பெறுகின்றன. பெண்கள் குடும்ப அமைப்பு சார்ந்த நெறிமுறைகளோடு இயங்க வேண்டும் என்பதையே இன இதழ்கள் வலியுறுத்துகின்றன.

தமிழ்ப் பண்பாடு, தமிழ்மொழிப் பயன்பாடு குறித்த பல செய்திகள் இன இதழ்களில் இடம்பெறுகின்றன. 'தைப் பொங்கல் தினமே தமிழ்ப் புத்தாண்டு தினம்' என்னும் கருத்தை பல இன இதழ்கள் விவாதம் செய்கின்றன. தமிழ்ப் பண்பாட்டை வெளிநாட்டில் வாழும் இளைய தலைமுறைக்குத் தொடர்ந்து சொல்லிக் காக்க வேண்டும் என பூச்சரம் இதழ் வலியுறுத்துகிறது.

மீனவர்களின் வாழ்வாதாரத்தை மேலும் வளப்படுத்தும் விதமாக 'கடலார்' என்னும் இதழ் கடலியல் சார்ந்த நிகழ்வுகளைத் தொகுத்து வெளியிட்டுள்ளது.

இன மக்களின் உறவுகளை ஒருங்கிணைக்கும் பாலமாக இன இதழ்கள் செயல்படுகின்றன. அரசின் கவனத்தை தன் இன முன்னேற்றத்திற்குத் திசை திருப்புவதற்கும் தொழில் அபிவிருத்திக் களமாகவும் இன இதழ்கள் விளங்குகின்றன.

## சான்றெண் விளக்கம்

1. கோ.கேசவன், **தமிழ்ச் சிறுகதைகளில் உருவம்**, ப.6.
2. ந.பிச்சமூர்த்தி, **ஆசிரியர் சந்திப்பு நூலகம்**, மே.1970, ப.35.
3. **காலச்சுவடு**, சனவரி 2005, ப.5.
4. இரா.கோதண்டபாணி, **இதழியல்**, ப.177.
5. V.T.செல்வம், **தமிழக வரலாறும் பண்பாடும்**, ப.30.
6. **கொங்கு**, மே 2008, ப.24.
7. **இந்திய நாடார் முரசு**, ஆகஸ்ட் 2008, ப.24.
8. **புதிய யாதவம்**, அக்டோபர் 2008, ப.20.
9. **மருதமலர்**, செப்டம்பர் 2008, ப.26.
10. **அகச்சுடர்**, சனவரி 2008, ப.2.
11. **விளக்கு**, பிப்ரவரி 2008, ப.21.
12. தாயம்மாள் அறவாணன், **தமிழ்ச் சமூகவியல் கருத்தாடல்**, ப.20.
13. **செங்குந்த மித்திரன்**, ஏப்ரல் 2008, ப.35.
14. **மருதமலர்**, செப்டம்பர் 2008, ப.10.
15. மேலது., ஏப்ரல் 2008, ப.35.
16. மேலது., அக்டோபர் 2008, ப.25.
17. **கடலார்**, நவம்பர் 2008, ப.28.
18. **பூச்சரம்**, நவம்பர் 2008, ப.82.
19. **வீ.பா.க.**, ஏப்ரல் 2008, ப.9.
20. **இ.நா.முரசு**, நவம்பர் 2008, ப.12.
21. **அச்சமில்லை**, மே 2008, ப.22.
22. **தேவேந்திரர் மலர்**, மே 2008, ப.23.
23. இரா.பொன்னரசு, **ஜெயகாந்தன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு**, ப.13.
24. தி.சு.நடராசன், **திறனாய்வுக்கலை**, ப.65.
25. **அச்சமில்லை**, சனவரி 2008, ப.28.
26. **தேவேந்திரர் மலர்**, ஜூலை 2008, ப.7.
27. **இதழியல்**, அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு, ப.134.
28. மு.ராசமாணிக்கனார், **இன்றைய சிந்தனைகள்**, ப.11.
29. **பூச்சரம்**, ஜூன் 2008, ப.3.
30. **தேவேந்திரர் மலர்**, ஜூலை 2008, ப.28.

31. புதிய யாதவம், சனவரி 2008, ப.55.
32. அறிஞர் குணா, தமிழர் வரலாறு, ப.1.
33. இந்திய நாடார் முரசு, டிசம்பர் 2008, ப.18.
34. தேவேந்திரர் மலர், ஆகஸ்ட் 2008, ப.22.
35. மேலது., நவம்பர் 2008, ப.30.
36. கொங்கு, ஜுன் 2008, ப.30.
37. மருதமலர், ஆகஸ்ட் 2008, ப.11.
38. மேலது., பிப்ரவரி 2008, ப.16.
39. இந்திய நாடார் முரசு, பிப்ரவரி 2008, ப.14.
40. மேலது., ப.20.
41. பூச்சரம், மார்ச் 2008, ப.59.
42. புதிய யாதவம், டிசம்பர் 2008, ப.82.
43. இந்திய நாடார் முரசு, அக்டோபர் 2008, ப.29.
44. ஆதவன் தீட்சண்யா, இடஒதுக்கீடல்ல மறு பங்கீடு, ப.49.
45. மருதமலர், ஏப்ரல் 2008, ப.11.
46. கொங்கு, டிசம்பர் 2008, ப.5.
47. அகச்சுடர், மே 2008, ப.3.
48. ஒலிக்கும் யாதவர் முரசு, மே 2008, ப.13.
49. செங்குந்த மித்திரன், பிப்ரவரி 2008, ப.24.
50. ஒலிக்கும் யாதவர் முரசு, மார்ச் 2008, ப.41.
51. கொங்கு, ஏப்ரல் 2008, ப.19.
52. ப.தமிழரசி, இருபதாம் நூற்றாண்டு பெண் கவிஞர்கள், ப.45.
53. தேவேந்திரர் மலர், நவம்பர் 2008, ப.23.
54. தெலுங்கர் கீதம், மார்ச் 2008, ப.34.
55. மேலது., மே 2008, ப.22.
56. பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 1.
57. இந்திய நாடார் முரசு, மார்ச் 2008, ப.23.
58. பூச்சரம், மே 2008, ப.57.
59. சுரேஷ் பால், மீடியா உலகம், ப.172.
60. இந்திய நாடார் முரசு, ஜுலை 2008, ப.23.

# இயல் 3

# இன இதழ்களில் தகவல் வெளியீட்டு உத்திகள்

## முன்னுரை

நவீன உலகின் வளர்ச்சி நிலைகளுக்கு மக்கள் தொடர்பு சாதனங்கள் பெரும்பங்கு வகிக்கின்றன. மக்கள் தொடர்புச் சாதனங்களில் இதழ்களின் பணி அளவிடற்கரியது. இதழ்கள் தங்களைத் தக்க வைத்துக் கொள்ளவும், மேலும் வளரவும் காலத்திற்கேற்ப பல உத்திகளைக் கையாள்வது இன்றியமையாததாகிறது.

> சமூகத்தின் பல்வேறு அம்சங்களையும், நிகழ்ச்சிகளையும் சிறந்த கருத்துக்களையும், இலக்கியச் சான்றுகளையும் இன இதழ்கள் புதிய கோணத்தில் தருகின்றன. நன்கு கற்றவர்களுக்கு மட்டுமல்லாது சாதாரண வாசகனுக்கும் புரிய வேண்டும் என்பதற்கிணங்க கூறும் முறையில் எளிய நடையைக் கையாளுகின்றன. இதழ் தொடர்பான பல தகவல்களைத் தருவது அறிவு வளர்ச்சிக்கு உதவும். பொழுது போக்காகப் பயன்படும் கதை, கவிதை, கட்டுரைகளைத் தாங்கி நிற்பது இவைதான் பத்திரிக்கையின் முக்கியமான அம்சங்கள்[1]

என்கிறார் சோமலே. வாசகன் பொழுது போக்கவும் அதே சமயத்தில் அவர்களுக்கு இன விழிப்புணர்வூட்ட கதை, கட்டுரை, கவிதை. தலையங்கம் முதலான இதழியல் கூறுகளை வெளியிடுவதில் இன இதழ்கள் புதுமையைக் கையாள்கின்றன. 2008ஆம் ஆண்டு வெளிவந்த இன இதழ்கள் கையாண்ட உத்திகள் குறித்துக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

## 2.1. இதழியல் விளக்கம்

இதழ்களின் அடிப்படை நோக்கம் மக்களுக்குத் தொண்டு புரிவதே என்கிறார் காந்தியடிகள்.

> செய்தித்தாளின் நோக்கங்களில் அடிப்படையான மக்களின் உணர்வினை அறிந்து அதனை வெளியிடுவதாக இருக்க வேண்டும். மற்றொன்று மக்களிடம் இருக்கின்ற உணர்வுப்பூர்வமான எண்ணங்களை வெளிப்படுத்துவதாகும். மேலும் சமூகத்திடம் இருக்கும் குறைகளையும் துணிச்சலாக எடுத்துரைக்கின்றன[2]

என்பது நோக்கத்தக்கது. மக்களின் உணர்வுகளை அறிந்து வெளியிடப்படுவதாக இதழ்கள் இருந்தாலும், மிகவும் பயன்படக்கூடிய சில உணர்வுகளைத் தோற்றுவிப்பதாகவும் இருக்க வேண்டும் என்ற கருத்தும் சிந்திப்பதற்குரியதாகும்.

பொதுமக்களைக் கவர வேண்டும் என்ற நோக்கத்துடன் அவர்களிடம் உள்ள குறைபாடுகளைச் சுட்டத் தயங்கவும் கூடாது. நடுநிலையுடன் செயல்பட வேண்டிய பொறுப்பும் இதழ்களுக்கு இருப்பதை அறியமுடிகிறது.

சமுதாயத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டுள்ள இதழ்கள் பொறுப்போடும் கலையியல் நோக்கத்தோடும் செயல்படும்போது உண்மையான இதழியல் துறைக்கான பணியை நிறைவேற்றுகின்றன எனக் கொள்ளலாம்.

**இதழியல் பணிகள்**

இதழியல் பணிகள் புனிதமானவை. ஆக்கலும், அழித்தலும் அதனால் இயலும். ஒரு நாட்டின் பொருளாதாரத்தை விரைவுபடுத்தவோ, தாமதப்படுத்தவோ, அதனால் முடியும். தனி மனிதனையும், சமுதாயத்தையும் மேம்படுத்தவோ, தாழ்த்தவோ இதழியலால் முடியும்.

அறிவித்தல், அறிவுறுத்தல், மகிழ்வித்தல் என்பன இதழியலின் இன்றியமையாத பணிகளாகச் சுட்டப்படுகின்றன. இருப்பினும் இதழ்களின் பணிகளைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம். அவை ஒன்று மரபு வழியில் செய்கின்ற பொதுப்பணிகள், மற்றொன்று மக்களாட்சியில் செய்யும் பணிகள் என்பவையாகும்.

**பொதுப்பணிகள்**

இதழியல் துறை மக்களுக்குத் அறிவிப்பதையோ, கற்பிப்பதையோ மட்டும் செய்வதில்லை. மாறாகக் கண்காணிப்பாளராகவும், மக்களின் உரிமைகளின் பாதுகாவலராகவும் செயல்படுகின்றது. ஜூலியஸ் சீசர் காலத்தில் மக்கள் செய்திகளை அறியும் பொருட்டு பொது இடங்களில் செய்தி அறிக்கைப் பலகைகளை வைத்திருந்ததால் இவரை இதழியல் துறையின் தந்தை என்பர். இதழ்களின் பொதுப்பணிகளாக

1. அறிவித்தல் ( To inform)
2. அறிவுறுத்தல் (To instruct)
3. மகிழ்வித்தல் (To entertain)
4. வாணிபம் செய்தல் (To merchandise)

ஆகிய நான்கினைக் குறிப்பிடுகின்றனர்.

**அறிவித்தல்**

*இதழ்களின் பணிகளில் முக்கியமானது செய்திகளை அறிவிப்பது ஆகும். எல்லா நிகழ்வுகளையும் மக்களுக்கு உடனுக்குடன் உண்மையாக விருப்பு, வெறுப்பின்றி சிதைக்காமல் முழுமையாக வழங்குவதாகும். சமுதாயம், சமயம், அரசியல், கலை, பொருளாதாரம், பண்பாடு, தேசியம், உலகம் தொடர்பாக நடைபெறும் எல்லா நடவடிக்கைகளையும் சேகரித்துச் செயல்படுத்திப் பரவச் செய்தல் என்ற பணியை இதழ்கள் செய்கின்றன. மக்கள் அறிய விரும்பும் விலைவாசிகள், சமூக இயங்கு நிலைகள், விளையாட்டு முடிவுகள், தேர்தல் செய்திகள், வேலை வாய்ப்புகள், நடைபெறப்போகும் நிகழ்வுகள் ஆகிய அனைத்தையும் உள்ளடக்கியதாகப் பத்திரிகைகள் திகழ்கின்றன.*

*அறிவித்தல் பணியை இதழ்கள் எப்படி செய்ய வேண்டும் என்பதை அகில இந்தியச் செய்தித் தாள்களின் ஆசிரியர்கள் கூட்டம் (*All India News Papers Editors' Conference*) முதல் பத்திரிகைக் குழுவிற்கு (*First Press Commission*) அளித்த குறிப்பில்,*

> இதழியல் நடப்பு நிகழ்ச்சிகளையும், கருத்துக்களின் போக்குகளையும் மக்களுக்குத் தெரிவிக்கவும் விரிந்து செல்லும் பரப்பில் ஆர்வத்தை ஏற்படுத்தவும், கட்டிக்காக்கவும், பல்வேறு வகையான கருத்துக்களையும் வெளிக்காட்டும் வகையில் நடைமுறைச் சிக்கல்களைப் பற்றிய விவாதத்தைத் தூண்டவும் முயலவேண்டும். இவற்றிற்கெல்லாம் செய்திகளையும் (News) கண்ணோட்டங்களையும் (views) துல்லியமாக நடுவு நிலைமையில் வெளியிடுவதும், மதிப்பீடு செய்வதும் தேவையானதாகும்[3]

*என்று விளக்கம் கூறியிருக்கின்றது.*

**அறிவுறுத்தல்**

*இதழ்கள் செய்திகளை வெளியிடுவதோடு மட்டும் நின்றுவிடாமல் சமுதாயத்தின் மேம்பாட்டிற்குத் தேவையான கருத்துக்களைக் கூறுவது அறிவுறுத்தல் பணியாகும். அக்கருத்துக்கள் சிந்தனை வளத்துடன் தொடர்பு கொண்டு மக்களைச் சிந்திக்க வைக்கும் இயல்புடையவையாகும்.*

*இயற்கைச் சீற்றங்கள், கொடிய நோய்கள் ஏற்படும் பொழுது அதனின்றும் எப்படி மக்கள் தங்களைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டுமென்ற செய்திகளை வெளியிட்டு அறிவுறுத்துவதாகவும் உள்ளது. அரசு அறிவிக்கும் பல்வேறு வகையான*

முன்னேற்றப் பணிகளில் மக்கள் முழு மனத்தோடு ஈடுபட வேண்டுமென்றால், அவற்றைப் பற்றிய அறிவும், தெளிவும் ஏற்படுத்த வேண்டும். ஆட்சிப் பொறுப்பில் இருப்பவர்கள், தவறிழைக்கும் பொழுது இதழ்கள் சுட்டிக்காட்டுவதாகவும் அமைகிறது. தலையங்கங்கள் (Editorials) எழுதியும், சிறப்புக் கட்டுரைகள், கருத்துப் படங்கள், விளக்கப்படங்கள் வெளியிட்டும் செய்தியின் தீவிரத்தை மக்கள் மத்தியில் கொண்டு செல்வதாக உள்ளன.

**மகிழ்வித்தல்**

இதழ்களின் தலையாய பிரிதொரு பணி மகிழ்வித்தலாகும். வாசகர் சோர்வுறாமல் இருக்கச் செய்யும். போட்டியை எதிர் நீச்சலிட்டு எதிர்கொண்டு வெற்றிப் பெறச் செய்தும், உற்சாகமூட்டியும், உணர்வுகளுக்குத் தீனியூட்டியும் இதழ்கள் மகிழ்ச்சிப்படுத்துகின்றன. வண்ண ஓவியங்கள், கருத்துள்ள சிறுகதைகள், சமூகத்தைத் திருத்தும் நெம்புகோல் கவிதைகள், கருத்துச்செறிவுள்ள கட்டுரைகள், நகைச்சுவை துணுக்குகள், சாதனையாளர்களின் பேட்டிகள், திரை விமர்சனங்கள் போன்றவற்றையும் இதழ்கள் வெளியிடுகின்றன. வாசகர்களை மேலும் மகிழ்விக்க இதழ்கள் வண்ணம், வடிவத்தில் கவர்ச்சியுடையதாகவும் வருகின்றன.

**வாணிபம் செய்தல்**

வாணிகம் செய்வது இன்றைய இதழ்களின் முதன்மை நோக்கமாகும். தன்னை நிலைநிறுத்த இதழ்கள் வாணிப நோக்கோடும் செயல்பட வேண்டியுள்ளது. வருமானம் உள்ள இதழ்களால் மட்டுமே தொடர்ச்சியாகவும் துணிச்சலாகவும் கருத்துக்களை மக்கள் முன்வைக்க முடியும். இதழ்களில் வரும் விளம்பரங்கள் வருவாயைப் பெருக்கிக் கொள்ள பெரிதும் உதவுகின்றன. அனைத்துத் தரப்பு வாசகர்களிடத்தும் இதழ்கள் செல்ல வேண்டுமெனில் குறைந்த விலையில் கொடுத்தாக வேண்டும், அதற்கு விளம்பரத்தின் மூலம் வரும் வருவாய் பெரிதும் உதவும். எனவே சந்தைப் பொருட்களின் தன்மைகள் மக்களுக்கு சென்றடைந்தால் வாணிபம் பெருகும் இதற்கு விளம்பரம் துணை செய்கின்றன.

இதழியல் பணிகள் நான்கினையும் மையமாகக் கொண்டே இதழ்கள் உத்திகளை வடிவமைக்கின்றன. உத்தி முறைகளே இதழ்களைத் தொடர்ந்து நடத்துவதற்கும், வாசகர்களைக் கவர்வதற்கும் முன்னிற்கின்றன. இதனால் உத்திகள் என்பது இதழ்களுக்கு இன்றியமையாததாக அமைந்து விடுகின்றன.

**உத்தி விளக்கம்**

உத்தி என்பது 'மேலான செயல்முறை' எனப் பொருள்படும். உத்தியை வடநூலார் 'யுக்தி' என்பர். தமிழில் 'உத்தி' என்ற சொல் உயர்வு, மேன்மை, தெளிவு, நளினம் என்று பலவாறு பொருள் கூறுகின்றன. வீட்டின்மேல் தாங்கிநிற்கும் பலகை 'உத்திரப் பலகை' எனப்படும். அதைப் போல ஒரு கருத்தை வெளிப்படுத்த அதனை மேலாகத் தாங்கி நிற்க உதவும் நயமான சொல்முறை 'உத்தி' எனப்பட்டது. எந்தச் செயலிலும் உத்தி அமையும் போதே அந்தச் செயல் சிறப்படைகிறது. உத்தி (Technique) என்ற சொல்லுக்குச் சொல்லல், மொழிதல் எனறு முறையே தமிழ்மொழி அகராதியும்[4] இலக்கியச் சொல் அகராதியும்[5] பொருள் தருகின்றன. கலை நுணுக்கம், தொழில்நுட்ப முறை என்ற விளக்கங்களை ஆங்கில-தமிழ் அகராதி[6] தந்துள்ளது. ஓர் ஆசிரியரால் பயன்படுத்தப்படும் இலக்கியக் கருவியே 'உத்தி' என்று தமிழ்ச் சொற்களஞ்சியமும்[7] ஆங்கில-தமிழ் அகராதியும்[8] கூறுகின்றன.

'உ' என்பது உத்தியின் வேர்ச்சொல். இதனடிப்படையில் 'உ' என்பது பொருந்துதல் எனப் பொருள் தரும். இது பொதுநிலை நுட்பத்திறன் எனச் சிறப்பு நிலையில் பொருள் தரும்[9] என்று கூறுவர்.

> செய்திறன் என்பது உத்தியே ஆகும். வடிவம் உருவாவதற்கு அதுவே காரணம். உள்ளடக்கத்திற்கும் (அல்லது அனுபவத்திற்கும்) முயன்று அமையப்பட்ட உள்ளடக்கத்திற்கும் (அல்லது கலைக்கும்) உள்ள வேறுபாடே உத்தி[10]

என்பார் மா.இராமலிங்கம். ஒரு படைப்பில் நுட்பத்திறன் செய்திறனோடு அமைவது உத்தியாகும்.

**உத்திகள் செயலாக்கம்**

படைப்பாசிரியரின் அறிவுத்திறன், கற்பனை வளம், கலைச்சூழல் ஆகியவற்றைப் பொறுத்து உத்திகள் வேறுபட்டு அமைகின்றன. உத்தி என்பது செய்தியை (அல்லது) கருத்தைத் தெளிவுற விளக்குவதோடு, அதைச் சுவையாக வளர்த்துச் செல்லவும் பயன்படுகின்றது. உத்தியானது உய்த்துணர வைக்கும் கலை நுணுக்கமாகும். உத்தி பற்றிக் குறிப்பிடும் மேலாண்மை பொன்னுச்சாமி,

> மரத்தின் உச்சியில் அடர்த்தியான கிளைகள். ஒரு கிளையில் தேன்கூடு, அதை எடுக்க ஒரு இளைஞன் விரும்புகிறான். அண்ணாந்து பார்க்கிறான் எப்படி ஏறலாம், எந்தக் கிளை வழியாக ஏறலாம், அதை நெடுங்காலம் உட்கார்ந்து தேன்கூட்டுக்குப்

புகை கட்டலாம். தேன்கூட்டைச் சிந்தாமல் சிதறாமல் எப்படிப் பிய்க்கலாம் என்று திட்டமிடுகின்றானே அது உத்தி[11]

என்று குறிப்பிடுகின்றார். உத்தி, செய்திக்கு முக்கியமான ஒன்றாக அமைகின்றது. மரத்திலுள்ள தேனை எடுப்பதற்கு எப்படித் திட்டமிடுகின்றானோ அதுபோல ஒரு செய்தியை வெளியிடுவதற்கு முன் அச்செய்தியை எவ்வாறு சுவையாக எடுத்துச்சொல்வது, அதற்கான வழிகளை எவ்வாறு இயல்புற படைத்துக் காட்டுவது என்று திட்டமிடுவது எல்லாம் உத்தியின் பாற்பட்டதே எனலாம்.

தமிழின் தொன்மையான நூலான தொல்காப்பியத்திலேயே ‘உத்தி’ என்னும் சொல் வந்துள்ளது. இலக்கியத்திற்கு உத்தி என்பது சிறப்பான உறுப்பு என்பதையும், அதன் வகைகைளையும், தொல்காப்பியம் விரிவாக எடுத்துக் கூறுவதைக் காணலாம்.

ஒத்த காட்சி உத்தி வகை விரிப்பின்[12]

என்னும் நூற்பாவில் ‘உத்தி வகை’ விளக்கப்பட்டதோடு அது விரித்துரைக்கவும்பட்டுள்ளது. முப்பத்திரண்டு வகை உத்திகளைத் தொல்காப்பிய இறுதி நூற்பா கூறுகின்றது. இதனால் உத்தி என்பதைத் தமிழில் மிகப் பழமையான ஒன்று என்பதை அறியலாம்.

பழந்தமிழ்ச் செய்யுள்களில் உத்திகள் கையாளப்பட்டுள்ளன. பிற்காலப் புதுக்கவிதைகள், புதினங்கள், நாடகம், திரைப்படம் போன்ற கலைகளிலும் உத்தி என்னும் நெறிமுறை கையாளப்பட்டுள்ளது.

கருத்துக்களை எம்முறையில், எத்தகைய மொழியில் எவ்வமைப்பில் வெளியிடப் பெறவேண்டும் என்பதே உத்தி[13]

என்று ஜேம்ஸ் ரீவ்ஸ் என்ற மேனாட்டுத் திறனாய்வாளர் விளக்கி உள்ளார். மாாக் ஹோரர் என்னும் திறனாய்வாளர்,

கலைத்திறன் வாய்ந்த நாடக ஆசிரியர் தங்கள் நாடகங்களில் கலைத்திறன் வாய்ந்த உத்திகளைப் பயன்படுத்துவர். நாடக ஆசிரியர்கள் தாங்கள் சொல்ல விரும்பும் செய்திகளைப் பொருத்தமான உத்திகளின் மூலமே எடுத்துக்காட்டுவர். ஒரு கலைப்படைப்பை மதிப்பீடு செய்வதற்கு உத்திகள் தான் சிறந்த கருவி[14]

என்று நாடக உத்திகளை விளக்கிக் கூறுகிறார்.

பொதுவாக உத்தி என்பது ஆசிரியன் தன் திறமைகளை, வெளிக் கொணர்வதற்குக் கையாளக்கூடிய ஒரு கருவியே[15]

என்பர்.

*உத்தி என்பது,*

பொதுவாக படைப்பாளர் தான் கூற வந்த செய்தியான உள்ளடக்கத்தை வெளிப்படுத்தும் முறையே உத்தி[16]

*என்பர்.*

இலக்கிய ஆக்கத்திற்குப் படைப்பாளன் மேற்கொள்ளும் பல்வேறு அணுகுமுறைகள் சிறுகூறுகளாகவும், முழுமையான சொல்லாகவும், கருத்தாகவும் மறைத்து வெளிப்பட்டு நிற்கும் தன்மை உத்தி[17]

*என விளக்கமளிப்பர்.*

*உத்தி என்பதற்கு,*

படைப்பாளன் தான் சொல்லவரும் கருத்துக்களைக் கற்பவர் மனத்தில் எளிதில் பதியச் செய்யவும், விளங்க வைக்கவும் கையாளும் முறைகள் உத்தியாகும்[18]

*என விளக்குவர்.*

*மேற்கூறப்பட்ட உத்திகள் இன இதழ்களில் எவ்வாறு கையாளப்பட்டுள்ளன என்பதைப் பின்வரும் கூறுகள் வழி தெளிவுறலாம்.*

**இன இதழியல் கூறுகள்**

*வளர்ச்சி நிலையினைக் கருத்தில் கொண்டும், இதழ்களைத் தொடர்ந்து நடத்துவதற்காகவும் பல உத்திகளை இதழ்கள் கையாள வேண்டியுள்ளது. இக்காலச் சூழலில் இவ்வகை உத்திகளை இன இதழ்களும் கையாளுகின்றன. இனத்தவரின் கல்வி நிலைக்கும், விழிப்புணர்வு பெறுவதற்கும், பொருளாதார மேம்பாடு அடையவும், கருத்து மேம்பாட்டிற்கும் உத்திகள் பயன்படுவனவாக உள்ளன. இவ்வுத்திகளில் பல கூறுகள் இடம் பெற்றுள்ளன.*

*இன இதழாசிரியர்கள் தங்கள் இதழ்களைச் சிறந்த முறையில் வெளியிட்டு இன வாசகர்களை ஈர்க்கவும், அதன் வழி இனத்தை மேன்மைப்படுத்தவும் உத்திகளைப் பயன்படுத்துகின்றனர். அவைகளுள் தலையங்கம், பக்கப் புனைவு, தலைப்பு, படங்கள், மொழிநடை, கதை, கவிதை, கட்டுரை, நாடகம் போன்ற படைப்புத் தன்மைகள், வரலாறு, வேளாண்மை, மருத்துவம், சமையல் பகுதி, சோதிடம், வீட்டுக்குறிப்புகள், புதிர்கள், விமர்சனம், கேள்வி - பதில், இனத்துணுக்கு, திருமண வரன், பரிசுப்போட்டி, தாள் தரம், சிறப்பு மலர், நேர்காணல், வண்ணம், பொது அறிவு மற்றும் வாசகர் கடிதம் எனும் பகுதிகளை இன இதழியல் கூறுகளாகக் கொள்ளலாம்.*

**தலையங்கம்**

பத்திரிகைகள் மற்றும் இதழ்களில் தலையங்கம் முதன்மையான இடத்தைப் பெறுகின்றது. ஓர் இதழின் இதயப் பகுதி தலையங்கம் ஆகும் இப்பகுதி இதழின் நோக்கத்தை வெளிக்காட்டும். இதழாசிரியரின் நேர்மையும், துணிவும், நுண்ணறிவும் தலையங்கத்தின் வழி புலப்படும். அறிவின் வயப்பட்டவர்களுக்குத் தலையங்கம் விருந்தாய் அமையும், இதழியல் வல்லுநர்கள் ஒவ்வொரு இதழிலும் தலையங்கம் இடம்பெற வேண்டிய இன்றியமையாமையை வலியுறுத்துகின்றனர். 'எண்சான் உடம்பிற்கு சிரசே (தலையே) பிரதானம்' என்பது போல் தலையங்கம் இதழ்களில் சிறப்பான இடத்தைப் பெறுகின்றது.

**தலையங்கத்தின் நோக்கம்**

> இதழின் தரத்தினை வெளிப்படுத்துவதாக இவை அமையும். ஒரு நாட்டின் வளர்ச்சியையும், அந்நாட்டின் சமூகம், பொருளாதாரம், கலை, கலாச்சாரம், கல்வி, பத்திரிகைத் துறை வளர்ச்சி, அரசியல் போன்றவற்றை மதிப்பீடு செய்வதாகவும் அமையும். 'பலமுறை அறிவு பெற்ற திறமையான ஓர் ஆசிரியர் மக்கள் நலனை மனத்தில் கொண்டு தலையங்கம் எழுதுவாரேயானால் அது வாசகர்களால் பெரிதும் மதிக்கப்படும்[19]

என்று தலையங்கத்தின் நோக்கம் பற்றி கருத்துத் தெரிவிப்பர்.

தலையங்கம் பொதுமக்களின் கருத்துக் கணிப்பினை வெளிப்படுத்துவதாக அமைகிறது. ஒரு சிக்கலை வெளிப்படுத்தி அதன் சூழ்நிலைகளை விளக்கி; சிக்கலுக்கு ஒரு தீர்வும் கூறி மக்களுக்குத் தெரியப்படுத்துகிறது. ஆசிரியர் பொதுமக்களின் நலனுக்குட்பட்ட தலையங்கத்தையே அமைப்பர். பரவலாகப் பேசப்பட்ட செய்திகள், இதழ்களில் வெளிவந்த பிரச்சனைகளுக்குரிய செய்திகள் இவற்றை ஆசிரியர் தம் கண்ணோட்டத்தில் தீர்வுடன் வெளியிடுவர்.

> உண்மையும், கருத்தையும், சேர்த்துக் கோவையாகப் பின்னி, சராசரி வாசகர்களும் படிப்பதற்கு ஏற்ற வகையில் மிக முக்கியமான செய்திகளைத் தருவதும், செய்திகளை விவரமாகவும், தெளிவாகவும் ஏற்கும் வகையில் சம்மதத்துடன் உள்ளுணர்வுகளை மகிழ்ச்சியான முறையில் தூண்டுவதும் தலையங்கமாகும்.[20]

பத்திரிகையின் நம்பகத்தன்மையைத் தலையங்கம் எடுத்துக் காட்டுகிறது. ஒரு நல்ல தலையங்க ஆசிரியரின் உண்மை நண்பனாகவும், தத்துவ ஞானியாகவும், வழிகாட்டியாகவும் இதனுடைய வாசகர்களுக்காக இருக்க வேண்டும்.

> பொதுவாக தலையங்கப் பகுதி கட்டுரை வடிவிலேயே வெளியிடப்படுவது மரபு, கட்டுரையினது செய்தி, செய்தி விளக்கம், விவாதம், முடிவு எனும் நான்கு பகுதிகளைக் கொண்டு விளங்கும் ஒரு செய்தியின் உண்மை, அச்செய்தி பற்றிய விரிவான ஆராய்ச்சி, அச்செய்தி பற்றிய ஆசிரியரின் பரிந்துரை என்று மூன்று பிரிவுகளை உள்ளடக்கியது தலையங்கம் என்கின்றனர் இதழியலாளர்கள். இத்தகைய கட்டுரை வடிவ தலையங்கங்கள் விவரித்தல் (Explain), விவாதித்தல் (Argument), அறிவுறுத்தல் (Instruction) மதிப்பிட்டு பாராட்டுதல் (Appraise), மகிழ்வித்தல் (Entertainment), கருத்துரைத்தல் (Interpret) எனும் ஆறு முறைகளில் அமையப்பெறும்[21]

என்பர்.

## இன இதழ்களில் தலையங்கம்

இன இதழ்கள் தலையங்கத்தை வெளியிடுவதில் கட்டுரை, கவிதை, கடித வடிவங்கள், பிரமுகர்களின் சொற்பொழிவுகள் போன்றவற்றை மையப்படுத்தி எழுதுகின்றன.

ஆதரவு தெரிவித்தல், விமர்சனம் செய்தல், தன் கருத்திற்கு ஆதரவு திரட்டல், மகிழ்ச்சியூட்டல், உண்மையை வெளிக்கொணர்தல், செயலை வேகப் படுத்தல், முரண்களைத் தீர்த்தல், செயலில் ஈடுபடுத்தல், ஊழலை எதிர்த்துப் போராடுதல் எனப் பலவகை நோக்கங்களைக் கொண்டுள்ளதாகத் தலையங்கம் அமையலாம்.

> சாதாரண வாசகனுக்குப் பயனுடையதாய் உள்ள ஏதேனும் ஒரு நடப்புச் செய்தியினை விவாதித்து அதன் உண்மைகளைச் சுருக்கமாகவும், தர்க்க ரீதியாகவும் ஆராய்ந்து இதழின் கொள்கைக்கு ஏற்பக் கூறினால் அது தலையங்கமாகும்[22]

என்கிறார் ஜார்ஜ் ஃபாக்ஸ்மாட். இன இதழ்களில் தலையங்கம் என்பது ஆசிரியரின் உரை, ஆசிரியர் குரல், தலைவர் கடிதம், ஆசிரியர் பக்கம் என்ற பெயர்களில் இதழ்களில் மூன்றாம் பக்கத்தில் வலதுபக்கம் இடம்பெறுகின்றன. இன இதழ்களில் வெளிவரும் தலையங்கங்கள் பெரும்பாலும் அது சார்ந்த வாசகர்கள் தொடர்பாகவே இடம் பெறுகின்றன.

இதழ்கள் பொதுநிலையில் பல்வகைப்பட்ட உள்ளடக்கங்களைக் கொண்ட தலையங்கங்களை வெளியிட ஆய்வுக்குட்பட்ட இன இதழ்கள் இருவகை உத்திகளைக்

கொண்டுள்ளன. ஒன்று கருத்துக்களின் பன்முக வெளியீடு, மற்றொன்று பல்வேறு கூறுகளைத் தலையங்கத்தில் வெளியிடல் என இருவகையில் அமைகின்றன.

**மருதமலர்**

மள்ளர்கள் என்றழைக்கப்படும் தேவேந்திரகுல வேளாளர் இனத்திற்காகத் தொடங்கப்பட்ட இவ்விதழில் தலையங்கம், ‘ஆசிரியர் கடிதம்’ என்னும் பெயரிலும், சில இதழ்களில் ‘தலையங்கம்’ என்னும் பெயரிலும் அமைந்துள்ளது. ‘ஒற்றுமை இல்லை என்ற ஓலம்தான் எங்கும் என் காதுகளில் கேட்கிறது’ என்ற தலைப்பில் இடம் பெற்றிருக்கும் தலையங்கத்தில் இன ஒற்றுமை நீங்கிடில் நம் அனைவருக்கும் தாழ்வே என்னும் பாரதியின் பாடலை மேற்கோள் காட்டியும், எவரெஸ்ட் சிகரத்தை எட்டிப்பிடித்த ஹிலாரி டென்சிங் எத்தனை கஷ்டப்பட்டிருப்பார். அதனால் அவர் பெயர் இன்றுவரை பேசப்படுகிறதைக் குறிப்பிட்டு இனத்தாரிடையே விழிப்புணர்வு கொள்ளச் செய்வது சிறப்பானதாக அமைகின்றது.

‘ஆசிரியர் கடிதம்’ என்னும் தலைப்பில் இடம் பெறும் தலையங்கத்தில் திருமண வாழ்க்கைப் பற்றி குறிப்பிடுகையில்,

> திருமணம் வாழ்க்கையின் திருப்பு முனை, அது நேர்மறையாக அமையவேண்டும். திருமணத்துக்குப் பின் மகிழ்ச்சியுடன் வாழ கற்றுக் கொள்ளுங்கள். பெண்ணோ, ஆணோ ஒருவரை ஒருவர் பிரிந்து வாழும் நிலை ஏற்படாமல் நல்ல வாழ்க்கையை அமைத்துக் கொள்ளுங்கள். உங்கள் வாழ்வின் சந்தோஷம் உங்கள் பெற்றோர் அல்லது உறவினர்களின் கைகளில் அல்ல. அது உங்களின் கைகளில்தான் இருக்கிறது[23]

என ஆசிரியர் குறிப்பிடுவதன் வாயிலாக இன மக்களின் குடும்ப வாழ்க்கைக்கு முக்கியத்துவம் அளிப்பதாக அமைகின்றது.

> ஆசிரியர் கடிதம் என்னும் தலையங்கத்தில் (மருதமலர், நவம்பர்-2008),
> இந்த சமுதாயத்தில் உள்ளவர்கள் எத்தனையோ அரசியல் கட்சிகளுக்கு அடிமையாகி ஓடி ஓடி உழைத்து அவர்களை உயரே தூக்கி வைத்து வெற்றி பெறச் செய்த உன்னை வெற்றி பெற்ற பின் எப்போதாவது ஏறிட்டு பார்த்தார்களா ? உனது சமூக நலனில் யாராவது அக்கறை செலுத்துகின்றனரா ?[24]

என அரசியல் கட்சிகள் இனத்துக்கு இழைத்து வரும் அநீதிகளைக் குறிப்பிட்டு இனமக்களிடம் வினாக்கணைகளைத் தொடுக்கிறது. மருதமலர் இதழில் இடம்பெறும்

தலையங்கங்களில் இனமக்களின் பிரச்சனைகளும் சந்தா பற்றிய செய்திகளுமே அதிகளவில் இடம்பெறுகின்றன.

**தேவேந்திரர் மலர்**

மள்ளர்கள் என்றும், தேவேந்திர குலவேளாளர் என்றழைக்கப்படும் பள்ளர் இனமக்களின் குரலாக தேவேந்திரர் மலர் அமைந்துள்ளது. இவ்விதழில் தலையங்கம் இரண்டாம் பக்கத்தில் வெளியாகின்றது.

ஜனவரி-2008 இதழ் தலையங்கம் 'சிந்தியுங்கள்! எழுதுங்கள்! செயல்படுவோம்!' என்னும் தலைப்பில், வேளாண்மைத் தொழிலை முதன்மையாகக் கொண்டு விளங்கும் இனத்தை எஸ்.சி பட்டியலில் சேர்த்தது தொடர்பான விவாதங்களை எழுப்புவதாக அமைந்துள்ளது.

மே -2008 இதழ் தலையங்கம் 'பார்வையும் பயணமும்' என்னும் தலைப்பில்,

> தேவேந்திர குலவேளாளர்களின் சமூக, பண்பாட்டுப் பயணங்கள் எவ்விதம் தொடர்கின்றன. இதில் ஒவ்வொருவரும் என்ன செய்ய வேண்டும் என்பதை எடுத்துக்கூறுவதாக நம் கோரிக்கைகள் மக்கள் இயக்கமாக மாறவில்லை என்றும் இந்தக் கோரிக்கை நம் வாழ்வாதாரப் பிரச்சனை என்று ஒவ்வொருவர் மனதிலும் ஏற்றுக்கொண்டு, இயக்கமாக மாற வேண்டும். இந்தப் பார்வையுடன் ஒவ்வொரு தேவேந்திரர்களும் பயணத்தைத் தொடங்குங்கள்[25]

என விளம்புகிறது.

நவம்பர்-2008 இதழ் தலையங்கம் 'உத்தப்புரம் பிரச்சனையும் தீர்வும்' என்றும் தலைப்பில் இடம் பெறுகின்றது. உத்தப்புரத்தில் வாழும் மள்ளர் இனமக்களிடம் காட்டும் சாதித் தீண்டாமை குறித்தும், இப்பிரச்சினைக்கு எதிர்கால தீர்வு என்ன? என்பதையும் வெளிப்படுத்துகிறது. தேவேந்திரர் மலர் இதழில் இடம் பெறும் தலையங்கங்கள் இனம் சார்ந்த நிகழ்வுகளை மையமிட்டும், பொதுவான அரசியல், பொருளாதாரம் தொடர்பான தலையங்களும் வெளிவருகின்றன.

**இந்திய நாடார் முரசு**

நாடார் இனமக்களுக்காக வெளிவரும் 'இந்திய நாடார் முரசு' என்னும் இவ்விதழில் 'ஆசிரியர் உரை' என்ற பெயரில் தலையங்கம் இடம் பெறுகின்றது.

*ஒவ்வொரு இதழின் தலையங்கத் தொடக்கத்தில் 'சேர, சோழ, பாண்டியர் வழி வந்த நாடார்களே!' என விளிக்கின்றார்.*

*"இந்திய நாடார் முரசு" இதழில் ஆசிரியர் உரை என்ற பெயரில் இடம் பெற்றுள்ள தலையங்கத்தில்,*

> ஒரு சமுதாய மாற்றங்கள் அந்த நாட்டின் தன்மையையே மாற்றும் தன்மை படைத்தது என்கிறார். நாடார்களின் முன்னேற்றம் தமிழர்களின் முன்னேற்றம் என்றும், பிற இனத்தவரும் கூட நாடார் சமூகத்தவரைப் போல் முன்னேற வேண்டும் என்றும் அவர்களது கூட்டத்தாருக்குக் கூறுவதன் வாயிலாக இனப்பெருமையை ஆசிரியர் வெளிப்படுத்துகிறார்.[26]

*பிப்ரவரி -2008 இதழின் தலையங்கத்தில்,*

> 'பதவிகள் கடமை ஆற்றவே' என்னும் தலைப்பில் நாள் முழுவதும் உழைப்பவர்களை வேலைக்காரர் கூலிக்காரர் என்று குறை கூறுகின்றோம். உழைப்பே இல்லாமல் பிறர் உழைப்பால் வாழ்ந்துவரும் சோம்பேறிகளை எஜமானர் - மகாராசர் என்கிறோம். ஏழைகளின் துயரம் நீங்கவே நான் முதன் மந்திரிப்பதவி ஏற்றுள்ளேன். இல்லையேல் எனக்கு இந்தப்பதவி தேவையில்லை[27]

*என இனத்தலைவரும் முன்னாள் முதலமைச்சருமாகிய காமராசர் அவர்களின் கூற்றைக் குறிப்பிட்டு அன்பர்களே! பதவிகள் கடமை ஆற்றவே! மறந்துவிடாதீர்கள் என இனத்தின் இன்றைய தலைவர்களுக்கு ஆலோசனை கூறுவதாக அமைந்துள்ளது.*

*ஆகஸ்ட் -2008 இதழின் தலையங்கத்தில்,*

> உலகிலேயே முதன்முதலில் பிற அதிகாரவர்க்கத்தினரிடமிருந்து சுயமரியாதையைப் பெறப் பாடுபட்ட முதல் சமுதாயம் நாடார் சமுதாயம் தான் என்பதற்கு நம் மூதாதையருக்கு நன்றி செலுத்த வேண்டும்[28]

*என்று இனப்பெருமையை வெளிப்படுத்தியுள்ளனர்.*

*இந்திய நாடார் முரசு இதழின் தலையங்கங்கள் நடப்பு நிகழ்வுகள், இன நிகழ்வுகள் போன்றவற்றை அறிஞர்களின் கருத்துகள், கதைகள் வாயிலாக இம்மக்களுக்கு இனப்பற்றை எடுத்துரைக்கின்றன.*

**கொங்கு**

*'கொங்கு' என்னும் இவ்விதழ் கொங்கு வேளாளக்கவுண்டர் இனமக்களின் குரலாக வெளிவருகின்றது. கொங்கு இதழில் தலையங்கம் கொங்கு வேளாளக் கவுண்டர் பேரவையின் மாநிலத்தலைவர் பெஸ்ட் எஸ்.இராமசாமி என்பவரால் எழுதப்பெற்றுள்ளது. அன்புள்ள கொங்குச் சொந்தங்களே! என விளித்து, எல்லா தலையங்கங்களும் அமைந்துள்ளன. ஜனவரி -2008 இதழின் தலையங்கத்தில் 'என் இரத்தத்தில் கலந்துவிட்ட பாச உணர்வு', 'நாட்டில் நம் இனத்தின் நிலைமை, 'நமது கடமைகள்' போன்ற உட்தலைப்புகளில்,*

> கொங்கு வேளாள மக்களின் முன்னேற்றத்திற்குச் சேவை செய்வது எனது இரத்தத்தில் கலந்துவிட்ட பாசஉணர்வாகும்[29]

*என இனப்பற்றையும், பேரவையின் தலைமைப் பொறுப்பில் இருக்கும் நாங்கள் மட்டும் தன்னிச்சையாக எச்செயலைச் செய்தாலும் அச்செயல் பயனற்று போய்விடும். அத்துடன் பேரவையும் பலவீனம் அடைந்துவிடும் என்பதை உணர்ந்து, கொங்குச் சொந்தங்கள் அனைவரும், ஒற்றுமை உணர்வோடு எங்களுக்கு ஒத்துழைப்பு கொடுப்பீர்கள் என நம்புகிறோம் என இனமக்களுக்குக் கோரிக்கையும் விடுக்கிறது.*

> இன்று நம் இடஒதுக்கீட்டிலிருந்து 7% எடுத்து சிறுபான்மையினருக்கு வழங்கியுள்ளார். வன்னியர் சாதியாக இருந்தால் இந்நேரம் பெரிய போராட்டமே நடந்திருக்கும். நம் இனம் இடஒதுக்கீட்டில் வஞ்சிக்கப்பட்டுள்ளது. ஆகவே நம் இனஒற்றுமை இன்று அவசியம் தேவை[30]

*என இடஒதுக்கீட்டு முறை குறித்து இனமக்களிடம் பிற இனத்தை ஒப்பிட்டு வலியுறுக்கிறது.*

*ஏப்ரல் -2008 இதழின் தலையங்கத்தில்,*

> நாம் மற்ற எந்த இனத்திற்கும் இடையூறுகள் செய்வதில்லை. நம்முடன் சேர்ந்து வாழும் எல்லா இனமக்களோடும் ஒற்றுமையோடு வாழ்ந்து வருகிறோம். பண்போடும், பாசத்தோடும் நம்முடன் வாழ்வோரிடம் நேசமுடன் சேர்ந்து வாழ்வதே நம் முன்னோர் நமக்கு கற்றுத்தந்த பாடமாகும்[31]

*என இனமக்களின் தன்மையை வெளிப்படுத்துகின்றது.*

*இன மாநாடுகள், மின்சார வெட்டு, இலங்கை இனப்பிரச்சனை போன்றவை குறித்தும் தலையங்கங்கள் இடம் பெற்றுள்ளன. கொங்கு இதழில் பல்வேறுபட்ட பொது*

நிகழ்வுகளின் தலையங்கத்தோடு இனம் குறித்த தலையங்கமும் கலந்தே அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

**செங்குந்த மித்திரன்**

முதலியார் இனம் சார்பாக வெளிவரும் இதழ் செங்குந்த மித்திரன் ஆகும். இவ்விதழில் தலையங்கம் என்பது 'தலைவர் கடிதம்' என்னும் தலைப்பில் செங்குந்த முதலியார் சங்கத் தலைவர் ஜெ.சுத்தானந்தம் என்பவரால் எழுதப்பட்டுள்ளது. 'அன்புள்ள இனிய சொந்தங்களே!' என விளித்துத் தலையங்கம் தொடங்கப் பெறுகின்றது.

பிப்ரவரி-2008 இதழின் தலையங்கம்,

அரசாங்கத்திடம் நம் உரிமைகளுக்காகக் குரல் கொடுப்பது அல்லது போராடுவது மட்டும் ஒரு சமுதாய அமைப்பினுடைய பணியாக இருக்க முடியாது. குல முன்னேற்றத்திற்குப் பாடுபடுவதும் தலையாய பணியாகும்[32]

என விளக்குகிறது.

ஏப்ரல் - 2008 இதழின் தலையங்கம் மாநிலத்தலைவர் சுற்றுப்பயண அனுபவங்களும், மாணவ, மாணவியர்க்கு வழங்கப்படும் உதவித்தொகைகள் பற்றியும் எடுத்துரைக்கின்றது.

அக்டோபர்-2008 இதழின் தலையங்கத்தில்,

என்னைப் பொறுத்தமட்டில் செங்குந்த சமுதாயத்தின் அடித்தட்டில் வீழ்ந்து கிடக்கும் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கான வழிவகைகளை யார் சொன்னாலும் அவற்றை ஏற்றுக்கொண்டு நடைமுறைப்படுத்த தயங்கியதில்லை[33]

எனக் குறிப்பிடுவதன் வாயிலாக இனப்பற்று வெளிப்படுகின்றது.

இவ்விதழில் இடம் பெறும் தலையங்களில் பெரும்பாலும் ஆன்மீகம், தன்னம்பிக்கை மற்றும் மிகுதியாக இன மாணவ மாணவியர்க்கு உயர்கல்வி ஆலோசனை, இனப்பெருமை, இனப்பற்று ஆகியன வெளிப்படுகின்றன.

**அச்சமில்லை**

*வன்னியர் இன மேன்மைக்காக வெளிவரும் இதழ் 'அச்சமில்லை' ஆகும். இவ்விதழில் தலையங்கம் முதல் பக்கத்தில் அமைந்துள்ளது.*

*மே-2008 இதழ் தலையங்கம் "அரசியல் வாதிகளின் நினைவெல்லாம் கனவெல்லாம் சிறுபான்மையினரே" என்னும் தலைப்பில் தமிழ்நாட்டில் மட்டுமல்லாது தேசிய அளவிலும் பெரும்பான்மைச் சமூகத்திற்கு இழைக்கப்படும் அநீதியை வெளிப்படுத்துகிறது.*

> அரசியல் வாதிகள் சிறுபான்மையினர் மூச்சுவிட்டால் போதும் - எள் என்பதற்கு முன்பே எண்ணெயாக நின்று அவர்கள் கோரிக்கைகளை நிறைவேற்றக் காத்துக் கிடக்கிறார்கள். வறுமைக் கோட்டுக்கும் கீழே வாழ்பவர்களில் 90 சதவிகிதம் பேர் பெரும்பான்மை சமூகத்தவர்களே, அவர்கள் கரடியாய் கத்தினாலும் எந்த அரசியல்வாதியும் அதைக்காதில் வாங்கிக் கொள்வதில்லை[34]

*என இனமக்களுக்கான ஆதங்கமாக அமையாமல் ஒட்டுமொத்த பிற்படுத்தப்பட்ட, ஒடுக்கப்பட்ட இனங்களின் குரலாக ஒலிக்கிறது.*

*நவம்பர்-2008 இதழ் தலையங்கமாக "ஈழத் தமிழர்களைக் கொன்று குவிப்பது இலங்கை அரசு மட்டுமா? இந்திய அரசும் சேர்ந்தா? தமிழர்களைக் கேட்க வைக்காதீர்" என்னும் தலைப்பில் ஈழத்தமிழர்கள் வாழ்வியல் நிலைகளையும் சிங்களவர்கள் கொடூரத்தன்மைகளையும் எடுத்துரைத்துப்பதோடு இந்தியாவில் நடைபெற்ற அரசியல் படுகொலைகள் குறித்தும் அரசியல் பூர்வமான விமர்சனமாக வெளிப்படுகிறது.*

*இவ்விதழில் இடம் பெறும் தலையங்கங்கள் பெரும்பாலும் இந்தியப் பொருளாதாரம், அரசியல், பண்பாடு பற்றிய நிகழ்வுகளை மையப்படுத்தி அமைந்துள்ளன.*

**அகச்சுடர்**

*கள்ளர், மறவர், அகமுடையர் என்றழைக்கப்படும் மூன்று பிரிவுகள் இணைந்து 'முக்குலத்தோர்' என்றழைக்கப்படுகின்றனர். இவர்களுள் அகமுடையர் இனமக்களுக்காக வெளிவரும் இதழ் 'அகச்சுடர்' என்பதாகும். இவ்விதழின் தலையங்கம் அட்டையின் முகப்பில் தொடர்பான புகைப்படத்துடன் வெளியிடுகிறது.*

*ஜனவரி-2008 இதழ் தலையங்கத்தில் திருமண உறவுமுறைகள் வாயிலாகப் பல்வேறு மாவட்டங்களில் உள்ள இனமக்களிடையே திருமண உறவால் ஒற்றுமையாக இருப்பதைச் சுட்டிக்காட்டி,*

இந்த ஒற்றுமை என்றும் நீடிக்க வேண்டும் நிச்சயமாக நீடிக்கும். இந்த ஒற்றுமை தான் நம் சமூகத்தின் வலிமை[35]

*என அறிவிக்கின்றது.*

*ஆகஸ்ட்-2008 இதழ் தலையங்கம் அகமுடையர் சங்க பொன்விழா ஆண்டு பற்றியும், அதன் சாதனைகளையும் பட்டியலிடுகிறது.*

நமது இனம் மிகவும் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் இடம் பெறுவதற்காக நாம் எடுத்துக்கொண்ட முயற்சிகளும், தமிழ்நாடு பிற்படுத்தப்பட்டோர் ஆணையத்தை இதற்காக எத்தனை முறை நாம் அணுகி இருக்கின்றோம் என்ற செய்திகளெல்லாம் இன்னும் நமது மனதிலே பசுமரத்து ஆணி போல் பதிந்து உள்ள நிகழ்வுகளை நாம் மறக்க இயலுமா ?[36]

*என வினா தொகுப்பதாக அமைந்திருக்கின்றது. அகச்சுடர் இதழில் அமையும் தலையங்கங்கள் சங்க நிகழ்வுகள், கல்வி மற்றும் இனப்பெருமை குறித்து பேசுகின்றன.*

**பண்டிதம்**

*மருத்துவர் இனமக்களுக்காக வெளிவரும் இதழ் 'பண்டிதம்' ஆகும். இவ்விதழில் தலையங்கம் முதல் பக்கத்தின் வலது புறத்தில் அமைந்துள்ளது. ஜனவரி -2008 இதழ் தலையங்கமாக 'தனிமனித விழிப்புணர்வு' என்னும் தலைப்பில், இதழாசிரியரின் இளமைப் பயணம் அனுபவம் குறித்தும், அரசு, அமைப்புப் போன்றவைகளைவிட தனிமனித விழிப்புணர்வே சமூக நீதி காண அவசியமாகும் என்பதை விளக்குகின்றது. ஜூன் -2008 இதழ் தலையங்கத்தில் 'தேவை அரசியல் விழிப்புணர்வு' என்னும் தலைப்பில் சுதந்திரப் போராட்டத்தில் பலர் ஈடுபட்டாலும் தம் இனத்தில் தோன்றிய தியாகி விஸ்வநாததாஸ் சுதந்திர போராட்டத்திற்காக 29 முறை சிறை சென்றதையும், அவரின் கனவு நனவாக இனமக்கள் அரசியல் விழிப்புணர்வு பெறவேண்டும் என்பதையும் வலியுறுத்துகிறது.*

*அக்டோபர் - 2008 இதழ் தலையங்கமாக 'தூங்கிய நேரத்தில் ஒலித்த சங்கநாதம். . . . .?' என்பதில் தம் இனத்தைத் தட்டியெழுப்பிய தளபதி அமரர் சென்னிய விடுதி வைத்தியநாதன் குறித்து குறிப்பிடுகையில்,*

> தூங்கி கொண்டிருந்த இனத்தை தனது கர்ஜனை குரலால் எழுப்பிய வைத்தியநாதன் எனும் சங்கநாதம் இன்று. . . தூக்கத்திலிருந்து எழுந்துவிட்ட அக்கூட்டத்திற்கு கேட்காத தூரத்திற்குச் சென்று விட்டது என்றாலும் இன்றைய இளைஞர்கள், அந்த சங்கொலி தமது காதுகளில் ரீங்காரம் செய்து கொண்டிருப்பதை உணர வேண்டும்[37]

என இன இளைஞர்களுக்கு விழிப்புணர்வு ஊட்டுவதாக உள்ளது.

இவ்விதழின் தலையங்கங்கள் தமிழ்ப்பண்பாடு, இளைஞர் விழிப்புணர்வு, அரசியல் போன்ற பிரச்சினைகளை மையமாகக் கொண்டு அமைகின்றது.

**கடலார்**

மீனவ இன மக்களுக்காக நடத்தப்பெறும் இதழ் 'கடலார்' என்னும் இதழாகும். இவ்விதழில் தலையங்கமாக 'கடலார் கடிதம்' என்னும் தலைப்பில் இடம் பெறுகின்றது. 'சகஉதிரமே, வணக்கம்!' என விளித்துத் தலையங்கம் தொடங்குகின்றது.

ஜனவரி-2008 இதழ் தலையங்கம்,

> மீனவர்கள் இதர மக்களைக் காட்டிலும் குட்டையாகவும், குறைந்த எடை உள்ளவர்களாகவும் இருக்கிறார்கள். இவர்களிடையே சிசு மரணம் அதிகமாக உள்ளது. மீனவக் குழந்தைகள் வயதுக்கேற்ற வளர்ச்சி அற்றவர்களாக உள்ளனர். மெலிந்த மேனியோடு இருக்கிறார்கள். மீனவக்குடும்பத்தில் சிறுவர்களைக் காட்டிலும் பெண்களிடம் சத்துணவு குறைவிலான குறைபாடுகள் மிகுதியாகத் தெரிகிறது[38]

என்று ஐ.நா.வின் துணை நிறுவனமான உலக உணவு விவசாய அமைப்பு (B.O.B.P.) கூறுவதாக அமைந்துள்ளது.

ஜுன்-2008 இதழ் தலையங்கம் 'கொழுத்த ஓநாய்கள் கும்மியடித்துக் கொண்டிருக்கின்றன' என்னும் தலைப்பில் பிற்படுத்தப்பட்ட இனமக்களுக்கு உயர்கல்வியில் 27 விழுக்காடு இடஒதுக்கீடு வழங்கப்படுவது குறித்து பார்ப்பன ஊடகங்களின் பாகுபாட்டையும், இடஒதுக்கீடு தொடர்பான விளக்கத்தையும் வெளிப்படுத்துகின்றது. கடலார் இதழில் இடம் பெற்றிருக்கும் தலையங்கங்கள் மருத்துவம், கடல்சார் பிரச்சனைகள், அரசியல், விலைவாசி, விளையாட்டு,

தன்னம்பிக்கை, இலங்கை இனப்பிரச்சனை எனப் பல்வேறு வகையான பொருண்மைகளில் இடம்பெறுகின்றன.

**விளக்கு**

முக்குலத்தோரின் ஒரு பிரிவினரான 'கள்ளர்' இனத்தின் சார்பாக வெளியிடப்படும் இதழ் 'விளக்கு' என்னும் இதழாகும். இவ்விதழில் தலையங்கம் என்பது எட்டுத் திசைகள் என்னும் தலைப்பில் இடம் பெறுகின்றது.

பிப்ரவரி-2008 இதழில் 'எட்டுத் திசைகள்' என்னும் தலைப்பில் 'கம்யூனிஸ்டுகளின் இரட்டை நிலைப்பாடு' மும்பை பால்தாக்கரே அரசியல் குறித்து 'மும்பை அப்பாவும், மகனும்', தமிழ் புத்தாண்டு பற்றிய 'கலைஞரின் ஜோதிட கண்டுபிடிப்பு' என்றும் உட்பிரிவுகளில் சமகால அரசியல் நிலைப்பாடு விளக்கப்படுகிறது. மார்ச் -2008 இதழில் 'ஒகேனக்கல் பிரச்சனை' என்னும் தலைப்பில் 'கபட நாடக மாடுகிறது காங்கிரஸ்! கையைப் பிசைகிறார் கலைஞர்!' என நதிநீர் பிரச்சனை பற்றி அலசுகிறது.

இவ்விதழின் சில இதழ்களில் மட்டும் 'எட்டுத் திசைகள்' என்னும் பெயரில் தலையங்கம் இடம் பெறுகின்றது.

**பூச்சரம்**

நகரத்தார் என்றழைக்கப்படும் செட்டியார் இனமக்களுக்காக வெளிவரும் இதழ் 'பூச்சரம்' என்பதாகும். இவ்விதழில் தலையங்கம் தலைப்பு இல்லாமலே அமைந்துள்ளது.

மார்ச்-2008 இதழில் தலையங்கத்தில் இதழ் 'பிரார்த்தனை' என்னும் புதிய பகுதி ஆரம்பிக்கப்படுவது பற்றி, பிரார்ததனைக்காக, உடல்நலமின்றி சிகிச்சை பெற்று வருபவர்களின் விவரங்களை எழுதி அனுப்பினால் அவை பற்றி அனைவரும் பிரார்த்தனை செய்ய ஏதுவாக பூச்சரம் மாத இதழில் வெளியிடப்படும் என்ற அறிவிப்போடு,

> ஒரு குறிப்பிட்ட நாளில் குறிப்பிட்ட நேரத்தில் பூச்சரம் வாசகர்களும், நமது நகரத்தார் பெருமக்களுக்கும் ஒரே நேரத்தில் அவரவர் இருக்கும் இடத்திலேயே

> உடல்நல சிகிச்சை பெற்று வருவர்களின் ஆரோக்கியத்திற்காகப் பிரார்த்தனை செய்ய வேண்டுகிறோம்[39]

என இனமக்களிடையே ஒடுங்கிணைப்பை உருவாக்குகிறது.

அழகப்பர் உருவாக்கிய அறிவாலயம், நமது மாணவர்கள் என்னும் தலைப்புகளில் இனப்பெருமை குறித்த தலையங்கங்களும் இடம் பெற்றுள்ளதை அறிய முடிகிறது.

**தலையங்கம் இடம் பெறா இதழ்கள்**

இன இதழ்கள் பல தலையங்கத்தைச் சிறப்பாக அமைத்துக் கொண்டாலும் சில தலையங்கம் இல்லாமலே வெளிவருகின்றன. அவைகளாவன, யாதவர் இனத்திற்காக வெளிவரும் இதழ்களான ஒலிக்கும் யாதவர் முரசு, புதிய யாதவம், நாயக்கர் இனத்தின் குரலாக அமையும் ‘வீரபாண்டிய கட்டபொம்மன்’, நாயுடு இனம் சார்பாக வெளிவரும் ‘தெலுங்கர் கீதம்’ போன்றன தலையங்கமற்ற இன இதழ்களாக விளங்குகின்றன.

**பக்க ஒருங்கமைப்பு (PAGE MAKE UP)**

ஒவ்வொரு பக்கங்களிலும் எவையெவை எந்த இடத்தில் எப்படி அமைய வேண்டுமென்று தீர்மானித்து அமைப்பதைப் ‘பக்க வடிவமைப்பு’, ‘பக்க ஒருங்கமைப்பு’, ‘பக்கம் கூட்டுதல்’ எனக் கூறலாம். இதழ்களுக்குப் பக்க ஒருங்கமைப்பு, அதன் கவர்ச்சியைக் கூட்டுகின்றது. ஓர் இதழின் சிறப்பு அது எவ்வளவு செய்திகளை வெளியிடுகின்றது என்பது மட்டுமல்ல, எப்படி வெளியிடுகின்றது என்பதையும் பொறுத்தே அமைகின்றது. இத்தகைய பக்க ஒருங்கமைப்பு வாசகர்களிடத்தில் இதழ்களை முதலில் பார்க்கவும், பின் அவற்றை வாசிக்கவும் தூண்டுகிறது.

> எழுத்துக்களின் அளவு, தன்மை முதலிய அனைத்தையும் உணர்ந்து அச்சுக் கோர்த்து கவர்ச்சிகரமான அமைப்பில் பக்கங்களை வெளியிடுவதே பக்க ஒருங்கமைப்பு[40]

எனப் பக்க ஒருங்கமைப்புக்கு விளக்கம் தருவர்.

பல்வேறு கூறுகளையும் உத்திகளையும் முறைப்படுத்துவதற்கும் இதழ்களின் கட்டுக்கோப்பைப் பொலிவுடையதாகக் காட்டுவதற்கும், விற்பனையையும், தரத்தையும் உயர்த்துவதற்கும் உதவுவது பக்க அமைப்பே (Page makeup) நல்ல முறையில் சிந்தித்து உருவாக்கப்பட்ட பக்க அமைப்பு ஆகும். வாசகர்களுக்குக்

*கொடுக்கும் வரவேற்பு போன்றதாகும். கிடைத்த செய்திகளை, கதைகளை, படங்களை, துணுக்குகளை வெளியிடும் முறையில் தான் இதழின் வெற்றி அமைகிறது.*

> பத்திரிகையின் விற்பனைக்குக் காரணியாக அமையும் சிறந்த பக்க அமைப்பு பத்திரிகையின் சாளரம் என அழைக்கப்படுகிறது. சிறந்த கதைகள், கட்டுரைகள், புகைப்படங்கள், சிறந்த முறையில் வெளியிடப்படாவிடில் அவற்றை வாசகர்கள் ஒதுக்கி விடுவார்கள்[41]

*என்ற ரெங்கசாமி பார்த்தசாரதியின் கூற்று பக்க அமைப்பின் இன்றியமையாமையைப் புலப்படுத்துகிறது.*

> ஒரு பத்திரிகையைப் பற்றி நல்லெண்ணத்தை உருவாக்க வேண்டுமெனில் அது வாசகனுடைய பார்வையைக் கவரவேண்டும். அதனுடைய அமைப்பு, பார்க்கத்தூண்டும் தன்மை போன்றன அதில் உள்ள பக்கத்தை மதிப்பிடுவதற்குமுன் கணிக்கப்பட வேண்டும்[42]

*என்கிறார் ஜான் இ.ஆலென். வார இதழ்களின் பக்க அமைப்பு நாளிதழ்களின் பக்க அமைப்பினின்று முற்றிலும் வேறுபட்டதாகும். வார இதழ்களின் பக்கங்களை எவ்வாறு அழகுபடுத்த வேண்டும் என்பதனை ரோலண்ட் இ.உல்ஸ்லி, வாசகர்களது கருத்தினைக் கவரும் மேலட்டை, படிக்கும் பகுதிகள்* (Reading matters), *படங்கள், தலைப்புகள், இடைவெளிகள்* (White Spaces), *பல்வேறு ஒப்பனைகள்* (decorations), *அச்செழுத்துக்கள் ஆகியவற்றை வெவ்வேறு பக்கங்களில் பங்கீடு செய்து அழகுபட அமைக்கும் கலையே பக்க அமைப்புத் திட்டமாகும் என விளக்குகின்றனர். இவ்விளக்கத்தின் அடிப்படையில் பக்க அமைப்புகள் நோக்கம் இங்கு ஆராயப்படுகின்றது.*

**பக்க வடிவமைப்பின் வகைகள்**

*பக்க வடிவமைப்பினைப் பொதுவாக நான்கு வகைகளாகப் பிரித்து விளக்கலாம். அவையாவன,*

1. *சமநிலைப் பக்க அமைப்பு*
2. *பார்வையை ஈர்க்கும் பக்க அமைப்பு*
3. *மாறுபாட்டுச் சமநிலைப் பக்க அமைப்பு*
4. *கலப்பு முறைப் பக்க அமைப்பு*

**சமநிலை பக்க அமைப்பு (Balanced make-up)**

*முறையான அமைப்பில் செய்திகள், படங்கள், கேலிச் சித்திரங்கள், துணுக்குகள், விளம்பரங்கள் ஆகியவற்றைச் சமமாக அமைப்பது சமநிலைப் பக்க அமைப்பு ஆகும்.*

**பார்வையை ஈர்க்கும் பக்க அமைப்பு (The Braced or Focus make-up)**

*வாசகர்களின் பார்வை செய்தித்தாளின் எப்பகுதியில் பட்டு முன்னேறுமோ, அந்தப் பார்வைக் கோணத்தை அடிப்படையாகக் கொண்டு பக்க அமைப்பு அமைத்தலைப் பார்வையை ஈர்க்கும் பக்க அமைப்பு என்பர்.*

**மாறுபாட்டுச் சமநிலை பக்க அமைப்பு (Contrast and Balnaced make-up)**

*சமநிலை பக்க அமைப்புடன் சில மாறுபட்ட அமைப்புகளையும் இணைத்துக் கையாளும் முறையினை மாறுபாட்டுச் சமநிலை பக்க அமைப்பில் அடக்குவர்.*

**கலப்பு முறைப்பக்க ஒருங்கமைப்பு (Mixed make-up)**

*சமநிலை 'பக்க ஒருங்கமைப்பு முறைக்கு நேர் எதிரானது கலப்பு முறைப்பக்க ஒருங்கமைப்பாகும். எந்த ஒரு ஒழுங்கு முறைக்கும் அடங்காமல் இருப்பது இம்முறையாகும். இம்முறையைச் சர்க்கஸ் பக்க ஒருங்கமைப்பு முறை* (Circus make-up) *என்றும் கூறுவர்.*

**இன இதழ்களில் பக்க ஒருங்கமைப்பு**

*இன இதழ்கள் தங்களுக்குக் கிடைத்தச் செய்திகளை வாசகர்கள் அனைவருக்கும் புரியும் வண்ணம் எளிய முறையில் எடுத்துரைக்கின்றன. அத்துடன் அச்சுச்சிறப்பு, சித்திரங்கள், காகிதத்தின் தன்மை ஆகியவையும் வாசகர்களைக் கவரும் காரணிகளாக இருப்பதால் இதழ்கள் அவற்றிலும் கவனம் செலுத்துகின்றன. இனவாசகர்களைத் தக்க வைத்துக்கொள்ள பக்க ஒருங்கமைப்பை இதழியல் உத்திகளுள் ஒன்றாக இதழ்கள் கருதுகின்றன.*

*நான்கு வகைப் பக்க ஒருங்கமைப்பு முறைகளில் கலப்பு முறை பக்க அமைப்பு முறையைக் கொண்டுள்ளன. இன இதழ்கள் அறிவுறுத்தல் பணிக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதால் இதழ்களில் இன விழிப்புணர்வு, இன மேம்பாடு, இன ஒற்றுமை பற்றிய கட்டுரைகள் பல பக்கங்களில் இடம் பெற்றுள்ளன.*

ஆடையில்லா மனிதன் அரைமனிதனாவதைப் போன்று பக்க அமைப்பால் அழகூட்டப்படாத நாளிதழும் அரைகுறைச் செய்தித்தாளாகி விடும்[43]

என்பதற்கேற்ப இதழியலின் மிக முக்கியமான உத்தியாகக் கருதப்படுகிறது. செய்திகளை அறிவித்தலோடு அறிவுறுத்தலும் இவ்விதழ்களின் முக்கியப் பணியாக இருந்த போதிலும் பக்க அமைப்பிலும் அதிகக் கவனம் காட்டுகின்றது. இது இன இதழ்கள் ‘கட்டமைப்பு’ என்னும் சொல்லாட்சி கொண்டு அமைகின்றது.

இன இதழ்கள் நோக்கையும், இலக்கையும் அடைய உத்திகள் இன்றியமையாதவை. இதழின் கட்டமைப்பை ஒட்டி அகப்புற வடிவங்களில் உத்திகள் வகுக்கப்படுகின்றன. இவ்வுத்தி அமைப்பு முறைகள் இதழாசிரியர்களுக்கு மிகு பயனாக அமைந்து உதவுகின்றன.

**இன இதழ்களின் கட்டமைப்பு**

ஒரு பொருளோ, நிறுவனமோ எதுவாக இருந்தாலும் அதற்கென்று கட்டமைப்பு இல்லையென்றால் அது ஓர் ஒழுங்கிற்குள் வரஇயலாது என்பர்.

கட்டமைப்புடன் கட்டப்பட்ட கட்டிடமே சிறந்த வீடெனப்படும். அதுபோல இதழும் சிறந்த கட்டமைப்புடன் அமையும்போது வாசகர்கள் விரும்பிப்படிப்பர். கட்டமைப்பினை இருபிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை,

1. புற வடிவம்
2. அக வடிவம்[44]

என்பர்.

**புற வடிவம்**

புறவடிவம் என்பதை இதழ்களின் வடிவம், அட்டை, தாளின் தரம், எழுத்தமைப்பு, இதழ் பெயர், முகப்போவியம், முகப்பு வாசகம், விளம்பரம், பக்கமைப்புகள் முதலியவற்றைச் சுட்டலாம்.

“அகத்தின் அழகு முகத்தில் தெரியும்” என்பதற்கேற்ப இதழ்களின் உள்ளடக்கச் சிறப்பை வெளிப்படுத்த புறவடிவம் அவசியமானதே. எனவே புறத்தோற்றத்தைச் செழுமைப்படுத்த உத்திகளும் இன்றியமையாததாக விளங்குகின்றன.

## இதழ்களின் வடிவம்

இன இதழ்களின் வடிவம் அதன் தோற்றத்திலும் அளவிலும் ஒரே மாதிரியான அமைப்புகளைக் கொண்டிருக்கவில்லை. ஒவ்வொரு இன இதழும், ஒவ்வொரு அளவில் காணப்படுகின்றது. இருப்பினும் ஒழுங்குப்படுத்துவதன் நோக்கம் கருதி ஆய்வு எல்லையான 2008இல் வெளியான இன இதழ்களைக் கொண்டு சில அளவுகள் வரையறுக்கப்பட்டுள்ளன.

| வ.எண். | அளவுகள் | | இன இதழ் பெயர்கள் |
|---|---|---|---|
| 1. | 6.5" - 4.5" | - | செங்குந்த மித்திரன் |
| 2. | 7" - 4.5" | - | பூச்சரம் |
| 3. | 7" -4.5" | - | வீரபாண்டிய கட்டபொம்மன் |
| 4. | 8" - 5" | - | தேவேந்திரர் மலர் |
| 5. | 8" - 5.5" | - | புதிய யாதவம் |
| 6. | 8" - 6.5" | - | கடலார் |
| 7. | 8" - 6.5" | - | ஒலிக்கும் யாதவர் முரசு |
| 8. | 8" - 6.5" | - | மருதமலர் |
| 9. | 8" - 6.5" | - | தெலுங்கர் கீதம் |
| 10. | 8" - 6.5" | - | கொங்கு |
| 11. | 9" - 6.5" | - | அச்சமில்லை |
| 12. | 9" - 6.5" | - | விளக்கு |
| 13. | 9.5" - 6.5" | - | பண்டிதம் |
| 14. | 9.5" - 7" | - | இந்திய நாடார் முரசு |
| 15. | 9.5" - 7" | - | அகச்சுடர் |
| 16. | 7" - 5" | - | இருளர் செய்தி |

இவ்வாறு இதழின் புற அளவுகள் பல அளவுகளில் அமைந்திருக்கின்றன. 8" - 6.5" அளவில் பெரும்பாலான இன இதழ்கள் வெளிவருவதை அறிய முடிகிறது. இதனோடு நாளேடுகளை இரண்டாக மடித்த அளவில் சில இன இதழ்களும் வெளிவருகின்றன.

## இன இதழ்களின் அட்டை

இன இதழ்களின் அட்டை அவ்விதழ்களின் நோக்கையும், போக்கையும் வெளிப்படுத்தும் பல்வேறு உத்திகளைக் கொண்டதாக அமைந்துள்ளது. இதழின் பெயர், முகப்போவியம், இனத்தலைவர் முகப்படம், சொற்றொடர்கள், தாளின் தரம், எழுத்து

வடிவம், இனக்குறியீடு, இனத்துக்குரிய வண்ணம் போன்ற பல்வேறு வகைகளில் தன் உத்திகளை வெளிப்படுத்துகின்றன.

### அட்டைப் படம்

இதழ் ஒன்றைப் படிக்க கைகளில் எடுத்ததும் வாசகர்களது கண்களில் முதன்முதலில் படுவது அட்டைப்படமாகும். அட்டைப் படங்கள் இதழ்களின் வாயில்களாகும். பத்திரிக்கை புறத்தோற்றமும் வாசகர்களைக் கவரும் வண்ணம் அமையவேண்டும்.

> வாசகர்களை எடுத்துப் படிக்கத் தூண்டக்கூடியது முதலில் அட்டைப்படமாகும். இந்த அட்டைப்படம் இதழின் தரத்தை நிர்ணயிக்கும் இதழியல் கூறுகளில் ஒன்றாகும்[45]

என்பர்.

இன இதழ்களில் அட்டைப்படங்களின் அமைவிடத்தை முகப்பு அட்டை, பின் அட்டை, அட்டைகளின் உட்பக்கங்கள் என மூன்றாகப் பிரிக்கலாம். முன் அட்டை இனம் தொடர்பான பெயரினையும், வெளியிட்டு நாளினையும், படத்தினையும் பெற்று விளங்கும்.

இன இதழ்கள் சில வணிக இதழ்களின் தரத்திற்கு ஏற்ப தன் அட்டைப் படங்களைக் கொண்டதாகவும், தனிவகை வழவழப்புத்தாள் கொண்டு வண்ணத்தில் அமைந்துள்ளன. பேரிதழ்களைப் போன்று கவர்ச்சிப் படங்களின் துணையின்றி இதழ்களின் நோக்கைப் புலப்படுத்தும் விதமாகப் படங்கள் அமைகின்றன. இன இதழ்கள் மேலட்டையில்,

1. நடப்பில் நிகழ்வுப் படங்கள்
2. இன நிகழ்வுப் படங்கள்
3. இன படைப்பாளர், தலைவர்களின் படங்கள்
4. உள்ளடக்கச் செய்தி சார்ந்த படங்கள்

போன்றவை அமைகின்றன.

| எண் | இன இதழ்கள் | இன நிகழ்கால, கடந்த கால தலைவர் படங்கள் | இனப்பேரவை, கூட்ட நிகழ்வுப் படங்கள் | உள்ளடக்க செய்தி சார்ந்த படங்கள் | நடப்பு பொது நிகழ்வுப் படங்கள் |
|---|---|---|---|---|---|
| 1. | மருதமலர் | | | ✓ | |
| 2. | இந்திய நாடார் முரசு | ✓ | | | |
| 3. | கொங்கு | | ✓ | | |
| 4. | செங்குந்தமித்திரன் | ✓ | | | |
| 5. | அச்சமில்லை | | | ✓ | |
| 6. | அகச்சுடர் | | | | ✓ |
| 7. | தேவேந்திரர் மலர் | | | ✓ | |
| 8. | பண்டிதம் | ✓ | | | |
| 9. | கடலார் | | | ✓ | |
| 10. | விளக்கு | | | ✓ | |
| 11. | பூச்சரம் | ஆன்மீகப்படங்கள் | | | |
| 12. | புதிய யாதவம் | ஓவியப் படங்கள் (கண்ணன்) ✓ | | | |
| 13. | வீரபாண்டிய கட்டபொம்மன் | | படத்துடன் செய்திகள் ✓ | | |
| 14. | தெலுங்கர் கீதம் | ✓ | | | |
| 15. | ஒலிக்கும் யாதவர் முரசு | | ✓ | | |
| 16. | இருளர் செய்தி | | | ✓ | |

இவை தவிர இயற்கை, அறிவியல், அரசியல், பண்பாடு, ஆன்மீகம் ஆகிய பொருண்மைகளும் முகப்பு அட்டைப்படங்களாக வெளி வருகின்றன.

### பின் அட்டைப்படங்கள்

இந்திய நாடார் முரசு, கொங்கு, செங்குந்த மித்திரன், கடலார், பூச்சரம், புதிய யாதவம், வீரபாண்டிய கட்டபொம்மன், ஒலிக்கும் யாதவர் முரசு, தெலுங்கர் கீதம், மருதமலர் போன்ற இன இதழ்கள் வர்த்தக விளம்பரங்களைப் பின் அட்டையில் இடுகின்றன. அச்சமில்லை, அகச்சுடர், தேவேந்திரர் மலர், பண்டிதம், விளக்கு போன்ற இன இதழ்கள் இன நிகழ்வு படங்கள் (அல்லது) செய்திகளை வெளியிடுகின்றன.

### அட்டையின் உள் பக்கங்கள்

இன இதழ்களின் முன், பின், உள் அட்டைகளில் பொதுவாக எல்லா இதழ்களிலும் வர்த்தக விளம்பரங்கள் இடம் பெறுகின்றன.

### முன் உள் அட்டை

இன இதழ்களின் முன் உள் அட்டை என்பது முக்கியத்துவம் வாய்ந்ததாக அமைகின்றது. ஏனெனில் இதழை வாசிக்கத் தொடங்குபவனுக்கு உள் பக்க வரவேற்புக் கொடுப்பது முன் உள் அட்டையாகும். இதனால் இந்தப் பக்கத்திற்குச் சில இதழ்கள் மிகுந்த முக்கியத்துவம் கொடுக்கின்றன. அச்சமில்லை, அகச்சுடர், விளக்கு, தேவேந்திரர் மலர் ஆகியன செய்திப்படங்களை அமைத்துள்ளன. இந்திய நாடார் முரசு, கொங்கு, மருதமலர், செங்குந்த மித்திரன், பண்டிதம், கடலார், பூச்சரம், புதிய யாதவம், வீரபாண்டிய கட்டபொம்மன், ஒலிக்கும் யாதவர் முரசு, தெலுங்கர் கீதம் போன்ற இன இதழ்கள் வர்த்தக விளம்பரங்கள் மீது குறி வைக்கின்றன.

### பின் உள் அட்டை

பின் உள் அட்டை பொதுவாக இன இதழ்களில் பெரும்பாலும் வர்த்தக விளம்பரங்களையோ, அல்லது இன விளம்பரங்களையோ தான் வெளியிடுகின்றது. சில இதழ்கள் குறிப்பாக அச்சமில்லை, விளக்கு போன்றவை பின் உள் அட்டையிலும் இனச் செய்திப் படங்களை இடம் பெறச் செய்துள்ளன.

### சொற்றொடர்கள்

பெரும்பாலான இன இதழ்கள் தன் நோக்கைச் ‘சொற்றொடர்’ வாயிலாக அறிவிக்கின்றன. ஏனென்றால் இன வாசகர்களிடத்தில் எளிமையாகவும், விரைவாகப் புரிந்து கொள்ளவும், மனத்தில் நிறுத்திக் கொள்ளவும் இதழ்களின் முகப்பு அட்டையில் இதழின் பெயருக்குக் கீழ்பகுதியிலோ அல்லது இடது பக்கமாகவோ, வலது பக்கமாகவே அமைந்துள்ளன.

| | சொற்றொடர்கள் | | இன இதழ்கள் |
|---|---|---|---|
| 1. | “யாருக்கும் தீங்கெனில் எதிர்ப்பதெம் கடமை<br>ஊருக்கு உழைத்து உயர்வதெம் கொள்கை” | - | மருதமலர் |
| 2. | ‘அகில உலக நாடார்களின் செய்திக் களஞ்சியம்’<br>‘சமுதாய பல்சுவை மாதஇதழ்’ | - | இந்திய நாடார் முரசு |
| 3. | ‘கொங்கு வேளாளக் கவுண்டர்கள் பேரவையின்<br>அதிகாரப் பூர்வ இதழ்’ | - | கொங்கு |

| | | |
|---|---|---|
| 4. | "செங்குந்த மித்திரன் சீரார் இதழ்வாழி!<br>எங்குந்தன் பேர்பரப்பும் ஈடில்லாப் - பொங்குந்தன்<br>கூத்தர்குலம் வாழி! கோலத் தமிழ் வாழி!<br>ஏத்துநலம் வாழி இசைந்து" | - செங்குந்த மித்திரன் |
| 5. | "ஆதிக்க சக்திகள் ஆயிரம் எதிர்த்தாலும்<br>பாதிக்கப்பட்டோர் தம்<br>நீதிக்குப் போராடுவோம்" | - அச்சமில்லை |
| 6. | 'ஒற்றுமை உயர்வு'<br>கற்க கசடற! கற்றபின் நிற்க!! அதற்குத்தக!!! | - அகச்சுடர் |
| 7. | 'நெல்லின் மக்கள் மேம்பாடு'<br>'ஏரும் வீரமும் எங்கள் வாழ்வு' | - தேவேந்திரர் மலர் |
| 8. | 'நோய் நாடி நோய் முதல் நாடி'<br>'சமுதாய விழிப்புணர்வு மாத இதழ்' | - பண்டிதம் |
| 9. | விழி★எழு★ஒன்றுபடு<br>'கடலியல், கடல் உயிரியல், கடல் தொழில்<br>சம்பந்தமாக தமிழில் வரும் ஒரே இதழ்' | - கடலார் |
| 10. | 'அரசியல் சமுதாய இதழ்' | - விளக்கு |
| 11. | "நின்மேலுமாணை மகன்மேலுமாணை நின்மாக் கொழுநன்<br>தன்மேலுமாணை தமிழ்மேலு மாணைதவ மாவணிகச்<br>சின்னஞ் சிறுவர் தெரியாத காளையர் என்செயினும்<br>பின்னும் பொறுத் திருப்பாயே பெரிய இலக்குமியே" | - பூச்சரம் |
| 12. | 'யாதவர்குல மேம்பாட்டு மாதஇதழ்'<br>'தமிழ்நாடு யாதவமகாசபையின் அதிகாரப்பூர்வ திங்களிதழ்' | - புதிய யாதவம் |
| 13. | 'பல்சுவை மாத இதழ்'<br>தெலுங்குச் சொல் இடம் பெற்றுள்ளது<br>'யாதவர் பேரவையின் செய்தி மாத இதழ்' | - தெலுங்கர் கீதம் |
| 14. | "யாம் பிறந்தது யாதவம்<br>அதுவே நாமெல்லாம் செய்த மாதவம்" | - ஒலிக்கும் யாதவர் முரசு |

இன இதழ்கள் இவை போன்ற வாசகங்களை முகப்பிலிட்டு தன் இன நோக்கத்தை வெளிப்படுத்துகின்றன. பல்சுவை மாத இதழ், கலை இலக்கிய மாத இதழ், சமுதாய மாத இதழ் போன்ற வாசகங்கள் பெரும்பாலான இனஇதழ்களில் காணப்படுகின்றன.

### இனஇதழ்களின் பெயர்ப் பொருத்தம்

இன இதழ்களின் பெயரே இனத்தின் நோக்கத்தை வெளிப்படுத்தும் முறையில் அமைந்திருத்தலை இனஇதழ்களின் வாயிலாக அறியமுடிகிறது.

| | | |
|---|---|---|
| மருத மலர் | - | மருதநில மக்களான தேவேந்திரர்களின் பெயரை வெளிப்படுத்தும் முகமாக அமைந்துள்ளது. |
| இந்திய நாடார் முரசு | - | நாடார் இனமக்களின் போர் முரசாக அமைந்து இருக்கிறது. |
| கொங்கு | - | கொங்கு நாட்டிலுள்ள வேளாளக் கவுண்டர்களின் குரலாக அமைந்து இருக்கிறது. |
| செங்குந்தமித்திரன் | - | செங்குந்தர் குல மரபைக் குறிக்கும் வகையில் அமையப் பெற்றிருக்கிறது. |
| அச்சமில்லை | - | ஆதிக்கத்தையும், அடக்குமுறையையும் கண்டு வன்னியர்கள் அஞ்சமாட்டோம் என்பதை வலியுறுத்துவதாக உள்ளது. |
| அகச்சுடர் | - | அகமுடையார் இன மக்களின் அகத்தில் இன ஒற்றுமைச் சுடர் ஏற்றுவதாக அமைகின்றது. |
| தேவேந்திரர் மலர் | - | மருதநில வேந்தனான தேவேந்திரன் வழி வந்தவர்களாக அடையாளக் காட்டுவதாக உள்ளது. |
| பண்டிதம் | - | மருத்துவத்தில் (சிகிச்சை முறையில்) சிறப்புப் பெற்றவர்கள் என்பதைக் குறிக்கும் வகையில் அமைகிறது. |
| கடலார் | - | இதழாசிரியரின் புனைபெயராகவும், கடல் வாழ்வியலைக் கொண்டவராகவும் அமைத்துக் கொள்வதாக உள்ளது. |
| விளக்கு | - | முக்குலத்தோர் இன இருளை நீக்கும் ஒளிவிளக்காக அமைவதைக் குறிக்கும் வகையில் அமைந்துள்ளது. |
| பூச்சரம் | - | நகரத்தார் இன மக்களின் பல்வகைச் சுவையான செய்திகளை இணைத்து சரமாகத் தொடுத்துத் தருதலைக் குறிக்கின்றது. |
| புதிய யாதவம் | - | யாதவருடைய புதுப்பொலிவுடன் பெயர் மாற்றம் செய்யப்பட்டதினால் 'புதிய யாதவம்' எனப்பெயர் பெற்றது. |
| வீரபாண்டிய கட்டபொம்மன் | - | நாயக்கர் இனத்தின் சிறந்த மன்னராகப் போற்றப்படும் பெயரைத் தாங்கி அமைந்திருத்தல். |

ஒலிக்கும் யாதவர் முரசு - யாதவர் இனமக்களைத் தட்டி எழுப்பும் முரசாகச் செயல்படுதல்.

தெலுங்கர் கீதம் - நாயுடு இனத்தைப் பற்றியதாக இருந்தாலும் ஒட்டுமொத்த தெலுங்கு மக்களை ஒருங்கிணைக்கும் கீதமாக விளங்குகிறது.

**விற்பனை**

ஓர் இதழ் தொடர்ந்து நடைபெறுவதற்கு அடிப்படையானது அதன் விற்பனையே. இன இதழ்களாயினும் விற்பனையைப் பொறுத்தே அதன் இயக்கம் தொடரமுடியும். ஓரளவு நல்ல நிதி வளத்தில் செயல்படும் பேரவை, இயக்கம், சங்கங்களின் இன இதழ்களே தொடர்ந்து இயங்க முடிகின்றது. இவ்வாய்ப்பு இல்லாத இன இதழ்கள் தோன்றிச் சில ஆண்டுகளில் மறைந்து போவதையும் காணமுடிகிறது. இன இதழ்களைப் பொறுத்தவரை அதன் சந்தாதாரரே அதன் உயிர் நாடியாக விளங்குகிறது.

> உண்மையான ‘சிறு பத்திரிகை’ விற்பனையாளர்களை எதிர்பார்ப்பதில்லை. சந்தாதாரர்களையே தன் பலமாகக் கொள்ள விரும்புகிறது[46]

என்பதற்கேற்ப இதழ் தொடர்ந்து இயங்க பொருளாதார பலம் இன்றியமையாததாகின்றது. எனவே, இதழ்கள் தம் உறுப்பினர் கட்டண விபரங்களைத் தனியிதழ்விலை, ஆண்டு சந்தா, ஆயுள் கட்டணம் அல்லது புரவலர் கொடை போன்ற விவரங்களைப் பெரும்பாலும் எல்லா இன இதழ்களும் முதல் பக்கத்திலேயே அறிவித்து விடுகின்றன. மேலும் உறுப்பினர் புதுப்பித்தல் குறித்த அறிவிப்புகளையும் அவ்வப்போது தொடர்ந்து வெளியிட்டு வருவதும் குறிப்பிடத்தக்கதாகும்.

ஒவ்வொரு இதழுக்கு விளம்பரம் என்பது மிகவும் இன்றியமையாதது. விளம்பரத்தை இதழின் முதுகெலும்பு என்பர். இதில் இன இதழ்களும் விதி விலக்கல்ல. சுருங்கச் சொன்னால் இதழின் இயக்கத்திற்கு மற்றொரு பலம் விளம்பரம் என்றால் மிகையில்லை. பல இன இதழ்கள் முன் அட்டையின் உட்புறம், பின் அட்டையின் முன்னும், பின்னும், இடைப்பக்கங்களிலும் விளம்பரங்களைத் தருகின்றன. இவ்விளம்பரங்கள் குறித்த கால் பக்க, முழுப்பக்க கட்டணங்களையும் சில இதழ்கள் தெரிவிக்கின்றன. இன இதழ்கள் எவ்வித விளம்பரங்களுமின்றியே வெளிவருவதையும் காணமுடிகிறது. இங்ஙனம் சந்தாவும் விளம்பரமுமே இன இதழ்களின் உயிர்த்துடிப்பாய் அமைந்திருப்பதை அறியமுடிகிறது என்றாலும் விற்பனையை, விளம்பரத்தை, சந்தாக்களை மட்டுமே முழுக்க நம்பி இன இதழ்கள் வெளிவருகின்றன. இன ஒற்றுமை,

இன விழிப்புணர்வு என்கிற கருத்துப் பரவலை முன்னிருத்தியே இவ்வகை இதழ்கள் வெளியாகின்றன. “கடை விரித்தோம் கொள்வாரில்லை” என்பதற்கு மாற்றாக இனத்தின் பல புரவலர்களை மையப்படுத்தி “தெரிந்தே வந்திருக்கிறோம்” என்ற குரலே பல இன இதழ்களின் வெளிப்பாடாக அமைவதையும் அறிய முடிகிறது.

**இன இதழ்களின் சந்தா விபரம்**

| வ. எண் | இன இதழ் | தனி இதழ் ரூ. | ஆண்டுச் சந்தா ரூ. | ஆயுள்சந்தா ரூ. | புரவலர் நிதி ரூ |
|---|---|---|---|---|---|
| 1. | மருதமலர் | 10.00 | 100 | 1000 (15ஆண்டுகள்) | 1000 முதல் |
| 2. | இந்திய நாடார் முரசு | 10.00 | 100 | 2000 | - |
| 3. | கொங்கு | 8.25 | 100 | 500 | - |
| 4. | செங்குந்தமித்திரன் | 5.00 | - | 500 | - |
| 5. | அச்சமில்லை | 10.00 | 120 | 1200 | - |
| 6. | அகச்சுடர் | 1.00 | - | - | - |
| 7. | தேவேந்திரர் மலர் | 10.00 | 100 | 1000 | - |
| 8. | பண்டிதம் | 5.00 | 50 | 500 | - |
| 9. | பூச்சரம் | 15.00 | - | - | - |
| 10. | புதிய யாதவம் | 10.00 | 100 | 500 | - |
| 11. | வீரபாண்டிய கட்டபொம்மன் | 5.00 | 50 | 250 | - |
| 12. | தெலுங்கர் கீதம் | 15.00 | - | - | 10,000 |
| 13. | இருளர் செய்தி | 5.00 | 50 | - | - |
| 14. | ஒலிக்கும் யாதவர் முரசு | 10.00 | 100 | 500 | 1000 |
| 15. | விளக்கு | 5.00 | 60 | - | - |
| 16. | கடலார் | 5.00 | 50 | 300 | 5000 |

என ஆய்வுக்குட்பட்ட இன இதழ்களின் சந்தா விபரங்கள் ஒவ்வொரு இன இதழிலும் வெளியிடுவதை வாடிக்கையாகக் கொண்டுள்ளதை அறியமுடிகிறது.

## மொழிநடை

### மொழியின் சிறப்பு

கருத்துப் பரிமாற்றக் கருவிகளில் முதன்மையானது மொழி. சொல் வளத்தை வைத்தே ஒரு மொழியின் சிறப்பை அறியலாம் என்பர்.

> இலக்கியத்தைப் பொறுத்தவரையில் மொழி, சொல்லையே குறியீடாகக் கொண்டுள்ளது. மனித உள்ளத்தில் கருதுகோள் தோன்றுவதற்கு மொழி அவசியமானது. இவை பட்டறிவின்படியாக வருகின்றன. சொற்கள் பட்டறிவை, அனுபவங்களை, விளக்கிக்கொள்ள, எடுத்துக்கூற, மீளாக்கம் செய்ய

உதவுகின்றன. எழுத்தாளன் கவிஞன் அதனைப் பயன்படுத்தும் போது அனுபவம் தொடர்பு வழியாக (by communication) வாசகன் கேட்பானிடத்து ஏற்படுத்துகின்றது[47]

என்று கா.சிவத்தம்பி விளக்கும் மொழியின் சிறப்பு இங்கு மொழி நடையோடு ஒப்புநோக்கத்தக்கதாகும்.

**மொழிநடை விளக்கம்**

படைப்பாளர் தம் படைப்பிலக்கியத்தில் மொழியைக் கையாளும் தன்மையினை 'மொழிநடை' என்கிறோம். இத்தன்மை படைப்பாளனுக்குத் தக்கவாறும், படைப்பு இலக்கியத்திற்குத் தக்கவாறும் வேறுபடுகிறது. இம்மொழிநடை படைப்புக்கேற்பவும், காலத்திற்கேற்பவும், மாறக்கூடியது. சொல்லாட்சி, வட்டார வழக்கு, வாக்கிய அமைப்பு, இலக்கணம், அழகியல் முதலியன கொண்டு ஒருவரின் இலக்கிய மொழிநடை அமைகிறது.

செய்தித்தாள்களின் நோக்கம் வாசகர்களுக்குச் செய்திகளை அறிவிப்பதாகும். எனவே அவர்களுக்குப் புரியுமாறு செய்திகளை எழுத வேண்டும். இன்றையச் செய்தி நாளைய வரலாறாக மாற முடியும். எனவே அனைவரும் அறிந்திருக்கின்ற எளிய சொற்களில் தெளிவாகச் செய்திகளைத் தெரிவிப்பதுதான் இதழ்களுக்குரிய மொழி நடையாகும்[48]

என்பது இவண் நோக்கத்தக்கது.

இதழியல் நடை இலக்கிய நடையாக இருக்க வேண்டுமென்பதில்லை. எனினும் இலக்கணப் பிழையோ, எழுத்துப் பிழையோ இன்றி மொழிநடை அமைதல் வேண்டும். சிறுசிறு வாக்கியங்களாக அமைந்திருந்தால் தான் மக்கள் தெளிவாகக் கருத்துக்களை அறிய முடியும். வாக்கியங்கள் உடன்பாட்டு வாக்கியங்களில் அமைதல் நலம். கால் புள்ளி, அரைப்புள்ளி, புள்ளி போன்ற நிறுத்தக் குறிகளைச் சரியான இடத்தில் அமைத்தல் அவசியம். மேலும் பிற மொழிச் சொற் கலப்புகளைத் தவிர்த்தல் வேண்டும்.

பேச்சு வழக்கில் இருக்கும் தமிழே உயிருள்ள தமிழ். அதைக் கொச்சை நீக்கி எழுத வேண்டும் என்று புரிகிற தமிழில் எழுதினால் மட்டும் போதாது. பேசுகிற தமிழில் எழுதவேண்டும்[49]

என்று இதழியல் நடை குறித்துக் கூறுகிறார் சி.பா.ஆதித்தனார்.

நடை என்பது ஓர் ஆசிரியரைத் தனித்து இனம் காட்டுகிற வகையில் அமையும். அது அவரது தனித்தன்மையான வெளியீட்டுப் பாங்கே[50]

என்று முர்ரே என்பவர் குறிப்பிடுவதை மா.இராமலிங்கம் மேற்கோளாகக் கையாண்டுள்ளார்.

எண்ணங்களையும், மனத்தில் எழும் உணர்வுகளையும் உரிய சொற்களால் வடித்துக்கொடுக்கும் கலைத்திறனையே நடை எனலாம்.[51]

பொருத்தமான சொற்களைப் பொருத்தமான இடத்தில் கையாளுவது தான் நடையைப் பற்றிய உண்மையான விளக்கமாகும்.[52]

## இதழ்களின் நடை

இதழ்களின் வெற்றிக்கான பல கூறுகளுள் நடையும் ஒன்று. ஒருவரை தனித்து இனம் காட்டுவதும், ஓர் இதழினை ஏற்றமுறச் செய்வதும், மாற்றமுறச் செய்வதும் நடையாகும். இதழின் சிறந்த உத்திகளில் ஒன்றாக நடையைக் கொள்வர்.

நடை என்பது எண்ணம் அல்ல கருத்து என்றும் கருவினைச் சுற்றி அமைந்துள்ள ஒரு கூடு எனவும், ஒரு படைப்பாளியின் அல்லது படைப்பிலக்கியத்தில் காணப்படும் தனிமைக் கூறுகளின் ஒட்டு மொத்தம் எனவும், மொழியின் இயல்பான கூட்டமைப்பிலிருந்து மாறுபட்ட பிறழ்ச்சிகள் எனவும், சொற்றொடர் அடிப்படையின்றி முழுப் படைப்பிலுள்ள மொழியியற்கூறுகளுக்கிடையே காணப்படும் உறவுகள்[53]

என்றும் நடையியலுக்கான வரைவிலக்கணத்தை வரையறுப்பர்.

இதழ்களின் நடையைப் பற்றிக் கூறும்போது,

ஒவ்வொரு பத்திரிக்கையும் அதனதன் இயல்பு, நோக்கம் முதலியவற்றிற்கேற்ப நடைகளைக் கையாண்டும் வருகின்றன. இயக்கத்தின் கொள்கையோடு தனிப்பட்ட ஆசிரியரின் தனித்தன்மையும், உரைநடையில் புலப்படுகின்றது. இவ்வுண்மைகளை மேலை நாட்டவரும் ஒப்புக் கொள்கின்றனர்[54]

என்று இதழியல் ஆசிரியர் கூறுகிறார். இங்ஙனம் இதழியல் நடை ஆசிரியரின் தன்மை, இயக்கத்தின் கொள்கை இவற்றிற்குத்தக அமைகிறது.

## இன இதழ்களின் நடை

இன இதழ்களில் செந்தமிழ் நடை, உணர்ச்சி நடை, வட்டார வழக்கு நடை, பழமொழி நடை, உவமை நடை, கவிதை நடை, கதை நடை என பல நடைகள் பயின்று

வருகின்றன. தலையங்கத் தொடக்கத்தில் இதழாசிரியர்கள் தம் இன மக்களை ஈர்ப்பதற்காக சில விளிச்சொற்களைக் கையாளுகின்றனர்.

**விளிநடை**

என் இனிய சொந்தங்களே![55]

சேர, சோழ, பாண்டியர் வழி வந்த நாடார்களே![56]

அன்புள்ள கொங்கு சொந்தங்களே![57]

அன்புள்ள இனிய சொந்தங்களே![58]

அன்பான உறவு பெருமக்களே![59]

மருத்துவர் இனமே மறுமலர்ச்சி காணவாரீர்[60]

சகஉதிரமே! வணக்கம்[61]

அன்பார்ந்த யாதவ பெருமக்களுக்கு[62]

வீரப்பரம்பரையினரே![63]

அன்புமிக்க யாதவ உடன்பிறப்புகளே![64]

என இன இதழ்கள் ஒவ்வொன்றும் தங்கள் இனமக்களை ஈர்ப்பதற்கு இதழின் தொடக்கத்தில் இரண்டாம், மூன்றாம் பக்கங்களில் இந்த விளித்தொடர்களைப் பயன்படுத்திக் கொள்கின்றன. இவ்வாறான நடையில் இனஉணர்வுடன் கூடிய உறவுகலந்த அன்பு வெளிப்படுவதாகக் கருதுகின்றனர்.

**செந்தமிழ் நடை**

நடைகளுள் செம்மாந்த சிறப்புத்தன்மை பெற்றது செந்தமிழ் நடையாகும். செந்தமிழ் நடை என்பது பிறமொழிச் சொற்களோ கொச்சை மொழிச் சொற்களோ கலந்து வராமல், இலக்கணப் பிழையின்றி அமைகின்ற நடையாகும்.

தனித்தமிழ் நடை என்பது தமிழேயான சொற்களால் மட்டும் அமையப் பெற்றது. இதில் வழக்கொழிந்த சொற்களும் இருக்கும்.

> செந்தமிழ் நடை என்பது வழக்கில் உள்ள தமிழ்ச்சொற்களுடன் இன்றியமையாத பிறசொற்களையும் தமிழ் வயப்படுத்தி இணைத்து எளிதில் யாவர்க்கும் விளங்குமாறு எழுதுவதாகும். கொடுந்தமிழ் நடை என்பது மிகுதியும் இடமொழி தனிப்பட்ட சமூகத்தினர் வழங்கும் மொழி ஆகியவற்றை அப்படியே மேற்கொள்வது. இதனை இலக்கணப் பேச்சு மொழி எனலாம்.[65]

மதிநுட்பம் பரந்த கல்வி தன்னலமின்மை, நெஞ்சுரம், மெய்யறிவா நடுநிலைமை முதலியன நிறைந்து, சுருங்கச் சொல்லும் அறிவுச் சால்புடைமை[66]

*எனத் தேவநேயப்பாவாணர் பற்றிக் குறிப்பிடுகிறது.*

நெற்பயிர் முளைப்பது ஓரிடம் விளைவது வேரிடம்; விதை விழுவது ஓரிடம்; வளர்வது வேரிடம்; பெண் பிறப்பது ஓரிடம்; வாழ்வது வேரிடம்; நெல்லோ; பெண்ணோ; விதையோ காப்பாற்றினால் பயிராகும்[67]

*எனச் செந்தமிழ் நடையை வெளிப்படுத்துவதாக அமைகிறது.*

நெல் தமிழரின் பண்பாட்டுக் கருவூலம், நெல், கரும்பு, வாழை, தென்னை, பனை, மஞ்சள், இஞ்சி போன்ற வித்துக்களை இவ்வுலகத்தில் முதன்முதலில் கண்டுபிடித்தவர் தமிழர் மள்ளர். இவர்கள் வரலாற்றில் ஒரு தனிப்பெரும் இனமாக விளங்கி வந்துள்ளனர்[68]

*என தேவேந்திரர்களின் வாழ்வியலைப் பதிவு செய்கிறது.*

பார்ப்பனீயத்தின் ஆதிக்கம் வளர, வளர தமிழனின் கலாச்சாரங்கள் தலைகீழ் மாற்றம் கண்டன. நிறமற்ற வெண் உடையை வண்ணச் சாயநீரில் தோய்த்தெடுத்து போல பார்ப்பனீயச் சாயம் ஏற, ஏற தமிழ்த் தன்மை மாறாலாயிற்று[69]

*என விளக்குகிறது.*

*இளைய சமுதாயத்தைத் தட்டியெழுப்பும் முகமாக,*

எதிர்காலம் இளையவர்கள் கையில் உள்ளது" என்று கூறப்படுவதை இளையவர் எதிர்காலம் கல்வியில் உள்ளது என்பதாக நாம் கொள்ள வேண்டும். பொருள் கொண்டு, விற்று முதல் கண்டு கொண்டார்கள் என்ற காலம் மலையேற நமது முன்னோர்களின் காலம் போக, தற்பொழுது கல்வி கொண்டு வாழ்கின்ற காலமாகிவிட்டது[70]

*என இன மாணவர்களுக்குப் போதிக்கிறது.*

*பல இன இதழ்களில் செந்தமிழ் நடை கையாளப்படவில்லை. காட்டாக அகச்சுடர், அச்சமில்லை, விளக்கு, வீரபாண்டிய கட்டபொம்மன், கடலார், தெலுங்கர் கீதம் போன்றவை சாதாரண நடையைப் பின்பற்றுகின்றன.*

**உணர்ச்சி நடை**

*ஒரு மனிதனின் அகத்தில் எழும் மனக்குறிப்பை மெய்ப்பாடுகளாக எழுத்திலும், பேச்சிலும் வெளிக்காட்டுவது உணர்ச்சி எனலாம்.*

> ஒரு மனிதனுக்கு ஏற்படும் துயரம், மகிழ்ச்சி, கோபம் போன்ற உணர்ச்சிகளை உள்ளது உள்ளவாறே இடம் பெறச்செய்யும் வகையில் எழுதுவதை உணர்ச்சி நடை[71]

*என்பர். இன இதழ்களில் உணர்ச்சி நடை என்பது இயல்பான ஒன்றாக அமைகின்றது. ஏனென்றால் இனமக்களை விழிப்புணர்வு கொள்ளச் செய்வதற்கு உணர்ச்சி நடை தேவையான ஒன்றாகின்றது.*

> ஆட்டு மந்தைகள் கூட ஒற்றுமையாய் உள்ளன. அந்த, ஆடுகளுக்குக்கூட நல்ல மேய்ப்பன் வேண்டும். நம் ஒற்றுமை இன்மை கண்டு என்மனம் பதறியது. இப்போது ஒற்றுமை உணர்வு மேலோங்கி வருவது கண்டு மனது கொஞ்சம் மகிழ்கிற[72]

*என இனத்தாருக்கு உணர்த்துகிறது.*

> நம் இடஒதுக்கீட்டிலிருந்து 7 சதவீதம் எடுத்து சிறுபான்மையினருக்கு வழங்கியுள்ளார்கள். மற்ற வன்னியர் சாதியாக இருந்தால் இந்நேரம் பெரிய போராட்டமே நடந்திருக்கும். நம் இனம் இடஒதுக்கீட்டில் வஞ்சிக்கப்பட்டுள்ளது. ஆகவே நம் இனம் ஒற்றுமை இன்று அவசியம் தேவை[73]

*என வலியுறுத்துகிறது.*

> அறிவுக்குச் சொந்தக்காரர்களான நமது சமுதாய இளைஞர்களுக்கு நான் இந்த புத்தாண்டில் சொல்ல விரும்புவது உணர்ச்சிப் பசிக்குத் தீனி போட்டு அழிந்து போவதைக் காட்டிலும் அறிவுப்பசிக்குத் தீனிபோட்டு நாமும் உணருவோம். சமுதாயத்தையும் வளரச் செய்வோம். நமது அறிவு தான் நமது சமுதாயத்தின் வலிமை[74]

*என இன இளைஞர்களுக்கு வழி கோலுகிறது.*

> இந்திய விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்ட உயர்சாதித் தலைவர்களின் தியாகங்கள் போற்றப்பட்டதுபோல் விளிம்பு நிலைத் தலைவர்களின் தியாகங்கள் வெளிச்சத்திற்கு வராமல் போயின. வரலாற்று தரவுப்படி இத்தகைய பிழைகள் இன்றுவரைத் தொடர்ந்து கொண்டு தான் உள்ளன. அத்தகைய வரலாற்றுக்குச் சொந்தக்காரர்களில் ஒருவர் தான் விடுதலைப்போராட்ட வீரர் கடலூர் அஞ்சலையம்மாள்[75]

*என இனப்போராளி குறித்து விளக்குகிறது.*

> அன்னைத் தமிழினத்தின் ஆரம்பமாய், மண்ணில் முதல் மனிதராய்த் தோன்றிய மூத்த குடியாம், முக்குலத்தோரில் ஓர் குலமாம், ஒங்கு புகழ் அகமுடையார் குலத்தின் பெருமைகள் பேசிட, பேராற்றல் காட்டிட, பீடு நடை போட்டு வருக![76]

*என்று இன மக்களை அழைக்கிறது.*

இது எங்கள் குலத்தொழில், எங்கள் உழைப்பை ஒரு பைசாவிற்கும், இரண்டு பைசாவிற்கும் அடகுவைத்து வருவோர் போவோரிடமெல்லாம் பிச்சை எடுத்து பிழைக்க முடியாது[77]

*என சிலர் குறிப்பிடுவதாக வெளிப்படுத்துகிறது.*

**உவமை நடை**

*உவமை என்பது ஒரு பொருளோடு அதற்கு இயைபான இன்னொரு பொருளை உவமித்துக் காட்டுவது உவமையாகும். அதாவது ஒரு பொருளோடு ஒரு பொருளைத் தொடர்புபடுத்திக் காட்டுவதாகும். இதனை,*

அழகுள்ள ஒரு பொருளை மற்றொன்றன் அழகோடு ஒப்பிட்டுக் காணும் இந்த உவமையே கலைகள் பலவற்றிற்கு அடிப்படையாகும்[78]

*என்கிறார். மு.வ உவமைகளைப் பயன்படுத்தும் மொழிநடையை உவமை நடை என்று சுட்டலாம்.*

*ஒரு பொருளை ஒரு பொருளுக்கு உவமையாகக் கூறும் அவ்விரண்டிற்கும், பொதுவாகிய தொழில் (செயல்) காரணமாகவும், பயன் காரணமாகவும், வடிவு காரணமாகவும், நிறம் காரணமாகவும் ஒப்பிட்டு உரைக்கப்படும். இதனைத் தொல்காப்பியர்,*

வினைபயன் மெய்உரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமத் தோற்றம்[79]

*என்று உவமையின் வகையை விளக்குகின்றார்.*

*இன இதழ்களில் உவமை நடை என்பது இயல்பான ஒன்றாக அமைகின்றது. ஏனெனில் ஒருசெயலை விளக்க முற்படும்போது அதை மற்றொரு செயல் தன்மையோடு ஒப்புமைப்படுத்தி விளக்கினால் முழுமையாக வெளிப்படும். எனவே இன இதழ்கள் பலவும் இந்நடையை பின்பற்றுகின்றன.*

போலியான அரசியல் தலைவர்களை நீ நம்பாதே. கானல் நீர் தாகம் தணிக்காது என்பதை உணர்ந்து செயல்படு விளக்குகளைச் சுற்றிச்சுற்றி பறந்து மடிந்து போகும் விட்டில் பூச்சிகளைப் போல் இல்லாமல் நிரந்தர விடியலைத் தேடும் வைகறைப் பறவைகளால் இருங்கள்[80]

*என இன விழிப்புணர்வை வலியுறுத்துகிறது.*

அணையைக் கட்டுகிற வேலையெல்லாம் முடிந்து போய்விட்டது. அண்ணனுக்கும் வாரிசு பிறக்கப்போகிறது. இனிமேல் எனக்கு உன்னை அணைக்கின்ற வேலைதான் என்றவன் அவள் நெற்றியில் சட்டென்று முத்தப்பரிசை ஈந்து நெஞ்சோடு இறுக அனைத்துக் கொண்டான் கொங்குவேலன். வெயில்பட்ட வெண்ணெய் போல அவள் கோபம் காணாமல் உருகிப்போய்விட அணைத்தோப்பில் தென்றல் தாலாட்ட, தென்னங்கீற்று வாலாட்ட மணிப்புறாவும் துணைப்புறாவும் மௌனமாகக் காதல் மொழியைப் பேசி கற்பனையில் உலகத்தை மறுந்து எங்கோ பறந்து கொண்டிருந்தது[81]

*எனக் காதல் மொழியை வெளிப்படுத்துகிறது. அறிவியல் விஞ்ஞானி மயில்சாமி அண்ணாத்துரை பற்றி குறிப்பிடும் பொழுது முற்றிய நெற்கதிர் தலை சாய்த்துக் கொள்வது போல் அடக்கத்தின் வடிவாய் அண்ணாத்துரை தனது வெற்றியை விவரிக்கும்போது குறிப்பிடுவதாக செங்குந்தமித்திரன் வெளிப்படுத்துகிறது.*

*'படித்தால் மட்டும் போதுமா' என்னும் சிறுகதையில்,*

சாயம் போன கருப்புச்சட்டை போல இருள் வெளுத்த அதிகாலைப் பொழுது. அடர்ந்த மரங்களில் கீச்கீச் என்ற பறவைகளின் ஆரவார ஒலிகள். விடியலைக் காணத் துடிக்கும் பறவைகளின் உற்சாக ஒலிகளுக்கு முன்பே துயிலெழுந்த நான் நேற்றைய நினைவுகளை மீண்டும் அசைபோட்டேன்[82]

*என இயற்கையைப் பற்றிய வர்ணனையை வெளிப்படுத்துகிறது.*

சமுகமே, உங்கள் பங்குக்கு உதவுங்கள், திருவண்ணாமலை தீபத்திற்கு எண்ணெய் ஊற்றுவதுபோல - குளிரில் தீ காய ஒவ்வொருவரும் தன் பங்குக்குச் சுற்றி விறகைப் போடுவதுபோல் செத்துக் கொண்டிருக்கும் நோயாளிக்கு இரத்தம் செலுத்துவதுபோல[83]

*என இதழுக்குக் கட்டணம் செலுத்த அறிவுறுத்துகிறது.*

முகில் முந்தானையை முழுநிலவு போர்த்திக் கொண்டது போல் ... உடல் மறைத்துக் கொண்டாள், முகம் வியப்புக்குறியைப் புருவத்தால் உயர்த்திப் பிடித்தது.[84]

*'கானல். . . காதல்' என்றும் கட்டுரையில் அமைகிறது. 'பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம்' என்னும் தலைப்பில் இடம் பெறும் தொடரில்,*

அவரது சிலம்பப்போர் வலங்கைப் புலிகள் வாதாடுவது போல் வன்ம மீதோடி வலிமண்டி நின்றது[85]

*என நடையை விளக்குகிறது.*

**பழமொழி நடை**

பழமொழி என்பது பழகுமொழி, பழமையான மொழி எனப் பொருள்படும். மக்களின் அன்றாட வாழ்வில் அடிக்கடி பழகுவதால் இவை பழகுமொழிகள், முன்னோர்கள் மொழிந்தவை. தொன்றுதொட்டு வருவதால் இவை பழைய மொழிகள் எனலாம். பக்குவப்பட்ட கனியினைப்போல இனிப்பதால் இவைப் “பழம் போன்ற மொழிகள்” எனவும் கருதலாம்.

> நாட்டார் வழக்காற்றில் பயின்று வரும் பழமொழியை சில வட்டார மக்கள் ‘சொலவடை’ என்பர். சிலர் ‘உவகதை’ (உவமைக் கதை) என்பர். இதனை மலையாளத்தில் ‘பழஞ்சொல்’ என்றும், தெலுங்கில் ‘நாதுடி’ என்றும், கன்னடத்தில் ‘நாண்ணுடி’ என்றும், ஆங்கிலத்தில் ‘பிராவெர்ப்’ (Proverb) என்றும் வழங்குகின்றன. இவை தமிழ் மக்களால் முதுசொல், முதுமொழி, நெடுமொழி, பழஞ்சொல், மூதுரை, உரை, பழவார்த்தை, பழமைச்சொல், உபகதை, அலோகம், மொழிமை, முதுமை, முன்சொல் எனப் பல பெயர்களால் அழைக்கப்படுகிறது.[86]

> பழமொழிகள் எனப்படுபவை புதியனவாக அமைக்கப்படாது வழிவழியாக மக்களிடையே வழங்கிவரும் சுடுதி யுக்தி அனுபவங்களுக்கு இயைந்த அறிவுரை வாக்குகளாகும்[87]

என்று பழமொழிக்கு விளக்கமளிக்கின்றது.

> நல்ல பண்பாடும் நாகரிக நிலையும் உள்ள மக்களிடையே தான் பழமொழிகள் தொன்றுகின்றன. மாந்தரிடையே எந்த அளவுக்குப்பட்டறிவு உண்டோ அந்த அளவிற்குப் பழமொழிகளும் தோன்றி பயின்று கொண்டிருக்கும்[88]

என்று செந்துரை முத்து குறிப்பிடுவதாக மேலாண்மை பொன்னுச்சாமி கூறுகின்றார். நம் முன்னோர்கள் தம் வாழ்க்கையில் அனுபவித்து அடிபட்ட பட்டறிவுக் கருத்துக்களையே பழமொழிகளாக வெளிப்படுத்தி வந்தனர். இப்பழமொழிகளில் அனுபவம் அடைந்து இருக்கும். அனுபவம் நிறைய ‘அடைந்து வரும் சொல்’ என்பதால் இது ‘சொலவடை’ எனப்பட்டது.

> மக்கள் வாழ்வின் அனுபவங்களே பழமொழியாகும். இது அனுபவத்தின் வாயிலாகப் பெறுகின்ற படிப்பினை[89]

என்று பழமொழிக்கு ஆங்கிலக் கலைக்களஞ்சியம் விளக்கம் கூறுகின்றது. நம் முன்னோர்கள் விட்டுச் சென்ற கருத்துக்களிலிருந்து கிடைக்கும் அறிய செய்திகளே பழமொழியாகும்.

*செய்திகள் விரிவாகவும் அதேநேரத்தில் விளக்கமாகவும் புரிந்து கொள்வதற்கு இன இதழ்கள் பழமொழி நடையைப் பின்பற்றுகின்றன. 'தேவேந்திரர்களின் போர்க்குணம் ஓய வேண்டாம்' என்னும் தலைப்பில்,*

> உரலுக்கு ஒரு பக்கம் இடி என்றால் மத்தளத்துக்கு இரண்டு பக்கம் இடி. ஆனால் நமக்கோ பல பக்கம் பல கோணங்களில் இடி. இதற்கு நமது போர்க்குணத்தோடு சிந்திக்க வேண்டும்[90]

*என்கிறது.*

*'சுனை அமைவிடம்' என்னும் தலைப்பில்,*

> இத்தேரிகள் உருவாகும் முறை மிகவும் விந்தையானது 'ஆடிக்காற்றில் அம்மியும் பறக்கும்' என்பார்கள். மணல் பறப்பதை கேட்க வேண்டுமா? பாலைவனங்களில் ஆடிக்காற்றில் மண்மாரிகள் பெய்து தேரி மேடுகள் உருவாகின்றன[91]

*என இயற்கைச் சூழலை வெளிப்படுத்துகிறது.*

> இனிவரும் தேர்தலில் கொங்கன் ஓட்டு கொங்கனுக்கே என்று உறுதி மேற்கொள்ள வேண்டும். அப்படி செய்தால் தான் அரசு நம் கோரிக்கைகளை நிறைவேற்றும். 'மேழிச்செல்வம் கோழைபடாது'. மேழிச்செல்வம் உலகத்தை உய்விக்கும் சிறப்புப் பொருந்திய தொழில், சத்தியத்திற்குக் கட்டுப்பட்டது[92]

*என இனமக்களுக்கு விழிப்புணர்வு கொள்ளச் செய்கிறது.*

> மனிதன் படித்து விட்டால் மனிதனுக்கும், ஓர் இளைஞன் படித்துவிட்டால் இளைஞனைச் சார்ந்தவர்களுக்கும் பயன்படும். ஒரு பழமொழியுண்டு 'மீன்பிடித்து கொடுப்பதைக் காட்டிலும் மீன்பிடிக்கக் கற்றுக்கொடு' என்று அம்மாதிரியான சூழ்நிலையிலே கல்வியைத் தான் முன்னிலைப்படுத்த வேண்டும்[93]

*எனக் கல்விக்கு முக்கியத்துவம் தருவதை விளக்குகிறது.*

*இந்திய சுதந்திரப் போராட்டத்தில் பங்குபெற்ற சர்வோதய தலைவர் அவையன் தேவேந்திரரைப் பற்றி குறிப்பிடுகையில், சமூக சேவையில் சிறந்து விளங்கினார். 'புலிக்குப் பிறந்தது பூனையாகுமா?' என்பதைப் போல அவையன் தேவேந்திரர் சிறுவயது முதலே சமூக சேவையில் நாட்டம் மிக்கவராக விளங்கினார் என்று குறிப்பிடுகிறது.*

இனமக்களில் ஏழ்மை நிலையிருப்பவர்களை,

பல்லக்கு ஏற பாக்கியமிருக்கிறது என்பதை உந்தி ஏற ஜீவன் இல்லை. . . என்ற நிலையிலிருக்கும் பரதவர்களை ஊக்குவிக்கக் கடலார் துணைபுரிகின்றது[94]

என ஆதரவு தெரிவிக்கிறது.

இனஇதழ்கள் பல பழமொழி நடையைப் பின்பற்றி இனநோக்கை மேம்படச்செய்ய உதவுகின்றன என்பதை அறியமுடிகிறது.

**கவிதை நடை**

கவிதை ஆசிரியர் தம் படைப்புகளில் பாத்திரங்களில் மனநிலைக்கும், கதைக்கும் ஏற்றபடி படைப்பாளனின் உணர்ச்சி வெளிப்பாட்டின் வடிவமாகவும், சுருக்கமாகவும், கவிதைபோலவே அமையும் உரைநடை கவிதை நடை ஆகும்.

கவிதை என்பது உள்ளத்து உணர்ச்சியின் வெளிப்பாடு எனலாம்.

கவிதை கூட்டு மொழியின் வெளிப்பாடாகவும், பொது மக்களின் உணர்ச்சி வெளிப்பாட்டின் வடிவமாகவும் அமைந்தது[95]

என்பர்.

கவிதைக்கு நேர்மாறாக உரைநடை இலக்கியமானது தனிப்பட்டவரின் கூற்றாகவும், உணர்ச்சி வெளிப்பாடாகவும் அமைந்தது[96]

என்று க.கைலாசபதி கவிதைக்கு விளக்கமளிக்கிறார்.

நீக்கல் உத்திகள், பொது மொழியிலிருந்து பிறழ்ச்சிகள், மடக்குக்கூறுகள், அருகிய வழக்குச் சொற்கள் போன்றவை கவிதைக்கான பண்புகளாகும்[97]

எனக் கவிதைக்குச் சொல்லப்பட்ட இதே இலக்கண முறைமைகள் உரைநடையிலும் மேற்கொள்ளப்பட்டன. அதனைக் கவிதை மொழிநடை என்று நாம் அழைக்கலாம்.

இன இதழ்கள் பல கவிதை நடையைக் கையாண்டு எளிமையாகப் புரிந்து கொள்ளும் விதத்தில் உரைநடை, புதுக்கவிதை நடையை வெளியிடுகின்றன.

குலுங்கியது நாமக்கல், குலுக்கினார்கள் கொங்கு வேளாள மக்கள் - ஆட்டம் கண்டனர் ஆளும் கூட்டத்தார் - ஆட்டம் காண வைத்தனர். கொங்குவேளாள கூட்டத்தார். கோவணம் கட்டிக்கும் கொடி பிடிக்கத்தெரியும், ஏளனம் செய்வோரை எதிர்த்தடிக்க முடியும், ஏர்பிடித்து உழுத கரம் போர் புரிய அஞ்சாது. வீறு கொண்டு

எழுந்து வீரவாளெடுத்து மார்தட்டி போர் புரிந்து மாபெரும் வெற்றி வாகை சூடு இனம்[98]

என வெளியிடுகிறது.

சூரியன் மறைந்தால் இருள்; சூரியன் உதித்தால் வெளிச்சம்; வெளிச்சம் போனால் இருட்டு என்பது இயற்கை நியதியாக இருந்தாலும் இருட்டினில் நமக்கு எதுவும் தெரியாது. இருட்டில் மறைந்திருக்கும் ஆபத்தும் தெரியாது. இதனை உணர்ந்து அறிவுப் பூர்வமாகச் சிந்தித்து 2009 ஆம் ஆண்டினை நம்பிக்கையுடன் எதிர் நோக்குவோம்[99]

என நம்பிக்கையூட்டுகிறது.

அகமுடையார் பெருமக்களே அணிதிரண்டு வருக! அணி அணியாய் வருக! அலை அலையாய் வருக! - வந்திருப்பது மனிதத் தலைகளாக அல்லது மாக்கடலின் அலைகளா என மாநகர் திகைத்திட மடை திறந்த வெள்ளம் போல் வருக[100]

என இனமக்களை உற்சாகமூட்டுகிறது.

நம்மை, அடங்கிக் கிடக்கும் அடிமைகள் என்றார் பதிலுக்கு, ஆதிக்க சாதிகளையே அதிர வைத்தோம்! காசுக்கு வழியில்லாத காட்டேறிகள் என்றார். பதிலுக்கு கணக்கு வைத்து கோடீஸ்வரர் ஆனோம்! அறிவே இல்லை உன்னினத்திற்கு என்றார். பதிலுக்கு ஐ.ஏ.எஸ். அதிகாரிகளாகி அதிகாரம் கைப்பற்றினோம்[101]

என ஆர்வமூட்டும் நடையை வெளியிடுகிறது.

பல இன இதழ்கள் கவிதை நடையைக் கையாளவில்லை. காட்டாக விளக்கு, ஒலிக்கும் யாதவ முரசு, வீரபாண்டிய கட்டபொம்மன், தெலுங்கர் கீதம், அச்சமில்லை, பூச்சரம் போன்றவைகளை அறியமுடிகிறது.

**தலைப்பு**

இன இதழியல் உத்திகளுள் 'தலைப்பு' என்பதும் முக்கிய இடம் பெறுகின்றது. ஏனெனில் தலைப்பு என்பது செய்தியின் முகப்பு என்பதாகும்.

ஒரு செய்தியின் அலங்கார வளைவு தலைப்பு. அதுதான் செய்திக்கு வழிகாட்டி[102]

என்று தலைப்பைப் பற்றிக் குறிப்பிடுவர். செய்தியின் சாரத்தைத் தலைப்பாகக் கொடுப்பதால் செய்தியினை விரைந்து படிக்க உதவும். தலைப்பிற்குரிய எழுத்துக்களைப் பெரிய எழுத்துக்களில் தருவதும் இனமக்களின் கவனத்தைத்

தொடுகிறது. துடிப்புள்ள சொற்களால் விறுவிறுப்பான தலைப்புக்களைக் கொடுத்து, இனமக்களை ஈர்க்கின்றது.

ஒரு வரியிலோ பல வரிகளிலோ கட்டுரையின் முழுப்பொருளையும் தருவதையே தலைப்பு[103]

என்கிறார் ப்ரூஸ் இ.வெஸ்ட்லி.

இனஇதழ்கள் வாசகர்களின் கருத்தைக் கவருதலே தலைப்புகள் வழி நோக்கமாகக் கொண்டுள்ளன. வாசகர்களின் கருத்தைக் கவருதலையும், ஆர்வத்தைத் தூண்டுதலையும் நோக்கங்களாகக் கொண்டு தலைப்புகளை அமைக்கின்றன. தலைப்புகள்கூட வாசகர்களை மகிழ்விப்பனவாக, படிக்கவேண்டும் என்ற ஆர்வ நிலையைத் தூண்டுவனாக அமையவேண்டும் என்ற நோக்கங்களே இத்தலைப்புகளில் வெளிப்படுகின்றன.

**தலைப்பின் வகைகள்**

தலைப்பினை அச்சிட விதிமுறை எதுவும் இல்லை. எனினும் தலைப்பிடுதலின் கலையழகைக் கருத்தில் கொண்டு தலைப்பின் வகைகளைப் பலவாறாகப் பிரிப்பர். குறிப்பிடத்தகுந்த சில தலைப்பின் வகைகள் பின்வருமாறு:

1. கூம்புத் தலைப்பு
2. ஒருவரித் தலைப்பு
3. நீள் தொடர் மேற்தலைப்பு
4. அறு கோணத்தலைப்பு
5. தலைகீழ்க் கூம்புத்தலைப்பு

அமைப்பின் அடிப்படையில் அமைந்த தலைப்புகள் எனவும், 1.அடுக்குத் தலைப்பு, 2.ரிப்பன் அல்லது பாணர் தலைப்பு, 3.இடப்புற அடுக்குத் தலைப்பு, 4. வலப்புற அடுக்குத் தலைப்பு, 5. இடவல அடுக்குத் தலைப்பு, 6. சிறுதொடர் மேல் தலைப்பு, 7. நெடுந்தொடர் மேல் தலைப்பு, 8. உடுக்குத் தலைப்பு, 9. மாற்று உடுக்குத் தலைப்பு, 10. நெற்றித்தலைப்பு, 11. கருத்துத் தலைப்பு, 12. கூற்றுத் தலைப்பு எனவும் தலைப்புகளை வகைப்படுத்தலாம்.

இனஇதழ்களில் பல்வேறு வகையான தலைப்புகளை அமைத்து இன மக்களைக் கவர்கின்றன. அவற்றின் கருத்துகளின் அடிப்படையில் மேற்கோள் தலைப்பு, கேள்வித்

*தலைப்பு, சமயத் தலைப்பு, அரசியல் தலைப்பு, அரசியல் தலைப்பு, வணிகத்தலைப்பு, இனத்தலைப்பு எனப் பிரித்து வகைப்படுத்தலாம்.*

**மேற்கோள் தலைப்பு**

*யாராவது ஒருவர் கூறியதை மேற்கோள் குறியோடு செய்தித்தலைப்பாக வெளியிடுவது மேற்கோள் தலைப்பு எனப்படும். காட்டாக,*

தமிழைச் செம்மொழியாக அறிவித்த
மத்திய அரசின் ஆணையும் அதனால் ஏற்படும் நன்மைகளும்.[104]

நெல்லைச்சீமையில் வீரபாண்டிய கட்டபொம்மனுக்கு
கோட்டை கட்டியது எப்படி ?

முதலமைச்சர் கருணாநிதி அறிக்கை.[105]

தமிழ்நாடு சட்டமன்றத்தில்
யாதவர்களின் முக்கிய கோரிக்கை எழுப்பப்பட்டது.[106]

தென் மாவட்டங்கள் புறக்கணிப்படுகிறது
டாக்டர் கிருஷ்ணசாமி ஆவேசம்.[107]

உரிமைக்கும் உயர்வுக்கும் குரல் கொடுத்த
நாமக்கல் மண்டல மாநாடு.[108]

எங்கு பிறப்பினும்
தமிழன் தமிழனே
இங்கு பிறப்பினும்
அயலான் அயலானே.[109]

**அடுக்குத் தலைப்பு**

*ஒருவரிக்கு மேற்பட்ட தலைப்புகள் பல அடுக்குகளாக அமைவதுண்டு முதல் வரியில் மிக முக்கியக் குறிப்பும்; அடுத்த வரியில் முக்கியக் குறிப்பும், அதற்கடுத்த வரியில் செய்தியின் சிறுவிளக்கமும் அடுத்தடுத்து இடம் பெறுவதுண்டு. இதனை அடுக்குத்தலைப்பு என்பர்.*

*இனஇதழ்கள் அடுக்குத் தலைப்புகள் அவ்வப்போது அமைத்துக் கொள்கின்றன. செய்தியை முழுமையாகத் தலைப்பிலேயே வெளிப்படுத்தும் நோக்கில் பின்வருமாறு அமைக்கின்றன.*

கலிய பெருமாள்
கருணாநிதி
வாழ்க்கைகளை
வன்னிய இளைஞர்கள்
பாடமாகக் கொள்ளட்டும்.[110]

சென்னை
சட்டக்கல்லூரி
வன்முறையில் பாதித்த
மாணவர்களுக்கு
ஆறுதல்![111]

கம்பளத்தார், தொட்டிய நாயக்கர்
சீரமைப்பு வாரியம் விருதுநகர்
எம்.எல்.ஏ. இரா.வரதராஜன் சட்டசபையில் கோரிக்கை.[112]

அட்டைப்பட நாயகன் திருப்பூர்
தி.நாயுடு கம்யூனிட்டி வெல்பர்
டிரஸ்டின் தலைவர் R.பார்த்தசாரதி.[113]

**கேள்வி தலைப்பு**

*ஆர்வத்தைத் தூண்டும் செய்தியின் சிறப்புக் கருதி தலைப்பினைக் கேள்விக்குறியுடன் அமைப்பர். இத்தகையத் தலைப்பினைக் கேள்வித் தலைப்பு என்பர்.*

தேவேந்திரர்களுக்கு தேவர் நிலம் தானம் கொடுத்தாரா ?[114]

*இத்தலைப்பின்கீழ் பசும்பொன் முத்துராமலிங்கத்தேவரின் தந்தையார் தேவேந்திரர்களுக்கு நிலம் கொடுத்தச் செய்தியை வரலாற்று பதிவுடன் விமர்சனம் செய்கிறது.*

*சென்னை சட்டக்கல்லூரி மாணவர்களின் மோதலைப் பற்றி 'கற்கால மனிதர்களா? கல்லூரி மாணவர்களா?'[115] எனும் தலைப்பு விளக்குகிறது. மனித மனத்தைப் பற்றி திருக்குறள் வாயிலாக ஆற்றல் எது? ஆற்றலின் பெருக்கம் எப்படி?[116]*

எனக் குறிப்பிடுகிறது. வன்னிய இனத்தவரின் அரசியல் நிலைப்பாட்டை வன்னியருக்கு அதிக துரோகம் இழைத்த கட்சி எது?[117] என்னும் தலைப்பு அலசுகிறது.

மத்திய அரசு விவசாயிகளுக்குக் கடன் தள்ளுபடி செய்யப்பட்டதைக் குறித்தும், அதில் தேவேந்திரர்களின் பங்கு பற்றியும் '60,000 கோடி தள்ளுபடி தேவேந்திரர்களுக்கு என்ன பலன்?'[118] என்னும் தலைப்பு எடுத்துரைக்கிறது. தம் இனமக்களை மாற்று இனத்தார் தொடுக்கும் வன்மம் குறித்து, எப்படித்தான் பிழைப்பது?[119] எனும் தலைப்புப் பதிவு செய்கிறது. 'கடலைப்பற்றி உங்களுக்கு என்ன தெரியும்?'[120] எனும் தலைப்பில் கடல்கள் உருவான விதம் கடல்நீரின் கொள்ளளவு, கடல்களின் பிரிவு குறித்து விளக்குகிறது.

இனமக்கள் தன்னின வரலாற்றைத் தெரிந்து கொள்வதில் ஆர்வம் காட்ட வேண்டும் என்பதை 'கட்டபொம்மன் வரலாறு காட்டுவது என்ன?'[121] எனும் தலைப்பு முழக்குகிறது.

ஒவ்வொருவரும் சட்டத்தைப் பற்றி தெரிந்து கொள்ளவேண்டும் என்பதை 'சட்டம் என்பது என்ன?'[122] எனும் தலைப்பு விளக்குகிறது.

பெண்ணியத்தைப் பதிவு செய்யும் முகமாக 'பெண்கள் என்றால் கண்ணீர் தானா?'[123] எனும் தலைப்பு இடம் பெறுகிறது. இனஇதழ்களில் கேள்வி தலைப்பு என்பது பலவித பொருண்மைகளின் அடிப்படையில் அமைகிறது.

**சமயத்தலைப்பு**

தெய்வம், சமய விழாக்கள் தொடர்புடைய கருத்துக்களை விளக்கும் தலைப்புகளின் தொடரில் வெளிப்படையாகச் சமயச்சொற்கள் இடம் பெறும். இதன்வழி இஃது இத்தகைய செய்தியை விளக்குகிறது என அறிந்துகொள்ள முடிகிறது. எனவே, இதனைச் சமயத்தலைப்பு என இனங்கண்டு கொள்ள முடியும்.

'திருச்செங்கோடு அர்த்தநாரீஸ்வரர் வரலாறு'[124] எனும் தலைப்பு கோயிலின் தலவரலாறு குறித்து எடுத்துரைக்கிறது. "இராஜபாளையத்தில் வெண்குடை திருவிழா"[125] தேவேந்திரர்களின் மண்டகப்படி[126] தேவேந்திரர்கள் கொண்டாடும்

ஆன்மீகத் திருவிழா பற்றி வர்ணிக்கிறது. அட்டைப்படம், தொடங்கி பெரும்பாலான பக்கங்களில் ஆன்மீகச் செய்திகளைத் தலைப்புகள் வழி அமைத்துக் கொள்கிறது.

முன்னோடிக் கருப்பர் திருக்கோயில் - செங்கீரை

மணம் நடத்துவிக்கும் மணக்கோல நாதர்[127]

மதகுபட்டியில் குடமுழுக்கு விழா

நடை பெறவுள்ளவை - நன்னிராட்டு விழாக்கள்[128]

எனப் பல்வேறு தலைப்புகள் வாயிலாக ஆன்மீகத்தை சிறப்பாகப் பூச்சரம் இதழ் பதிவு செய்கிறது. திருப்பதி கோவிலின் சிறப்புகளை எடுத்துரைக்கும் விதமாக 'ஏடுகுண்டலவாடா'[129] எனும் தலைப்பு விளக்குகிறது. '108 திவ்ய தேச வரலாற்றுத் தொடர்'[130] எனும் தலைப்பு திங்கள் தோறும் இதழில் தொடராக இறைத்தலங்களைப் பற்றி வர்ணிக்கிறது.

கோகுலக் கண்ணனின் சிறப்புகள் குறித்து கட்டுரைகள் அதிகமாக இவ்விதழில் இடம் பெறுகின்றன. 'கண்ணன் அருளமுதம் - கீதாசாரம்'[131] எனும் தலைப்பு இடம் பெறுகிறது.

மருதமலர், இந்திய நாடார் முரசு, செங்குந்தமித்திரன், அச்சமில்லை, அகச்சுடர், பண்டிதம், கடலார், விளக்கு போன்ற இன இதழ்களில் ஆன்மீகத் தலைப்புகள் இடம் பெறவில்லை.

**அரசியல் தலைப்பு**

இத்தலைப்பு வெளிப்படையாக அரசியல் தொடர்பான சொற்களால் அமையப் பெற்றிருக்கும். அரசியல் தலைப்பு வாயிலாக இனமக்களிடம் அரசியல் விழிப்புணர்வை ஏற்படுத்த இன இதழ்கள் முயலுகின்றன.

'மாயாவதியை குறி வைக்கும் ஆதிக்க அரசியல் தலைவர்கள்'[132] எனும் தலைப்பு பட்டியலின அரசியல் தலைவரைப் பாதிக்கும் அரசியல் போக்குகளை விவரிக்கிறது. 'அரசியல் கட்சிகளின் கூட்டணிக்கூத்து' எனும் தலைப்பு,

தங்கள் இனமக்கள் முன்னேறி வாழவேண்டும் என்ற நோக்கத்தொடும், அரசியல் கட்சி என்ற போர்வையில் உள்ள சாதிக்கட்சிகள் எல்லாம் கூட்டணி அமைத்து, தேர்தலில் போட்டியிட்டு வெற்றி பெற்றுப் பாராளுமன்றத்திலும், சட்டமன்றத்திலும்

இடம் பிடித்து இனமக்களின் முன்னேற்றத்திற்குப் பாடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பது தான் இன்றைய அரசியல் போக்காகும்[133]

என எடுத்துரைப்பது சிறப்பாக அமைகிறது.

அரசியல் செய்திகளைத் தலைப்புகளாக 'மாண்புமிகு அமைச்சர் வீரபாண்டியாருக்கு ஒரு திறந்த மடல்',[134] 'சுழல் பந்து வீச்சாளர் கருணாநிதிக்கு ஒரு திறந்த மடல்',[135] வந்தேறிகளுக்கு நடைபாவாடை விரிக்கும் பன்ருட்டி ராமச்சந்திரனும் துக்ளக் சோவும்',[136] 'புதுவையில் ஆறாவது முறையாக மீண்டும் தெலுங்கன் ஆட்சி'[137] எனப் பல அரசியல் தலைப்புகள் அமைத்து இனமக்கள் அரசியல் விழிப்புணர்வு பெறவும், தமிழ்த் தேசியத்தை கட்டமைக்கவும் முயற்சிக்கிறது.

'இந்திய அரசியலில் ஒரு நல்லவரை இழந்தோம்'[138] என்னும் தலைப்பு மூத்த அரசியல் தலைவர் வி.பி.சிங் அவர்களின் மறைவுச் செய்தியை இரங்கலுடன் விளக்குகிறது.

அரசியல் செய்திகளைத் தலைப்புகளாக வைப்பதில் விளக்கு இதழும் சிறப்பாக அமைகிறது. 'சிவகங்கையில் எழுச்சி! சர்வ கட்சித் தலைவர்கள் மருது ரத தடைக்குக் கண்டனம்!'[139] மருதுபாண்டியர்கள் நினைவு நாள் இரத யாத்திரை நடத்த அனுமதிக்காமை குறித்து விமர்சிக்கிறது. 'உங்கள் உரிமைகளையும், உண்மைகளையும் தெரிந்து கொள்ளுங்கள் இடஒதுக்கீடு ஒரு பார்வை'[140] எனும் தலைப்பு இடஒதுக்கீடு பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்துகிறது.

**இனத்தலைப்பு**

இனச்செய்திகளைக் குறிக்கும் தலைப்புகள் இனச் செய்திகளைச் சுட்டும் சொற்களாலேயே பெரும்பாலும் அமைந்திருக்கும். இதனை இனத்தலைப்பு என்பர். இவ்வகையான இனத்தலைப்புகள் இன இதழ்களில் அதிகமாக அமைந்துள்ளன. இத்தலைப்புகள் இனத்தின் பெயரையோ அல்லது இனத்தலைவர்கள் பெயரையோ முதன்மைப்படுத்தியே அமைகின்றன. இது இனமக்களை கவர்வதாக இனஇதழ்கள் நினைக்கின்றன.

'தேவேந்திரர் குல வேளாளர்கள் இல்லை எனில் பாளையக்காரர்கள் இல்லை'[141] எனும் தலைப்பு அவர்களின் இனத்தைப் பதிவு செய்கிறது. 'மூவேந்தர் வழி வந்த நாடார்கள் வீட்டுத் திருமண வைபங்கள்'[142] எனும் தலைப்பு திருமணச் சடங்கு முறைகள் குறித்து விளக்குகிறது. 'கொங்கு வேளாளக் கவுண்டர்கள் சிறப்பு'[143] எனும் தலைப்பு இனத்தைப் பற்றியப் பாடலை எடுத்துரைக்கிறது. 'செங்குந்தர்கள் நினைவில் கொள்ள வேண்டிய நாட்கள்'[144] எனும் தலைப்பு இனத்தில் தோன்றிய தலைவர்களின் பிறப்பு சிறப்பு நாட்களை இனமக்கள் நினைவில் கொள்ள வேண்டும் என்பதை வலியுறுத்துகிறது. 'வன்னியர்கள் கவனத்திற்கு'[145] எனும் தலைப்பு கடந்த சட்டமன்ற தேர்தலில் வன்னிய வேட்பாளர்கள் பிற இனத்தாரிடம் எப்படி தோற்றனர் என்பதைப் பட்டியலிட்டுக் காட்டுகிறது. 'அகமுடையார் வரலாறு'[146] எனும் தலைப்பு இனத்தின் தோற்ற, வளர்ச்சி நிலையினை கருத்தில் கொண்டு அமைகிறது. 'தேவேந்திரர்கள் மக்கள் தொகை'[147] எனும் தலைப்பு இனமக்கள் தொகை 1921 ஆம் ஆண்டு கணக்கீட்டுப்படி எவ்வளவு பேர் என்பதைக் கட்டுரை விளக்குகிறது. 'மருத்துவர் சமூகமே மறுமலர்ச்சி காண வாரீர்'[148] எனும் தலைப்பு இனமக்கள் விழிப்புணர்வு கொள்ள வழிவகை செய்கிறது. 'மறவர் சீமையின் மானம் காப்போம்'[149] எனும் தலைப்பு இன உணர்வாளர்களை உற்சாகமூட்டுவதாக அமைகிறது. 'கடல் மீனவர்க்குக் கடலே வாழ்க்கை'[150] எனும் தலைப்பு மீனவர்களின் வாழ்வியலை வெளிப்படுத்துகின்றது. 'நகரத்தார் வரலாறு'[151] எனும் தலைப்பு நகரத்தார் இனமக்களின் தோற்றம் மற்றும் வாழ்வியல் நிலைகளை எடுத்துரைக்கின்றது.

'தேர்தலில் கம்பளத்தார் நின்றார்கள் வென்றார்கள்'[152] எனும் தலைப்பு உள்ளாட்சித் தேர்தலில் போட்டியிட்ட இனமக்களை வாழ்த்துவதாக அமைகிறது. 'யாதவர்கள் உடனடி கவனத்துக்கு'[153] எனும் தலைப்பு தலைமைச் சங்கம் 2008 ஆண்டை இன அமைப்பு உருவாக்கும் ஆண்டு எனப் பிரகடனத்துப்படுத்துதல் தொடர்பான செய்தியினை இனமக்களுக்கு அறிவிக்கிறது.

'மதுரை நாயக்கர் வரலாற்றுத்தொடர்'[154] எனும் தலைப்பு நாயக்க மன்னரின் வாழ்க்கை, ஆட்சி முறை போன்றவற்றை பதிவு செய்கிறது. 'யாதவர் இளைஞர்கள் ஒருங்கிணைப்பு விழா'[155] எனும் தலைப்பு இன இளைஞர்களை ஓர்மைப்படுத்துவதாக அமைகிறது. இனஇதழ்கள் பெரும்பாலும் இனத்தலைப்புகளை இன

விழிப்புணர்வுக்கும், இன அடையாளத்துக்கும் பயன்படுத்திக் கொள்வதை அறிய முடிகிறது.

**திறனாய்வு**

விமர்சனப் பகுதியை இதழில் பணிபுரிபவர்களும் வாசகர்களும் பிறரும் எழுதுவதுண்டு. இவ்விமர்சனம் ஒரு படைப்பில் காணப்படும் குணங்களையும், குற்றங்களையும் எடுத்துரைக்கப்பயன்படுகின்றது. ஆய்வுக்கு உட்பட்ட இனஇதழ்கள் சில இவ்விமர்சனத்தை ஒரு கூறாகக் கொண்டுள்ளன. அவை புத்தகம், திரைப்படம், பற்றிய விமர்சனங்கங்களைத் தந்துள்ளன.

இதழ்களில் விமர்சனத்திற்கெனத் தனிப்பட்ட பகுதி ஒதுக்கப்பட்டுள்ளது. மதிப்பீட்டாளர் படைப்பாளனுக்கும், வாசகர்களுக்கும் இடையே பாலமாக இருந்து கருத்துக்களைக் கூறுவார். இப்பகுதியில் நூல்கள், ஓவியம், சிற்பம், திரைப்படம், நாடகம், பொதுச் செய்திகள், விமர்சிக்கப்படுகின்றன. நூல்களை விமர்சிக்கும் பகுதி பெரும்பாலும் மதிப்புரை என்று கூறப்படுகிறது.

**நூல் விமர்சன நோக்கம்**

மதிப்பீட்டாளர் சில நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டும் இயங்கலாம். ஒரு படைப்பினை மதிப்பீடு செய்யும்போது அப்படைப்பைப் படிப்பவர்கள் மனத்தில் படைப்பினைப் பற்றி ஏதாவது ஒரு எண்ணத்தை உண்டாக்குதல் வேண்டும். அப்படைப்பினைப் பற்றிய குறைநிறைகளை வாசகர்கள் புரிந்து கொள்ளும் வண்ணம் எடுத்துரைக்க வேண்டும். மேலும் அப்படைப்பு கிடைக்குமிடம், விலை இவற்றையும் மக்களுக்கு அறிவிப்பதை நோக்கமாகக் கொண்டு செயல்படுதலும் உண்டு.

விமர்சனம் நான்கு வகைப்படும் அவையாவன,

1. புதிய கலைப்படைப்பை மரபு ரீதியான கலைப்படைப்பின் தரத்துடன் ஒப்பிட்டு விமர்சித்தல். (The Classical Method)
2. விமர்சனத்துக்கு எடுத்துக்கொள்ளும் புத்தகம், நாடகம், திரைப்படம் ஆகியவற்றை நன்றாக விவரித்து எழுதுதல். (The Reportorical Method)
3. வரலாற்றுக் கண்ணோட்டத்தில் புதிய படைப்பை ஆராய்தல். (The Panoramic Method or Organic Method)

4. உணர்ச்சியைப் பிரதிபலிக்கும் மனிதனிடத்து புதிய படைப்பு ஏற்படுத்தும் விளைவுகளை எழுதுதல். (The Impression istic Method).[156]

இவற்றுள் விவரித்து எழுதுதல், வரலாற்று கண்ணோட்டத்தில் ஆராய்தல் இந்த இருவகை முறையையே ஆய்வுக்குட்பட்ட இன இதழ்கள் கையாண்டுள்ளன.

**நூல் விமர்சனம்**

தற்சார்புடைய கலைஞன், தனிமனிதனால் அல்லது மனிதர்களால் படைக்கப்பட்ட இலக்கியத்தைக் கலையம்ச நோக்கோடு ஆராய்வது விமர்சனம் ஆகும். உள்ளதை அப்படியே விமர்சித்தல் ஒப்பிட்டு நோக்கில் விமர்சித்தல் என இலக்கிய விமர்சனத்துக்கு விளக்கம் கொடுக்கிறது. (கொலம்பியா என்சைக்ளோபீடியா)

இனஇதழ்கள் உள்ளதை அப்படியே விமர்சித்தல் என்ற முறையிலேயே அமைந்துள்ளன. புத்தக விமர்சனம் தந்த இன இதழ்கள் அனைத்தும் புத்தகத்தின் விலையையும், புத்தகம் கிடைக்கும் இடத்தின் முகவரியையும் தந்துள்ளன. புத்தகங்களை அறிமுகப்படுத்துதல் போன்ற உத்தியாகள் கையாளப்பட்டுள்ளன. "திருமூலர் திருமந்திரத்தில் உள்ள மனமும், தியானமும் பற்றி தத்துவ ஆய்வு நூல்" பற்றிய செய்தியும், விமர்சனமும் இடம் பெறுகிறது. இந்நூலுக்கு அணிந்துரை நல்கிய முன்னாள் இந்தியக் குடியரசுத் தலைவர்,

> தங்களது திருமூலர் திருமந்திரத்தில் உள்ள மனமும் தியானமும் பற்றிய தத்துவ ஆய்வு நூல் ஒரு நல்ல முயற்சி, மனம் மற்றும் தியானத்திற்குப் பாலமாக அமைந்துள்ளது. நாம் சுவாசிக்கும் மூச்சுக்காற்றே என்ற தங்களது கருத்து என்னைச் சிந்திக்கத் தூண்டியது[157]

என்று கூறியுள்ள கூற்றை இன இதழ் வெளியிட்டுள்ளதை அறியமுடிகிறது.

'விளிம்பு நிலைப் படைப்பாளிகள்'[158] என்னும் தலைப்பில் இனத்தைச் சார்ந்த படைப்பாளிகளின் அறிமுகம், நூல்கள் பற்றிய விமர்சனமும் இடம் பெறுகிறது. அச்சமில்லை, மே-2008, இதழில் கவிஞர் எழிலவன் அறிமுகம், அவருடைய நூல் 'முந்திரிக் காட்டுமுகவரிகள்' பற்றிக் குறிப்பிடுகையில் முந்திரிக்காட்டு மக்களின் பண்பாடு, பழக்கவழக்கங்களை ஆய்வு செய்துள்ளார் என்ற பாராட்டுரையையும் வெளியிட்டு மகிழ்கிறது.

'சிங்கப்பூரில் நூல் வெளியீடு'[159] எனும் தலைப்பில் இன எழுத்தாளர் புதுமைத்தேனி, மா.அன்பழகன் சிறப்பும், அவரின் மற்ற நூல்களும் பற்றிய விமர்சனமும் இடம் பெறுகிறது.

நூல் அறிமுகம், நூல் விமர்சனம் எனும் பகுதிகள் தேவேந்திரர் மலரில் அமைகிறது. நூல் அறிமுகம் பகுதியில் 'மருதநிலத்து மள்ளர் இசை'[160] 'பாஞ்சாலங்குறிச்சிப் படைத்தளபதி சுந்தரலிங்கத் தேவேந்திரர்'[161] எனும் தலைப்புகளில் நூல் அறிமுகம் அமைகிறது. 'உருவாக்கப்பட்ட வரலாறும் சாதியும்' எனும் தலைப்பில் நூலைப்பற்றிய அத்தனை தகவல்களும் இதில் வெளிப்படுகின்றன.

விடுதலைப் போராட்டத்தியாகியும் இனப் போராளியுமாகிய 'விடுதலை வீரர் விஸ்வநாத தாஸ்' எனும் நூல் அறிமுகம் பகுதியில் "நீங்கள் நன்கு பாடுகின்றீர்கள். நன்கு நடிக்கின்றீர்கள், நல்ல வருவாய் உள்ள தொழில், இதனை ஏன் தேச விடுதலைக்காக, பாடவேண்டும்? என்று சிங்கப்பூரில் ஒரு தமிழர் கேட்டபோது, "சுவையாக உணவு இருக்கிறது என்பதற்காகக் குப்பைகளுக்கு நடுவில் இருந்து கொண்டு உண்ண முடியாது"[162] என்று எதிர்கேள்வி கேட்டதன் மூலம் (பக்.47) விஸ்வநாததாஸ் வெள்ளையரை வெளியேற்றுவதில் எவ்வளவு வெறிகளோடு இருந்தார் என்பதை நமக்கு நன்கு எடுத்துரைக்கிறது.

எல்லா இன இதழ்களும் தம் இன படைப்பாளர்கள் நூல்களையே விமர்சனத்திற்கு எடுத்துக்கொள்கின்றன. அந்த இனத்தைச் சார்ந்தவர்களே பெரும்பாலும் விமர்சனமும் எழுதுகின்றார் என்பது குறிப்பிடத்தக்கது.

இந்திய நாடார் முரசு, கொங்கு, செங்குந்த மித்திரன், விளக்கு, பூச்சரம், கடலார் வீ.பா.க., புதிய யாதவம், ஒலிக்கும் யாதவர் முரசு, தெலுங்கர் கீதம் போன்ற இன இதழ்களில் புத்தக விமர்சனம் வெளியிடப்பெறவில்லை.

**இதழும் வாசகர்களும்**

இதழ்களுக்கும், வாசகர்களுக்கும் உள்ள தொடர்பு தாய், சேய் உறவு போன்றதாகும். வாசகர்களின் விருப்பத்திற்கும், எண்ணவோட்டத்திற்கும் தகுந்தபடி

இதழ்கள் அமைந்து, வாசகர்களின் கருத்திற்கேற்ப செயல்பட்டால் சிறந்த வளர்ச்சியைப் பெறமுடியும்.

> சில நாடுகளில் மக்கள் தகவல் தொடர்பு சாதனங்கள் வாசகர்களின் பங்கேற்பு. தங்கள் முன்னேற்றத்திற்குத் துணை செய்யும் என்று கருதியதால் வாசகர்களின் ஒத்துழைப்புப் பெறுவதற்கும், அவர்களுடன் செய்திகளைப் பரிமாறிக் கொள்ளவும் தகவல் தொடர்பு சாதனங்களுடன் வாசகர்கள் தொடர்பு கொள்ள வழிவகை செய்தன. இதனால் அவற்றின் தரமும் விற்பனையும் அதிகமாயின[163]

என்பார் சாமுவேல் B.மார்ஸ். எனவே, தமது விற்பனையைப் பெருக்கிக் கொள்ளவும், வாசகர் இதழுடன் பங்கு பெற வைக்கவும் மக்கள் தகவல் தொடர்பு சாதனங்களுள் ஒன்றான இதழ்கள் பல்வேறு உத்திகளைக் கையாண்டுள்ளன.

வாசகர்கள் இதழ்களுடன் தொடர்பு கொள்ளவும், பங்கு பெறவும் இதழ்கள் பின்பற்றும் உத்திகளை மூவகைப்படுத்தலாம்.

1. வாசகர்களுக்கென்று சில பகுதிகளை இதழ்கள் ஒதுக்குவது.
2. வாசகர்களுடன் இதழ்கள் நேரடியாகத் தொடர்பு கொள்வது.
3. இதழ்களுடன் வாசகர்கள் தொடர்பு கொள்வது போன்றவையாகும்.

**வாசகர்களுக்கென்று சில பகுதிகளை இதழ்கள் ஒதுக்கல்**

வாசகர்களுடன் தொடர்ந்து தொடர்பு கொள்ள இதழ்கள் வாசகர் கடிதம், துணுக்குகள், சமையல் குறிப்புகள், கேள்வி-பதில், அழகுக்குறிப்பு, சித்தமருத்துவம், செய்தித்தோரணங்கள்; புரவலர், சந்தாதாரர் பட்டியல், மாணவர் படைப்புகள் போன்ற பல பகுதிகளை ஒதுக்கியுள்ளன. இப்பகுதிகளை வெளியிடுவதிலும் பல உத்திகளைக் கையாண்டுள்ளன.

**வாசகர் கடிதம்**

> இதழ்களின் உயிரோட்டமாக விளங்கும் வாசகர் கடிதப்பகுதியின் வாயிலாகத் தங்களுடைய (வாசகர்கள்) விருப்பு வெறுப்புகளை அறிந்து முடிவெடுக்க நிறைகளோடு குறைகளையும் சுட்டிக்காட்டினால் தான் அவ்விதழ் தன்னைத் திருத்திக்கொள்ள முடியும். ஓர் இதழில் காணப்படும் தவறுகளைச் சுட்டுவது வாசகர்களின் திட்டுதலைக்கூட வாசகர் கடிதப்பகுதியில் வெளியிட்டு அவ்வகையைக் கூட வணிகமாக்கும், இதழ்களும் உண்டு[164]

என்று மு.க.முகமது மரைக்காயர் கூறுவார்.

வாசகர் கடிதங்களின் இன்றியமையாமையையும் முக்கியத்துவத்தையும் 'ஞானபூமி' இதழாசிரியர் ஸ்ரீராம் ஒரு பத்திரிக்கையின் வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் வாசகர்கள் மற்றும் விற்பனையாளர்களின் நல்ல கருத்துகளும் விமர்சனங்களும் எப்போதும் உதவுவதால் ஒவ்வொரு இதழ் பற்றியும் உங்களின் கருத்துக்களைத் தவறாமல் எழுதுங்கள் என்று கேட்டுக் கொள்கிறோம் என்று குறிப்பிடுவதிலிருந்து அறியலாம்.

இதழியலாளர் டி.எஸ்.மேத்தா,

இதழ்களில் இடம் பெறும் தலையங்கங்களையும், வாசகர் கடிதங்களையும் கருத்துப் பரிமாற்ற பகுதிகள் (Opinion Pages) என்னும் பகுப்பில் அடக்கியிருப்பதும்[165]

வாசகர் கடிதப் பகுதியின் முக்கியத்துவத்தைக் காட்டுவதாக அமைந்துள்ளது.

எளிய நடையில் ஓரிரு தொடர்களில் இதழ்களின் உள்ளடக்கத்திலுள்ள நிறைகுறைகளைச் சுட்டும் பகுதி வாசகர் கடிதப் பகுதியாகும். வாசகர் கடிதப் பகுதியில் அமையும் சிறந்த சுருக்கமான வாசகர் கடிதம், ஓர் இதழின் சிறப்பைக் கணிக்க உதவும் காரணியாகும் என்கிறார். ராபர்ட் டி.மார்ஃபி (Robert D.Murphy) இதழின் தரத்தை நிர்ணயிக்க உதவும் இவ்வாசகர் கடிதங்களை வெளியிடுவதில் இதழ்கள் கையாண்டுள்ள உத்திகளை ஐவகைப்படுத்தலாம்.

1. புகைப்படத்துடன் வாசகர் கடிதங்களைத் தருதல்
2. கவிதை வடிவில் வாசகர் கடிதங்களை வெளியிடுதல்
3. பக்கத்திற்கு ஒன்றாக வாசகர் கடிதங்களை வெளியிடல்
4. வாசகர் கடிதங்களைத் தராது அவர்தம் புகைப்படங்களைத் தொகுத்துத் தருதல்
5. வாசகர் கடிதங்களுக்குத் தலைப்பிட்டுத் தருதல்.

## இனஇதழ்களும் வாசகர்களும்

இன வாசகர்கள் தொடர்பு என்பது இன இதழ்களில் இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றது. ஏனெனில் இன வாசகர்களைத் தன் பக்கம் ஈர்ப்பது ஓர் உத்தியாகவும், செய்திகளைத் தாங்கி அவர்களிடத்திலே சென்று சேர்வதும் என இருவகை உத்திமுறைகளை இனஇதழ்கள் பின்பற்றுகின்றன எனலாம்.

இன இதழ்கள் வாசகர் பகுதிகளைப் பல்வேறு பெயர்த் தலைப்புகளில் வெளியிடுகின்றன. இவை வாசகர் குரல், வாசகர் மனம், வாசகர் கடிதம், வாசகர்

*வாய்ஸ், உறவுகளின் உள்ளம், ஆசிரியருக்குக் கடிதம் என்னும் பல்வேறு தலைப்புகளில் இடம் பெறுகின்றன. இவை பெரும்பாலான இனஇதழ்களின் இறுதி பக்கங்களிலும், சில இன இதழ்களில் முன்னதாகவும் அமைகின்றன. 'வாசகர் கடிதம்' தலைப்பில் முத்துவயல் என்னும் ஊரிலிருந்து*

> சமுதாயத்திற்கு நீங்கள் ஆற்றிவரும் தொண்டை எப்படி வாழ்த்துவது என்றே தெரியவில்லை. கடுமையான முயற்சி, அதிக உழைப்பு, காரணமாக மலரைப் புத்தம்புதுசாய் மாதம் தோறும் மலரச் செய்கிறீர்கள்[166]

*என்று எழுதியிருப்பதை வெளியிட்டுள்ளது. 'ஒரு வாசகரின் ஆர்வம்' எனும் தலைப்பில் இதே இதழ் வாசகரை பாராட்டி,*

> இவர் மலருடன் நீண்ட தொடர்பு கொண்டவர். இவர் பெயர் மலரின் வெளிவாராத மாதமே இருக்காது என்று கூறலாம்[167]

*என்று வாசகர்களுக்கிடையே நெருக்கத்தை ஏற்படுத்திக் கொள்கிறது.*

*கடிதம் எழுதிய வாசகர்களின் பெயர்களைத் தலைப்பாகக் கொண்டு வாசகர் கடிதம் அமைகிறது. 'நம் தோழர் கோதண்டத்தின் கோபக்கடிதம்' எனும் தலைப்பில்,*

> நான் கிராமத்தில் விவசாயக்கூலி குடும்பத்தில் பிறந்து எங்கள் அண்ணன் முயற்சியால் சிறிது படித்துள்ளேன். தமிழகத்து அரசியலை என் படிப்புக்கு தகுந்த நிலையில் இருந்து கவனித்து வருகின்றேன். இந்த நிலையில் நான் கூத்தாடி அரசியலை எப்பொழுதும் ஆதரித்ததே இல்லை. உங்கள் 'அச்சமில்லை' 2007 மே, மாதஇதழ் கூத்தாடி எம்.ஜி.ஆர் ரசிகமன்ற இதழாக வந்துள்ளது. எனவே, 'அச்சமில்லை' இதழ் எனக்கு வந்துவிட்டது. இனி அச்சமில்லை இதழை என் முகவரிக்கு அனுப்ப வேண்டாம் என அன்புடன் கேட்டுக் கொள்கின்றேன்[168]

*என எழுதியிருந்ததை பெயருக்கேற்றாற் போல இனஇதழ் வெளியிட்டுள்ளது.*

*'ஆசிரியருக்குக் கடிதம்' எனும் தலைப்பில் தஞ்சையிலிருந்து T.பூசாந்திரம்,*

> அன்புச் சகோதரர், இந்த மாத 'தேவேந்திரர் மலர்' என் பார்வைக்கு வந்தது. நமது சமூகம் தழைந்தோங்க வேண்டும் என்ற ஆவலில் தேவேந்திரர் மலர் வாசகர் வட்டத்தில் உறுப்பினராக விரும்புகிறேன்[169]

*என எழுதியிருக்கிறார்.*

*'வாசகர் மனம்' எனும் தலைப்பில் திருவாரூர் மாவட்டத்திலிருந்து ஒரு வாசகர்*

பண்டிதம் இதழ் கிடைக்கப்பெற்றேன் படித்தேன் மகிழ்ந்தேன். மேலும் தமிழ்நாடு முழுவதும் உள்ள நமது இனமக்களின் உணர்வுகளை ஆராய்ந்து செய்திகள் போடுவது நலம்[170]

என்று இனப் பற்றை வெளிப்படுத்துகிறார். 'கடலாருக்கு வந்த கடிதங்கள்' எனும் தலைப்பில் அம்பையிலிருந்து இரா.நவமணி,

இதழ் மணக்கிறது - படைப்புகளோடு. இதயம் இனிக்கிறது - துடிப்புகளோடு. இமயம் சாதிக்காததை இலக்கியம் சாதிக்கும் அந்தவழியில் இதழ்ப்பணி மூலம் எங்கள் குரல் ஒலிக்கிறது[171]

என வெளியிடுகிறது.

'வாசகர் வரிகள்' எனும் தலைப்பில் உசிலம்பட்டியிலிருந்து ம.ரெங்கசாமி, 2008 - ஜுலை மாத வீரபாண்டிய கட்டபொம்மன் இதழில் இடம் பெற்ற 'ஏனப்பா இந்தியனே' என்ற பாடலில்,

துக்கம் வராமலிருக்க மனதில் துணிவு வேண்டும்
வருத்தம் வராமலிருக்க மனதில் வீரம் வேண்டும்
கட்டபொம்மனின் வீரம் கணினியுகத்திலும் வேண்டும்
கழகமும் பண்பாடும் உலகெங்கும் ஓங்க வேண்டும்[172]

என்ற வரிகள் அருமையிலும் அருமை எனப் பாராட்டுகின்றார்.

'எதிரொலி' எனும் தலைப்பில் கோயமுத்தூரிலிருந்து வி.ஆர்.கோவிந்தராஜுலு,

அன்பான யாதவர் பேரவை ஆசிரியர் அவர்களுக்குச் சுதந்திரவீரன் அழகுமுத்து யாதவ் வாழ்க்கை வரலாற்றைப் படித்து மிகவும் மன மகிழ்ச்சி அடைந்தேன். எனது நீண்டநாள் கோரிக்கையை ஏற்று அவருடைய வாழ்க்கை வரலாற்றை வெளியிட்டமைக்கு மிக்க நன்றி[173]

என உணர்ச்சி பெருக்கோடு கூறுகிறார்.

இனஇதழ்கள் பெரும்பாலும் வாசகர் கடிதங்களை வெளியிட்டு மகிழ்கின்றன. விளக்கு, அகச்சுடர் போன்ற இனஇதழ்களில் வாசகர் கடிதம் பகுதி இடம் பெறவில்லை. இனஇதழ்களில் வாசகர்களுக்காக 'வாசகர் வட்டம்' என்ற அமைப்பை ஏற்படுத்தியுள்ள 'தேவேந்திரர் மலர்' இதழ் குறிப்பிடத்தக்கது.

**வாசகர்களை இதழ்களோடு தொடர்பு கொள்ள வைத்தல்**

இனஇதழ்கள் ஒவ்வொன்றும் தன் வாசகர் வட்டத்தை வலுப்படுத்தவும், தக்க வைக்கவும் பல உத்திமுறைகளைக் கையாளுகின்றன. இதில் பலவித ரசனை கொண்ட மக்களை ஈர்ப்பது என்பது அவ்வளவு எளிதல்ல. எனவே இனஇதழ்கள் சில முக்கியப் பொருண்மைகளை மையமாக வைத்து மக்களைத் தொடர்பு கொள்ள மருத்துவ முகாம், சுயம்வரம் நடத்தல், மாணவ, மாணவியர்க்குப் பரிசு வழங்குதல், திருமண வரன், சமையல் குறிப்பு, கேள்வி - பதில், துணுக்குகள், அழகுக்குறிப்பு, பொதுஅறிவு போன்றவைகளை வகைப்படுத்துகின்றன.

**மருத்துவம்**

நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம், நோய் நொடியின்றி மகிழ்ச்சியாக வாழ உடல்நலம் அவசியம், உடல் நலத்திற்கு அடிப்படை மனமகிழ்ச்சியாகும். இனமக்கள் நலனில் அக்கறை காட்டும் இதழ்கள் வாசகர்களின் உடல்நலத்தைப் பேண மருத்துவக் கருத்துக்களைத் தந்துள்ளன.

இவை பல பெயர்களில் இன இதழ்களில் வெளிவருகின்றன. மருத்துவக் கட்டுரைகளும் அவ்வப்போது இதழ்களில் இடம்பெறுகின்றன.

'செலவில்லா சித்த மருத்துவம்'[174] எனும் தலைப்பில் வீட்டிலேயே மருந்துகளைத் தயார் செய்வதற்கு வழிகாட்டுகிறது.

'மருத்துவ ஆலோசனைகள்'[175] எனும் தலைப்பு அன்னையருக்குத் தேவையான தாய்ப்பால் தொடர்பான செய்திகளை எடுத்துரைக்கிறது. 'சிறுநீரகக் கற்கள் நீக்க நவீன சிகிச்சை'[176] எனும் தலைப்பு சிறுநீரக கற்களின் அறிகுறிகள், பரிசோதனைகள்போன்றனவற்றையும், அவை தீர என்ன செய்ய வேண்டும் என்பதை வலியுறுத்துகிறது. 'மருந்தில்லா மருத்துவம்'[177] எனும் தலைப்பு 'மிளகு' என்பதில் என்னென்ன அடங்கியிருக்கிறது. இதை எந்தெந்த நோய்க்கெல்லாம் பயன்படுத்த முடியும் என்பதை விலாவாரியாக விவரிக்கிறது.

'மருத்துவம்'[178] என்னும் பகுதியில் செல்போன் உபயோகித்தால் புற்றுநோய் வருமா? எனும் தலைப்பு இன்றைய சூழ்நிலையில் செல்போன்களின் பெருக்கம்

மனிதனின் ஆயுளுக்கு உலை வைக்கக்கூடிய அளவுக்கு இருப்பதை பதிவு செய்கிறது. ‘ஆகா! உடம்பிற்குள், இவ்வளவு விஷயம் இருக்கிறதா?’[179] எனும் தலைப்பு நம் உடலில் உள்ள உறுப்புகளின் செயல்பாடு குறித்து விவரித்து, அதைப் பாதுகாக்கும் வழிமுறைகள் குறித்தும் எடுத்துரைக்கின்றன.

‘என்ன சாப்பிடுவது, எப்படி சாப்பிடுவது?’[180] எனும் தலைப்பு உரிய நேரத்தில் உடலுக்கு ஏற்ற உணவுகளை உண்பதே நல்லது என்பதை விளக்குகிறது. ‘கர்ப்பகால நீரழிவுநோயும், உடற்பயிற்சியும்’[181] எனும் தலைப்பு பிரசவ காலத்தில் பெண்கள் உடல்நலத்தை எவ்வாறு பேண வேண்டும் என்பதை இனப்பெண்களுக்கான ஆரோக்கியத்தில் முயற்சிக்கிறது. இவை தவிர பலரின் மருத்துவக்குறிப்புகளைத் தொகுத்துத் தருவதைக் கடமையாகக் கொண்டுள்ளன.

**துணுக்குகள் (Titbits)**

உலகின் பல்வேறு பகுதிகளிலும் நடைபெறும் செய்திகளை மக்களுக்கு உணர்த்த இனஇதழ்கள் துணுக்குகளை வெளியிடுகின்றன. அறிவு விளையாட்டிற்கு ஆடுகளங்களாகத் திகழும் இத்துணுக்குகள் பக்க அமைப்பிற்குப் பெருந்துணை செய்கின்றன. தகவல்களின் சுருக்கமாகவும், சுவை மிக்கதுமாக விளங்கும் இத்துணுக்குகளை இடநிரப்பிகள் (Space fillers) எனவும் அழைப்பர்.

> வாசகர்களுக்கு ஒய்விடம் அளிப்பது, நீண்ட பகுதியின் தொடர்ச்சியிலிருந்து ஒரு சிறு மாறுதலைத் தருவது, ஒரு வெளியீட்டினை உருவாக்கும்போது ஒருபக்கம் அல்லது ஒரு பகுதியை நிரப்புவதற்காக வேறுபட்ட அளவுகளில் சிறிய தகவல்கள் ஆசிரியருக்குக் கொடுப்பது என்பதே இடநிரப்பிகளின் நோக்கமாகும்[182]

என்கிறார் எல்மோ ஸ்காட் வாட்சன்.

பக்கங்களை அழகு செய்யப் பயன்படும் துணுக்குகள் இன்று இதழியலில் ஒரு முக்கிய இடத்தைப் பிடித்துள்ளன. வாசகர்களுக்குப் பல்வேறுபட்ட செய்திகளைத் தருவதுடன் அறிவித்தல், அறிவூட்டல், மகிழ்வூட்டல் எனும் மூன்று நிலைகளில் செயல்படும் இத்துணுக்குகளைச் செய்தித் துணுக்குகள், நகைச்சுவைத்துணுக்குகள் என இருவகைப்படுத்தலாம்.

**செய்தித் துணுக்குகள்**

மக்களின் ஆவலைத்தூண்டுகின்ற நிகழ்ச்சிகளையும், பிரச்சினைகளையும், சமுதாயக் கண்ணோட்டத்துடன் இதழ்கள் சுருங்கச் சொல்வதால் இதனைத் துணுக்குகள் என்கிறோம்.

> ஒரு கருத்தை மையமாகக் கொண்டு அமையும் இத்துணுக்குகள் குறிப்பாகவும், விரிவாகவும் அமைகின்றன. பெருத்த எண்ணிக்கையுடைய வாசகர்கள் விரும்புகின்ற முற்றிலும் உண்மையான நிகழ்ச்சிகளை அல்லது கருத்துக்களைச் செய்திகள் எனலாம்[183]

என்கிறார் ரோலண்ட் இ.உல்ஸ்லி. இதழ்களில் இடம் பெற்றுள்ள செய்தித்துணுக்குகள் அறிவித்தலை மையமாகக் கொண்டு விளங்குகின்றன.

செய்தித் துணுக்குகளை இன இதழ்கள் வெளியிடுவதில் சிறப்பாக அமைகின்றன. செய்தித்துணுக்குகளை வெளியிடாத இனஇதழ்களே இல்லை என்று சொல்லுமளவுக்கு முக்கிய நிகழ்வுச் செய்திகளோடு இவை கலந்து காணப்படுகின்றன. 'கோடானுகோடி நன்றி' 'பிறந்தநாள் விழா' குஷ்புவின் காமெடி 'சமூக சேவை'[184] என இவை போன்ற தலைப்புகளை அமைத்து இனம் தொடர்பான செய்தித்துணுக்குகளை அமைக்கின்றன.

'பொன்மொழிகள்', 'கொலை மாவட்டம்'[185] போன்ற துணுக்குச் செய்திகளை இந்திய நாடார் முரசு இதழும், 'தந்தை பெரியார் அவர்களைப் பற்றிய அரிய செய்திகள்'[186] எனும் துணுக்கை கொங்கு இதழும் வெளியிட்டுள்ளன. 'செய்திச் சுரங்கம், சிந்தனை அரங்கம்'[187] எனும் துணுக்கு உலக அளவில் நடைபெற்ற செய்திகளைத் தருகிறது. 'பொது அறிவு'[188] எனும் துணுக்குப் பொது அறிவினையும் வெளிப்படுத்துகிறது.

'குழந்தை நலம்'[189] எனும் துணுக்குக் குழந்தை உடல் நலத்தையும், உடல் நலமாயிருக்க'[190] எனும் துணுக்குப் பெரியவர்களின் உடல் நலத்தையும் ஆரோக்கியமாக வைத்துக் கொள்ளச் செய்கிறது.

'திருக்குறள்' எனும் துணுக்குத் திருக்குறளையும், அதன் பொருளையும் வெளிப்படுத்துகிறது. 'கண்ணனுக்குத் தொட்டில் தாலாட்டு'[191] எனும் துணுக்குத் தென்மாவட்ட கோவிலில் கண்ணன் வழிபாடு பற்றி குறிப்பிடுகிறது.

'ஒரு நிமிடம்'[192] எனும் பெயரில் அமையும் துணுக்குகள் கேள்வியும் பதிலுமாக அமைகிறது. காட்டாக, மீனவர் இனத்திற்காக வெளிவரும் கடலார் எனும் இனஇதழ் கடல் வாழ்வியல் சார்ந்த செய்திகளைத் துணுக்குகளாக அதிகம் வெளியிடுவதை அறியமுடிகிறது. மேலும் துணுக்குச் செய்திகளோடு அதற்குரிய புகைப்படத்தையும் வெளியிட்டு இருப்பது சிறப்பிற்குரியதாகும்.

பொதுவாக எல்லா இனஇதழ்களும் செய்தி துணுக்குகளை வெளியிடுகின்றன என்பதை அறியமுடிகிறது.

**நகைச்சுவைத் துணுக்குகள்**

மக்களை மகிழ்விக்கும் நோக்குடன் வெளியிடப்படும் துணுக்குகள் நகைச் சுவைத்துணுக்குகள் ஆகும். நகைச்சுவை உணர்வுடன் கேலி, கிண்டல், நையாண்டித்தன்மை என்பனவற்றை அளவுடன் கலந்து தருவதால் இத்தகைய துணுக்குகள் மக்களை மகிழ்ச்சியடையச் செய்கின்றன. இந்நகைச்சுவைத் துணுக்கின் இன்றியமையாமையைக் குறிப்பிடும்போது கோதண்டபாணி என்பவர்,

> ஓர் இதழ் எத்தகைய சிறந்த செய்தியினை வெளியிட்டாலும் நகைச் சுவைத்துணுக்குகள் அவ்விதழில் இல்லாவிட்டால், அவ்விதழ் வலுக்குறைந்து விடும் செய்தியை செய்திகளின் திணிப்பில் வாசகர் சோர்ந்துவிடாமல் இந்நகைச் சுவைத்துணுக்குகள் மகிழ்வூட்டுகின்றன.[193]

இன இதழ்களில் நகைச்சுவை துணுக்குகள் என்பது அதிகமாக இடம் பெறவில்லை. ஏனெனில் இனஇதழ்கள் இன விழிப்புணர்வு, இனஒற்றுமை இவற்றையே நோக்காக அறிவுறுத்தல் பணியைச் செய்கின்றன. இதில் மகிழ்வித்தல் பணி என்பது தேவையில்லாததாக அமைந்துவிடுகிறது. ஆனால் சில இனஇதழ்கள் நகைச்சுவைத்துணுக்குகளை அமைத்துக்கொள்கின்றன.

ஒலிக்கும் யாதவர் முரசு, 'ஜோக்ஸ்' எனும் தலைப்பில், "சிவபெருமான் ஏன் முருகனை கம்யூட்டர் படிக்க வைக்கவில்லை. ஏனென்றால் பிள்ளையார் "மவுசை" கொண்டு போய்விட்டார்" என்றும், "இது ஒரு நகைச்சுவை துணுக்கு மட்டுமே" எனும் தலைப்பில் 30 வருடங்களுக்கு முன் கருணாநிதியின் முத்தாரம் இதழில் வெளிவந்தது என்று குறிப்பிட்ட நகைச்சுவைத்துணுக்கு ஒன்று இடம் பெறுகிறது.

கிளம்பிட்டானுங்கய்யா. . . . கிளம்பிட்டானுங்க[194]

எனும் பிரபல திரைப்பட நகைச்சுவை பெயர் கொண்ட தலைப்பு, சென்னைக்கு அருகே ரூ.30 ஆயிரம் கோடி செலவில் இராசாயனத் தொழிற்சாலை தொடங்குவதைப் பற்றியும், அதன் விளைவு குறித்தும் இந்நகைச்சுவை துணுக்கு எடுத்துரைக்கிறது.

ஆன்மீகம், சமையல், சித்த மருத்துவம், பொது அறிவு போன்ற பல்வேறுபட்ட துணுக்குகளோடு நகைச்சுவை துணுக்குகளைத் தெலுங்கர் கீதம் இதழ் ஒவ்வொரு இதழிலும் வெளியிடுவதை அறியமுடிகிறது. பொதுஅறிவு துணுக்குக்கு 'ஒரு நிமிடம்' எனும் பெயரிட்டு அமைத்துள்ளது.

**விளம்பரங்கள்**

இன்றைய தகவல் தொடர்பு சாதனச் சூழலில் விளம்பரங்கள் மிகப்பெரிய பங்கு வகிக்கின்றன. விளம்பரங்கள் இல்லாத இடம் இல்லையென்று சொல்லுமளவுக்கு விளம்பரங்களின் ஆதிக்கம் இன்று கொடி கட்டிப் பறந்து கொண்டிருக்கின்றது. தொடர்புச் சாதனங்களான இதழ்கள், செய்தித்தாள், வானொலி, தொலைக்காட்சி, கணினி, இணையம் போன்றவைகளில் இன்று விளம்பரங்கள் இல்லையென்றால் இயங்க முடியாது என்கிற அளவில் பொருளாதார ரீதியில் விளம்பரதாரார்களைச் சார்ந்துள்ளன. விளம்பரங்களின் இந்தச் செல்வாக்கினால் தொடர்பு சாதனங்களின் வழியே வரும் தகவல்களும் பெருமளவு மாறி வருகின்றன.

> விளம்பரம் என்பது இன்று மிகப்பெரிய சக்தி வாய்ந்த ஒரு நிறுவனம். அது நிறுவன ரீதியாகச் செயல்படுகின்றது. இந்த நிறுவன பலத்தைக் குறித்து எப்போதும் நாம் விழிப்புடன் இருக்க வேண்டியிருக்கின்றது. அவை உலகத்தை யதார்த்தத்தை நேரடியாகப் பிரதிபலிப்பதில்லை. மாறாக நுகர்வோர் கலச்சாரம் சார்பான ஒன்றாகவே அவை பிரதிபலிக்கின்றன[195]

என்பர்.

தகவல் தொடர்புச் சாதனங்கள் பலவற்றிலும் விளம்பரத்திற்குச் சிறப்பான இடம் இருந்து வருகிறது. அவ்வகையில் இதழ்களிலும் விளம்பரப் பகுதிக்குத் தனிஇடம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. விளம்பரத்தின் மூலம் வருவாய் கிடைக்க வழி இருப்பதையும், இவ்விதழ்கள் கவனத்தில் கொள்கின்றன. இதழ்கள் தங்களை நிலைகாட்டிக் கொள்ள இவ்வருவாய் மூலங்கள் பயன்படுகின்றன. விளம்பரங்கள் இன்றைய தொழில் வளர்ச்சியில் உயிர்மூச்சு, வேகமான பொருளாதார வளர்ச்சிக்கு வேண்டிய இரத்த ஓட்டம் என்றெல்லாம் விளம்பரத்திற்கு விளக்கம் அளிப்பர்.

> எல்லாத் துறைகளிலும் விளம்பரம் என்பதே பேச்சு, இதழ்களுக்கோ விளம்பரம் என்பதே மூச்சு, விற்பனையும் விளம்பரங்களுமே இதழ்களின் பொருளாதாரத்தை நிலைப்படுத்துகின்றன[196]

என்பதற்கேற்ப இதழ்கள் இயங்குவதற்கு விற்பனையும் விளம்பரமும் அவசியமாகின்றன.

### விளம்பரங்களின் வகைகள்

அசையும் விளம்பரங்கள், அசையா விளம்பரங்கள், ஒலி விளம்பரங்கள் எனப்பொதுவாக மூன்று வகையில் அமைகின்றன. மேலும் 1.காட்சி முறை விளம்பரம், 2. வரி விளம்பரம், 3. நெற்றி விளம்பரம் (அ) காதுவிளம்பரம், 4. அரசு விளம்பரம், 5. அரசு விளம்பரம், 6. நிறுவன விளம்பரம், 7. செய்தி விளம்பரம் எனவும் பாகுபடுத்துவர் இதழியலாளர்கள்.

### இனஇதழ்களில் விளம்பரம்

இனஇதழ்களில் விளம்பரம் பல இதழ்களில் மிகுதியாகவும், சிலவற்றில் குறைவாகவும், இன்னும் சில இதழ்கள் விளம்பரங்கள் இல்லாமலும் என மூன்று வகைகளில் வெளிவருகின்றன. விளம்பரம் என்பது தொடக்கக் காலத்தில் இதழ்களை நடத்துவதற்குரிய பொருளாதாரச் சுமையை ஓரளவு ஈடுசெய்வதற்காக ஏடுகளில் உருவானது. அதாவது 'செய்திகளுக்கு நடுவில் விளம்பரம்' என்ற நிலைக்கு மாற்றாக இன்றைக்கு 'விளம்பரங்களுக்கு மத்தியில் செய்திகள்' என மாறிப்போய்விட்டன. விளம்பரத்தை முழுக்க, முழுக்க நம்பியே இதழ்களை நடத்துகின்ற சூழ்நிலையை இன இதழாசிரியர்கள் கட்டமைத்துக் கொள்கின்றனர்.

இனஇதழ்கள் பெரும்பாலும் சந்தாவையும், விளம்பரத்தையும் நம்பியே வெளிவருகின்றன. விளம்பரங்கள் வாயிலாகவே அதிகளவு வருமானம் கிடைப்பதை அறியமுடிகிறது. இதைப் பயன்படுத்திக் கொண்ட பல இனஇதழ்கள் விளம்பரத்தை ஓர் உத்தியாக மிக முக்கிய உத்தியாகப் பயன்படுத்திக் கொள்கின்றன. இவ்விதழ்களின் விளம்பரத்தைப் பொதுவாக,

1. இன விளம்பரங்கள்
2. வர்த்தக விளம்பரங்கள்

என இருவகைப்படுத்தலாம்.

**இன விளம்பரங்கள்**

தங்களது இனத்தினர் நடத்தும் பேரவை, இயக்க, அமைப்பு நிகழ்ச்சிகள் விபரம், பிறப்பு, திருமணவரன், மருத்துவம், பணிஓய்வு, இறப்பு, கல்வி நிறுவனங்கள், இன கட்சிகளின் விளம்பரம், இனப்பிரமுகர் விழா நிகழ்வு விளம்பரங்கள் போன்றவற்றின் விளம்பரங்கள் அதிகளவில் இடம் பெறுகின்றன. இவ்வகையான விளம்பரங்கள் தம் இனத்தார்களை மையமாக வைத்தே அமைகின்றன.

'மருதமலர்' இதழின் எல்லா இதழ்களிலும் அட்டை உள்பக்கங்களில் 'கண்ணீர் அஞ்சலி' விளம்பரமும், உட்பக்கங்களில் பிறப்பு, பணி ஓய்வு, திருமண வரன், இறப்பு, சித்த மருத்துவம், உள்ளாட்சி தேர்தல் போன்றவை செய்தி விளம்பரங்களாகவும் வெளியிடுகிறது. காட்டாக,

உயர்ந்த உள்ளங்களுக்குத் தாழ்மையான வேண்டுகோள்.[197]

இவ்விளம்பரம் இனஅறக்கட்டளைப் பற்றியதாகும். இதில் இனப்பற்றோடு உதவ வாருங்கள் எனக் குறிப்பிடப்பெற்றுள்ளது.

இந்திய நாடார் முரசு (ஜூலை 2008, பக்.5) இதழில் இன விளம்பரங்கள் குறைவாகக் காணப்படுகிறது. இன அமைப்பு, புதிய நிர்வாகிகள் நியமனம் குறித்த விளம்பரத்தில் 'இனம் காப்போம்! மொழி காப்போம்! தாயகம் காப்போம்!' எனக் குறிப்பிடுகிறது. இவ்விதழில் திருமண வரன், பிறந்த நாள் விழா, கண்ணீர் அஞ்சலி போன்ற விளம்பரங்களும் இடம் பெற்றுள்ளன.

செங்குந்த மித்திரன் இதழில் 'காவ்யா செங்குந்தர் திருமண தகவல் மையம் செய்யாறு'[198] எனும் விளம்பரம் இவ்வின மக்களின் திருமணத்தை நடத்தி வைப்பதில் சிறந்து விளங்குகிறோம் என்பதை எடுத்துரைக்கிறது. திருமண வரன் விபரம் இவ்விதழில் பயோடேட்டா வடிவில் இடம் பெற்றுள்ளது.

தேவேந்திரர் மலர் இதழில் 'டெக்கோரம் நடத்தும் காவல்துறைத் தேர்விற்கு இலவசப்பயிற்சி முகாம்'[199] எனும் விளம்பரம் பயிற்சியின் போது உணவு, தங்குமிடம், பயிற்சிக்கட்டணம் இலவசம் என்பதைக் குறிப்பிடுகிறது. திருமணவரன் விளம்பரத்தைக் காட்டாக மதம் / பிறந்த தேதி / உயரம் / படிப்பு / வேலை / சம்பளம் / நிறம் / நட்சத்திரம் / சொந்த மாவட்டம் / தற்பொழுது மாவட்டம் - இவற்றைச் சதுரவடிவத்திற்குள் அமைத்து வெளியிடுகிறது.

*பூச்சரம் இதழில் 'பல்லாண்டு பல்லாண்டு'[200] எனும் விளம்பரம் இரணிக்கோயில் பள்ளத்தூரைச் சார்ந்த, அ.அ.அண்ணாமலை செட்டியார் - விசாலாட்சி ஆச்சியின் பெயரனும் ராஜா அண்ணாமலை - வள்ளிக்கண்ணு தம்பதியரின் மகனுமான செல்வன் விஷால் கணேஷ் 18-07-2008 ஆம் நன்நாளில் 2வது அகவையில் அடியெடுத்து வைத்துள்ளான் செல்வனைப் பல்லாண்டு பாடுவோம் என வாழ்த்துகிறது.*

*'ஒலிக்கும் யாதவர் முரசு' இதழில் 'வருந்துகிறோம்'[201] எனும் விளம்பரம் கோயம்புத்தூரைச் சார்ந்த புலவர் பட்டணம் திரு.ந.பழனிச்சாமி அவர்களின் வாழ்க்கைத் துணைவியார் திருமதி.கண்ணம்மா அவர்கள் 7.11.2008 அன்று இயற்கை எய்தினார் என்ற செய்தியை வெளியிட்டு வருத்தத்தைப் பகிர்ந்து கொள்கிறது.*

*இன விளம்பரங்களில் மிகுதியாக பிறப்பு, இறப்புகளைப் பற்றியும், திருமண வரன்கள் பற்றியும் இடம் பெறுவதை அறியமுடிகிறது. கொங்கு, அச்சமில்லை, அகச்சுடர், பண்டிதம், கடலார், வீ.பா.கட்டபொம்மன் போன்றவைகளில் இன விளம்பரங்கள் அரிதாகவே காணப்படுகின்றன.*

**வர்த்தக விளம்பரங்கள்**

*இன இதழ்களில் வர்த்தக விளம்பரங்கள் என்பது இனமக்களின் தொழில் நிறுவனங்களான ஜவுளி, ஜுவல்லரி, உணவகம், கல்வி நிறுவனங்கள், பதிப்பகங்கள், வேளாண்மை இடுபொருட்கள், மருத்துவமனை, ரியல் எஸ்டேட்ஸ், கணினி மையம், மீனவர்களின் கடைகள், ஆர்க்கெஸ்ட்ரா, மற்றும் பெருந்தொழிலதிபர்களின் நிறுவனங்கள் குறித்தும் வர்த்தக விளம்பரங்களாக அமைகின்றன. இனஇதழ்கள் பக்கங்களை ஒப்பந்தமுறையில் சில நிறுவனங்களுக்கு ஒதுக்கி விளம்பரப்படுத்துவதையும் வழக்கமாகக் கொண்டுள்ளன என்பதையும் அறியமுடிகிறது.*

*இந்திய நாடார் முரசு இதழ் வர்த்தக விளம்பரங்களை வெளியிடுவதில் முதன்மையானதாக விளங்குகிறது. இவ்வினமக்களில் பெரும்பாலானோர் தொழில் செய்து வருவதால் அவற்றை தம் இன இதழில் வெளியிட்டு மகிழ்கின்றனர். இவ்விதழில் விளம்பரங்கள் தமிழ், ஆங்கிலம் இருமொழிகளில் அமைகின்றன. மேலும் சிறுசிறு பெட்டிச் செய்திகள் போல விளம்பரங்கள் அதிகளவு இடம் பெற்றுள்ளன. காட்டாக,*

| எளிதாய் சமைத்திட! சுவையாய் சாப்பிட ஜாய்ஸ் மசாலா சாம்பார் பொடி ★ரசப்பொடி ★கரம் மசாலா ★மட்டன் மசாலா ★சிக்கன் மாசலா★[202] | VMS சிவசக்தி மெட்டல்ஸ் எங்களிடம் அலுமினிய பாத்திரங்கள் மதுரை பம்ப் ஸ்டவ், இரும்பு மற்றும் மர சாமான்கள் மொத்தமாகவும், சில்லறையாகவும் கிடைக்கும். |
|---|---|

செங்குந்த மித்திரன் இதழ் விளம்பரங்களை வெளியிடுவதில் புதுமையான உத்தியைக் கையாளுகிறது. இடது பக்க முழுவதும் விளம்பரங்களும் வலது பக்கம் முழுவதும் செய்திகளும் இடம் பெறுகின்றது. காட்டாக இதழின் ஹோட்டல் விளம்பரத்தில் பக்கத்தின் மேற்புறம் இளம் தம்பதியினர் மகிழ்ச்சியாக இருப்பது போலவும். கீழ்புறம் Hotel Kodai International Kokaikanal - South India என்ற முகவரி இடம் பெறுகிறது.

பூச்சரம் இதழ் சுற்றுலா, ஜுவல்லரி, கும்பாபிஷேகம் ஹோட்டல் போன்ற விளம்பரங்கள் இடம் பெறுகின்றன. இவ்விதழில் சில விளம்பரங்கள் வழுவழு தாளில் அமைந்துள்ளன. காட்டாக 'டைமண்ட் பார்க், தஞ்சாவூர் கிளைத் திறப்பு விழா' விளம்பரத்தை ஆடம்பரமாக வெளியிட்டுள்ளது. இவ்விதழில் ஆன்மீகம் தொடர்பான விளம்பரங்கள் மிகுதியாக இடம் பெறுகிறது.

மருதமலர் இதழில் 'தமிழ் ஆப்செட்' எனும் விளம்பரம் திருமண அழைப்பிதழ், டிஜிட்டல் பேனர், விசிட்டிங் கார்டு மற்றும் அனைத்து வகையான பிரிண்டிங், பைண்டிங் வேலைகளும் சிறப்பாகச் செய்து தரப்படும். விளம்பரத்தில் கீழ்ப்பகுதியில் குறிப்பு : ஆப்செட்மெசின் மெக்கானிக் இவரது சொந்த ஊர் வடநத்தம்பட்டி (சிற்றூர் ஆகும்) என வெளியிட்டு இருப்பதன் வாயிலாக வர்த்தக விளம்பரமும் இன விளம்பரத்தோடு தொடர்புடையதாகவே அமைகிறது.

ஒலிக்கும் யாதவர் முரசு இதழ் விளம்பரங்களைத் தமிழிலும், ஆங்கிலத்திலும் வெளியிடுகிறது. காட்டாக,

BALAJI BATTERY
CENTER

EXIDE (bbc) AMARON
Dealers for castrol Lubricabts,
Emetgency Lights & Inverters
No:5, Kamarajar Salai, R.A.Puram,
Chennai - 600 028
Ph - 2461 7336
Mobile : 98411 99956[203]

என ஆங்கிலத்திலும் விளம்பரம் வெளியிடுகிறது.

விளம்பரங்கள் இருவகையில் இனஇதழ்களில் அமைந்தாலும் இரண்டுமே இன மக்களையோ, அவர்களின் வணிக நிறுவனங்களையோ சார்ந்து அமைவதை அறியமுடிகிறது.

கொங்கு, அச்சமில்லை, அகச்சுடர், தேவேந்திர மலர், பண்டிதம், விளக்கு, வீரபாண்டிய கட்டபொம்மன் போன்ற இனஇதழ்களில் வர்த்த விளம்பரங்கள் அரிதாகவே காணப்படுகின்றன.

**சிறப்பு உத்திகள்**

இதழ்கள் வாசகர்களைக் கவர ஒவ்வொரு நாளும் புதியதைச் சிந்திக்கின்றன. இதன் விளைவாக நவீன உத்திகள் உதிக்கின்றன. இதழ்கள் இதனைப் பயன்படுத்தி இன வாசகர்களை ஈர்க்கின்றன. காலச்சூழலுக்கேற்ப இதழ்களும் தன்னை மாற்றிக் கொண்டு செயல்படுகின்றன. ஒவ்வொரு இன இதழும் தனக்கென தனித்த நடைகளையும், சிறப்புக்கூறுகளையும் பெற்று விளங்குகின்றன.

**ஆய்வுக்குட்பட்ட இனஇதழ்களின் சிறப்பு உத்திகள்**

**மருதமலர்**

இவ்விதழ் சின்னச்சின்ன செய்தித்துணுக்குகளை நெருக்கமாக அமைக்கிறது. எட்டுத் திசைகளில் நடைபெறுகின்ற இன நிகழ்வுகளின் பதிவை வெளியிட்டு இனமக்களிடம் தங்கள் பகுதிச் செய்தியும் இடம் பெறுதலை உறுதி செய்கிறது. இதன் காரணமாக இனத்தின் அனைத்துத் தரப்பினரையும் ஈர்க்க வழி செய்கிறது. இனப் படைப்பாளர்களை இதழோடு ஒருங்கிணைக்கும் பணியைச் சிறப்பாகச் செய்கிறது.

**இந்திய நாடார் முரசு**

இவ்விதழில் வெளியாகும் ஒவ்வொரு முன் அட்டைகளிலும் இன அமைப்புப் பிரதிநிதிகளின் சிறுபுகைப்படங்களை நிறைய வெளியிட்டு இன வாசகர்களை அமைப்பு வழியாக உருவாக்கவும், அவர்களைப் பற்றி இன வாசகர்கள் தெரிந்து கொள்ளவும் உதவி புரிகிறது.

**கொங்கு**

பல்வேறு வகையான உத்தி முறைகளைக் கையாளுகிறது. இதழின் ஒவ்வொரு பக்கத்தின் அடிப்பகுதியிலும் பொன்மொழிகளை வெளியிடுதல், இதழில் அமையும் முக்கியக் கருத்துகள், பெயர்கள் போன்றவைகளைத் தடித்த எழுத்துகளில் அமைத்தல், நடந்ததும், நடப்பதும் எனும் தலைப்பில் பேரவையின் நிகழ்வுகளைத் தேதி வாரியாக வரிசைப்படுத்தல், நவீன வேளாண்மை சார்ந்த செய்திகளுக்கு முக்கியத்துவம் அளித்தல், இதழின் நடுப்பக்கம் வண்ணப் புகைப்படங்கள் எனப் பல சிறப்பு உத்திகளைக் கையாண்டு வெளிவருகிறது. இதழின் தலையங்கமும், நடையும் சிறப்பிற்குரிய ஒன்றாக அமைகிறது.

**செங்குந்த மித்திரன்**

இதழின் ஒவ்வொரு தலையங்கமும் தன்னம்பிக்கையை இனமக்களுக்கு விதைக்கின்றது. தலையங்கத்தில் முக்கியப்பகுதிகளைத் தடித்த எழுத்துகளில் அமைத்தல், இதழின் இடது பக்கம் விளம்பரங்களும் வலது பக்கம் செய்திகளும் இடம் பெறுகின்றன.

**அச்சமில்லை**

அரசியல் செய்திகளுக்கு முக்கியத்துவம், தமிழ்த் தேசியப்பற்று, வடமாவட்டங்களை ஒருங்கிணைத்து வட தமிழ்மாநிலம் உருவாக்கல், செய்திகளைப் புள்ளிவிபரத்தோடு ஒப்பிட்டு பட்டியலிடல் போன்றவைகளை இவ்விதழ் சிறப்பு உத்திகளாக அமைத்துக் கொள்கிறது.

**அகச்சுடர்**

முன்அட்டையின் நடுவே புகைப்படத்தோடு, அது சார்ந்த செய்திகளை வெளியிடுகிறது.

**தேவேந்திரர் மலர்**

அட்டவணை இனத்தவர் சங்க கூட்டங்கள், தாழ்நிலை, இழிநிலை, தலித், தாழ்த்தப்பட்டவர், அரிசன் போன்ற கருத்துக்கள் அடங்கிய கட்டுரைகள், செய்திகள், கவிதைகள் 'தேவேந்திரர் மலர்' இதழில் இடம் பெறாது என்றும், உங்களிடமிருந்து ஆக்கப்பூர்வமான கருத்துக்கள் அடங்கிய கட்டுரைகள், கவிதைகள், செய்திகள் வரவேற்கப்படுகின்றன என அறிவித்து இருப்பது இன இதழ்களில் வேறுபட்டது என்பதை உறுதிப்படுத்துகிறது. இதழ் முழுக்க வழுவழுத் தாளில் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**கடலார்**

இதழின் தலையங்கத்தில் உவமை நடையைக் கையாளுதல் ஒவ்வொரு பக்கத்தின் அடிப்பகுதியில் பொன்மொழி இடம்பெறல், 'செய்தி அலைகள்' எனும் தலைப்பின் கீழ் கடந்த மாதம் நடைபெற்ற உலக நிகழ்வுகள் முதல் உள்ளூர் நிகழ்வு வரை பதிவு செய்தல். 'தூண்டில்' எனும் தலைப்பு கேள்வி - பதில் பகுதியும், 'ஒவ்வொரு விடியலும் வரலாறே' எனும் தலைப்பில் நடப்பு மாதத்தின் முக்கிய நாட்களை எடுத்துக்காட்டல் எனப் பல்வேறு உத்திகளைக் கையாளுகிறது. தான் சார்ந்த இனத்தின் பொருண்மை அடிப்படையிலேயே 'செய்தி அலைகள்', 'தூண்டில்' எனும் தலைப்புகள் இனத்தாரை கவருதற்குத் துணை செய்கின்றன.

**விளக்கு**

இதழின் பெரும்பாலான பக்கங்களை வண்ணப்பக்கங்களாக அமைத்தும், வண்ணப் புகைப்படங்களை வெளியிட்டும் இனமக்களை ஈர்க்கிறது.

**பூச்சரம்**

ஒவ்வொரு மாத இதழும் ஆன்மீகத்தை மையமாகக் கொண்டு அமைகிறது. திருத்தலங்கள் குறித்த செய்தியும், இனப் படைப்பாளி பதிப்பாளர் அறிமுகம், முக்கியப் பிரமுகர் நேர்காணல், வழுவழுத் தாளில் வண்ணப்புகைப்படங்கள் எனத் தனித்த உத்திகளைப் பயன்படுத்துகிறது. இதழின் முதல் பக்கம் மரபுக்கவிதை ஒன்று இடம் பெறுகிறது.

**ஒலிக்கும் யாதவ முரசு**

இதழில் ஆங்கிலக் கட்டுரைகள் இடம் பெறுதல், ஒவ்வொரு இதழின் முதல் பக்கத்தின் வலது பக்கம் திருப்பாவைப் பாடலும் பொருள் விளக்கமும், அதற்குக் கீழே திருக்குறளும் பொருளும் அமைவதை உத்தியாகக் கொண்டுள்ளது. ஆங்கிலத்தில் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

**வீரபாண்டிய கட்டபொம்மன்**

ஒவ்வொரு மாதமும் காட்டாக, செப்டம்பர் மாத சுவடுகள்' எனும் தலைப்பில் கடந்த கால உலக நிகழ்வுகளின் பதிவை இதழில் வெளியிடுகிறது. இதன் மூலம் இன வாசகர்களுக்கு வரலாறு குறித்த பாடத்தைப் போதிக்கிறது.

**தெலுங்கர் கீதம்**

எந்த இனஇதழிலும் இல்லாத சில உத்திகளை இவ்விதழ் கையாளுகிறது. செய்திகளுக்கிடையே, திரைப்பட நடிகைகளின் புகைப்படத்தை வெளியிடல், துணுக்குகளுக்கேற்ற புகைப்படங்களை அருகில் அமைத்தல், பெரும் புரவலர்களை 'பேட்ரான்கள்' எனும் தலைப்பின்கீழ் புகைப்படத்துடன் முதல் பக்கம் இடம்பெறல், முகப்பு அட்டையை இன தொழிலதிபர்களைக் கொண்டு அலங்கரித்தல் எனப் பல உத்தி முறைகளை வெளிப்படுத்துகிறது. பல் சுவை மாதஇதழ் என்பதை உறுதி செய்கிறது.

இன இதழ்கள் ஒவ்வொன்றும் தனித்த சிறப்பு உத்தியாக இனத்தின் பார்வையைச் செயல்படுத்தினாலும், சில இன இதழ்கள் உத்திகள் காரணமாக வெகுசன இதழ்களுக்கு இணையான உத்திகளோடு ஒப்புமைப்படுத்தும் அளவுக்கு இயங்குகின்றன என்பதையும் இங்கு பதிவு செய்வது காலத்தின் கட்டாயமாக அமைகிறது.

**தொகுப்புரை**

படைப்பாளர்கள் தம் படைப்புகளில் உள்ள கருத்தைப் படிப்பவர்கள் உள்வாங்கிக் கொள்வதற்கும், தனித்துவத்தை வெளிப்படுத்துவதற்கும் கையாளும் வழிமுறைகளை 'உத்தி' எனலாம்.

இதழ்கள் தங்கள் வாசகர்களுக்கு உலக நடப்புகளைத் தெரிவிக்கும் சூழலில் கையாளும் உத்திகளை இதழியல் 'உத்திகள்' என்பர்.

இதழ்களின் வகைகளுள் ஒன்றான ‘இன இதழ்கள்’ தங்கள் இனத்தார்க்குச் சமூகக் கருத்துக்களைப் புலப்படுத்தப் பயன்படுத்தும் உத்திகள் இன இதழ்களின் உத்திகளாகும்.

‘உத்தி’ என்பதன் விளக்கம் பல்வேறு எடுத்துக்காட்டுகளுடன் தெளிவுப்படுத்தப்பட்டுள்ளது.

ஆய்வுக்குட்பட்ட பதினாறு இன இதழ்களிலும் கருத்து விளக்கத்திற்கு உத்திகள் எடுத்தாளப்பட்டுள்ளன.

இன இதழ்களுள் கவுண்டர் இன இதழான ‘கொங்கு’ பிற இதழ்களைவிட கருத்துப் புலப்பாட்டிற்கு மிகுதியான உத்திகளைக் கையாள்வதைக் காணமுடிகிறது.

பரதவர் இன இதழான ‘கடலார் இதழ்’ மீனவர் பிரச்சனைகள், சமூகச் செய்திகளுடன் கடலியல் சார்ந்த பொது அறிவுக் கூறுகளை அதிகளவில் வெளியிடுவதை உத்தியாகக் கொண்டுள்ளது.

தேவேந்திரர் இன இதழான மருதமலர் சனரஞ்சக இதழ்களைப் போல அனைத்து வகை உத்திகளையும் கையாள்கின்றது.

செய்திகளை வெளியிடுவதில் குறைந்த பக்கங்களுக்குள் அதிகளவில் செய்திகள் வெளியிடுவதனால் நெருக்கம் என்னும் அடர்த்தி (Density) தன்மையைக் கொண்டுள்ளது. இதற்கு இன இதழ்களில் அதிக எண்ணிக்கையிலான இதழ்களை (more number of circulation) வெளியிடுவதும் ஒரு காரணமாக இருக்கின்றது.

இன இதழ்கள் அவ்வவ் இன மரபுசார் தொழில்களைப் போற்றவும், வளர்க்கவும் முன்னுரிமை கொடுப்பதை உத்தியாகக் கொண்டுள்ளன.

நகரத்தார் இன இதழான ‘பூச்சரம்’ என்னும் இதழ் அவர்களின் அடிப்படைத் தொழிலான வணிகத்திற்கு முன்னுரிமை கொடுப்பதை உத்தியாகக் கொண்டுள்ளது.

இன இதழ்கள் தங்கள் இன மக்களின் திருமணங்களுக்கு அதிக வாய்ப்பு கொடுக்கின்றன. ‘பூச்சரம்’ என்னும் இதழ் வண்ணம் மற்றும் கருப்பு-வெள்ளை புகைப்படங்களுடன் திருமணச் செய்திகளுக்கு வாய்ப்பளிக்கிறது. இவ்விதழ் பிற இன இதழ்களைவிட ஆன்மீகச் செய்திகளுக்கும் இடமளிக்கிறது.

இன இதழ்களில் சமயப்பற்று என்னும் நோக்கில் யாதவர் இன இதழ்களான ‘புதிய யாதவம்’, ‘ஒலிக்கும் யாதவர் முரசு’ என்னும் இதழ்கள் வைணவ சமயக் கருத்துகளுக்கு முன்னுரிமை அளிப்பதைத் தனித்த உத்தியாகக் கொண்டுள்ளன.

இதழ்களில் தலையங்கம் என்பது இதயம் என்று கருதப்பட்டாலும் இன இதழ்களில் தலையங்கம் இல்லா இதழ்களும் வெளிவருகின்றன.

பக்க ஒருங்கமைப்பு, செய்திக் கட்டமைப்பு போன்றவற்றில் பொதுத் தன்மை காணப்பட்டாலும் குறைந்தளவு பக்கங்கள் கொண்டவைகளாக 'பண்டிதம்', 'அகச்சுடர்', 'இருளர் செய்தி' போன்ற இதழ்கள் வெளிவருகின்றன.

இன இதழ்களில் அதிகளவு பக்கங்கள் கொண்ட இதழ்கள் என்பதை 'பூச்சரம்', 'புதிய யாதவம்' ஆகியன பெற்றுள்ளன.

பெரும்பான்மையான இன இதழ்கள் தன்னுடைய இதழின் பெயரிலேயே இனத்தைத் தாங்கி வருகின்றன. ஒரு சில இதழ்களே தலைப்பில் இனத்தின் பெயரை வெளிப்படுத்தவில்லை. காட்டாக பூச்சரம், அச்சமில்லை, விளக்கு போன்றவை அமைகின்றன.

ஆய்வுக்குட்பட்ட இன இதழ்களிலேயே 'கொங்கு', 'கடலார்' என்னும் இதழ்களின் நடை தனித்தன்மை வாய்ந்ததாக இருக்கின்றதை அறியமுடிகிறது. மேலும் இன்றியமையாத செய்திகளை தடித்த எழுத்துகளில் (Bold letters) வெளியிடுவதை தனித்த உத்தியாகக் காணமுடிகிறது.

இன இதழ்களில் உணர்ச்சி நடையும், விளித்தல் நடையும் மிகுதியாகக் காணப்படுகின்றன. இதற்கு இனத்தாரிடையே இனவுணர்வு ஊட்டுவதும் மக்களை ஒன்று திரட்டுவதற்கு விளிப்பதும் காரணங்களாக வெளிப்படுகின்றன.

இன இதழ்களில் வாசகர் கடிதம் என்பது தங்கள் இனத்தவர்களைப் படைப்பாளர்கள், எழுத்தாளர்களாக ஊக்குவிப்பதற்கும் முதன்மை கொடுப்பதை அறியமுடிகிறது.

விளம்பரத்தை வியாபார உத்தியாகப் பெரும்பாலான இன இதழ்கள் கையாள்கின்றன.

## சான்றெண் விளக்கம்

1. சோமலெ, **தமிழ் இதழ்கள்**, ப.VlXV.
2. மா.பா.குருசாமி, **இதழியல் கலை**, ப.7.
3. எஸ்.ஸ்ரீகுமார், என்.கிருஷ்ணன், **இதழியல் நுணுக்கங்கள்**, ப.15.
4. நா.கதிர்வேற்பிள்ளை, **தமிழ்மொழி அகராதி**, ப.27.
5. செந்நாகம் சு.குமாரசாமி, **இலக்கியச் சொல் அகராதி**, ப.37.
6. A.Chidambaranathan, **English-Tamil Dictionary**, p.10663.
7. **Tamil Lexicon**, Vol.2, p.410.
8. **Tranguaber Tamil and English Dictionary**, p.110.
9. அ.ஜெயச்சந்திரன், **வள்ளலாரின் இலக்கிய உத்திகள்**, ப.41.
10. மா.இராமலிங்கம், **விடுதலைக்கு முன் புதிய தமிழ்ச் சிறுகதைகள்**, ப.9.
11. மேலாண்மை பொன்னுச்சாமி, **சிறுகதைப் படைப்பில் உள் விபகாரம்**, ப.114.
12. தொல்காப்பியம், பொருள். செய்யுளியல், நூற்பா 111.
13. சுப.வீரபாண்டியன், **இந்தக் கால கவிதை உத்திகள்**, 1985, ப.9.
14. Mark Schrer, **Technique as Discovery**, Devid Codge (ed.), 20th Century Literary Criticism, p.387.
15. ஆ.பொன்னு நடராஜன், **அன்னி மிஞ்லியில் நாடகக்கூறுகள்**, எம்.ஃபில். பட்ட ஆய்வேடு, ம.கா.ப. (1985), ப.36.
16. ச.வே.சு., **எண்பதில் தமிழ்**, ப.47.
17. ச.வே.சு., **இளங்கோவின் இலக்கிய உத்திகள்**, ப.4.
18. செ.சாரதாம்பாள், **செவ்வியல்**, ப.71.
19. சோ.கலைவாணி, **பத்திரிக்கைக்கலை**, ப.67.
20. ஸ்ரீகுமார், என்.கிருஷ்ணன், **இதழியல் நுணுக்கங்கள்**, ப.232.
21. Maynard W. Brown and George Faxmolt, **The Editor Speaks, New Survey of Journalism**, p.26.
22. மேலது., ப.258.
23. மருதமலர், ஜூலை 2008, ப.3.
24. மேலது., நவ. 2008, ப.3.
25. தேவேந்திரர் மலர், மே 2008, ப.4.
26. இந்திய நாடார் முரசு, சன. 2008, ப.5.
27. மேலது., பிப். 2008, ப.3.

28. இந்திய நாடார் முரசு, ஆகஸ்ட் 2008, ப.3.
29. கொங்கு, சன. 2008, ப.4.
30. மேலது., ஏப். 2008, ப.4.
31. மேலது., ப.4.
32. செங்குந்தமித்திரன், பிப். 2008, ப.2.
33. மேலது., ஏப். 2008, ப.2.
34. அச்சமில்லை, மே 2008, ப.2.
35. அகச்சுடர், சன. 2008, ப.1.
36. மேலது., ஏப். 2008, ப.1.
37. பண்டிதம், அக். 2008, ப.6.
38. கடலார், சன. 2008, ப.5.
39. பூச்சரம், மார்ச் 2008, ப.3.
40. சோ.கலைவாணி, பத்திரிகை கலை, ப.97.
41. Rengaswamy Parthasarathy, **Basic Journalism**, p.160..
42. John E. Allen, Quoted by Novel Neil Luxon, **Page one make up new survey of journalism**, p.238.
43. இரா.கோதண்டபாணி, **இதழியல்**, ப.177.
44. இ.சுந்தரமூர்த்தி, ம.ரா.அரசு, **மகளிர் இதழ்கள்**, ப.88.
45. மேலது., ப.89.
46. வல்லிக்கண்ணன், **தமிழில் சிறு பத்திரிகைகள்**, ப.63.
47. கா.சிவத்தம்பி, **இலக்கியத்தில் முற்போக்கு வாதம்**, ப.30.
48. இரா.கோதண்டபாணி, **இதழியல்**, ப.225.
49. மா.பா.குருசாமி, **இதழியல் கலை**, ப.225.
50. மா.இராமலிங்கம், **நாவல் இலக்கியம்**, ப.160.
51. இ.சுந்தரமூர்த்தி, **நடையியல் ஓர் அறிமுகம்**, ப.15.
52. இரவிசிங், **அண்ணாவின் மொழிநடை**, ப.46.
53. ஜெ.நீதிவாணன், **நடையியல்**, ப.22.
54. தங்க.மணியன், **பத்திரிகைத் தமிழ்**, ப.14.
55. மருதமலர், சன. 2008, ப.3.
56. இ.நா.மு., பிப். 2008, ப.3.
57. கொங்கு, மார்ச் 2008, ப.3.
58. செங்குந்தமித்திரன், ஏப். 2008, ப.2.

59. அகச்சுடர், டிச. 2008, ப.3.
60. பண்டிதம், பிப். 2008, ப.5.
61. கடலார், ஆக. 2008, ப.2.
62. புதிய யாதவம், பிப். 2008, ப.2.
63. வீ.பா.கட்டபொம்மன், மார்ச் 2008, ப.4.
64. ஒலிக்கும் யாதவர் முரசு, மே 2008, ப.2.
65. சாலை இளந்திரையன், தமிழில் சிறுகதை, ப.30.
66. மருதமலர், மார்ச் 2008, ப.15.
67. கொங்கு, மார்ச் 2008, ப.15.
68. தேவேந்திரர் மலர், மே 2008, ப.21.
69. பண்டிதம், பிப். 2008, ப.1.
70. பூச்சரம், ஜுன் 2008, ப.5.
71. ஜோ.நெல்சன், **திலகவதியின் கல்மரம்**, எம்.ஃபில். பட்ட ஆய்வேடு, பாரதிதாசன் பல்கலைக்கழகம், ப.74.
72. மருதமலர், ஏப். 2008, ப.12.
73. கொங்கு, சன. 2008, ப.23.
74. செங்குந்தமித்திரன், டிச. 2008, ப.3.
75. அச்சமில்லை, சன. 2008, ப.26.
76. அகச்சுடர், டிச.2008, ப.1.
77. பண்டிதம், பிப். 2008, ப.12.
78. மு.வரதராசனார், **இலக்கியத்திறன்**, ப.42.
79. தொல்காப்பியம், பொருள். செய்யுளியல், நூற்பா
80. மருதமலர், மே 2008, ப.9.
81. கொங்கு, சன. 2008, ப.28.
82. தேவேந்திரர் மலர், சன. 2008, ப.22.
83. கடலார், மார்ச் 2008, ப.4.
84. பூச்சரம், மே 2008, ப.41.
85. வீ.பா.க., ஜுலை 2008, ப.28.
86. அ.இன்பரதி (க.ஆ.), கவிஞர் மீராவின் கவிதைகளில் பழமொழிகள், இரா.மோகன் முதலிய நால்வர் (ப.ஆ.), ஆய்வுக்கோவை 2006, ப.350.
87. தமிழ்க் கலைக்களஞ்சியம், தொகுதி 7, ப.434.

88. மேலாண்மை பொன்னுச்சாமி, **சிறுகதைப் படைப்பின் உள் விவகாரம்**, ப.114.

89. மேலது., ப.115.

90. மருதமலர், நவ. 2008, ப.13.

91. இ.நா.மு., ஏப். 2008, ப.6.

92. கொங்கு, சன. 2008, ப.15.

93. செங்குந்தமித்திரன், அக். 2008, ப.17.

94. கடலார், ஏப். 2008, ப.3.

95. க.கைலாசபதி (Christopher Cardwell, Illusion and Reality) (மேற்கோளாக எடுத்தாளப்பட்டது), **தமிழ் நாவல் இலக்கியம்**, ப.62.

96. க.கைலாசபதி, **தமிழ் நாவல் இலக்கியம்**, ப.62.

97. மேலது., ப.63.

98. கொங்கு, செப். 2008, ப.2.

99. செங்குந்தமித்திரன், டிச. 2008, ப.2.

100. அகச்சுடர், டிச.2008, ப.1.

101. தேவேந்திரர் மலர், ஆக. 2008, ப.31.

102. மா.பா.குருசாமி, **இதழியல் கலை**, ப.229.

103. Bruce E. Westley, News Editing, p.281.

104. தெலுங்கர் கீதம், ஜூன் 2008, ப.5.

105. வீ.பா.க., பிப். 2008, ப.1.

106. ஓ.யா.மு., மே 2008, ப.25.

107. மருதமலர், ஆக. 2008, ப.7.

108. கொங்கு, செப். 2008, ப.2.

109. அச்சமில்லை, நவ. 2008, ப.25.

110. மேலது., ப.3.

111. விளக்கு, நவ. 2008, பின் அட்டை.

112. வீ.பா.க., ஆக. 2008, ப.7.

113. தெலுங்கர் கீதம், அக. 2008, ப.7.

114. மருதமலர், பிப். 2008, ப.15.

115. இ.நா.மு., டிச. 2008, ப.25.

116. கொங்கு, மார்ச் 2008, ப.12.

117. அச்சமில்லை, மே 2008, ப.21.

118. தேவேந்திரர் மலர், மே 2008, ப.4.

119. பண்டிதம், அக். 2008, ப.5.

120. கடலார், சன. 2008, ப.10.

121. வீ.பா.க., மார்ச் 2008, ப.1.

122. ஒலிக்கும் யாதவர் முரசு, ஏப். 2008, ப.15.

123. தெலுங்கர் கீதம், மே 2008, ப.22.

124. கொங்கு, ஏப். 2008, ப.11.

125. தே.மலர், மே 2008, ப.23.

126. மேலது., ப.26.

127. பூச்சரம், பிப். 2008, பக்.37, 5.

128. மேலது., ஜூன் 2008, பக்.62, 69.

129. வீ.பா.க., மே 2008, ப.14.

130. தெலுங்கர் கீதம், சன. 2008, ப.21.

131. ஒ.யா.மு., ஜூலை 2008, ப.9.

132. மருதமலர், பிப். 2008, ப.9.

133. கொங்கு, ஆக. 2008, ப.3.

134. அச்சமில்லை, ஜன. 2008, ப.3.

135. மேலது., மே 2008, ப.2.

136. மேலது., ப.18.

137. மேலது., ப.22.

138. கடலார், டிச. 2008, ப.8.

139. விளக்கு, மே 2008, ப.14.

140. ஒ.யா.மு., நவ. 2008, ப.28.

141. தேவேந்திரர் மலர், பிப். 2008, ப.32.

142. இ.நா.மு., பிப். 2008, ப.4.

143. கொங்கு, ஜூன் 2008, ப.29.

144. செங்குந்தமித்திரன், டிச. 2008, ப.6.

145. அச்சமில்லை, சன. 2008, ப.40.

146. அகச்சுடர், சன. 2008, ப.4.

147. தேவேந்திரர் மலர், ஜூலை 2008, ப.21.

148. பண்டிதம், பிப். 2008, ப.6.

149. விளக்கு, நவ. 2008, ப.6.

150. கடலார், டிச. 2008, ப.6.

151. பூச்சரம், ஜுன் 2008, ப.7.

152. வீ.பா.க., பிப். 2008, ப.1.

153. ஒ.யா.மு., சன. 2008, ப.2.

154. தெலுங்கர் கீதம், சன. 2008, ப.34.

155. புதிய யாதவம், டிச. 2008, ப.18.

156. கி.இராசா, **இதழியல்**, ப.127.

157. மருதமலர், பிப். 2008, ப.20.

158. அச்சமில்லை, சன. 2008, ப.1.

159. அகச்சுடர், மே 2008, ப.1.

160. தே.மலர், பிப். 2008, ப.29.

161. மேலது., அக். 2008, ப.20.

162. பண்டிதம், டிச. 2008, ப.4.

163. Samuel Morse, **Communication and Society**, p.50.

164. சு.மாலதி, **தமிழ் இதழ்களில் வாசகர் கடிதம்,** எம்.ஃபில். பட்ட ஆய்வேடு, ம.கா.ப., 1989, ப.78.

165. D.S.Mahta, Journalism and Mass Communication in India, p.136.

166. மருதமலர், அக். 2008, ப.34.

167. மருதமலர், அக். 2008, ப.35.

168. அச்சமில்லை, சன. 2008, ப.40.

169. தே.மலர், மே 2008, ப.25.

170. பண்டிதம், பிப். 2008, ப.5.

171. கடலார், நவ.2008, ப.17.

172. வீ.பா.க., செப். 2008, ப.12.

173. ஒ.யா.மு., டிச.2008, ப.23.

174. மருதமலர், பிப். 2008, ப.30.

175. இ.நா.மு., டிச.2008, ப.27.

176. கொங்கு, சன. 2008, ப.27.

177. செங்குந்தமித்திரன், பிப்.2008, ப.39.

178. தே.மலர், அக்.2008, ப.14.

179. பூச்சரம், ஏப்.2008, ப.34.

180. புதிய யாதவம், டிச.2008, ப.78.

181. தெலுங்கர் கீதம், ஜுன் 2008, ப.25.

182. சிவ.சசிரேகா, **தமிழ் இதழ்கள் காட்டும் மகளிர் நிலை**, ப.117.

183. மேலது., ப.119.

184. மருதமலர், பிப். 2008, ப.16.

185. இ.நா.மு., டிச.2008, ப.25.

186. கொங்கு, மார்ச் 2008, ப.26.

187. தே.மலர், மே 2008, ப.32.

188. பண்டிதம், டிச. 2008, ப.1.

189. பூச்சரம், மார்ச் 2008, ப.40.

190. வீ.பா.க., செப். 2008, ப.20.

191. ஒ.யா.மு., மே 2008, ப.1.

192. தெலுங்கர் கீதம், பிப். 2008, ப.18.

193. கோ.தண்டபாணி, **இதழியல்**, ப.90.

194. கடலார், சன. 2008, ப.19.

195. சுரேஷ் பால், **மீடியா உலகம்**, ப.291.

196. இரா.கோதண்டபாணி, **இதழியல்**, ப.159.

197. மருதமலர், மார்ச் 2008, ப.21.

198. செங்குந்தமித்திரன், அக்.2008, ப.32.

199. தே.மலர், ஜூலை 2008, ப.11.

200. பூச்சரம், ஆக.2008, ப.67.

201. ஒ.யா.மு., டிச.2008, ப.23.

202. இ.நா.மு., அக்.2008, ப.12.

203. ஒ.யா.மு., டிச.2008, ப.30.

## இயல் 4

# இன இதழ்களில் இன உணர்வும் இன முன்னேற்றமும்

அறிவியலின் வியத்தகு வளர்ச்சி தனி மனித சிந்தனைகளைத் தீர்மானிக்கிற சக்தியாக உருப்பெற்றிருக்கிறது. இவ்வறிவியல் கூறுகளில் செய்தித் தொடர்புச் சாதனங்கள் மிக முக்கிய இடத்தைப் பெறுவதுடன் இன்று மனித குலத்தையே ஆட்டுவிக்கும் ஆதிக்கச் சக்தியாகவும் உருமாறியுள்ளன. இதழியல், சின்னத்திரை, பெரியதிரை போன்ற ஊடகங்களுள் இதழியல் துறை மிக முக்கியமானது. அவ்வகையில் இதழியல் நுழையாத துறையே இல்லை என்று சொல்லுமளவுக்குப் படர்ந்துள்ளது. பல மாற்றங்களுக்கு வழி வகுக்கும் தன்மை கொண்ட இதழ்கள் சமுதாயத்திற்கு ஆற்றும் பணி அளவிடற்கரியனவாகும். ஒவ்வொரு இனத்திற்கும் தகவல் சாதனமாகவும் பாதுகாப்புக் கேடயமாகவும் விளங்குவன இன இதழ்கள் ஆகும். ஒரு குறிப்பிட்ட சாதியில் வாழும் மக்கள் தங்களது தேவைகளை நிறைவேற்றிக் கொள்ள இன இதழ்களைப் பயன்படுத்திக் கொள்கின்றனர். இவ்விதழ்கள் தமது இனம் சார்ந்த செய்திகளையும், முன்னேற்றச் சிந்தனைகளையும் வெளியிடுகின்றன. இதழ்களில் தங்களது இன உணர்வை எந்தெந்த முறைகளில் வெளிப்படுத்துகின்றனர். இன முன்னேற்றத்திற்கு இனங்கள் எவ்வகையில் இன இதழ்களைப் பயன்படுத்திக் கொள்கின்றன என்பதை இவ்வியல் ஆராய்கின்றது.

### இனம் விளக்கம்

பொதுவான பண்புகளை மரபு வழியாகப் பெற்றுள்ள மக்கள் தொகுதி என்னும் பொருளை இது உணர்த்தும். ரேஸ் (Race) என்று ஆங்கிலத்தில் வழங்கப்படும் இச்சொல் மானிடவியல் கலைச் சொல் அகராதி குறிப்பிடும் பொருளிலேயே இங்கு 'இனம்' என்று கையாளப்படுகிறது. வம்சம் (Descent) இரத்த உறவு (Blood relationship), பரம்பரை (Hereditary) என்ற மூன்று[1] அடிப்படையில் இணைந்திருக்கும் மக்கள் கூட்டத்தையே 'இனம்' என்று குறிப்பர். தங்களிக்கிடையே மண உறவு கொள்ளத்தக்க உறவு முறையுடைய தனி மனிதர்களின் கூட்டமைப்புக்குழுவே இனம் ஆகும். இங்கு 'இனம்' என்ற சொல் சமூகம், சாதி, குலம், குடி என்ற பொருளிலேயே அமைகின்றது.

> 'இனம்' என்னும் சொல்லாட்சி குறித்துச் சொந்தம்-உறவு என்கின்ற அந்த நிலையைக் குறிப்பிடுவது தான் 'இனம்' என்கிற சொல்லாகும். நாம் சில நேரங்களில் இரண்டு பேர் கோபமாகப் பேசிக் கொள்கிற காட்சியைக்

காணுகிறோம். இப்படிக் காணுகிற நேரத்திலே அந்த இரண்டு பேரையும் பார்த்து, இரண்டு பேரும் அண்ணன் தம்பிகளாக இருக்கலாம். உற்றார் உறவினர்களாக இருக்கலாம். அவர்கள் கோபமாகப் பேசும்போது அவர்களைக் கூப்பிட்டு ஏனப்பா அப்படிப்பேசுகிறாய்? கொஞ்சம் நீ தான் இனமாகப் பேசேன்! என்று சொல்லுகிறோம். அதற்கு என்னபொருள்? இனமாகப் பேசு என்று சொன்னால் உங்கள் இருவருக்குமுள்ள சொந்தத்தை எண்ணிப்பார்ப்பதே. அதாவது உங்கள் இருவருக்கும் இடையேயுள்ள உறவை நினைத்துப் பேசு என்கின்ற அந்த அளவிலே தான் இனமாகப் பேசு என்று குறிப்பிடுகின்றோம்[2]

என்று இனத்தைக் கலைஞர் சுட்டுவதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

ஆங்கிலேயர் இந்தியாவை ஆண்ட பொழுது தமது குடிமக்களான இந்திய மக்களைச் சரிவர புரிந்து கொண்டு ஆட்சி செய்ய முயன்று அதன் விளைவாகச் சாதி, இன வாரியாக மக்கள் கணக்கெடுப்பை நடத்தினர். இதற்காக 1909இல் சென்னையில் எட்கர் தர்ஸ்டன் என்பவருடைய இன்றளவும் புகழ்பெற்று விளங்கும் ‘தென்னிந்தியாவின் குலங்களும் குடிகளும்’ என்ற நூல் வரிசை வெளியிடப்பட்டது. இன மக்களை அறிந்து கொள்ள எட்கர் தர்ஸ்டனின் இந்த நூல் வரிசை பேருதவி வருகிறது.[3] அரசாங்க அதிகாரிகளும், பல்கலைக்கழக ஆய்வாளர்களும் இதில் காணும் தகவல்களைக் கொண்டு தமது முடிவுகளைக் கூறி வருகின்றனர். தினமணிக்கதிர் பல ஆண்டுகளுக்கு முன்பு தமிழ்நாட்டில் வாழும் சாதி, குல மக்களின் விபரமான வரலாறுகளை வெளியிட்டு வந்ததையும், தற்போது குமுதம் வார இதழில் ‘நான் தமிழன்’ என்னும் தலைப்பில் தமிழ் நாட்டிலுள்ள ஒவ்வொரு இனத்தைப் பற்றிய வரலாறுகளைத் தொடராக வெளியிட்டு வருவதையும் இனவுணர்வாளர்களும் ஆய்வாளர்களும் பாராட்டி மகிழ்கின்றனர்.

உலகிலுள்ள ஒவ்வொரு இனமும் ஏதேனும் ஒரு வகையில் சில சிறப்புக் கூறுகளைக் கொண்டே விளங்குகின்றது. ஒவ்வொரு இனத்திற்கும் ஒரு வரலாறு என்பது அது சார்ந்துள்ள சமுதாய, பண்பாட்டுக் கூறுகளை, வாழ்வியல் நிகழ்வுகளை விளக்கக் கூடியதாகும். ஒரு நாட்டின் வரலாறு அல்லது ஓர் இனத்தின் வரலாறு வரலாற்றுச் சான்றுகளின் வாயிலாகவே அறியப்படுகின்றது. பொதுவாக இனத்தைப் பற்றி அறிய இலக்கியங்கள், கல்வெட்டுக்கள், ஓலைச் சுவடிகள் போன்றவை எல்லாம் ஆவணங்களாகப் பயன்பட்டு வருகின்றன. இவை பற்றிய செய்திகளை இன மக்களுக்கு எடுத்துரைக்கும் பணியில் ஈடுபடக் கூடியவைகளாக இன இதழ்கள் அமைகின்றன.

**இன உணர்வு**

'இன உணர்வு' என்பது சமூக அமைப்பில் ஒரு குறிப்பிட்ட பகுதியில் வாழும் மக்கள் கூட்டம் அல்லது குழுவிற்குள் நிகழும் ஒருமித்த செயல்கள் ஒற்றுமைக் கூறுகள் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு அமைகின்றது.

> இது ஓர் இனத்தின் மிகவும் முக்கியமான பண்புக்கூறாக அமைகிறது. சமூக உணர்வு தான் சனநாயகத்தின் ஆன்மீகமாகும். சமூக சனநாயகம் இல்லாவிட்டால் அடிப்படை உரிமை சனநாயகத்தில் செத்து விடும்[4]

என்பர். சனநாயகத்தின் உரிமையும், பொறுப்புணர்வும் ஒன்றோடொன்று தொடர்புடையன. தனிப்பட்ட ஒருவரின் உரிமை என்பது பிறரின் உரிமைக்கு மதிப்பளித்தல் என்ற பொறுப்புணர்வை உள்ளடக்கியதாக அமைகிறது.

இன உணர்வுகளின் மூலமாக இந்தப் பகுதி அல்லது இனம் நமக்குரியது என்ற ஓர் உணர்வை அவர்கள் அடைகின்றனர். 'இன உணர்வு' என்பது,

1. நாம் என்னும் உணர்வு (We feeling)
2. பங்கு உணர்வு (Role felling)
3. சார்பு உணர்வு (Dependency feeling)

என மூன்று உணர்வுகளை உள்ளடக்கியிருக்கிறது.[5]

**1. நாம் என்னும் உணர்வு**

ஒரே பகுதியில் வாழும் நாம் அனைவரும் ஒன்று என்ற உணர்வு இன மக்களாகிய அவர்களுக்கு ஏற்படுகிறது. இந்த உணர்வு ஒற்றுமையை வளர்க்கிறது. அவர்கள் வேறுபாடில்லாமல் ஒன்றாகக்கூடி வாழ வழிவகுக்கிறது.

**2. பங்கு உணர்வு**

'இந்த இனம் நமக்குரியது' என்ற உணர்வு அவர்களுக்கு ஒரு பங்கு உணர்வையும் தோற்றுவிக்கிறது. எனவே இதற்கு நம்முடைய கடமை எதுவோ அதை ஒழுங்காகச் செய்ய வேண்டும் என்ற உணர்வும் அவர்களுக்கு ஏற்படுகிறது. தங்களுடைய இனத்தின் ஒழுங்கையும், கட்டுக்கோப்பையும், பாதுகாப்பையும் நிலை நிறுத்துவதைக் கடமையாக நினைத்து அதற்கேற்ப அவர்கள் நடந்து கொள்கிறார்கள்.

### 3. சார்பு உணர்வு

நம்முடைய தேவைகள் நம்முடைய இனத்தால்தான் நிறைவேற்றப்படுகின்றன. எனவே நாம் நம்முடைய இனத்தைச் சார்ந்தே வாழ முடியும். வாழ வேண்டும் என்ற உணர்வும் அவர்களுக்கு ஏற்படுகிறது. இம்மூன்று வகையான உணர்வுகளினை அடிப்படையாகக் கொண்டு இன உணர்வு அமைகிறது.

### இன இதழ்களில் இன உணர்வு வெளிப்பாடு

இன இதழ்களில் இன உணர்வு இதழாசிரியர்களாலேயே அதிகம் வெளிப்படுகின்றது.

> ஓர் உண்மையான ஆராய்ச்சியாளன். ஒரு நாளும் ஆராயாது இருக்க முடியாது. அவன் ஆராயாவிடினும் அவன் உள்ளம் ஆராயும். அதற்குக் கனவென்றும், நனவென்றும் ஊன் வேளை என்றும், உறக்க வேளை என்றும் இல்லை[6]

என்று கூறும் கருத்திற்கேற்ப இன இதழ் ஆசிரியரின் இன உணர்வின் பங்கு இதழ்களில் அமைகின்றது.

இன உணர்வுக்கு அடிப்படைக் கூறுகளாக இன இதழ்களில் ஆசிரியர் உரை, கட்டுரை, கவிதை, கல்வெட்டுக்கள், அரசியல், பண்பாடுகள், மரபுச் செய்திகள், தொன்மை, வரலாறுகள், ஆன்மீகம், முன்னோடித் தலைவர்களின் தகவல்கள், மாநாடுகள், திருவிழாக்கள், இல்ல நிகழ்வுகள், தொழில், மருத்துவம், தேர்தல் நிகழ்வுகள், கலாச்சாரம், இனக் கூட்டங்கள், கல்வி, வணிக நிறுவனங்கள் போன்றவற்றின் செய்திகள் அமைகின்றன.

### ஆசிரியர் உரை

இன இதழ்களில் 'ஆசிரியர் உரை' வண்டிக்கு அச்சாணி போல அமைகின்றது. ஒவ்வொரு இன இதழிலும் இதழாசிரியர் என்பவர் போர்ப்படைக்கு வழி நடத்திச் செல்லும் தளபதி போல அமைகின்றார். இவரின் இனப்பற்று இனத்தின் ஒவ்வொருவரின் மனத்திலும் இன உணர்வையும், விழிப்புணர்வையும் ஏற்படுத்துவதாக அமைகின்றது. இன இதழ்களில் ஆசிரியர் உரை, ஆசிரியர் குரல், ஆசிரியர் பக்கம், தலைவர் கடிதம், ஆசிரியர் கடிதம் எனும் தலைப்புகளில் இன உணர்வுகளை ஏற்படுத்தி விழிப்புணர்வு உண்டாக்குகின்றனர்.

*ஆசிரியர் கடிதம் எனும் தலைப்பில்,*

இந்தச் சமுதாயத்தில் உள்ளவர்கள் எத்தனையோ அரசியல் கட்சிகளுக்கு அடிமையாகி ஓடி ஓடி உழைத்து அவர்களை உயரே தூக்கி வைத்து வெற்றிபெறச் செய்த உன்னை வெற்றிபெற்ற பின் எப்போதாவது ஏறிட்டுப் பார்த்தார்களா? உனது இன நலனில் யாராவது அக்கறை செலுத்துகின்றனரா? என அரசியல் கட்சிகள் தம் இனத்துக்கு இழைத்து வரும் அநீதிகளைக் குறிப்பிட்டு இனமக்களைச் சிந்திக்கச் செய்வதாக அமைகின்றது. நம் சமுதாய உயர்வு எல்லாம் நம் இனத் தலைவர்களின் கையில் தான் இருக்கிறது. நாம் ஒன்று பட்டால் அரசாங்கமும் நம்மைக் கண்டு கொள்வார்கள். சமுதாயமே சிந்திப்பீர்[7]

*என இன ஒற்றுமைக்கு வழி வகுக்கிறது. இன மக்களுக்குச் சேவை செய்வது குறித்து இதழாசிரியர் (கொங்கு, ஜனவரி 08) கொங்கு வேளாள மக்களின் முன்னேற்றத்திற்குச் சேவை செய்வது எனது இரத்தத்தில் கலந்துவிட்ட பாச உணர்வாகும் எனக் கூறுவது குறிப்பிடத்தக்கதாகும்.*

*அரசாங்கத்திடம் நம் உரிமைகளுக்காகக் குரல் கொடுப்பது அல்லது போராடுவது மட்டும் ஒரு சமுதாய அமைப்பினுடைய பணியாக இருக்க முடியாது. குலமுன்னேற்றத்திற்குப் பாடுபடுவதும் தலையாய பணியாகும் என செங்குந்த மித்திரன் இதழாசிரியர் குறிப்பிடுகின்றார். நம் இன மாணவர்கள் தன்னம்பிக்கையுடனும், விடாமுயற்சியுடனும், ஊக்கத்துடனும், கல்வியில் கவனம் செலுத்தினால் கண்டிப்பாக அதிக மதிப்பெண்கள் பெறுவர். பின் எதற்கு? நமக்கு மிகவும் பிற்படுத்தப்பட்டோர் பட்டம்? இளைஞர்களே! உறவினர்களே! பெற்றோர்களே! சிந்தியுங்கள். கல்விக்கு முதலிடம் கொடுங்கள் (அகச்சுடர், ஆக.08, ப.4) என இன விழிப்புணர்வு ஊட்டுகிறது. நம் கோரிக்கைகள் மக்கள் இயக்கமாக மாறவில்லை, இந்தக் கோரிக்கை நம் வாழ்வாதாரப் பிரச்சினை என்று ஒவ்வொருவர் மனதிலும் ஏற்றுக் கொண்டு, இயக்கமாக மாற வேண்டும். இந்தப் பார்வையுடன் ஒவ்வொரு தேவேந்திரர்களும் பயணத்தைத் தொடங்குங்கள் என (தேவேந்திர மலர், மே 08, ப.2) குறிப்பிடுகிறது.*

*இன முன்னோடிகளின் தியாக உணர்வுகளைச் சுட்டிக்காட்டி (பண்டிதம், ஜுன் 2008) தேவை அரசியல் விழிப்புணர்வு எனும் தலைப்பில் சுதந்திரப் போராட்டத்தில் பலர் ஈடுபட்டாலும் தம் இனத்தில் தோன்றிய தியாகி விஸ்வநாத தாஸ் சுதந்திர போராட்டத்திற்காக 29 முறை சிறை சென்றதையும், அவரின் கனவு நனவாக இனமக்கள் அரசியல் விழிப்புணர்வு பெற வேண்டும் என்பதையும் வலியுறுத்துகிறது. மீனவ*

மக்களைக் கடலார் இதழில் சக உதிரமே! என விளிப்பது இன மக்களுடன் ஒரு வித நெருக்கத்தை ஏற்படுத்துவதோடு இன உணர்வை வெளிப்படுத்துவதாக அமைகின்றது.

உடல் ஆரோக்கியத்திற்காகப் பூச்சரம் இதழில் ஒரு குறிப்பிட்ட நாளில் குறிப்பிட்ட நேரத்தில் பூச்சரம் வாசகர்களும், நமது நகரத்தார் பெரு மக்களுக்கும் ஒரே நேரத்தில் அவரவர் இருக்கும் இடத்திலேயே உடல்நல சிகிச்சை பெற்று வருபவர்களின் ஆரோக்கியத்திற்காகப் பிரார்த்தனை செய்ய வேண்டுகிறோம் என வாசகர்களை ஒருங்கிணைத்து இன உணர்வு ஊக்கப்படுத்துவதை அறிய முடிகிறது. இன மக்களிடத்தில் இன உணர்வுத் தாக்கத்தை ஏற்படுத்த இதழாசிரியர்கள் சில உத்திமுறைகளைக் கையாளுகின்றனர். உயர்ந்த விளிச் சொற்களைப் பயன்படுத்தி அரசாண்ட பரம்பரையே! சேர சோழ பாண்டிய பரம்பரையே! வீரம் செறிந்த விவேகப் பரம்பரையே! எதிரிகளைப் புறமுதுகிட்டு ஓட விரட்டிய வீர இனமே! என்பது போன்ற மந்திர நடைகளைக் கையாண்டு இதழ்களின் முதல் பக்கங்களிலேயே இனமக்களை ஈர்க்க முயலுகின்றன. பல இன இதழ்கள் இவ்வுத்தி முறையைக் கடைபிடிப்பதை வழக்கமாகக் கொண்டுள்ளதை அறிய முடிகிறது.

**கட்டுரை**

‘சிதறுண்ட சிந்தனை’ என்று ஆங்கில அறிஞர் பிரான்சிஸ் பேக்கனால் (Francis Bacon) வருணிக்கப்படுகின்ற ‘கட்டுரை’ எனும் வடிவம். பொதுமக்களிடையே செல்வாக்கு உடையதாகக் கருதப்படுகிறது. மேற்போக்கான பொருளையும், வாசிப்பவர்களுக்கு மகிழ்ச்சியையும் தரும் இக்கட்டுரைக்கு ஒரு குறிப்பிட்ட பொருள் பற்றிய மிதமான அளவில் அமைந்த எழுத்தோவியம் என ஆக்ஸ்போர்டு அகராதி விளக்கம் தருகிறது.

கட்டுரை, உரைநடையின் வளர்ச்சியால் தோன்றிய ஒரு இலக்கிய வகையாகும். கட்டுரை என்பது ஒரு பொருளைப் பற்றிய பலவகைச் செய்திகளையும் தொகுத்துக் கூறுவதும் கூட்டி உரைப்பதும் ஆகும் என விளக்குவர். கட்டுரை என்பது தனி மனிதனுடைய உணர்ச்சிகளின் சொற்கோவை என்றும், ஒரு செய்தியைப் பற்றி படைப்பாளனுக்கு என்ன தோன்றுகின்றதோ அந்த உணர்ச்சிகளைக் குறிக்கும் உணர்ச்சி வரையறை என்றும் சொல்லப்படுகின்றது. ஒரு பொருளைப் பற்றிய தனி மனிதனின் எண்ணங்களை, உணர்வுகளை, அனுபவங்களைக் காரண காரியங்களுடன் தொகுத்து வெளியிடும் கருத்துக் கோவை என்பது தெளிவாக விளங்குகிறது. நாள்தோறும்

வெளிவரும் செய்திகளோடு தொடர்புடையதாகவோ, தொடர்பற்றதாகவோ அமையும்.

ஆய்வுக்குட்பட்ட இன இதழ்களில் இடம் பெற்றுள்ள கட்டுரைகளை இருவகைப்படுத்தலாம்.

1. பேட்டிக் கட்டுரை
2. தனிச்சிறப்புக் கட்டுரை

**பேட்டிக்கட்டுரை (செவ்வி)**

பேட்டி என்பது வாசகர்களைக் கவர மக்கள் தகவல் தொடர்புச் சாதனங்களால் பயன்படுத்தப்படும் ஒரு முக்கிய கருவியாகும். இது தங்களால் சந்திக்க முடியாத முக்கியமான பிரமுகர்களுடன் நேரடியாகப் பேசுவது போன்ற உணர்வினை வாசகர்களுக்கு ஏற்படுத்துகிறது. ஒரு பயனை அல்லது நோக்கத்தை அடிப்படையாகக் கொண்ட இப்பேட்டியை இன இதழ்கள் இனத்தலைவர்கள், முன்னோடிகள், சாதனையாளர்கள் போன்றவற்றை வெளிப்படுத்துவதற்குப் பயன்படுத்திக் கொள்கின்றன. பேட்டியை இதழியல் அறிஞர்கள் மூவகைப்படுத்துகின்றனர். அவையாவன,

1. செய்திப்பேட்டி (News Interview)
2. கருத்தாய்வு (Interview for opinions)
3. தனி மனித பேட்டி (Personality Indterview)

இவ்வாறு மூன்று வகைகளைக் குறிப்பிடுகிறார் டி.எஸ்.மேத்தா.[8] இம்மூவகைப்பட்ட பேட்டிகளையும் திங்களிதழ்கள் உரையாடல், கட்டுரை வடிவம், கருத்துத் தொகுப்பு எனும் மூவகை உத்திகளைக் கையாண்டு வெளியிடுகின்றன.

"தேவேந்திரகுல வேளாளர்கள் இல்லையெனில் பாளையக்காரர்கள் இல்லை." (மருதமலர், பிப்.-08, ப.32) எனும் கட்டுரையில் 18 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆங்கிலேயரை எதிர்த்துப் போரிட்ட பாளையக் காரர்களுக்கு உறுதுணையாக இருந்து வீரமுழக்கமிட்ட தேவேந்திரர்களை வரலாற்றில் இருட்டடிப்புச் செய்ததைக் குறிப்பிட்டு வீரப்பரம்பரையே! நாம் சாதிக்க நம் இன சொந்தங்களிடம் சாதிய ரீதியான ஒற்றுமை தேவை. ஒற்றுமையே நமது வலிமை! ஒன்று படுவோம்! ஓர் அணியில்

திரளுவோம் என இன மக்களுக்கு அறைகூவல் விடுப்பதாக இடம் பெறுகிறது. 'முடிவெடு மடியுமுன்னே' (இ.நா.மு., மார்ச்-08, ப.14) எனும் கட்டுரையில் சத்திரியனே, சமுதாயமே, இளைஞனே முடிவெடு நீ அரசில் சார்ந்து முடிவெடுத்தாலும் சமுதாயம் வளர வேண்டும். சமுதாயம் சார்ந்து முடிவெடுத்தாலும் சமுதாயம் வளர வேண்டும். நோக்கம் சமுதாய வளர்ச்சி மட்டும் தான் எனக் குறிப்பிடுவது இன உணர்வைப் பிரதிபலிக்கிறது.

'தாரசு கொடுத்தது, 'ஏர்' நொடித்தது' (கொங்கு நவ-08, ப.30) இன்றைய வேளாண்மை நிலை குறித்தும், பன்னாட்டு விதைக் கம்பெனிகளான நெஸ்லே (Nestle), மான்சாண்டோ (Mon-santo) போன்றவைகள் செயற்கை முறையில் மரபணு விதைகளை ஊக்குவிப்பதையும், அதற்கு அரசும் துணை போவதைப் பற்றியும் எடுத்துரைக்கிறது. மருத்துவர் சமூகமே மறுமலர்ச்சி காணவாரீர் (பண்டிதம், பிப்-08, ப.6) எனும் தலைப்பில் வெள்ளை ஏகாதியத்தியத்தை எதிர்த்துப் போராடும் வல்லமையில் மற்றவர்களுக்குச் சளைத்தவர்கள் அல்ல. மருத்துவர் இன மக்கள் என்ற முத்திரையைப் பதித்த வீரத்தியாகிகள் எஸ்.எஸ்.விஸ்வநாத தாஸ், வேதாரண்யம் வைரப்பன், நெல்லை மாடசாமி செல்லையா போன்ற தியாகிகளின் வழி தோன்றலில் வந்தவர்கள் நாம் என இன ஊட்டம் அளிக்கிறது.

அரசு, தனியார் துறைகளில் பணியாற்றும் தேவேந்திரர்கள் பற்றி, பட்டியல் சாதி இட ஒதுக்கீட்டில் தேவேந்திரர்களுக்குக் கிடைத்த பலன் என்ன? (தே.மலர், நவ-08, ப.3) எனும் கட்டுரை புள்ளி விபர அட்டவணையுடன் ஒப்பீடு அளவில் வெளியிட்டு இன விழிப்புணர்வுக்கு வழி வகுக்கின்றது. நகரத்தார் இனத்தின் தொடக்கம் வளர்ச்சி நிலைகள் குறித்து 'நகரத்தார் வரலாறு' (பூச்சரம், ஆக-08, ப.3) எனும் ஆய்வுக் கட்டுரை இளைய தலைமுறையினருக்கு வழிகோலுவதாக அமைகின்றது.

இன முன்னேற்றத்திற்குச் சங்கம், இயக்கம், பேரவை போன்ற அமைப்புகள் மிகவும் இன்றியமையாதவையாகும். 'வளர்ச்சிப் பாதையில் யாதவர் பேரவை' (ஓ.யா.மு. செப்-08, ப.7) எனும் கட்டுரை இன மக்களுக்குப் பேரவை ஆற்றி வரும் பணிகள் குறித்தும், அதன் விளைவுகள் பற்றியும் எடுத்துரைக்கிறது. மீனவர்கள் பயன்பெறும் விதமாக 'ஏழை மீனவர் வாழ்வு உயர, புது முயற்சி' எனும் கட்டுரை (கடலார், ஆக-08, ப.8) இந்திய மீனவர்களுக்காக வியட்நாமில் மீன்பிடித்துறையில் 3

வார கால புதிய தொழிற் பயிற்சியை இங்குள்ள மீனவர்களுக்கு அளிக்கப்படுவது குறித்து விளக்குகிறது. 'மறவர் சீமையின் மானம் காப்போம்' (விளக்கு, ஆக-08, ப.11) மாமன்னன் பூலித்தேவனின் வீரம், அவனுடைய புகழ் குறித்து வரலாற்றுப் பின்னணியோடு எடுத்துரைக்கின்றது. கம்பளத்தாரின் தெய்வங்களில் முதன்மையான தெய்வமாகப் போற்றப்படுபவள் 'ஜக்கம்மா' ஆவாள். தெலுங்கரும் தெய்வங்களும் (வீ.பா.க, மார்ச்-08, ப.13) எனும் கட்டுரை ஜக்கம்மாவின் புராணச் செய்திகளைத் தொகுத்தளிக்கிறது.

'பெண் போராளி வரிக்கல் பச்சையம்மாவுக்கு வீர வணக்கம்' எனும் கட்டுரை (இருளர் செய்தி, மார்ச்-08, ப.6) ஆதிக்கச் சக்திகளுக்கு எதிராகவும், காவல் துறையின் பொய்வழக்குப் பற்றியும் செய்தி வெளியிட்டு நினைவஞ்சலி செய்கின்றது. இன இதழ்கள் வெளியிடும் கட்டுரைகள் மறைந்த இனத்தலைவர்களின் நல்ல பண்புகளையும், இனத்தின் தனித்த பண்பாட்டினையும், வெளிப்படுத்துவனவாக அமைகின்றன. இத்தகைய சிறப்புகளைப் பெற்ற நம் இனத்தைக் காப்பது வாசகர்களாகிய இனமக்களின் கடமை என்பதைச் சுட்டிக்காட்டுவதாக விளங்குகின்றன. மேலும் பெரும்பாலான இன இதழ்களில் வெளிவரும் கட்டுரைகளின் வாயிலாக இன உணர்வு வெளிப்படுவதை அறிய முடிகிறது.

**கதை**

இதழியல் கூறுகளில் மிகவும் சிறப்பும் முக்கியத்துவமும் வாய்ந்தது கதையாகும். ஏனெனில் கதைகள், மனித இனத்தால் மிகவும் விரும்பி கேட்கப்படுவன. கதை நிகழ்ச்சிகளுள்ள ஆர்வம், ஈடுபாடு முதலியன மக்களிடம் இத்தகைய விருப்பத்தை ஏற்படுத்துகின்றன. இன இதழ்களில் இக்கதைகளை இன உணர்வுக்கும், விழிப்புணர்வுக்கும் மிக முக்கிய களங்களாக இதழாசிரியர்கள் பயன்படுத்திக் கொள்கின்றனர். ஆய்வுக்குட்பட்ட இன இதழ்களில் இடம்பெற்றுள்ள கதைகளைப் பொதுவாகப் பக்க அளவு, கதையின் வீச்சு, இதழ்களில் வெளிவரும் முறை என்பனவற்றை அடிப்படையாகக் கொண்டு சிறுகதைகள், குறுநாவல்கள், தொடர்கதைகள், படக்கதைகள் என நான்கு வகைகளாகப் பாகுபடுத்தலாம்.

**சிறுகதைகள்**

சிறுகதை வளர்ச்சிக்கு இதழ்கள் பெரிதும் துணை நின்றுள்ளன என்பது ஆராய்ச்சியாளர்களும் எழுத்தாளர்களும் ஒத்துக் கொள்கின்ற ஒரு கருத்தியலாகும். இலக்கிய வளர்ச்சியில் தீவிர ஈடுபாடுடைய பல இதழ்களில் 'மணிக்கொடி' யும் ஒன்று. இவ்விதழ் சிறுகதை வளர்ச்சியில் பெரிதும் துணை நின்றது. இவ்வகையில் இலக்கிய இதழ்கள் மட்டுமல்லாது இன இதழ்களும் எளிதாகக் புரிந்து கொள்ளும் வகையில் சிறுசிறு பாத்திரப்படைப்புகளை உள்ளடக்கிச் சிறுகதைகளைகப் படைத்து இலக்கியத்திற்கும் இன உணர்வுக்கும் தீனி போடுவதாக அமைகின்றன. கதைகளை வெளியிடும் இன இதழ்கள் வாசகர்களைக் கவர இரு வகைப்பட்ட உத்திகளைக் கையாண்டுள்ளன.

1. வாசகர்களைக் கவருதல்.
2. வாசகர்களைப் பங்கு பெற வைத்தல்.

'தவணை முறை பிறந்த கதை' (இ.நா.மு., பிப்-08, ப.22) எனும் தலைப்பில் தொழிலதிபர் வி.ஜி.சந்தோசம் அவர்களின் வியாபார வெற்றிப் பயணம் பற்றி குறிப்பிடுகையில் "ஒரு மனிதன் வெற்றியடைய வேண்டும் என்றால் அவனுக்கு முயற்சியும், உழைப்பும், முடியும் என்ற தன்னம்பிக்கை உணர்வும் இருக்க வேண்டும்" என அண்ணாச்சி அவர்களின் வெற்றி அனுபவம் கதை வடிவில் சிறப்பாக அமைத்து வெளியிட்டுள்ளது. 'ஒரு துண்டின் நம்பிக்கை' (கொங்கு, ஜுன்-08, ப.25) எனும் சிறுகதை குளியலறையில் இடம் பெறும். துண்டு அதற்கு யோகம் அடித்தது அவளின் அழகிய முகத்தில், கூந்தலில் சிறிது நேரம் ஒட்டிக் கொண்டது. பின் யாரும் பார்த்தறியாத பளிங்கு மேனியில் புரண்டது. அவள் சேலையைச் சுற்றிக் கொள்கையில் பாவம் அந்தத் துண்டு பரிதாபமாக விழுந்தது. ஆனாலும் அதற்கு ஓர் ஆழ்ந்த நம்பிக்கை, அடுத்த நாள் குளியலில் அதே வாய்ப்புக் கிடைக்குமென்று ... என இன மக்களுக்கு நம்பிக்கை விதையை மனத்தில் விதைக்கிறது.

'படித்தால் மட்டும் போதுமா' (தே.மலர், சன-08, ப.23) எனும் சிறுகதையில், "நல்லா தெரிஞ்சுக்கங்க ஒவ்வொரு சமுதாயத்துக்கும் ஒரு அடையாளம் இருக்கு. ஒரு நடைமுறை இருக்கு ஒரே மதத்தின் பெயரால் வேறு வேறு சாதியினர் சம்பந்தம் பண்ண முடியல. SC, MBC, BC என்று பட்டியலில் வருகின்ற சாதிகள் மட்டும் சம்பந்தம் பண்ண முடியுமோ, இந்த நூற்றாண்டின் அறிவியல் வளர்ச்சிக்கு இணையாக இந்தியாவின்

சாதிய இறுக்கமும் இன்னும் வலுவாகிக் கொண்டே வருகிறது. ஏட்டப்படிச்ச நீங்கள் நாட்டப் படிக்கத் தவறீட்டீங்க... என இனங்களுக்கு இடையேயுள்ள உட்பிரிவுகளின் தன்மை குறித்துப் பாத்திரப்படைப்பு விளங்க வைப்பதாக அமைகின்றது. 'சவரக்கத்தி' (பண்டிதம், ஆக-08, ப.9) என்னும் சிறுகதை மருத்துவர் இன மக்கள் ஆதிக்க சக்திகளிடம் எவ்வாறெல்லாம் அவமானப்படுத்தப் படுகிறார்கள் என்பதையும் அதனால் ஏற்படும் விளைவுகள் குறித்தும் அலசி ஆராய்கிறது. பொன்னான பொண்ணு (பூச்சரம், ஜுன்-08, ப.57) எனும் சிறுகதை இன்றைய இளைஞர்கள் வாழ்க்கைத் துணையைப் பெற்றோர்களின் சம்மதத்துடன் தேர்ந்தெடுக்க வேண்டும் என்றும், மரபு ரீதியான பண்பாடுகளையும் கடைபிடிக்க வேண்டும் எனவும் வலியுறுத்துகிறது. இவை போன்ற பன்முகப் பொருண்மைகள் இடம்பெற்ற சிறுகதைகள் தெலுங்கர் கீதம் இதழின் ஒவ்வொரு திங்களிதழிலும் இடம் பெறுகின்றன.

இலக்கியங்களில் இணையற்றதாக விளங்கும் வடிவம் இன இதழ்களில் மிகக் குறைந்த அளவிலே இடம்பெறுகின்றது.

### கவிதை

இதழ்களில் கதை, கட்டுரைக் கூறுகளைப் போன்று கவிதையும் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது. 20 ஆம் நூற்றாண்டு தொடக்கக் காலத்தில் பருவ இதழ்கள் உறங்கிக் கிடந்த தமிழ்ச் சமுதாயத்தைத் தட்டியெழுப்பக் கவிதைகளைக் கருவியாகக் கொண்டிருந்தன. பாரதி தேசபக்திப் பாடல்களைத் தனது 'இந்தியா' பத்திரிகையில் அவ்வப்போது வெளியிட்டுப் பாமர மக்களிடத்தும், விடுதலை உணர்ச்சியை ஏற்படுத்தினார். இவரைத் தொடர்ந்து ந.பிச்சமூர்த்தி, வல்லிக்கண்ணன் போன்றோரும் புதுக்கவிதைகளை 'எழுத்து', 'இலக்கிய வட்டம்' முதலிய பத்திரிகைகள் வாயிலாக வளர்த்தனர். புதுக்கவிதை வரவால் பண்டிதர் நடையிலிருந்த மரபுக் கவிதை, பாமரரும் புரிந்து கொள்ளும் வகையில் எளிமைப்படுத்தப்பட்டது. எனவே, இதழ்கள் கதைகளையும் கட்டுரைகளையும் வெளியிடுவது போன்றே கவிதையையும் ஒரு கூறாக ஏற்றுக் கொண்டு வெளியிடுகின்றன.

ஆய்வுக்குட்பட்ட பெரும்பாலான இன இதழ்கள் கவிதைகளைத் தந்துள்ளன. அவை கவிதைகளை வெளியிட பின்வரும் உத்திகளைக் கையாண்டுள்ளன.

1. இட நிரப்பியாகப் பயன்படுத்தல் (Fillers)
2. கவிதைக் கலையை வளர்த்தல்.

3. இலக்கிய உணர்வூட்டல்.
4. புகழ்பெற்ற கவிஞர்களின் படைப்புகளைத் தருதல்.
5. கவிதை மூலம் பொழுது போக்குச் சுவையை ஏற்படுத்தல்.

**இட நிரப்பியாகப் பயன்படுத்தல்**

இதழ்களில் துண்டு விழும் இடங்களை நிரப்பிப் பக்கத்தை அழகு செய்வது இடநிரப்பி என்று கூறப்படுகிறது. சில இன இதழ்கள் இத்தகைய இடநிரப்பிகளாகக் கவிதைகளைப் பயன்படுத்தியுள்ளன. பக்க அமைப்பின்போது ஏற்படும் வெற்றிடங்களை நிரப்பச் செய்தித் துணுக்குகளையும் நகைச்சுவைத் துணுக்குகளையும் இதழ்கள் நாடுவது வழக்கம் இவையன்றியும் மரபுக்கவிதைகளும் புதுக்கவிதைகளும் இடநிரப்பிகளாகப் பயன்படுகின்றன. இன்று இத்தகு கவிதைகள் மக்களிடையே நல்ல வரவேற்பைப் பெற்றிருப்பதால் இவற்றைப் பயன்படுத்திக் கொள்கின்றன. மரபுக் கவிதைகளை விடப்புதுக் கவிதைகள் இடநிரப்பிகளாக அதிக அளவு இடம்பெற்றுள்ளன. இதற்கு அதன் எளிமையே காரணமாக அமைகிறது. மேலும் வாசகனிடத்தில் எளிதில் அடையும் என்ற நம்பிக்கை இதழாசிரியர்களுக்குண்டு என்பதை அறியமுடிகிறது.

தேவேந்திரர் இனத்தில் தோன்றிய முன்னோடிகளைப் போற்றிப் பல கவிதைகளை 'மருதமலர்' வெளியிட்டுள்ளது. அந்த வகையில் மள்ளரிய ஆய்வுத்தந்தை தேவ ஆசிர்வாதம் அவர்கள் குறித்து 'தமிழர் வரலாற்று தந்தை' என்னும் தலைப்பில்,

மாமள்ளர் மூவேந்தர் ஒண்புகழ்
வரலாறு கண்ட மூதறிஞரே
எங்கள் ஐயா தேவ ஆசிர்வாதமே!
புவியிலே வரலாற்று கள்வர்களைப்
புரட்டு அரசியல் சாணக்கியர்களை
வேரோடும் தூரோடும் அறுத்தெடுத்த
எங்கள் குல சிங்கம் ஆசிர்வாதமே!
வரலாறாய் வாழ்ந்தவரே!
வையத்துக்கு நம் புகழ் தந்தவரே!
சேர சோழ பாண்டியன் என்ற மூவேந்தர்
எல்லாரும் எங்கள் வழி வந்தவரே
என்று ஐயம் திரிபுட உரைத்தோரே!

ராஜ ராஜ சோழன் என்ற மாமன்னன்

எங்கள் ரத்தத்தின் ரத்தம் என்று

உரக்கச் சொல்லி ஆதாரம் காட்டியவரே!

ஆசிர்வாதம் அய்யாவே! வாழ்க நீவிர்

வாழ்க! வாழ்க! பல்லாண்டு. (மருதமலர், ஆக.08, ப.29)

என இடம்பெற்றிருக்கும் கவிதை இன முன்னோடியை அறிமுகப்படுத்தியும், இனப்பெருமைப் பேசியும் உட்பொருளை வெளிப்படுத்துகிறது.

நாடார்கள் என்போர்

என்றும்

நாணயம் காப்பார்-வீணில்

போடார்கள் முதலை; மற்றும்

போற்றுநல் உழைப்பில்லாமல்

தேடார்கள் புகழை... (இ.நா.மு., அக்-2008, ப.9)

என்னும் இக்கவிதை நாடார் இனமக்களின் தொழில் சிறப்பைப் பற்றியும், அவர்களின் நேர்மையையும் குறிப்பிடுவதாக அமைகிறது.

கொங்கினத்தின் கொடியை ஏந்தி

கோவைச் செழியர் கொள்கை நிறுத்தி

புது யுகத்தை இனிப் படைக்க

புறப்படுவோம் வேளாளா...!

தினவெடுத்த தோள் நமக்குத்

திறமையான அறிவிருக்கு

உரிமை என்பது இனி உனக்கு

உதிரம் கொதிக்க வந்திடு வேளாளா...!

நாடாள நமக்குத் திறமை

வேளாளர் ஆண்ட பெருமை

காராளர் வம்சம் வெல்ல

கரைவேட்டி கட்டிடு வேளாளா...!

நம்நாடு நம் மக்கள் எனப்

பட்டயங்கள் பலவும் உண்டு

வெட்டி ஆளாய் இருந்திடாதே

வெறிபிடித்து, கொடி பிடிப்பாய்

வீர முழக்கம் தொடங்கிடு வேளாளா...!

(கொங்கு, சன-08, ப.34)

*என்னும் இக்கவிதை கொங்கு வேளாளர்களின் இனத் தலைவர் கோவைச் செழியன் நினைவுகள், தன்னினம் காக்க இன இளைஞர்கள் ஆற்ற வேண்டிய கடமைகள் பற்றியும் எடுத்துரைத்து இன உணர்வைத் தூண்டச் செய்கிறது.*

மருதநில வேந்தன்
மள்ளர் குலத் தேர்வேந்தன்
மாற்றார் சூழ்ச்சியினால்
வெல்லும் வகையின்றி
எள்ளும் வகை செய்தார்
இழிகதையும் செய்தார்!
சொல்லும் தரமன்று
சூடுசொரணை நமக்குண்டா?

கல்விக்கு வழியில்லை
கல்விக்கூடம் நமக்கில்லை
காலமெல்லாம் உழைத்தாலும்
காசு சேர்க்கும் அறிவில்லை
ஒன்றுகூடத் தெரியவில்லை
ஒருங்கிணைப்பும் புரியவில்லை
வென்றுவிடத் துடிக்கின்றாய்
வேதனையை என்ன சொல்ல? (தேவேந்திரர் மலர், அக்-08, ப.10)

*என 'அன்றும் இன்றும், என்றும் தலைப்பில் இடம்பெறும் இக்கவிதை தேவேந்திரர்களின் அன்றைய செழிப்பான வேளாண்மையும், புறநானூறு கண்ட வீர இனம் இன்று ஒடுக்கப்பட்ட, ஓரங்கப்பட்ட இனமாக இருப்பதைக் கண்டு கவிதை வடிவில் இன உணர்வைக் கோபமாக வெளியிட்டுள்ளது.*

காலில் போடுவோம்
மறுக்கப்பட்ட உரிமை
செருப்பு

வளர விடாமல்
அழுத்தும்
குலத் தொழில்

ஏழையின் உணவு

மருத்துவர் குறிப்பில்

மருந்து - கூழ் (பண்டிதம், நவ-08, ப.10)

*என்னும் ஹைக்கூ கவிதைகள் வாயிலாக மருத்துவர் இனம் குறித்த கருப்பொருள்களை உள்ளடக்கி அமைகின்றது. இதழில் இட நிரப்பியாக ஹைக்கூ கவிதைகள் பல இடம்பெறுவதை அறிய முடிகின்றது.*

வேட்டை நாய் போல் ஓடி ஓடி

விறுவிறுத்து மிகக்களைத்துச் சேர்ந்து போனோம்!

ஆட்டத்தின் பெயர் தானும் தெரியவில்லை!

ஆடுகளம் என்ன வென்றும் புரியவில்லை!

ஓட்டத்தின் வேகமதும் குறையவில்லை!

ஓடுவதன் நோக்கமதும் தெரியவில்லை!

நாட்டம் தான் ஏதுவுமில்லா இந்த வாழ்க்கை

நாடகத்தின் முடிவெண்ண உணர்வார் யாரே?

விட்டத்தைப் பார்க்கின்றோம் மிக வெறித்து!

மிகமுயன்று சிலந்தி ஒன்று வலையைப் பின்னும்!

பட்டென்று பலமுறை தான் நூல் அறுந்தும்

பலர் போற்றும் வலைவீட்டைப் படைத்தே தீரும்!

வட்டம் தான் சதுரம் தான் செவ்வ கம் தான்

வடிவம்தான் யாதெனத்தான் தெரிந்து விட்டால்

நட்டம் தான் வந்தாலும் வெற்றி நோக்கி

நடைபோடத் தடைஉளதோ உணர்வார் யாரே!

(பூச்சரம், அக்-08, ப.5)

*'உணர்வார் யாரே?' என்னும் தலைப்பில் இடம் பெறும் கவிதை நகரத்தார் இனமக்கள் பொன்னும் பொருளும் சேர்ப்பதில் மிகுதியாக ஈடுபட்டு மகிழ்ச்சியடைவதும், நட்டம் எனும் நிலை ஏற்பட்டால் வருந்துவதையும் குறிப்பிட்டு அந்நிலை கூடாது என வெளிப்படுத்துகிறது.*

மாலை நேரக் கடலைக்காண

மாணவர் கூட்டம் வருகிறது!

நீலச்சேலை அலைகள் நெய்வதை

நெய்தலில் கண்டு மகிழ்கிறது!

புன்னைக் கானலில் புகுந்த அலைகள்
பூமணம் பூசிப் புரள்கிறது!
புத்தலை மீனைக் கொண்டு தந்து
பூமொட்டோடு செல்கிறது!

கானல் எல்லாம் கனகப்பொன்னாய்
கதிரவன் ஒளியில் குளிக்கிறது!
நெய்தல் பூக்கள் நீலக்கடலின்
நிறத்தை உண்டு விழிக்கிறது (கடலார், ஏப்-08, ப.22)

*'மாலை குறும்பயணம்' என்னும் கவிதையில் கடற்கரையில் அந்தி நேரத்தின் தன்மையை விளக்குவதாக அமைகின்றது.*

பொதிகை மலை சந்தனமாய்
புடம் போட்ட தங்கமாய்
தடம்புறழா சிங்கமாய்
கலங்கரை விளக்காய் ஏதற்கும்
கலங்காத இமயமாய்
கோகுலத்து மணி விளக்காய் - நம்
இருள் மாற்ற வந்த விடிவெள்ளியாய்
மனிதருள் மாணிக்கமாய் திகழும்
ஐயா கோபால கிருஷ்ண யாதவ்
பல்லாண்டு காலம் வாழ்க வளமுடன்

(புதிய யாதவம், ஆக-08, ப.11)

*'வாழ்த்துப்பூக்கள்' என்னும் தலைப்பில் கோகுலத்துக் குல விளக்காக விளங்கும் கோபாலகிருஷ்ணனின் புகழையும், இனத்திற்குச் செய்த அர்ப்பணிப்பு உணர்வையும் இக்கவிதை வெளிப்படுத்துகிறது.*

துக்கம் வராமலிருக்க மனதினில் துணிவு வேண்டும்!
வருத்தம் வராமலிருக்க மனதினில் வீரம் வேண்டும்!
கட்டபொம்மனின் வீரம் கணினியுகத்திலும் வேண்டும்!
கழகமும் பண்பாடும் உலகமெங்கும் ஓங்க வேண்டும்!

கட்டபொம்மனின் சிந்தனை கருத்தில் ஊன்றிவிட்டால்

கெட்ட அன்னிய மோகம் கொட்ட மடங்கி ஓடிவிடும்!

பாஞ்சையாரின் பண்பாடு உன்மனதில் பதிந்து விட்டால்

பூஞ்சோலையாகும் உன் வாழ்வு! புகழில் கொடி பறக்கும்!

(வீ.பா.க. ஜூலை-08, ப.9)

*'ஏனப்பா இந்தியனே' என்னும் இக்கவிதை இனத்தில் தோன்றிய சுதந்திர போராட்ட போராளி கட்டபொம்மனின் வீரத்தை அவ்வின மக்கள் ஒவ்வொருவரும் மனத்தில் கொள்ள வேண்டும் என வலியுறுத்துகிறது.*

குருதி புரண்டோடும் ஒரு

கருவறையில் உயிர்த் துளியாய்

இருந்து வந்த யாதவ இளைஞனே

ஒரு தாயின் அரவணைப்பால்

ஊருக்கு உத்தமனாய்

பாருக்கு புனிதனாய் யாதவர் பேரவைக்கு

வீரனாய், சீறும் சிங்கமாய் - தினம்

நேருக்கு நேர் நின்று

நிஜமாய் போராடு

நிகழ்காலம் உன் கையில்

நிமிடங்கள் ஒவ்வொன்றும்

உந்தன் துடிப்பினில்

விரைந்து வா, யாதவ இளைஞனே

விண்ணை வளைத்துக் காட்டுவோம்

(ஒ..யா.முரசு, நவ-08, ப.19)

*'யாதவனே நிஜமாகப் போராடு' என்னும் கவிதையில் இன்றைய சூழ்நிலையில் இன இளைஞர்கள் உரிமைகளைப்பெற நிஜமாகப் போராட முன்வர வேண்டும் என இனஉணர்வூட்டி இழுக்க முயல்கிறது.*

காலமுல மஹிம தெலியக

வாலாயமு நித்ய மனுச்சு யருகு துரிந்தே

யேலாகாலமு தெலியரு

வாலாய முச்சாட்டவைய வசுமதிவேமா

(தெலுங்கர் கீதம், ஜுன்-08, ப.23)

*ஆந்திர கவி வேமனா தெலுங்கு மொழியில் இயற்றிய கவிதையைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட்டுள்ளமை தெலுங்கு இன உணர்வைத் தூண்டுவதாக அமைகின்றது.*

பாம்பு புடிச்சி
தோல உறிச்சி
உப்பு போடுவேங்க...
கண்ணி கட்டி
மொயல புடிப் பேங்க...

வேருவெட்டி
வெரகு பொளந்து
கத்த கட்டுவேங்க...

உடும்ப புடிச்சி
வெளங்க போடுவேங்க...

தேன் அழிச்சி
தெரு... தெருவா
கூவி
விப்பேங்க...

நாத்து புடுங்க
அண்ட கழிக்க
ஏறு ஓட்ட
கரும்பு வெட்ட
இன்னும்...

கூலி வேல செய்வேங்க
எழுத படிக்கத் தெரியாது - ஆனா
கை நாட்டு வைப்பேங்க... (இருளர் செய்தி, மார்ச்-08, ப.5)

*எனும் இக்கவிதை 'கைநாட்டு' என்னும் தலைப்பில் இருளர் இன மக்களின் வாழ்வியலை எதார்த்தமான கவிதை நடையில் விளக்குவதாக அமைகின்றது.*

இனத்தில் உள்ள இலக்கிய ஆர்வலர்களை ஊக்கு விக்க அவர்களின் மூலமாக, இனஇதழ்களில் கவிதைகளைப் படைக்கின்றனர். படைப்புகளின் மையக்கருவும் இனம் சார்ந்த கருத்துக்களாகவே அமைவதைக் காணமுடிகின்றது. பல இன இதழ்கள் கவிதைப் படைப்புகளை இட நிரப்பியாகப் பயன்படுத்துவதும் உண்டு. மேலும் இன படைப்பாளர்களை ஈர்க்க, இன வாசகரிடத்தில் இன உணர்வைத் தூண்ட வாய்ப்பும் ஏற்படுத்துகின்றன.

**இன வரலாறு**

கடந்து போன முக்கிய நிகழ்வுகளின் தொகுப்பே வரலாறு என்பதாகும். எழுத்து ஆதாரங்கள் அற்ற மக்கள் இடம் போன்றவற்றின் வரலாற்றை மீட்டுருவாக்கம் செய்தலை இன வரலாறு (ethnohistory) எனலாம். மக்கள் வாழ்வின் எதார்த்தங்களை அடிப்படையாக வைத்து இன வரலாற்றுக் கருத்துக்கள் உருவாக்கப்படும். தொல் குடிகள் மற்றும் திணைக்குடிகளின் வரலாற்றைத் தொல்லியல், எழுத்து, வாய்மொழி ஆதாரங்களை அடிப்படையாகக் கொண்டு மீட்டுருவாக்கம் செய்தலைக் குறிக்கும். இன வரைவியல் தரவுகளோடு இணைத்துப் புதிய கண்டு பிடிப்புகளை அறிய இன வரலாறு உதவுகின்றது. அதாவது கடந்த காலத்தைச் சமகாலப் பண்பாட்டின் அடிப்படையில் உணர்த்தலையும் இன வரலாறு தனது நோக்கமாகக் கொண்டுள்ளது.

> வரலாறு என்பது கடந்த காலத்தை மீட்டுருவாக்கம் செய்வதைக் குறிப்பிடுவது போன்றே கடந்த காலத்தைப் புரிந்து கொள்ளும் தன்மையையும் உள்ளடக்கியதாகும்[9]

என்பர்.

இதுவரையிலான வரலாறு என்பது சமுதாயத்தில் ஆள்வோரின் வரலாறாக (ஆதிக்க) ஒரு சார்புத் தன்மையோடு பதிவு செய்யப்பட்டுள்ளது. இதில் வெகு சனங்களின் பார்வைகள், மொழியாடல்கள், அனுபவங்கள், குரல்கள், நினைவுக் குறிப்புகள், அறிவுத் தேடல்கள் போன்ற வரலாறுகள் கவனம் பெறாமல், பார்க்கப்பெறாமல் கேட்கப்படாததுமாக அமைந்துள்ளன. எனவே தான் இன இதழ்கள் இனத்தின் வரலாற்றை இன மக்களுக்குத் தெரிவிப்பதில் முனைந்து நிற்கின்றன. இனச்சிக்கல்களிலிருந்து எந்த ஓர் இனம் தன் உண்மை வரலாறுகளையும் பண்பாடுகளையும் தெரிந்து கொள்ள முயற்சிக்கிறதோ அல்லது புகுத்தப்பட்ட பொய் வரலாறுகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்கிறதோ? அந்த இனமே உயர்வையும்

வெற்றியையும் அடைகின்றது. அந்த இனமே உயர்ந்த இனமாக மற்ற இனத்தாரால் மதிக்கப்படுகின்றது.

> ஒவ்வொரு இனத்திற்கும் ஒரு வரலாறு என்பது அது சார்ந்துள்ள சமுதாய நிலையை, அதன் பண்பாட்டுக் கூறுகளை, வாழ்வியல் நிகழ்வுகளை விளக்கக் கூடியவையாகும்[10]

என்ற கூற்றிற்கேற்ப ஓர் இனத்தைப் பற்றி அறிய இலக்கியங்கள், கல்வெட்டுக்கள், ஓலைச்சுவடிகள் போன்றவையெல்லாம் வரலாற்று ஆவணங்களாகப் பயன்படுகின்றன.

'இந்திர மள்ளர்' என்னும் வரலாற்றுத் தொடரில் (ம.மலர், நவ-08, ப.29) சோழப்பேரரசின் குணமங்கல நாட்டின் அரசர் அருண்மொழி வர்மனான இந்திர மள்ளரின் போர்க்குணம், ஆட்சித்திறம், கொடைத்தன்மை போன்றவை வரலாற்று நிகழ்வுகளுடன் எடுத்துரைக்கின்றன. இனப்போராளிகள் தேக்கப்பட்டி பாலசுந்தராசு, இம்மானுவேல் சேகரனார், சுதந்திர போராட்டப் போராளி சுந்தரலிங்கனார், வடமாநிலங்களில் கலக்கிய வீரப்பெண் பூலான் தேவி போன்றோரின் வரலாற்றைத் தொடராக அமைத்து இன மக்களுக்கு வீரத்தை விதைக்கின்றது. 15 ஆம் நூற்றாண்டில் நாடார் வரலாறு (இ.நா.மு., டிச-08) என்னும் தலைப்பில் நாடார் இன மக்கள் செய்து வந்த தொழில்கள், வணிகம் முதலியவற்றைச் சான்றாதாரங்களுடன் விளக்குகிறது. இனப்பிரமுகரும், கட்சிகளுக்கு அப்பாற்பட்டவருமான கர்மவீரர் காமராசர் அவர்களின் தொண்டைக் குறிப்பிட்டு இன்றைய இளைஞர்களுக்கு வழிவகுப்பதாக வரலாற்றுக் கட்டுரைகள் அமைகின்றன.

'கொங்கு வேளாளக் கவுண்டர்களின் குலங்கள்' எனும் தலைப்பில் கொங்கு வேளாளர்களின் குலங்கள் 214 என பழைய வரலாற்று ஆவணங்கள் குறிப்பிடுவதைப் பெருமையாகக் குறிப்பிடுவதோடு சுதந்திரப்போராட்ட வீரர்கள் தீரன் சின்னமலை, அழியாப் புகழ்பெற்ற காலிங்கராயன் போன்றோரின் வீரச் செயலைக் குறிப்பிட்டு,

> இவர்கள் செய்த நற்செயல்களால் அவர்கள் பிறந்த நாடும், இனமும், குலமும் என்றும் பெருமை அடைகிறது. நாட்டிற்கும் நமக்கும் இன்றளவிலும், வழிகாட்டியாகவும், முன் மாதிரியாகவும் இருக்கும் அவர்களைப் போல் நாமும் ஏதாவது ஒரு துறையில் சிறந்து விளங்கி சரித்திரம் படைக்க வேண்டும் என்ற உறுதிமொழியை இன்றைய இளைஞர்களாகிய நாம் எடுத்துக் கொள்வோம்[11]

எனக் குறிப்பிடுவது இன உணர்வுக்குக் கட்டியம் கூறுவதாக விளங்குகின்றது.

அவற்றைச் செய்வதிலிருந்து விடுபட வேண்டும் என்று முயற்சி செய்ததன் பலனாகத் திருநெல்வேலியில் வெள்ளாள நாவிதர்கள் இனப்போராளி எஸ்.எஸ்.ஆனந்தம் தலைமையில் 1924இல் நடைபெற்ற போராட்ட நிகழ்வுகளை வெளியிட்டு இன மக்களை வீறு கொள்ளச் செய்கிறது. 'நகரத்தார் வரலாறு' என்னும் தலைப்பில் நகரத்தார்களின் வரலாற்றைப்பலரும் பிழையாக எழுதியிருப்பதைச் சுட்டிக்காட்டி மேலோட்டமாக நகரத்தார் வாழ்வியலை அறிந்தவர்கள், அவர்களுடைய போக்கு, பிறரிடம் காணப்படுவது கொண்டு அச்சாதியரை (இசுலாமியர் நாடார் போன்றோரை) நகரத்தாருடன் தொடர்புப்படுத்துவதைக் குறிப்பிட்டு வாழ்க்கை முறையின் இயல்பு, அணியும் ஆடை, அணிகலன்கள், பேச்சுமொழி (அடிப்படைச் சொற்கள்) பழக்கவழக்கங்கள், திருமண பழக்கவழக்கம், மரணச்சடங்குகள் போன்றவை நகரத்தார் என்னும் தனித்த ஓரினத்திற்கே உண்டு என ஆய்வுக்கட்டுரையாளர் குறிப்பிடுவது இனத்தைப் பெருமைப்படுத்துவதாக அமைகிறது.

யாதவ இன மக்களின் போராளியாகக் கருதப்படுபவர் சுதந்திர வீரன் அழகு முத்து யாதவ் ஆவார். இவரின் சிறப்புக் குறித்துக் கட்டபொம்மனுக்கு முன்னால் அந்நியரை எதிர்த்து முதல் முழக்கமிட்ட சுதந்திர வீரன் வரலாற்றுத் தொடர் எனும் தலைப்பில்,

> இந்த மாவீரரின் வரலாற்றை வரலாற்று ஆசிரியர்கள் மறைத்து விட்டபோதிலும், தென்னாட்டின் ஓலைச்சுவடிகளிலிருந்து மறைக்க முடியவில்லை. சுதந்திர உணர்வு கொண்ட அனைவரும், வணங்கத் தகுந்த இம்மாவீரர் சுதந்திர தீபம் சுடர்விட்டுப் பிரகாசிக்கத் தூண்டுகோளாக இருந்தவர். கழுகுமலையிலிருந்து ஐந்துகல் தொலைவில் உள்ள கட்டாலங்குளத்தில் இவர் வாழ்ந்த வீடு இன்றும் மாவீரரின் வாழ்க்கைக் கூறிக் கொண்டிருக்கிறது அவர் பயன்படுத்திய வாளும், ஆயுதங்களும் ஆங்கிலேயர்களை எதிர்த்த வீர வரலாற்றை பிரதிபலித்துக் கொண்டிருக்கின்றன[13]

என இனத்தின் ஆதங்கத்தை வெளிப்படுத்துகிறது. நெய்தல் நில மக்களான பரதவர்கள் என்றழைக்கப்படும் மீனவர்களின் வரலாறு நீண்ட நெடிய பெருமை கொண்டதாகும். அதைக்குறிப்பிடும் வகையில் 'பழம் பெருமை மறந்த மீனவர் சமூகம்' எனும் தலைப்பில் மீனவர் தம் குலச்சிறப்புகள், பரதவர்களுக்கும் வலையர்களுக்கான தொடர்பு, வலையர்களின் சிறப்புகளும் வழங்கப்பெற்ற பட்டப் பெயர்களும், வலையர்களின் குடிக்கிளைகள், பாண்டியர் குலத்தவர்களுடனான தொடர்பு, பிற சமூகத்தவருடனான தொடர்பு, பரதவர் நம்பிக்கைகள், சகுனங்கள் என பன்முகத்

*தன்மைகளை வெளிப்படுத்துகிறது. மேலும் பாடறிந்து (தொழில்) மீன்பிடித்தலில் பண்பட்ட பரதவர்கள் அதிகாலையிலேயே கடலுக்குள் சென்று அளவுள்ள மீன்களைப் பிடித்துத் தங்கள் பறிகளை நிரப்பிக் கொள்வர். பின்னர் அவற்றை மணல் திடலில் இட்டு பரப்பி உலர்த்தும் செய்தியினை,*

நாள்வலை முகந்த கோள்வல் பரதவர்
நுணங்கு மணல் ஆங்கண் வணங்கப்
பெய்ம்மான்
பறிகொள் கொள்ளையர் மறுகாக்க

(அகம் 300: 1-4)

*சங்க இலக்கியப் பாடலில் இடம் பெற்றிருப்பதை எடுத்துரைக்கிறது.*

*யாதவ இனமக்கள் மேன்மைக்காக வெளிவரும் புதிய யாதவம். இதழில் செஞ்சிக்கோட்டைப் பகுதியில் முன்பொரு காலத்தில் யாதவ வம்சத்தைச் சார்ந்த ஆனந்தக்கோன் என்பவர் ஆடு மேய்ப்பவர்களுக்குத் தலைவனாக விளங்கினார் என்றும், கி.பி. 1200இல் செஞ்சி மலை உச்சியில் ஒரு கோட்டையைக் கட்டி அதில் தன்குல தேவதையான கமலக்கள்ளியின் நினைவாகக் கோயில் எழுப்பி 'கமலகிரி' என்று பெயரிட்டார். இவருக்குப்பின் பல கோன் வம்சத்தவர் கோட்டையைப் பராமரித்து வந்தனர். இவ்வாறு கோன் வம்சத்தைச் சேர்ந்த அரசர்கள் சுமார் நூறாண்டு காலம் கோட்டையைப் பலப்படுத்தியும் நாளடைவில் எல்லையை விரிவுபடுத்தியும் செஞ்சியில் அரசு செய்து வந்துள்ளனர் என ஆனந்தக் கோன் கோட்டையைப் பற்றிய செய்திகளைத் தொகுத்து வழங்கியுள்ளது. இனப்பெருமைகளை மட்டுமே பல இன இதழ்கள் வெளியிடுகின்றன. மாறாக ஆன்மீகம் தொடர்பான "108 திவ்ய தேச வரலாற்றுத் தொடர்" எனும் தலைப்பில் திருமாலின் சிறப்புப் பெற்ற திருத்தலக்கோயில்களைப் புராணச் செய்திகளுடன் வரலாற்றுத்தொடராகத் தெலுங்கர் கீதம் அமைத்துள்ளது. இராணி மங்கம்மாள், மதுரை நாயக்க மன்னர் வரலாற்றுத்தொடர் என இனத்தோடு தொடர்புடைய வரலாற்று நிகழ்வுகளையும் இணைத்துத் தருகிறது. சுதந்திரப் போராட்டத்தின் வரலாற்றில் முக்கியப் பங்காற்றிய வீரபாண்டிய கட்டபொம்மனின் சிறப்புகளைப் 'பாஞ்சாலக் குறிச்சி வீர சரித்திரம்' எனும் தலைப்பில்,*

பெரும்பாலும் இவர் வாய் திறந்து பேசாமலேயே தாம் கருதிய கருத்துக்களைக் குறிப்பால் உணர்த்திக் காரியங்களைச் சீரிய முறையில் நடந்தி வந்தார்.

> தம்முடைய குறிப்பு நிலைகளைக் கூர்ந்து ஓர்ந்து வினைகளை விரைந்து செய்யும் சதுரர்கள் நால்வர் எப்பொழுதும் இவர் அயலே இயல்பாய் நின்று வந்தனர்[14]

என்று ஆளுமைத்திறத்தைப் பதிவு செய்கிறது.

## இனம் தொடர்பான கல்வெட்டுகள்

கல்லில் வெட்டப்படுகின்ற அல்லது பொறிக்கப்படும் எழுத்து கல்வெட்டாகும். இதனை 'கல் மேல் எழுத்து' என்று பழமொழி நானூறு குறிப்பிடுகிறது. கல்வெட்டுக்கள் அரசியல், சமயம், தல ஆட்சி, பொதுப்பணி, இலக்கியத் தொடர்பு, நினைவுச் சின்னம், ஊமைச்சாசனம் ஆகியன குறித்து அமைகின்றன. கல்வெட்டுக்களே வரலாற்றைப் பெரிதும் உருவாக்குகின்றன. இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள சில செய்திகளை உறுதிபடுத்தவும் கல்வெட்டுகள் துணை புரிகின்றன.

> இலக்கியச் சான்றுகளைக் காட்டிலும் இவை நம்பிக்கைக்கு உரியவை. இலக்கியத்தைப் போன்று நாளா வட்டத்தில் இடைச் செருகல்கள் இவற்றில் சேர்க்கப்படுவதில்லை என்று பேராசிரியர் டாக்டர் இராசசேகர தங்கமணி குறிப்பிடுகிறார்.[15]

இன வரலாற்றை ஒவ்வொரு திங்களும் கட்டுரைத் தொடர்களாக இன இதழ்கள் வெளியிடுகின்றன. இன உணர்வுக்கு வலுச்சேர்க்கக் கல்வெட்டுகள், ஓலைச் சுவடிகள், செப்புப் பட்டயங்கள் போன்றவற்றில் காணலாகும் செய்திகளுக்கு மிகுந்த முக்கியத்துவம் தருவதைக் கடமையாகக் கொண்டுள்ளன. தம் இனம் மற்ற இனத்தை விட பழம்பெருமை, தொன்மை நிலைகளைக் கொண்டது என இன மக்களுக்குப் புரிய வைக்க முயற்சிகளை மேற்கொள்கின்றன. இதன் விளைவாக இது போன்ற செய்திகளுக்கு முன்னுரிமை தருகின்றன எனலாம்.

'தொண்டிக் கல்வெட்டு கூறும் தேவேந்திரர் தொன்மை' என்னும் தலைப்பில் இராமநாதபுரம் மாவட்டம் திருவாடனை அருகிலுள்ளது தொண்டி. இங்குள்ள குளத்தின் நடுவில் மாமன்னர்கள் மூவேந்தர் சின்னங்களுடன் பொறிக்கப்பட்ட அரிய கல்வெட்டு மிக அண்மையில் தொல்லியல் துறையினரால் கண்டு பிடிக்கப்பட்டுள்ள செய்தியையும், அதில் காணப்படும் அரிய தரவுகளில் மாமன்னர்கள் சேர, சோழ, பாண்டிய தேவேந்திரர் பெருமைகளும், காளி கோவிலுக்குத் தேவேந்திர வல்லபர் அளித்த நிலக்கொடை பற்றிய சிறப்பும் காணப்படுவதாகவும் இனப்பெருமையை நிலைநாட்டுகிறது. 'திருக்காரிக்கரைக் கல்வெட்டுகளில் உள்ள யாதவர் வரலாறு' எனும்

தலைப்பில் செங்கல்பட்டு மாவட்டம் திருவள்ளுவர் தாலுகாவில் இரமகிரி என்னுமிடத்தில் உள்ள கோவிலில் கி.பி.12 ஆம் நூற்றாண்டில் (1188-89) எழுதப்பட்ட சாசனத்தில் வீரநரசிங்க யாதவராயன் என்பவன் கோயிலில் திருவிளக்கு எரிப்பதற்காக முப்பத்திரண்டு பசுக்களைத் தானஞ்செய்ததையும், சித்திரைத்திருநாள் உற்சவத்துக்கு நீர்வாயில் என்னும் ஊரைத் தேவ தானமாகக் கொடுத்ததையும் குறிப்பிடுகிறது. இதன் வாயிலாக கி.பி.12 ஆம் நூற்றாண்டுகளில் வீரசிங்க யாதவராயர் என்ற தம் இன அரசன் ஆட்சி புரிந்ததை வெளியிட்டுப் பீடு கொள்கிறது.

'மதுரை, தஞ்சை, செஞ்சிப் பகுதிகளை ஆண்ட நாயக்க மன்னர்கள் திருவண்ணாமலை கல்வெட்டுகள்' என்றும் தலைப்பில் 'அண்ணா மங்கலப்பற்று பல குன்றக்கோட்டத்து நெடுங்குன்றத்திருக்கும் கவரை நாயக்க பாடிகளில் திம்மப்ப நாயக்கர் புத்திரன் பெரிய மல்லப்ப நாயக்கர் இவை குறித்து கி.பி.1556இல் திருவண்ணாமலை திருக்கோவிலுள்ள சதாசிவராயர் காலத்து கல்வெட்டு செய்த சேவப்ப நாயக்கரின் தந்தை திம்மப்ப நாயக்கர் என்றும், இவர்கள் கவரா நாயுடு இனத்தைச் சார்ந்தவர்கள் என்றும், தங்களை நான்காம் வர்ணம் சூத்திரர்பிரிவைச் சார்ந்தவர்கள் (சதுர்த்த கோத்திரம்) என்றும் கல்வெட்டுகள் சுட்டுவதைத் தெலுங்கர் கீதம் இதழ் குறிப்பிடுகிறது.

இன மக்களுக்குத் தம் வம்சாவளியினைத் தெரியபடுத்துவதற்குக் 'கல்வெட்டுகள்' உறுதுணை செய்கின்றன. இதன் மூலமாகத் தங்கள் இனம் குறிப்பிட்ட இந்த நூற்றாண்டில் வாழ்ந்திருந்தாகவும், இத்தகைய பண்பாடுகளை உடையவர்களாக இருந்தார்கள் என்பது பற்றியும் அறிந்து கொள்ள இவை உதவுகின்றன. இம்மாதிரியான கல்வெட்டுச் செய்திகளை இதழ்களில் படிக்கும் இன மக்கள் தங்கள் பரம்பரை நல்ல பாரம்பரியத்தோடும், செல்வாக்கோடும் இருந்திருப்பதை உணர்ந்து அந்தப் பெருமைகளைக் கட்டி காப்பர் என்றும் நம்புகின்றன.

**இனப்பண்பாடு, கலாச்சாரம்**

பண்பாடு, கலாச்சாரம் இவையெல்லாமம் கால மாற்றத்திற்கு ஏற்பச்சிறிது மாறக்கூடியவை. இனவாரியாகவோ, மொழி வாரியாகவோ மாற்றம் என்பது நிகழ்ந்து கொண்டுதான் இருக்கும். அது தவிர்க்க முடியாததாக இருக்கிறது. அந்த மாற்றம் நல்ல விளைவுப் பயன்களை ஏற்படுத்தினால் அது வளர்ச்சி. மாறாக அது கெட்ட விளைவுகளை ஏற்படுத்தினால் அது கலாச்சார, பண்பாட்டுச் சீரழிவிற்கு

அடிப்படையாக அமைந்து விடும். இது போன்ற கருத்தியல்களைக் கொண்டே இன இதழ்கள் தம் இனங்களில் நடந்த பண்பாட்டுச் சடங்குகளை, நிகழ்வுகளை எடுத்துக்காட்டி அதன் மூலம் அவர்களிடம் இன உணர்வை ஏற்படுத்துகின்றன.

தேவேந்திரர்களுக்குத் தேவர் நிலம் தானம் கொடுத்தாரா? (மருதமலர், பிப்-08, ப.15) பல ஆண்டுகளுக்கு முன்பு சேதுபதி மன்னருக்குத் தொன்டைமானுடன் பகை ஏற்பட்டது. அப்பகையைத் தீர்க்க தொண்டைமானுடைய தளபதி தலையைக் கொண்டு வருபவருக்குத் தக்க சன்மானம் வழங்கப்படும் என அறிவிக்க, இதை முத்துராமலிங்கத் தேவரின் பாட்டனார் தன் கீழ் வேலை செய்த நான்கு தேவேந்திரர்களை அழைத்துப் பேசுகிறார். அவர்கள் தொண்டைமான் தளபதியை வெட்டிக் கொண்டு வந்தனர். முத்துராமலிங்கத்தேவர் பாட்டனார் சேதிபதியிடம் தலையை ஒப்படைத்தார். இதனால் அவருக்குத் தானமாகப் பசும்பொன் கிராமத்தைத் தலைமையிடமாகக் கொண்டு 32 கிராமத்தைச் செப்புப்பட்டயத்தில் அளித்தார். இதை மேலராம நதி என்னும் ஊரைச் சார்ந்த அந்த நான்கு தேவேந்திரர்களுக்குப் பிரித்துக் கொடுத்தார். தொடர்ந்து வந்த தேவர் பரம்பரையினர் இவ்விசயத்தைக் கடைப்பிடித்து வந்தனர். தலைவெட்டியதற்காகத் தானம் தரப்பட்டதே தவிர வெறுந்தானமாக வழங்கப்படவில்லை எனவும், தேவேந்திரர்கள் வீரப்பண்பாட்டை அடிப்படையாகக் கொண்டவர்கள் என்பதையும் இந்நிகழ்வு வெளிப்படுத்துகிறது.

இனப்பண்பாட்டில் சடங்குமுறைகளுக்கு மிக முக்கிய இடம் உண்டு. அவ்வகையில் “மூவேந்தர் வழி வந்த நாடார்கள் வீட்டுத் திருமண வைபவங்கள்” (இ.நா.மு., டிச-08, ப.19) எனும் தலைப்பில் தாய்மாமனுக்குரிய இடத்தில் வேறு வழியில் உள்ள மாமன்மார்களையோ தாய்மாமன் வழி வரனிலும் வயது குறைந்த சின்னஞ்சிறு பையன்களையோ கூட வைத்து மாமன் சடங்கு செய்வதையும் விமர்சனம் செய்து; இது சரியான மரபு அல்ல என எடுத்துரைக்கிறது. மேலும் மாமன் சடங்கு செய்வதை, மாமன் வந்தமர்ந்ததும் கட்டியக்காரக் குடிமகன் “ஐயா மாமன் சடங்கு ஆரம்பிக்கிறார்கள்” என்று சம்பிரதாய முறைப்படி (மைக்ரோ போன் இல்லாமல்) உரத்த குரலில் அறிவிக்கிறான். (பின்னர் மாமனாருக்கு ரட்சை அல்லது கங்கணம் கட்டப்படுகிறது) அவர் மருமகனுக்குப் பட்டங்கட்டி அவனைக் குடும்ப முதல்வனாகவும், மணப்பெண்ணுக்கு நாயகனாகவும் ஆக்குவதற்கான கைங்கரியத்தைத் தாம் செய்து முடிப்பதாக கங்கணம் கட்டிக் கொள்கிறேன் என்று சங்கற்பம் செய்து

*கொண்ட பின் மண மேடையிலுள்ள விநாயகருக்கும், கும்பங்களுக்கும் பூசைகள் கற்பூர ஆரத்திகள் நடைபெறுகின்றன என இனச்சடங்கு முறையை விளக்குகிறது.*

*இனப்பண்பாட்டு வெளிப்பாட்டிற்கு இலக்கியமும் முக்கிய பங்காற்றுகிறது என்பதற்குக் காட்டாக "வேளாளர் பெருமையும் அரிய கருவூலமாகிய சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகராதியும்" எனும் தலைப்பில்,*

> அகராதியில் வேளாண் மாந்தரியல்பு என்பதற்கு Characteristics of velalas, ten in number, viz என குறிப்பிடப்பட்டு தமிழில், 1. ஆணை வழி நிற்றல் (சத்தியம் தவறாமல் சத்தியம் பண்ணியபடி நடத்தல்), 2. அழிந்தோரை நிறுத்தல் (கெட்டகுடி தழைக்க உதவுதல்), 3. கைக்கடனாற்றல் (மற்றவர்கள் கைமாத்துக் கேட்டால் தருதல் - வட்டிக்கு விடுதல் வேறு), 4. கசிவகத்துண்மை (=அகத்து + கசிவு + உண்மை - அதாவது அகத்தே பிறர் கஷ்டம் பார்த்து கருணை கொண்டு செயல்படல்), 5. ஒக்கல் போற்றல் (ஒக்கல் = உறவினர்), 6, ஒவா முயற்சி இடைவிடாமுயற்சி, கடின உழைப்பு - Perseverance, 7. மன்னிறை தருதல் (மன்னுதல் = நிலைப்பெற்றிருத்தல், மன்னன் என்ற சொல் இதில் இருந்து வந்தது என்பதறிக. இறை = மன்னன், வரி என்று இரு பொருள் உண்டு. இதுவும் இதே அகராதியில் உள்ளது. மன்னனுக்கு வரி செலுத்துதல். வேளாளன் மன்னனுக்கு வரி செலுத்தியாக வேண்டும். 8. ஒற்றுமை கோடல் (to live in peace with others) என்று இதே அகராதியில் கூறப்பட்டு உள்ளது), 9. விருந்து புறந்தருதல் முன்பின் தெரியாத வழிப்போக்கரைக் காத்தல், (இந்தக் குணங்களை பதிந்த காலத்தில் உணவு விடுதிகள் கிடையாது. சோற்றை விற்பதற்கு ஆளில்லை. இன்றும் சிற்றூர்களில் உணவு கிடையாது காண்! அப்படி விருந்தினரை ஒப்புதல் தவிர்க்க முடியாத காலக்கட்டாயம்), 10. திருந்திய ஒழுக்கம்[16]

*எனப் பத்துக் குணங்களைப் பெற்றவர்களே கொங்கு வேளாளப் பெருமக்கள் எனப் பெருமை பாராட்டுகிறது.*

*'கிழக்கு அபிராமத்தில் பொன் ஏர்பூட்டும் திருவிழா' (தே.மலர், மே-08, ப.4) எனும் தலைப்பில் தேவேந்திர இன மக்கள் வேளாண்மைக்குடியாகிய மருத நிலத்தைச் சேர்ந்தவர்கள். இம்மக்கள் ஒவ்வொரு ஆண்டும் சித்திரை மாதம் முதல் நாள் ஏர் விடுதல், பொன் ஏர்பூட்டுதல் திருவிழா பாரம்பரியமாகக் கொண்டாடப்படுதலையும், அவ்விழாவின் தொடக்கமாகப் பொன் ஏர் பூட்ட மருத வகையறா, தலைய புத்தூர் வகையறா, இறையா புரத்து வகையறா என்றும் மூன்று வகையறாகளுக்கு மட்டுமே*

உரிமை உள்ளது. இது சுழற்சி முறையில் ஒவ்வொரு ஆண்டும் ஒரு வகையறா எனும் வகையில் அமைகிறது. பொன் ஏர் பூட்டும் உரிமைக்குரியவரை அழைக்க அவரது இல்லத்திற்குத் தேவேந்திரர் மடத்தில் இருந்து ஊர் பெரியவர்கள். குடை, கொட்டு, மேள, தாளத்துடன் சென்று அழைத்து வருகிறார்கள். பின்னர் கோயிலுக்குச் சென்று வணங்கியபின் கணக்குப்பிள்ளை பரிவட்டம் கட்டுகிறார். கொல்ல ஆசாரி, தச்ச ஆசாரி ஏரைச் சரி செய்து கொடுக்க, சேவல் பலியிட ஊர்ப் பொது இடத்தில் பொன்னேர் பூட்டப்பட்டு அனைவரும் வழிபடுகின்றனர் எனக் குறிப்பிட்டு இவ்விழா தேவேந்திரர் இனத்துக்குரிய சிறப்பான விழா என விளக்குகிறது. “இராசபாளையத்தில் வெண்குடைத் திருவிழா” (தே.மலர், மே-08, ப.24) இராசபாளையம் பேருந்து நிலையத்திற்கு எதிரே உள்ள ஏழு தெரு தேவேந்திரர்களால் ஒவ்வொரு ஆண்டும் சித்திரை முதல் நாள் கொண்டாடப்படுவதையும் இதழில் பதிவு செய்துள்ளது.

நம் ஒவ்வொருவர் வாழ்விலும், வாழ்க்கைக்குப் பிறகும் தொடர்புடையவர் ஒருவர் உண்டெனில் அவர் மருத்துவர் இனத்தைச் சேர்ந்தவர் எனக்குறிப்பிடலாம். பிறப்பு, இறப்பு சடங்குகளிலும் பங்கு கொள்ளும் இனத்தவர் எனக் குறிப்பிடலாம். பொட்டு வைக்கும் கலாச்சாரத்திற்கு யார் முன்னோடி? எனும் தலைப்பில்,

> திலகம் என்பது நமது பண்பாட்டில் ஒரு கிரீடம் போன்றதாகும். பிரசவம் பார்க்கும் போது ஊசி முனையை சூடேற்றி சிசுவின் நெற்றியில் ‘அரிவித்தல்’ என்று ஒரு வைத்திய முறையைக் கையாளுவார்கள். சூடுவைத்த அந்த இடமே திலகம் வைக்கும் இடமாக வழக்கத்துக்கு வந்தது. உயிருள்ள மனிதருக்கு திலகம் வைக்கப் பழகிய, மருத்துவரின் செயலுக்கு நன்றியாக மனிதன் இறந்து விடும் சமயத்தில் பிணத்தில் நெற்றித் திலகமிட்டு அதில் ஒரு நாணயத்தையும் வைக்கும் வழக்கம் வந்தது[17]

என நாணயம் கடைசியில் மருத்துவருக்கு உரியதாக அமைகிறது. இது ஒரு தட்சணையாகவும், இவர்களுக்குக் கொடுக்கப்படும் மரியாதையாகவும் ஏற்றுக்கொள்கின்றனர்.

பண்பாடு, கலாச்சாரம் என்பது ஒவ்வொரு இனத்திற்கெனத் தனித்தனியாக இருந்தாலும் நகரத்தார் வாழ்வியலை அடிப்படையாகக் கொண்டு விளங்கும் செட்டிநாடுப் பண்பாடு தனித்த புகழுடையதாகும். ‘பொங்கல் வைக்காவிட்டால் அபராதம்’ எனும் தலைப்பில் (பூச்சரம், பிப்-08, ப.67) ஒவ்வொரு வருடமும் தை மாதம் முதல் செவ்வாய்க்கிழமை கோவிலில் நகரத்தார் இனமக்கள் கூடி பொங்கல் வைப்பர்.

இப்பொங்கலுக்குச் செவ்வாய்ப் பொங்கல் என்று பெயர். இவ்விழா சிவகங்கை மாவட்டம் பாகனேரி, நாட்டரசன் கோட்டை, அரண்மனை சிறுவயல், சொக்கநாதபுரம் ஆகிய ஊர்களில் நடைபெறும். இவ்விழாக் குறித்துத் திருமணமான ஒவ்வொரு ஆணும் ஒரு புள்ளி என்று கருதப்படுகிறார்கள். செவ்வாய் பொங்கலுக்கு எட்டுத் தினங்களுக்கு முன்பு இவர்கள் கோயில் பூஜை மடத்தில் கூடுகிறார்கள். அங்கு அனைத்துப் புள்ளிகளின் பெயர்களையும் சீட்டில் எழுதிக் குடத்தில் போட்டுக் குலுக்கி அதிலிருந்து ஒவ்வொன்றாக எடுக்கிறார்கள். முதலில் வரும் நபருக்கே முதல் அடுப்பு ஒதுக்கப்படும். அந்த வரிசைப்படி தான் அவர்கள் பொங்கல் வைக்க வேண்டும். ஒரே நேரத்தில் அடுப்பைப் பற்ற வைத்துப் பொங்கலிடுவது கண் கொள்ளாக் காட்சியாகும். அனைவரும் இந்தச் செவ்வாய்ப் பொங்கலுக்கு வரவேண்டுமென்பது கட்டாயம். பல ஊர்களில் வசிக்கும் சொந்த பந்தங்கள் கூடுகின்ற விழாவாக இது அமையும் என இன வாசகர் இராம.சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார்.

யாதவ இன மக்களின் பண்பாட்டுக் கலாச்சாரத் தகவல்கள் காப்பிய இலக்கியமான சிலம்பில் அமைவதைச் சுட்டிக்காட்டி, ‘சிலம்பில் ஆயர் பண்பாடு’ எனும் தலைப்பில் குறிப்பிட்டுள்ளார் (ஒ.யா.மு., ஏப்-08, ப.20) சங்க இலக்கிய முல்லைக் கலிப்பாடல்களிலும், சிலப்பதிகாரத்திலும் முல்லை நிலவாழ்வினரான ஆயர்களின் பண்பாட்டு கலாச்சாரச் சிறப்பு, ஆநிரைகளை வளர்த்தல், ஆநிரைகள் வழி உற்பத்தியாகும் பால், வெண்ணெய் முதலியவற்றை விற்றும் பொருளாதாரத்தை வளர்த்துள்ளனர். ஆய்மகள்கள் காளையை அடக்குபவனையே மணப்பேன் என்று சூளுரைத்துள்ளார்கள். தங்கள் வாழ்வின் தீய நிமித்தங்களாக ஆனேறு எதிர்தல், கண்ணீர் சேர்தல், குடத்துப்பால் உறையாமை ஆகியவைகளைக் குறிப்பிட்டுள்ளார். இத்தீமையினின்று மீளத் திருமாலை வழிபட்டுள்ளார்கள். இவற்றை இளங்கோவடிகள்,

ஆகாத் தோம்பி ஆப்பயன் அளிக்கும்
கோவலர் வாழ்க்கையோர் கொடும் பாடில்லை

எனக் குறிப்பிடுகிறார். கோவலனின் அவலப் பயணம் கொலையுடன் முடிகிறது. கோவலன் கொலைச் செய்தியை ஆயர்பாடிக்குக் கொண்டு வருகிறார். இச்செய்தி வரும் முன்பே ஆயர் பாடியில்,

குடப்பால் உறையா குவியிமில் ஏற்றின்
மடக்கணீர் சோரும் வருவதொன்றுண்டு
உறிநறு வெண்ணெய் உருகா உருகும்

மறிநெறித் துடா வருவதொன்றுண்டு
நான்முலை யாயம் நடுங்குபு நின்றிரங்கும்
மான்மணி விழும் வருவதொன்றுண்டு

என்ற பாடல் உணர்த்துகின்றது. ஆயர் பாடிக்குக் கோவலன் கொலையுண்டதை நேரடியாகவே கூறியிருக்கலாம். அவ்வாறின்றி ஆயர் தம் கலாச்சார நிகழ்ச்சிகளோடு காட்டி அறிவித்துள்ளார் எனச் சுட்டிக் காட்டுவது தங்கள் இனப் பண்பாடு உயர்ந்தது எனக்குறிப்பிடுவதாகும்.

> பழங்குடி இனத்தவரான இருளர்கள் பற்றி ஆய்வு செய்த எட்கார்தர்ஸ்டன், இவர்கள் தனித்து ஒதுங்கியிருக்கும் இருண்ட காட்டைக்குறித்து இப்பெயர் அமைந்ததா ? அல்லது தோலின் நிறத்தைக் குறித்து இப்பெயர் அமைந்ததா என்பது தெளிவாகப் புரியவில்லை[18]

என்கிறார். இவர்கள் 7 கன்னிமார், மாரியம்மா போன்ற பெண் தெய்வங்களை வழிபடுகின்றனர். இருளர்களுக்கென்று பல்வேறு சம்பிரதாயங்களும் சடங்குகளும் உள்ளன. பண்பாட்டு ரீதியாக இவர்கள் பின் தங்கியே அமைந்தாலும் விஷக்கடிகளுக்கு நாட்டு வைத்தியம் செய்யும் மூலிகைகளை இவர்கள் அறிந்திருக்கின்றனர். வீரபாண்டிய கட்டபொம்மன் கோட்டையான பாஞ்சாலங்குறிச்சியில் நடைபெறும் வீரசக்கதேவி ஆலய விழா, கட்டபொம்மன் அரசு விழாவுக்கு வருகிற இன அன்பர்கள் மஞ்சள் நிற இரட்டைவாள் கேடயக்கொடி மட்டும் கட்டி வரவேண்டும் என வேண்டுகோள் விடுக்கிறது. நாம் நம் சமுதாயத்திற்குச் செய்ய வேண்டிய பணிகள் ஏராளம் இருக்கின்றன. வளர வேண்டிய நேரம் இது வளம் பெற முயற்சிக்க வேண்டிய நேரம் இது. இன வாலிபர்கள் மனத்திலும் உடலிலும் சக்தி மிக்கவர்களாய் இருந்தால் தான் நம் சமுதாயம் வளர்ச்சி பெறும். எனவே பாஞ்சாலங்குறிச்சி விழாவிற்குப் பயபக்தியோடு வந்து பண்பாட்டு பாதையிலிருந்து விலகிச் செல்லாமல் இருங்கள் என அறிவுறுத்துகிறது. திருச்சியில் தென்னிந்திய தெலுங்கு நாட்டுப்புறக் கலைவிழா இரண்டு நாள் நடைபெற்றதை இவ்விழாவில் தெலுங்கு பேசும் அனைத்துப் பிரிவு இன மக்களையும் ஒன்று சேர்த்து விழாவினை நடத்தித் தெலுங்கர் அனைவரும் ஒற்றுமையாக இருப்பதைக் காட்டியதுடன் அருந்ததியர் முதல் அந்தணர் வரை உள்ள அனைத்துச் சங்கப் பிரதிநிதிகளை அழைத்து இவ்விழாவில் கௌரவப்படுத்தியதையும் ‘தெலுங்கர் கீதம்’ பெருமை பாராட்டுகிறது.

ஒவ்வொரு இன இதழும் தம்மின மக்களிடத்தில் இன மரபு சார்ந்த செய்திகளையும், தொன்மை வாய்ந்த வரலாற்று நிகழ்வுகளையும் வெளியிட்டு

அதன்வழித் தங்களுடைய இனப் பண்பாடு மேன்மையுடையது என்றும், அதை என்றும் காத்து அதன்வழி வாழ்வியல் நெறிமுறைகளைப் பின்பற்ற வேண்டும் என எடுத்துரைப்பதை அறியமுடிகிறது.

**இன இதழ்களில் இனத்தலைவர்கள்**

இன இதழ்களில் இன உணர்வுக்கு முக்கியத்துவம் தரும் கூறுகளில் இன முன்னோடிகள் இன்றியமையாத இடத்தைப் பெற்றிருக்கின்றனர். மக்களிடத்தில் அவர்கள் தம் இனத்திற்குச் செய்த சேவைகளையும், தியாகத்தையும் போற்றும் விதமாகக் குறிப்பிட்டு அவர்கள் சொல்லிச் சென்ற கருத்துக்களை, விட்டுச் சென்ற பணிகளை இனிவரும் தமது இன இளைய தலைமுறைகளுக்கு எடுத்தியம்புவதாக இதழ்கள் அமைகின்றன. இன முன்னோடிகளை இரண்டு வகையாகப் பார்க்கலாம். 1. தமது இனத்திற்காக நற்பணிகள், தியாகங்கள் செய்து மறைந்து போனவர்கள். 2. தமது இனத்திற்கான தேவையை நிறைவு செய்கின்ற இன்றைய தலைவர்கள் என இரண்டு வகையில் அமைவர்.

இன இதழ்களில் தமது இனத்தவர்களுக்கென்று உழைத்து இன மக்கள் மனத்தில் நீங்கா இடம் பெற்ற தலைவர்கள் பெயரில் கவிதை, கட்டுரை வாழ்க்கை வரலாற்றுத் தொடர்கள் போன்றவை இடம் பெறுகின்றன. இன்றைய இளைஞர்களுக்குச் கடந்த தலைமுறைத் தலைவர்களின் வீரச்செயல்களை வெளிப்படுத்தும் விதமாகத் தேக்கம்பட்டி பாலசுந்தராசு அவர்கள் தேனி மாவட்டத்தில் உள்ள கள்ளர் இனத்தார் தேவேந்திரர்களுக்கு எதிராகச் செய்த தீண்டாமைக் கொடுமைகளை எதிர்த்து இன விடுதலை காண தீரமுடன் செயல்பட்டவர் என்பதை,

> இல்லற வாழ்க்கையில் வாழ்வதைக் காட்டிலும், தேவேந்திரர்கள் நலனுக்காக
> வாழ்ந்த வாழ்க்கையே மிகவும் சந்தோஷமாக இருந்தது[19]

எனக் கூறியதைக் குறிப்பிட்டு இவரைப்போல நம்மிடையே தன்னலமற்ற தலைவர்கள் இருப்பதாகத் தெரியவில்லை என ‘தன்னலமற்ற தலைவர் தேக்கம்பட்டி பாலசுந்தரராசு’ எனும் தலைப்பில் வெளியிட்டுள்ளது. மேலும் விடுதலைப் போராட்டத் தளபதி சுந்தரலிங்கம், தியாகி இம்மானுவேல் சேகரன் மற்றும் புதிய தமிழகம் கிருஷ்ணசாமி, ஜான்பாண்டியன், பசுபதி பாண்டியன் போன்றோரைப் பற்றியும் செய்திகள் இடம் பெறுகின்றன.

“கட்சிகளுக்கு அப்பாற்பட்டவர் காமராஜர்” எனும் தலைப்பில் 1967இல் காங்கிரசு பேரியக்கம் அரசியலில் தோற்ற நிலையில் தி.மு.க வெற்றி பெற்று அண்ணாத்துரை பதவியேற்றார். பின் அவர் காலமான பிறகு கலைஞர் கருணாநிதி முதலமைச்சரானார். இந்நிலையில் நாவலர் நெடுஞ்செழியன் பதவிப் போட்டி காரணமாக ஆட்சியைக் கவிழ்க்க முயற்சிக்க, இதையறிந்த காமராசர் கருணாநிதி, நெடுஞ்செழியன் இருவரையும் அழைத்துச் சமாதானம் செய்து வைத்ததையும் தான் சார்ந்த கட்சி காங்கிரசாக இருந்தாலும் சனநாயகத்தில் தி.மு.க நிலையான ஆட்சி அமைக்க வேண்டும் என்ற எண்ணம் இருப்பதைச் சுட்டிக் காட்டி இன்றைய தலைவர்கள் கடைப்பிடிக்க வேண்டும் என்பதை வலியுறுத்துகிறது. கொங்கு வேளாளக் கவுண்டர் இன மக்களால் போற்றப்படும் அமரர் கோவைச் செழியனார் குறித்துக் கொங்கு வேளாளக் கவுண்டர்களிடையே எழுச்சியும், விழிப்புணர்ச்சியையும் ஏற்படுத்தி நம் சமுதாய முன்னேற்றத்திற்கு அல்லும் பகலும் அயராது உழைத்த பெருமகனார் என்றும் தன்னேரில்லாத தலைவர், பகுத்தறிவுப் பாசறையில் தோன்றிய பகலவன் கொங்கினத்தை ஒன்று திரட்டிக் காத்திட்ட கொள்கை மறவன். தொண்டில் தூயவர் என்று கொங்கு இதழ் பறைசாற்றுகிறது.

பல இன இதழ்கள் தலைவர்களைப் போற்றினாலும் செங்குந்தமித்திரன் இதழாசிரியரே தலைவராக இருப்பதால் புகழுக்குக் குறைவில்லாமல் வாழ்த்துகள் இடம் பெறுகின்றன. வித்தகக் கவிஞர் விஜய் பிறவித் தலைவனாய் விளங்கிடும் பெரும! அறுபத்தைந்து அறுநூறாய் நீடுகவே ... என வாழ்த்துகிறார். விடுதலைப் போராட்டத் தியாகி எஸ்.எஸ்.விஸ்வநாததாஸ் பற்றி ‘தியாகியின் நினைவில்லம்’ எனும் தலைப்பில் நாடகக் கலைஞரான இவர் நாடக மேடையில் ஒரு காலும், சிறைவாயிலில் மறுகாலும் என்றபடி இந்திய நாட்டின் விடுதலைக்காகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டவர். இப்படிப்பட்ட மாபெரும் சுதந்திர போராட்டத் தியாகியின் வரலாறு காலத்தால் மறைக்கப்பட்டது. அதற்கு என்ன காரணம்? அவர் தாழ்ந்த குலத்தில் பிறந்தவர். (மருத்துவர் இனம்) என்பதாலா? என்று கேள்விக் கணையைத் (பண்டிதம், அக்.08, ப.2) தொடுக்கிறது. பண்டிதர் ஆனந்தம், சென்னிய விடுதி வைத்திய நாதன் போன்ற தலைவர்களின் சிறப்புகளையும் வெளியிட்டுள்ளது.

தமிழ்நாடு யாதவர் மகாசபை தலைவர் தி.அ.சொக்கலிங்கனாரின் இலக்கியப் பணி குறித்து; மதுரை, திருப்பாலையில் அமைந்திருக்கும் யாதவர் கல்லூரி எனும் ஆலமரத்திற்கு வித்திட்டவராகவும் நீர்ஊற்றி வளர்த்தவராகவும் உயர்த்திப் பார்த்துப்

பெருமைப்பட்டவராகவும் விளங்கியவர். இவர் மேற்கொள்ளும் ஒவ்வொரு செயலும் சமுதாய நலனுக்கு முத்திரை பதிப்பதாய் அமைந்தது என இனத்தலைவரை ஒலிக்கும் யாதவர் முரசு பாராட்டுகிறது.

தேசியத் தலைவர்கள், சுதந்திரப் போராட்டத் தியாகிகள் போன்ற தன்னலமற்ற தலைவர்களை, தன்னினத் தலைவர்களாக மாற்றும் போக்கு இன இதழ்களில் மிகுதியாக இருப்பதைக் காணமுடிகின்றது. மள்ளரிதழ் சுதந்திரப் போராட்டத் தளபதிகள் சுந்தரலிங்கம், இம்மானுவேல் சேகரனார், நாடார் இன இதழ் கர்மவீரர் காமராஜர், இதழாளர் ஆதித்தனார், கொங்கு வேளாளக்கவுண்டர் இன இதழ் கோவைச் செழியன், முதலியார் இன இதழ் புலவர் ஒட்டக்கூத்தர், கிருபானந்த வாரியார், மருத்துவர் இன இதழ் தியாகி எஸ்.எஸ்.விஸ்வநாததாஸ், நாயக்கர் இன இதழ் திருமலை நாயக்கர், இராணிமங்கம்மாள், யாதவர் இன இதழ் வீரன் அழகு முத்துகோன், முக்குலத்தோர் இன இதழ். முத்துராமலிங்கம் எனக் கடந்த காலங்களில் பொதுமை, சமத்துவம் என்னும் கொள்கைகளோடு போராட்ட குணத்தோடு விளங்கிய தலைவர்களை இன முன்னோடிகளாக அடையாளங்காட்டுவது இன உணர்வை ஊட்டுவதற்குப் பயன்பட்டாலும் இது தேசத் தலைவர்கள் இனத் தலைவர்களாக ஆக்கப்படுவதைக் காட்டுகின்றது.

**இன மாநாடுகள்**

அரசியல் இயக்கங்கள் தமது தொண்டர்களை உற்சாகப்படுத்தவும், விழிப்புணர்வு ஏற்படுத்தவும் மாநில, மண்டல, மாவட்ட, வட்ட அளவில் மாநாடுகளை நடத்துகின்றன. அதைப் போலவே இன இயக்கங்களும் தங்களது மக்களை ஒன்றிணைக்க, ஒற்றுமைப்படுத்த, விழிப்புணர்வு கொள்ள இன மாநாடுகளை அவ்வப்போது நடத்துகின்றன. இன மக்களிடத்தில் செல்வாக்குப் பெற்ற தலைவர்களை அழைத்துத் தம் இனவளர்ச்சி அடையவும் தமது இனத்தின் தேவைகளை ஆளும் ஆட்சியாளர்களிடத்தில் எடுத்து வைக்கவும் இன இதழ்களைப் பயன்படுத்துகின்றனர்.

கொங்கு வேளாளக் கவுண்டர்களின் இன மாநாடு குறித்துத் திருப்பூர் மாநகரில் ஓர் அணியாகச் சேர்ந்து நம் கோரிக்கைகளை வலியுறுத்தி மண்ணதிர, விண்ணதிர கண்டோரின் கண் எதிரே கொடிப் பிடித்து முழக்கமிட்டு வரிசை வரிசையாக வாகனங்கள் அணி வகுத்துத் திருப்பூர் மாநகரப் பாதைகளில் வாகன ஊர்வலப்பேரணி நடத்தி நம்மை ஆள்வோருக்கும் நம்முடன் வாழ்வோருக்கும் நம் இன ஒற்றுமை

உணர்வையும், நம் கொங்கு வேளாள இன வலிமையையும் எடுத்துக்காட்டி நம் இனத்தின் பெருமையை நிலை நாட்டிய என் இன சொந்தங்கள் அனைவருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது எனச் செய்தி வெளியிட்டுள்ளது. தேவேந்திரர்களின் உணர்வுகளைப் பிரதிபலிக்கும் வகையில் 'மதுரையில் தேவேந்திரகுல வேளாளர் சங்க மாநில மாநாடு' நடை பெறுவதற்குக் காரணம் இன்று தமிழகத்தில் நாம் ஒன்றரை கோடி மக்கள் இருக்கிறோம். ஆனால் ஆட்சியிலும் எல்லா அரசியல் கட்சிகளிலும், நமக்கு உரிய பிரதிநிதித்துவம் உள்ளதா? அல்லது முக்கியத்துவம் தான் உள்ளதா?. இல்லை என்பது தான் இதற்குப் பதில், எனவே நம் மக்களின் பலத்தையும் ஒற்றுமையையும் தமிழக அரசியல் கட்சிகளுக்கு உணர்த்த வேண்டிய கட்டாயம் இப்போது ஏற்பட்டிருக்கிறது. இதை உணர்த்தும் விதமாக இன மாநாடு நடக்க இருக்கிறது என்னும் கூற்றுக் குறிப்பிடத்தக்கதாக அமைகிறது.

பொதுவாக இனங்கள் தலைவர்களைக் கொண்டு மாநாடுகள் நடத்தி ஆட்சியாளர்களிடத்தில் தங்களது ஓட்டுவங்கி இருப்பைக் காட்டிக் கொள்ள முயற்சிக்கின்றன. இன வெளிப்பாடு என்பது 'இன மாநாடு' நடத்தப்படுவதன் நோக்கமாக அமைகின்றது. இதனை 'இன இதழ்கள்' இன வாசகர்களிடத்தில் எடுத்துச் செல்லும் (சொல்லும்) பணியில் தங்களை ஈடுபடுத்திக் கொள்கின்றன. இம்மாநாடுகள் குறித்த செய்திகளைப் பல வண்ணப் புகைப்படங்களுடன் இன இதழ்களில் வெளியிட்டு இனஉணர்வை அவர்களிடத்தில் விதைக்கின்றனர்.

### இன இல்ல நிகழ்வுகளில் இனஉணர்வு

இன உணர்வு ஏற்படுத்துவதில் மிக முக்கிய இடத்தைப் பெறும் இல்ல நிகழ்வுகளை வெளியிடும் வாயிலாக இன இதழ்கள் அமைகின்றன. ஏனெனில் எவ்வளவு முக்கியச் செய்திகளைச் சேகரித்து வெளியிட்டாலும் இன வாசகர்களிடத்தில் நெருக்கத்தை ஏற்படுத்திக் கொள்ள இயலாது என்பதை அறிந்த இன இதழ்கள் அவர்களின் இன்ப துன்ப உணர்வுகளில் பங்கு கொள்வதன் வாயிலாக மட்டுமே ஒரு முழு நிறைவைப் பெறமுடியும் என்பதில் உறுதியாக இருப்பதை அறியமுடிகிறது. ஒவ்வொரு இன இதழும், இன இல்ல நிகழ்வுச் செய்திகளுக்கும், இன வாசகர்களின் படைப்பாக்கங்களுக்கும் முக்கியத்துவம் தருவதில் முன்னிற்கின்றன. இதில் இன்னொரு பயனும் இதழ்களுக்குக் கிடைக்கிறது. இதழ்களை நிரப்பத் தங்களுடன் (ஆசிரியர் குழுவுடன்) வாசகர்களைப் பங்கெடுக்க வைப்பதன் மூலம் பணிச்சுமை குறைவதோடு, அவர்களுக்கும் தங்கள் படைப்புகள், இல்ல நிகழ்வுச் செய்திகளை இதழ்களின் வழிக்

காண்பது உற்சாகத்தைத் தருவதாக அமைகின்றது. இவை போன்ற தன்மைகளை அடிப்படையாகக் கொண்டே இன இதழ்கள் இல்ல நிகழ்வுகளுக்கும் இன வாசகர் படைப்புகளுக்கும் முக்கியத்துவம் கொடுப்பதைக் கடமையாகக் கொண்டுள்ளன.

இன மக்களின் திருமண நிகழ்வுகள், புதுமனை புகுவிழா, பிறப்பு, பணி ஓய்வு, இறப்பு, நினைவு அஞ்சலி, திருவிழாக்கள், வாழ்த்துகள், கல்வி, மருத்துவம், சமையல் போன்ற செய்திகளுக்கு மிகுந்த முக்கியத்துவம் தருவதைக் காணமுடிகிறது. இன இதழ்கள் திருமணமேடை, திருமண தகவல், மணமேடை என்னும் பெயர்களில் தமது இனத்தில் உள்ள மணமாகாத ஆணுக்கும், பெண்ணுக்கும் திருமணம் செய்யும் விதத்தில் மணவரன் குறித்து ஜாதகக் குறிப்புகளோடு வெளியிட்டு ஈர்க்கின்றன. சில இன இதழ்கள் குறிப்பாகத் தேவேந்திரர் மலர், இந்திய நாடார் முரசு போன்றவை ஒருபடி மேலே சென்று, இனவரன்களை அழைத்து 'சுயம்வரம்' என்னும் நிகழ்ச்சியை மூன்று மாதத்திற்கொரு நடத்துகின்றனர். இதன் வாயிலாகத் தன் இன மக்களை (வாசகர்களை) நேரடியாகச் சந்திக்கும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்கின்றன. அன்றைய நாளில் இன நலனில் அக்கறை கொண்ட முன்னோடிகளை அழைத்துக் கருத்தரங்கச் சொற்பொழிவை நடத்தி இனவாசகர்களிடத்தில் மேலும் நெருக்கத்தை ஏற்படுத்துவதன் மூலம் இதழ்களின் வளர்ச்சிக்குப் பயன்படுத்திக் கொள்கின்றன.

இனப்பேரவை, உள்ளாட்சி மன்ற, நாடாளுமன்ற, சட்டமன்றத் தேர்தல்களின் போது தமது இனத்தின் சார்பாக யார்? யார்? போட்டியிடுகிறார்கள் என்பதையும், தேர்தல் முடிந்தபின் வெற்றி பெற்றவர்கள் யார்? அவர்களின் சிறப்புத் தகுதிகள், இடம் பெற்ற கட்சிகளின் பெயர்கள் போன்றவற்றை வண்ணப் புகைப்படங்களுடன் வெளியிட்டு இன வாசகர்களை மகிழ்ச்சியடையச் செய்கின்றன. மேலும் இவ்வாறு வெற்றி பெற்ற இனச் சொந்த பந்தங்களை வாழ்த்தி அவர்கள் கொடுக்கும் விளம்பரங்களைத் தங்கள் இதழ்களில் வெளியிட்டு வருமானத்தை ஏற்படுத்திக் கொள்கின்றன.

தன் இன மாணவ, மாணவிகளை உற்சாகப்படுத்தும் விதமாக இன இதழ்கள் கல்வியில் சிறப்புப் பெற்ற மாணவர்களின் பெயர்களை வண்ணப் புகைப்படத்துடன் வெளியிட்டும், பரிசுகளைத் தந்தும் சிறப்பிக்கின்றன. கல்வியில் சிறப்புப்பெற்று இனத்திற்கும், தங்கள் இல்லத்திற்கும் பெருமையைப் பெற்றுத் தருவார்கள் என்று நம்பிக்கை கொள்கின்றன. கூடுதலாக மேனிலை, உயர்கல்வி பயின்ற மாணவர்களுக்கு

உதவித்தொகைகள் வழங்குவதும், அவர்கள் பயிற்சி பெற பலவித முகாம்களை அமைத்தும் வாழ்வு உயர வழி காட்டுகின்றன.

சில இன இதழ்கள் இனத்தில் நிகழும் நிகழ்வுகளை வெளியிட்டு அதற்கு 'நமது செய்திகள்', இது 'நம்ம விசயம்', 'நமது நிகழ்வுகள்' என்னும் தலைப்புகளை 'விளக்கு', 'தெலுங்கர் கீதம்' போன்ற இதழ்கள் அமைத்து இன மக்களிடத்தில் நெருங்கிய தொடர்பை ஏற்படுத்திக் கொள்கின்றன.

**இன இதழ்களில் இனமுன்னேற்றம்**

இன முன்னேற்றம் என்பது ஒரு கூட்டுச் செயலின் மூலமாகத் தங்கள் இனத்தின் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளவும், இனத்தில் மாற்றத்தை ஏற்படுத்தவும் அமைகின்ற முயற்சியாகும். இது இன மாற்றத்திற்கான முக்கியக் காரணிகளுள் ஒன்றாக அமைகிறது. ஒரு சமுதாயம் முன்னேற்றப் பாதையில் செல்ல வேண்டுமானால் அந்தச் சமுதாயம் தன்னைப் பற்றி உணர்ந்து தெளிந்து இருக்க வேண்டும். இதைச் சமுதாய விழிப்புணர்வு எனக் கூறலாம். இந்தச் சமுதாய விழிப்புணர்வு என்பது தான் சார்ந்த இனம் நடைமுறைத் தெளிவு பெறுதலில் உள்ளது. உள்ளபடியே வெளிப்படுத்தல் முதலியவைகளை உள்ளடக்கியதாகும்.

ஒரு குறிப்பிட்ட இன மக்கள் உயர்வு பெற வழியைத் தேடும் முன் அதற்காக ஒரு சில கருதுகோள்களை முன் வைக்க வேண்டியது அவசியமாகிறது. அவை பின்வருமாறு,

1. அந்தக் குறிப்பிட்ட இனத்தின் மறைக்கப்பட்ட வரலாறு, பண்பாடு, பழக்கவழக்கங்களைத் தெரிந்து கொள்ளுதல், அதனை வெளிக்கொண்டு வருதல், இதனால் துவண்டு போன தம் இனமக்களிடையே புத்துணர்ச்சியை உருவாக்கித் தாழ்வு மனப்பான்மையைப் போக்க இயலும்.
2. பொருளாதார உயர்வு பெறுதல், மற்ற இனத்தார்களுக்குச் சரி நிகர் நிலையில் பொருளாதார மேம்பாட்டிற்கு வழிவகை செய்வது, ஊக்கப்படுவது, நடைமுறைப்படுத்துவது போன்றவையாகும்.
3. அரசியல் விழிப்புணர்வு பெறுதல், அரசியல் தலைமைகளை உருவாக்குவது, தலைமையேற்று வழி நடத்தும் நிலையினைப் பெறுவது, அந்த இலக்கினை அடைவதும் ஆகும்.

4. எந்த ஓர் இனமும் விடுதலை பெறவும், விழிப்புணர்ச்சி கொள்ளவும் கல்விச் சிந்தனை இன்றியமையாததாகும். அந்த வகையில் இனத்தின் இளைய தலைமுறையினை வழி நடத்தவும், ஆலோசனைகள் வழங்குதல்.

மேற்கண்ட நிலைகளை எந்த இனம் நடைமுறைப்படுத்துகிறதோ அந்த இனம் உறுதியாக வெற்றி பெற்று உயர்ந்த இனமாக உருப்பெறும் என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை. இவை போன்ற காரணிகளை அடிப்படையாகக் கொண்டே இன இதழ்களில் இனமுன்னேற்றம் என்பதாக அமைகிறது.

## இன இதழ்களில் இன முன்னேற்ற வெளிப்பாடு

இன இதழ்கள் தங்கள் இனமக்களை மற்ற இனத்தவர்களுக்கு நிகராக மேம்பாடு அடையச் செய்வதற்குச் சேவை செய்கின்றன. தம் இன மக்களுக்கு எந்தெந்த வகைகளில் அறிவுரைகள் அல்லது நடைமுறைச் செயல்முறைகள் வழங்குவதன் மூலமாக அவர்கள் வாழ்வில் முன்னேற்றம் அடைய முடியும் என்பதை அறிந்துகொண்டு அதன் வழியே அவர்களை ஊக்கப்படுத்துகின்றன. இதன் காரணமாக இனம் உயர வாய்ப்பிருப்பதாகக் கருதுகின்றன. இன இதழ்கள் தம் இன முன்னேற்றத்திற்கு நான்கு முறைகளைக் கடைப்பிடிக்கின்றன. அவை பின்வருமாறு,

1. இன முன்னேற்றம்
2. பொருளாதார முன்னேற்றம்
3. அரசியல் முன்னேற்றம்
4. கல்வி முன்னேற்றம்

## இன முன்னேற்றம்

நாட்டில் உள்ள ஒவ்வொரு இன மக்களும் தங்கள் இன முன்னேற்றத்திற்குச் சங்கம் அமைத்துச் சங்கத்தின் மூலம் அரசாங்கத்திடம் தங்கள் கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொள்வதும், அவ்வழியே இன மக்களை ஈர்க்கவும், ஒருங்கிணைக்கவும், ஒற்றுமைப்படுத்தவும் முயலுகின்றனர். இதன் விளைவாகத் தகவல் தொடர்பை உண்டாக்க இதழ்களைப் பயன்படுத்துகின்றனர். இவ்விதழ்கள் வெளிவர சங்கம், பேரவை, இயக்கம் போன்றவை வாயில்களாக அமைகின்றன. ‘தனி மரம் தோப்பாகாது’, ‘ஒரு கை ஓசை எழுப்பாது’ முதலியனவற்றை அடிப்படையாகக் கொண்டே இன இதழ்கள் தோற்றக் காரணிகளாக விளங்குகின்றன. இன முன்னேற்றம் பல படிநிலை வளர்ச்சியைக் கொண்டு அமைகின்றது. இதில் அரசியல், பொருளாதாரம், கல்வி போன்ற கூறுகளும் அடங்குகின்றன. இன இதழ்களில் இன முன்னேற்றத்துக்குரிய

கூறுகள் பல அமைந்தாலும் சங்கக் கூட்டம், பேரவைக் கூட்டங்கள், இன மாநாடுகள், இன படைப்பாளர்களால் படைக்கப்படுகிற கட்டுரைகள் மற்றும் இன முன்னேற்ற ஆலோசனைகள் முதலியன முக்கியத்துவம் பெறுகின்றன.

**சங்கமும், இன இதழும்**

சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்தது சங்க காலம். சங்கம் வைத்துச் சாதியை வளர்ப்பது சமகாலம் என்பர். இக்கூற்றிற்கேற்பச் சங்கம் என்பதற்குக் கூட்டம், கூடல், அறிஞர்கள் கூடுமிடம், அவை, மன்றம் எனத் தமிழ் அகராதிகள் விளக்கம் தருகின்றன. இன்றைய சூழ்நிலையில் ஒவ்வொரு இனமும் தங்கள் பகுதியில் வாழும் தங்கள் மக்களை ஒன்றிணைந்துத் தங்கள் நலத்திற்காகவும், தங்களுடைய தேவைகளை நிவர்த்தி செய்து கொள்வதற்கும் பயன்படுகின்ற ஒரு கருவியாகச் சங்கத்தைத் தோற்றுவிக்கின்றன. இவை சிற்றூர் அளவில் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கும், இணக்கமாகச் செய்வதற்கும் பயன்பட்டன. ஒவ்வொரு கிராம அளவில் சாதியின் முறையில் கிளைச் சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டன. அதற்கென குழுக்களும் அமைக்கப்பட்டது. இக்கூட்டங்களில் ஏற்பட்ட முடிவுகளை இனமக்கள் அனைவரும் அறியும் விதமாகப் பறை அறையும் ஒருவர் மூலம் தெரிவிக்கப்பட்டது. பின்னர் அது ஒலிபெருக்கி வாயிலாகச் சென்றது. மேற்சொன்ன முறைகளில் குறிப்பிட்ட எல்லைக்கு மேல் தகவல் தொடர்பு கிடைக்கவில்லை. இதனால் மாற்றுமுறைகள் குறித்து யோசித்தனர். பின்னர் பெரிய நகரங்களில் தலைமைச் சங்கத்தை ஏற்படுத்திக் கொண்டனர். அதோடு தலைமைச் சங்கக் கூட்டத்தில் ஆலோசிக்கப்படும் பிரச்சினைகள், முடிவுகள் போன்றவை இனமக்களுக்குச் சென்று சேர வெகுசன இதழ்கள் முக்கியத்துவம் தராமையால் தங்களுக்கென தனி இதழ்களைத் தோற்றுவித்துக் கொண்டனர். இது இந்தியப் பத்திரிகை துறையின் போக்கைக் குறித்து,

சாதியைக் காக்க
பாரம்பரியம் போற்ற
பண்டாரம் பாதேசிகளைப் பாட
வேத புராண இதிகாசங்களுக்கு
வியாக்கியானம் கூற
அரசியல் வாதிகளின் அடாவடித்தனங்களுக்கு
அடிப்படைகள் கூற
காமத்தீ வளர்த்துக் காசு பறிக்க
வம்சா வழிக்கு வழிவகைகள் தேடிவைக்க
கன்னியரின் கவர்ச்சியைக் காட்டிக் காசு பறிக்க

தெருப் பொறுக்கிச் சாமியார்கள்

அருளும் உபன்யாசம் கூற

'கடவுள் அவதாரங்கள்' பற்றிய கதைகள் கூற

பூர்விகம் பற்றிப் பூச்சாண்டி பாட

ஆகால இலக்கியங்களின் பாராயணம்

உபன்யாசம் விரிவுரை கதாகலட்சேபம் கூற இன்னும்

சினிமாச் செய்திகள்

சினிமாக் காரர்களின் திருமணம், மணவிலக்கு

வந்த சினிமா - வரப் போகும் சினிமா

விளம்பர மூளைச் சலவை

ராசி பலன் - கால பலன் - ஆருடம் - பலிப்பு[20]

என இப்படிப்பட்ட செய்திகளுக்கு அழகும் பொலிவும் கூட்டிக் கற்பனைக் கதைகள் கட்டி எழுதுவதற்குத்தான் இந்த நாட்டில் பல பத்திரிகைகள் இருப்பதாக இதழாளர் பாட்டாளி முழக்கம் பெ.தங்கராசு குறிப்பிடுவது இங்கு நோக்கதக்கது. இப்படிப்பட்ட இக்கட்டான சூழ்நிலைகளில் இருந்து விடுபட, தங்கள் இனத்தை மேம்படுத்த சங்கங்கள் வாயிலாக இதழ்களைத் தொடங்க வேண்டிய காலக்கட்டாயம் ஏற்பட்டது.

இன மக்களை ஒருங்கிணைத்து உருவான சங்கங்கள் இதில் தங்கள் இன மக்களை உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்கின்றன. ஒவ்வொருவருக்கும் ஒரு பொறுப்புக் கொடுத்து (மாநில, மாவட்ட, வட்ட அளவில்) அவர்களுக்கும், இனத்திற்கும் நெருக்கத்தை ஏற்படுத்துகின்றன. இக்கூட்டங்களில் தம் இன வளர்ச்சியைப் பற்றியும், இனத்தின் தேவைகளை எந்த வகைகளில் நிறைவேற்றிக் கொள்வது போன்றவற்றையும் முடிவு செய்கின்றனர். இம்மாதிரியான கூட்டங்களில் எடுக்கப்பட்ட முடிவுகளைத் தங்கள் இனத்திற்கென்று உருவான இதழ்களில் வெளியிடுகின்றனர். இதை வாசிக்கும் மாநிலத்தின் பல பகுதிகளில் இருக்கும். இன வாசகர்கள் (மக்கள்) அவர்களின் முடிவுகளை அல்லது கருத்துக்களை ஏற்று அதற்கேற்பத் தங்களை இன முன்னேற்றத்திற்குத் தங்களால் இயன்ற அளவு இன உணர்வுடன் உட்படுத்திக் கொள்கின்றனர். இன முன்னேற்றத்திற்கு இதழில் வெளியாகும் கருத்தியலுக்கு இனமக்களின் நேர்வினை, எதிர்வினை கருத்துக்களுக்கு முக்கியத்துவம் தந்து அதனை வெளியிடுவதைக் கடமையாகக் கொண்டுள்ளன.

மற்ற இனத்தார்களிடமிருந்து தேவையில்லாமல் வரும் அச்சுறுத்தல்களையும், இழிவான தீண்டாமைத் தன்மைகளையும் கண்டு அஞ்சாமல் நேர்மையை என்றும் மிஞ்சாமல் இன மக்கள் முன்னேற்றத்திற்கு அறவழியில் பாடுபடுவதைச் சங்கங்களின் கடமையாக இருக்க வேண்டும் என விரும்புகின்றன. இன்றைய நிலையில் நாமெல்லாம் ஏமாந்தோமானால் பின்னாளில் நம் இனம் மற்ற இனத்தவரால் அடக்கப்படும் என்பதைக் கருத்தில் கொண்டு செயல்படுகின்றன. மேலும் ஒவ்வொரு இன இதழும் இன முன்னேற்றத்திற்குப் பாடுவதை இலட்சிய உணர்வாக இருக்க வேண்டும் என்பதை மக்களுக்கு வலியுறுத்துகின்றன.

### பேரவைக் கூட்டம்

சங்கக் கூட்டத்தைப் போலவே பேரவைக் கூட்டமும் இன மக்களால் அமைக்கப்படுகிறது. சங்கம் இனப் பெரியவர்களால் அமைந்தது என்றால் பேரவை பெரும்பாலும் இன இளைஞர்களால் உருவாக்கப்படுகிறது. இப்பேரவைகள் சங்கக்கூட்டத்தைவிட மாறுபட்டு அமைகின்றன. பேரவையின் சார்பாக இனத்திலுள்ள ஏழை, எளிய மக்களுக்கு வாழ்வில் குறுகிய காலத்தொழிற்பயிற்சி, கைவினைப் பொருள்கள் தயாரிப்பு முறை, மாணவ மாணவிகளுக்கு மேற்படிப்பு ஆலோசனை வழங்கக்கூட்டம் நடத்துவது, வேலைவாய்ப்பு முகாம் என இன மக்கள் முன்னேற்றம் குறித்த செயல்களை உருவாக்குவது போன்ற நிகழ்வுகளைச் செய்திகளாக இன இதழ்களில் வெளியிடுவதன் வாயிலாக இன முன்னேற்றத்திற்கு அடிகோலுகின்றன. பேரவையின் முக்கியத்துவம் குறித்து,

> அன்புள்ள சொந்தங்களே! நாமும் நம் இன மக்களின் வாழ்க்கைத் தரம் முன்னேற அறவழியில் அரசோடு போராடித்தான் சலுகைகள் பெற்றாக வேண்டும். அரசாங்கச் சலுகைகள் பெறுவதில் ஏமாற்றம் அடைந்தோமானால் வருங்காலத்தில் நம் இனம் மிகவும் பின்தங்கிய நிலைக்குத் தள்ளப்படும் என்பதை மனதில் கொண்டு நம் கொங்கு இன மக்கள் வாழும் ஒவ்வொரு ஊரிலும் பேரவையின் கிளைச் சங்கங்கள் அமைக்க வேண்டும். கொங்கு இனமக்கள் அனைவரையும் ஒன்று சேர்க்க வேண்டும்[21]

எனப் பேரவையின் முக்கியத்துவத்தை வெளிப்படுத்துவது இங்குச் சிந்திக்கதக்கது. அதே நேரத்தில் நமது பேரவையின் அதிகாரப்பூர்வ இதழான 'கொங்கு' மாத இதழை எல்லோரையும் வாங்கிப் படிக்கச் சொல்ல வேண்டும். பத்திரிகையைப் படித்தால்தான் பேரவையின் செயல்பாடுகளை எல்லோரும் தெரிந்துகொள்ள முடியும் என இதழுக்கும், பேரவைக்கும் உள்ள தொடர்பு இன்றியமையாதது எனக் குறிப்பிடுகிறது.

இவை தவிர இன முன்னேற்றம் குறித்த இனமக்களின் ஆலோசனைகளை அவ்வப்போது பெரும்பாலான இன இதழ்கள் வெளியிடுகின்றன. காட்டாக, பண்டிதம் இதழ் கிடைக்கப் பெற்றேன். படித்தேன், மகிழ்ந்தேன். மேலும் தமிழ்நாடு முழுவதும் உள்ள நமது இன மக்களின் உணர்வுகளை ஆராய்ந்து செய்திகள் போடுவது நலம், சில மாவட்டச் செய்திகளை மட்டும் போடவேண்டாம். அனைத்து மாவட்ட செய்திகளையும், தலைமைச் சங்கத்தின் செய்திகளையும் தெளிவாக வெளியிட வேண்டுகிறேன் என இன வாசகர் எழுதியதை மருத்துவர் இனம் சார்பாக வெளிவரும் பண்டிதம் இதழ் வெளியிட்டுள்ளது. பேரவை பற்றிய செய்திகளுக்குச் செங்குத்தமித்திரன், மருதமலர், இந்திய நாடார் முரசு, அகச்சுடர், தேவேந்திரர் மலர், ஒலிக்கும் யாதவர் முரசு, கடலார் போன்ற இன இதழ்கள் முன்னுரிமை தருவதை அறியமுடிகிறது. பொதுவாக இன இதழ்கள் தம் மக்களுக்குக் கூறும் ஆலோசனையாக, அறிவுரையாக இனத்தை முன்னேற்றப் பாதையில் கொண்டு செல்ல நீ விரும்பும் நேர்மையான எந்தப் பாதையை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாம். ஆனால் அப்பாதை சென்றடையும் இடம், அதன் நோக்கம், நிச்சயம் ஒன்றாகத் தான் இருக்க வேண்டும். இவ்வினத்தை முன்னேற்றப் பாதையில் கொண்டு செல்ல வேண்டும் என்கிற நோக்கத்தை வெளிப்படுத்துவதையே குறிக்கோளாகக் கொண்டு செயல்பட வேண்டும் என்பதை வலியுறுத்துகிறது.

### பொருளாதார முன்னேற்றம்

இன முன்னேற்றத்திற்கு இன்றியமையாத ஒன்றாக அமைவது பொருளாதாரம் ஆகும்.

> எந்த ஒரு இனம் பொருளாதாரத்தில் உயர்ந்து விளங்குகின்றதோ அவ்வினமே சமுதாயத்தில் மிக உயர்ந்ததாக விளங்குகின்றது. பொருளாதாரத்தில் தன்னிறைவு பெற்ற இனமே வளர்ச்சியடைந்த இனமாகக் கருதப்படுகின்றது. சமூக அரங்கில் ஒரு வலுவான அங்கீகாரத்தைப் பெற நிச்சயம் பொருளாதாரம் அவசியம்[22]

என்ற கருத்திற்கேற்ப இந்நிலையை அடைவதற்கு ஒவ்வொரு இனமும் இதழ்களில் அதற்கான வழிமுறைகளை வகுத்துக்கொண்டு அதன்வழியே செயல்படுகின்றன. இனத் தொழிலதிபர்களின் பேட்டிகள், தொழில் தொடங்குவதற்கான ஆலோசனைகள், அறிவுரைகள், இன மக்கள் முன்னேறுவதற்குச் சிறு, சிறு தொழிற்பயிற்சி அளிப்பது, எந்த மாதிரியான சுய தொழிலைத் தேர்ந்தெடுத்தால் விரைவில் சாதிக்கலாம், உற்பத்தி செய்த பொருளைச் சந்தைப்படுத்தல், உற்பத்திப் பொருளை விளம்பரம் மூலம் எடுத்துச்

செல்லல், அரசு மற்றும் அரசு சாரா நிறுவனங்களின் தொழிற்திட்டங்கள், வேலை வாய்ப்பு பயிற்சி முகாம் என்பன போன்ற கருப்பொருள்களை இன இதழ்கள் நோக்காகக் கொண்டு பொருளாதார முன்னேற்றத்துக்கு வழி வகுக்கின்றன.

பொருளாதார முன்னேற்றத்துக்கு இனத்தின் அனுபமிக்க தொழிலதிபர்களைப் பேட்டி எடுத்து வெளியிடுகின்றன. காட்டாக வி.ஜி.பி. சகோதரர்கள் உழைப்பின் வடிவங்கள், ஒற்றுமையின் சின்னங்கள் எனும் தலைப்பில் வெற்றிச்சிகரத்தை எட்டிப் பிடிக்கத் துடிக்கின்ற எனதருமை இளைஞனே! உனது துறை, இலக்கு, கால அவகாசம் ஆகிய மூன்றையும் தீர்மானித்துவிட்டால் அதன் பின்னர் உன் இலட்சியப் பயணம் சுலபமாக அமையும். தங்கு தடையில்லாமல் போகும். எனவே இந்தச் சாதனைப் பயணத்தில் தயக்கமும் மயக்கமும் ஏற்படுவதற்கு வழியே இல்லை! வெற்றி உன்னைத்தேடி வரும் என இளைய தலைமுறையினருக்கு வழி காட்டுவதாக அமைகிறது. ‘தாரசு’ கொழுத்தது ‘ஏர்’ நொடித்தது. (கொங்கு, நவ-08, ப.31) இன்றைய சூழ்நிலையில் பெரிய பன்னாட்டு நிறுவனங்களுக்குச் சலுகை காட்டும் மத்திய அரசு பாரம்பரிய வேளாண்மை செய்யக்கூடிய விவசாயிகளைக் கண்டு கொள்ளாததைக் கண்டித்து,

> நம் பொருளாதாரம் விவசாயம் சார்புடையது. இதில் சிறு மற்றும் குறு விவசாயிகளே அதிகம். சிறு குறு விவசாய உற்பத்தித் திறன் மற்றும் வளமடையா (Illeguiped) தொழில் நுட்பம் மேலும் இத்துறையை வலுவிழக்கச் செய்கின்றன[23]

என இன விவசாயிகளுக்குப் பொருளாதார விழிப்புணர்ச்சியை வெளிப்படுத்துகிறது.

மத்திய, மாநில அரசுகள் கொண்டு வந்துள்ள திட்டங்கள் குறித்தும் ‘இன இதழ்கள்’ விளக்குகின்றன. பாரதப் பிரதமரின் வேலை வாய்ப்பு உறுதித்திட்டம் (Prime minister’s Employment Generation Programme (PMEGP)) பற்றி விளக்குகையில், உற்பத்தித்துறையில் ரூபாய் 10லட்சத்திற்கு மேலும், வியாபாரம் மற்றும் சேவைத்துறையில் ரூபாய் 5 லட்சத்திற்கு மேலும் திட்ட மதிப்பீடு இருந்தால் எட்டாம் வகுப்பு தேர்ச்சிப் பெற்றிருக்க வேண்டும். பயனாளிகளின் தேர்வு, பஞ்சாயத்துக்கள் மற்றும் சிறப்பு விழிப்புணர்வு முகாம்கள் மூலம் தெரிவு செய்யப்படுவர் என இன மக்களுக்கு (தேவேந்திரர் மலர், நவ-08, ப.32) அறிவுறுத்துகிறது.

வெளிநாடுகளில் உள்ள தொழில்நுட்ப முறைகள் குறித்து நம் நாட்டில் வாழும் மக்களுக்குப் பலவித பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன. ‘ஏழை மீனவர் வாழ்வு உயர,

புதுமுயற்சி' (கடலார், ஆக-08) வியட்நாம் நாட்டில் படகுகளில் கனவாய் மீன்பிடிப்பதற்கு இரவு வேளையில் அவைகளை ஈர்க்கக்கூடிய விளக்குகளைப் பொருத்தி நிறையத் தூண்டில்களை ஒரே நேரத்தில் செயல்படும் நவீன முறை மூலம் தூண்டில் பயன்படுத்திக் கனவாய் மீன்கள் பிடிக்கப்படுவதையும் அதுமட்டுமல்லாமல் வியட்நாம் மீனவர்கள் கடலில் மிதவைக்கூடுகள் அமைத்துப் பலவகையான உயர்தர மீன்களை வளர்த்து லாபம் அடைவதையும் குறிப்பிட்டு இன மக்களின் வாழ்வாதாரத்தை மேம்படுத்த வழி வகுக்கிறது.

பழங்குடி இனத்தவரான இருளர்கள் விழுப்புரம் மாவட்டத்தில் அதிகம் வசிக்கின்றனர். இவர்களின் வாழ்வாதாரம் சிறப்படைய 'காளான் வளர்ப்பில் இருளர்கள்' எனும் தலைப்பில் (இருளர் செய்தி, ஏப்-08, ப.28) சிறுவாலை, கொரலூர், வெங்கத்தூர் ஆகிய கிராமங்களில் இந்த காளான் வளர்ப்பு தோட்டங்கள் தொடங்கி தொழில் செய்து வருவதாகவும், பிற கிராமங்களிலும்,

> இதுபோன்ற மாற்றுத்தொழில்களில் நாம் ஈடுபடுவதன் மூலம், நாம் ஊர் ஊராகக் கொத்தடிமைகளாகச் செங்கற்சூளைகளில் வெந்து கிடக்காமல், உள்ளூரில் இருந்தபடியே நலமுடன் நம்பிக்கையுடன் வாழ்ந்து நமது பிள்ளைகளைப் படிக்க வைப்பதுடன் நாமும் கூட சொந்த தொழில் செய்கிறோம் என்ற பெருமையுடன் வாழலாம்[24]

என நம்பிக்கை விதையை விதைக்கிறது. சுயதொழில் செய்து வருமானத்தை ஈட்டுவது பற்றி 'சம்பாதிக்க ஒரு வழி' (மருதமலர், ஜீலை-08, ப.31) ராகி மால்ட் செய்முறை குறித்து விளக்கி அதனை விற்பனை செய்வது எப்படி? என விபரத்தை எடுத்துரைக்கிறது.

ஆய்வுகுட்பட்ட இனங்களில் சில சமுதாயத்தில் மேம்பட்ட பொருளாதார நிலையில் தன்னிறைவு அடைந்திருப்பதனால் செங்குந்த மித்திரன், தெலுங்கர் கீதம், பூச்சரம், விளக்கு அகச்சுடர் போன்ற இனஇதழ்கள் பொருளாதார மேம்பாட்டுச் செய்திகளுக்கு முக்கியத்துவம் தரப்படவில்லை என்பதை அறியமுடிகிறது. பொருளாதாரத்தில் ஓரளவு செல்வாக்குப் பெற்றிருப்பதனால் அதைத் தக்கவைப்பதற்கும், மேலும் தொழிலில் நவீன முறைகளைப் பின்பற்றுவதற்கும் கொங்கு, இந்திய நாடார் முரசு, புதிய யாதவம், ஒலிக்கும் யாதவர் முரசு, கடலார், வீரபாண்டிய கட்டபொம்மன் போன்ற இன இதழ்கள் முயற்சி மேற்கொள்ளுகின்றன. இன மக்களின் விடுதலையோடு பொருளாதாரத்தில் ஏற்றம் பெறவும் மருதமலர், தேவேந்திரர் மலர், அச்சமில்லை, பண்டிதம், இருளர் செய்தி முதலிய இன இதழ்கள்

அவ்வப்போது பொருளாதாரத்தின் முக்கியத்துவம் முன்னேற்றம் குறித்து விளக்கும் வகையில் செய்திகளை வெளியிடுகின்றன.

**அரசியல் முன்னேற்றம்**

அரசியல் என்பது,

> நாகரிகமடைந்த ஒரு சமூகத்தின் அரசாங்க அடிப்படைச் சட்டம், குடிமக்கள் ஒருவரோடு ஒருவர் கொண்டுள்ள தொடர்புகள், இவற்றை வகுத்துக் காக்கும் நீதிகள், சமூக நிலைகள், அவற்றின் குறிக்கோள்கள் என்பது குறித்துக் கூறும் ஓர் அறிவுத்துறையாகும்[25]

என்று கூறுவர். அன்று அரசியல் அரசனுக்குரியதாக இருந்தது. இன்று அரசியல் மக்களுக்குரியதாக மாற்றம் பெற்றுள்ளது.

அரசியல் என்பது அரசின் தன்மையும் இயல்பும் அரசுகளுக்கிடையேயுள்ள உறவுகளும், அரசாங்கத்தின் நடவடிக்கைகளும், அரசாங்கத்திற்கும் மக்களுக்கும் இடையேயுள்ள உறவு என்பதைக் குறிப்பதாகும். அண்மைக் காலம் வரையில் அரசையும், அரசாங்கத்தையும் பற்றிய படிப்பாக இருந்த அரசியல் இப்பொழுது அதிகாரம் பற்றிய படிப்பாக மாறிவிட்டது. காரணம் எல்லா அரசியல் செயல்பாடுகளின் மையமாக அமைவது அதிகாரமே ஆகும். அரசியல் என்பது இப்பொழுது அதிகாரம் சார்ந்த அரசியல் என்ற நிலைக்கு வந்துள்ளது.

இந்தியா பல்வேறு இனம் மற்றும் வர்ணங்களைக் கொண்ட ஒரு நாடாகும். ஆங்கிலேயர்கள் இந்தியாவை விட்டு வெளியேறிய போது, ஆட்சி அதிகாரத்தினை வசதிபடைத்த ஆங்கிலக் கல்வி அறிவுள்ள, விழிப்புணர்வு கொண்ட, உயர்இனத்தவர்களிடம் ஒப்படைத்தனர். இவ்வாய்ப்பைத் தங்களுக்குரிய அல்லது தன்னினத்துக்குரிய நல்வாய்ப்பாக உயர் இனத்தவர் பயன்படுத்திக் கொள்ள முற்பட்டனர். இதன் விளைவாக ஒடுக்கப்பட்ட நிலையில் இருந்த இனத்தவர்களை இன்றும் அரசியலில் கீழ்நிலைக்கு உட்படுத்தினர்.

> சமூக, பொருளாதார ரீதியாக முன்னேற்றம் இல்லாத பிற்போக்கு எண்ணங்கள் கொண்ட சாதீய அமைப்புகளை அரசியல் வாதிகள் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டனர்[26]

எனப் புகழ்பெற்ற சமூகவியலாளர் ரஜினி கோத்தாரி குறிப்பிடுவது சிந்திக்கத்தக்கது. பிற்படுத்தப்பட்ட மற்றும் ஒடுக்கப்பட்ட வகுப்பைச் சார்ந்தவர்கள் தங்களுக்கென ஒரு

தனித்தன்மையினையும் சமுதாயத்தில் அந்தஸ்தினையும் தேடிக்கொள்ள தலைப்பட்டனர். அரசியலில் அதிகாரத்தைப் பெறுவதென்பது வர்ண அமைப்பில் இருந்து விலகி சமுதாயத்தில் உயர்ந்த நிலைக்குச் செல்லும் வழியாகக் கருதப்பட்டது. இதனால் ஊராட்சி, ஊராட்சி ஒன்றியம், மாவட்ட ஊராட்சி போன்ற உள்ளாட்சி அமைப்புகளிலும் இன அமைப்புகள் வேரூன்றின.

சமுதாயத்தின் அடித்தளத்தில் இருந்த இன அமைப்புகளை, உயர்நிலையில் இருந்த ஆதிக்கச் செலுத்தக்கூடிய சாதிகள் தங்களுடைய பெரும்பான்மை பலத்தினைத் திரட்டுவதற்காக அவர்களையும் அரசியலில் ஈடுபடுத்தினர் ஏற்கனவே இருந்தது போலன்றித் தற்போதைய சூழ்நிலையில் அரசியலில் ஒரு தலைவருக்குத் தன்னுடைய ஆதரவுகளை ஒருங்கிணைத்து தனது சக்தியைக் காட்டக்கூடிய அளவில் நிர்வாகத் திறமையும், மக்களைத் திரட்டக்கூடிய சக்தியும் தேவைப்படுகிறது. மாநிலத் தலைநகரிலோ அல்லது மண்டல அளவிலான பெருநகரங்களிலோ பேரணிகள் நடத்திப் பொது மக்களின் கவனத்தை ஈர்த்து தங்களது செல்வாக்கினையும் ஆதரவினையும் பெருக்கிக் கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. கடந்த காலத்தில் அரசியல் தலைவர்கள் மக்களின் குறைகளைத் தீர்க்க அரசினரிடம் மனுக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். தற்போது அந்நிலைமாறி தங்களுடைய செல்வாக்கு, மக்களின் பெருவாரியான ஆதரவும் தங்களுக்கு உள்ளன என்பதை வெளிப்படுத்தும் வகையில், பெருங்கூட்டத்தைத் தீர்மானங்கள் நிறைவேற்றி அரசாங்கத்திற்கு அனுப்புவதே தற்போதைய அரசியலாகிவிட்டது.

பிராமணர் அல்லாதோர் அரசியலில் அதிகாரத்தைக் கைப்பற்றியதும் அவர்களுக்குள் இருந்த பல்வேறு சாதி அமைப்புகளுக்கிடையே கருத்து வேறுபாடும் உட்பூசல்களும் போட்டிகளும் தோன்றின. இதன் காரணமாக மக்களுக்குச் சேவை செய்தல் என்ற மனப்பான்மை மாறி தங்களுடைய இனத்திற்கும் சுயலாபத்திற்கும் அரசியலைப் பயன்படுத்துவதைக் கடமையாகக் கொண்டனர். அரசியல் என்பது மக்களின் நலனுக்கான சேவை என்ற நிலைமாறி சுயலாபத்திற்கும் சுயமுன்னேற்றத்திற்குமான ஒரு தொழில் என்ற நிலை ஏற்பட்டது. சுயமுன்னேற்றம், சுயலாபம் என்ற எண்ணம் ஏற்பட்டதால் அதனை அடைய இதர இனத்தின் பல்வேறு அமைப்புகளுடன் ஒருங்கிணைத்துக் கொண்டு தங்களின் ஆசைகளையும், தேவைகளையும் நிறைவேற்றிக் கொள்கின்றனர். இங்கு “அரசியல் சாதியத்தின் மீது

ஆதிக்கம் செலுத்தவில்லை. மாறாகச் சாதியே அரசியலாகிறது"[27] எனும் கூற்று உண்மையாக அமைகிறது.

இன்றைய இந்திய அரசியலில் குறிப்பாகத் தமிழக அரசியலில் சாதியச் சார்புகள் அதிகம் காணப்படுகின்றன. தேர்தலில் போட்டியிடும் வேட்பாளருக்குச் சாதியைப் பார்த்துத் தான் வாய்ப்புத் தரப்படுகின்றது. சாதியச் செல்வாக்குள்ளவர்தான் வேட்பாளராகப் பிரதான அரசியல் இயக்கங்கள் (சமூக நீதியை நிலைநாட்டுவதாகச் சொல்லிக் கொள்கிற) கூட இத்தகு நிலையைக் கையாள்வதைக் காணமுடிகிறது. இவற்றையெல்லாம் கணக்கில் கொண்டே இனங்கள் அரசியலில் நுழைகின்றன. இன மன்றங்களையும், பேரவைகளையும் கலைத்துவிட்டு அதை ஓர் அரசியல் சார்ந்த இயக்கமாகவோ அல்லது கட்சியாகவோ (பா.ம.க இயக்கம்) மாற்றம் செய்து கொள்கின்றன. பின்னர் தேர்தல்களின் போது தமது இன எண்ணிக்கை வலிமையைக் காட்டுகின்றன. இந்நிலையில் இப்படிப்பட்ட தமிழக அரசியலின், நீள, அகல, ஆழங்களை இன மக்களிடம் அரசியல் விழிப்புணர்வு ஏற்படுத்த இன இதழ்கள் கங்கணம் கட்டிக் கொண்டு களத்தில் இறங்குகின்றன. இதன் காரணமாகப் பொருளாதார, கல்வி முன்னேற்றத்துக்குத் தரும் முன்னுரிமையைவிட அரசியலுக்குக் கூடுதலாக அளிக்கின்றன. இனம் சார்ந்த தலைவர்களை முன்னிறுத்தி அரசியல் செய்திகளை வெளியிடுவதில் பெருமை கொள்கின்றன. காட்டாக நாடார் இனம் சார்பாக வெளிவரும் இந்திய நாடார் முரசு இதழில் 'கட்சிகளுக்கு அப்பாற்பட்டவர் காமராஜர்' என்னும் தலைப்பில் 1967 ஆம் ஆண்டில் ஏற்பட்ட ஆட்சி மாற்றத்தின் விளைவாக தி.மு.க இயக்கம் வெற்றி பெற்று கருணாநிதி முதல்வர் ஆனார். இதை விரும்பாத நாவலர் நெடுஞ்செழியன் ஆட்சியைக் கவிழ்க்க முற்பட இதை அறிந்து காமராஜர் கட்சிக்கு அப்பாற்பட்டு இருவரையும் அழைத்துச் உடன்படிக்கை செய்து வைத்த தலைவர் நம் இனத்தலைவர் காமராசர் எனக் குறிப்பிடுகிறது.

இன மக்களுக்கு அரசியல் கட்சிகளில் ஒதுக்கீடு வேண்டும் என்பதை உணர்த்தும் விதமாக,

> நாம் அரசியல் கட்சிகளில் சரியான பங்கீடு இல்லாததால் நமக்கு நம் இனத்திற்கு எவ்வளவு பின்னடைவு எவ்வளவு பெரிய ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். அதிகாரிகள் கூட திருப்தியில்லாமல் பல நிலைகளில் வெளியில் சொல்ல முடியாமல் மனதுக்குள் குமுறிக் கொண்டிருக்கிறார்கள். தெரியுமா? அன்றாட வாழ்க்கையில் நீங்காத சிக்கல்கள், அலுவலகளில் பிரச்சனை கல்விக்கடன் இருட்டடிப்பு,

> தொழிற்கடன்கள் கையில் கிடைக்காமை, இவையெல்லாவற்றையும் களைய வேண்டும் என்றால் மனித இனத்தின் கடவுளாகச் சித்திரிக்கப்பட்ட அரசியல் வாதிகளால் தான் முடியும்[28]

*என அரசியல் விழிப்புணர்வு ஊட்டுகிறது. இன மாநாடுகளில் அரசியல் பற்றி எடுத்துரைக்கும் போது அனைத்துக் கவுண்டர் இனங்களும் ஒன்று சேர வேண்டும். பிறகு ஓர் அரசியல் கட்சியாக நாம் மாற வேண்டும். மாநிலத்தில் சட்ட சபைக்கும், நாடாளுமன்றத்திற்கும் நம்மவர்கள் பலர் உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுச் சென்றால்தான், நம் இனம் முன்னேற தேவையானவற்றை வாதாடிப் பெறமுடியும். அதற்கு நாம் முழு முயற்சிகளுடன் செயல்பட வேண்டும் எனக் கொங்கு இன மக்களுக்கு அரசியல் பாடம் புகட்டும் நோக்கை வெளியிட்டுள்ளது. இந்திய சனநாயகம் பிழைக்குமா? என்னும் தலைப்பில் இன்றைய நிலையில் இந்திய அரசின் நிலைப்பாடு குறித்து,*

> இந்திய ஜனநாயகம் பதவி நாயகமாகவும், பணநாயகமாகவும் மாறிக் கொண்டிருக்கிறது. எதிர்காலத்தில் அரசு அமைப்பது, கவிழ்ப்பது ஆகிய எல்லாமும் பணநாயகத்தின் உதவியில்லாமல் நடைபெறாது. இந்த போக்கு இறுதியாகச் சர்வாதிகாரத்தில் போய்முடியும்[29]

*என விழிப்புணர்வு ஊட்டுகிறது.*

*உள்ளாட்சி அமைப்புத் தேர்தல்கள் குறித்தும், அதில் வெற்றி பெற்றவர் நிலைப்பாடு பற்றியும், விரிவான பின்னணியுடன் வெளியிட்டு மகிழ்கிறது. உலக அரசியல் நிகழ்வுகளைச் செய்திகளாக அமைக்கின்றன. காட்டாக 'பாகிஸ்தான் மறைந்த தலைவிக்குக் கண்ணீர் அஞ்சலி (தெ.கீதம், சன-08, ப.19) என பெனாசிர் பூட்டோவின் மறைவு குறித்து இரங்கல் தெரிவிக்கிறது. 'இந்திய அரசியலில் நல்ல தலைவரை இழந்தோம்' (கடலார், டிச-08, ப.8) என வி.பி.சிங் அவர்களின் மறைவைக் குறிப்பிட்டு அவர் ஏற்படுத்திய மண்டல் கமிஷன் இடஒதுக்கீட்டை விளக்குகிறது. தமிழ்த் தேசியத்தின் அவசியம் குறித்து, ஒவ்வொரு தெலுங்கன் வீட்டிலும் விஜயகாந்தின் கொடி பறக்கிறதே இதைப் பார்த்தாவது தமிழ்ச்சாதிகளுக்குப் புத்தி வர வேண்டாமா? என (அச்சமில்லை, நவ-08, ப.21) அறை கூவல் விடுப்பதோடு, வன்னியருக்கு அதிக துரோக இழைத்த கட்சி எது? என வினா எழுப்பி காரண விளக்கத்தோடு பட்டியலிட்டுக் காட்டுகிறது.*

‘தென்மாவட்டம் வளர்ச்சி பெற தமிழகத்தை இரண்டாகப் பிரிக்க வேண்டும்’, ‘தென் மாநில கோரிக்கை பிரிவினை வாதமல்ல’, ‘தென் மாவட்டங்களில் புதிய தொழிற்சாலைகள் வேண்டும்’ என்பன போன்ற தலைப்புகளில் அரசியல் கட்சிகளால், ஆட்சியாளர்களால் எப்படியெல்லாம் தென் மாவட்ட மக்கள் புறக்கணிக்கப்படுகிறார்கள் என்பதைக் கட்டுரைகளாக (விளக்கு, மார்ச்-08, ப.31) வெளியிட்டுள்ளது. மேலும் இவ்விதழில் இன அரசியல் அமைப்பான மூவேந்தர் முன்னேற்ற கழகம் சார்பாக நடைபெறும் அரசியல் செய்திகள் மிகுதியாக அமைந்திருப்பதைக் காணமுடிகிறது. பழங்குடி இன மக்களான இருளர்கள் அரசியல் விழிப்புணர்வு பெற தம் மக்களுக்கு அறிவுறுத்தும் விதமாக ‘பழங்குடி இருளர்களின் வாக்கு விடுதலைச் சிறுத்தைகளுக்கே...’ எனும் முழக்கத்தை வெளிப்படுத்தி, நமக்குக் (இருளர்கள்) கடும் நெருக்கடி ஏற்பட்ட காலங்களில் எல்லாம் கை கொடுத்தவர்கள் விடுதலைச்சிறுத்தைகள் கட்சி தான். எனவே அக்கட்சிக்கே நாம் வாக்களிக்க வேண்டும் என அறிவுறுத்துகிறது.

பொதுவாக இன இதழ்களில் தான் சார்ந்த இனத்தலைவர்கள் (நிகழ்கால, கடந்தகால) பற்றிய செய்திகளுக்கு முக்கியத்துவம் தருவதைக் கடமையாகக் கொண்டுள்ளன. காட்டாக மருதமலர், தேவேந்திரர் மலர் தியாகி இம்மானுவேல் சேகரன், சுதந்திர போராட்டத் தளபதி சுந்தரலிங்கம் - நாடார் இதழான இந்திய நாடார் முரசு காமராஜர், ஆதித்தனார் முதலியார் இதழான செங்குந்தமித்திரன் அறிஞர் அண்ணா, நாவலர் நெடுஞ்செழியன், நீதிக்கட்சி நடேசன் - மருத்துவர் இதழான பண்டிதம் சுதந்திரப் போராட்டத் தியாகி எஸ்.எஸ்.விஸ்வநாததாஸ் - யாதவர் இதழ்களான புதிய யாதவம், ஒலிக்கும் யாதவர் முரசு, முலாயம் சிங் யாதவ், லாலுபிரசாத் யாதவ் - நாயக்கர் இதழான வீரபாண்டிய கட்டபொம்மன் தியாகி கட்டபொம்மன் - தெலுங்கு இதழான தெலுங்கர் கீதம் கலைஞர் கருணாநிதி - முக்குலத்தோர் இதழான விளக்கு முத்துராமலிங்க தேவர் என ஒவ்வொரு இன இதழும் தேசியத் தலைவர்களை, சுதந்திரப் போராட்டத் தியாகிகளைத் தம் இன அரசியல் தலைவர்களாக நோக்கும் போக்கு அதிகமாகக் காணப்படுகின்றது. ஆய்வுக்குட்பட்ட இன இதழ்களில் பெரும்பாலான இதழ்கள் (பூச்சரம், செங்குந்தமித்திரன், தெலுங்கன் கீதம் வீரபாண்டிய கட்டபொம்மன், தவிர) அரசியல் செய்திகளுக்கு முக்கியத்துவம் தருகின்றன. குறிப்பாக விளக்கு, அச்சமில்லை என்ற இரு இதழ்களும் அரசியல் கட்டுரைகள் மிகுதியாகத் தந்து தகுந்த விளக்கத்தோடு பட்டியலிட்டு விளக்குகிறது.

ஓர் இனம் தனக்கென ஒரு அரசியல் கட்டமைப்பை உருவாக்கித் தனது பலத்தை நிரூபிக்கையில் அது அரசியல் அரங்கில் அழுத்தம் கொடுக்கும் இனமாக மாறுகின்றது[30]

எனும் அறிஞரின் கூற்று இங்கு ஒப்புநோக்கத்தக்கதாகும். இப்படியாக ஆட்சியாளர்களுக்கு அழுத்தம் கொடுக்கும் ஆற்றல்மிக்க இனத்தின் நலன்கள் கட்டிக் காக்கப்படும் என்பதே இதுவரை நடைபெற்று வருகின்ற வரலாறாக அமைகின்றது.

**கல்வியில் முன்னேற்றம்**

இன முன்னேற்றத்திற்கு இன்றியமையாத ஒன்றாகக் கல்விப் பணியும் அமைகின்றது. கல்வி பற்றித் திருவள்ளுவர் குறிப்பிடுகையில்,

கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை. (குறள்.400)

என்கிறார். ஒருவனுக்கு அழிவில்லாத சிறந்த செல்வமாக அமைவது கல்வியே ஆகும் என்கிறார். இதைத்தவிர மற்றவை செல்வங்கள் ஆகமாட்டா என்று குறிப்பிடுகிறார். தேசத்தின் மக்கள் சமுதாயத்தினுடைய பாதுகாப்பும் கதியும் மக்களுக்கு அளிக்கும் நிறைவுள்ள கல்வியைப் பொறுத்தேயுள்ளன என்பர். நாட்டு வளர்ச்சிக்கு அடிப்படைக் கல்வி வளர்ச்சி என்பது போல ஒவ்வொரு இனத்தின் வளர்ச்சிக்கும் கல்வி இன்றியமையாதது ஆகும்.

மனிதர்களுடைய வாழ்க்கையில் கல்வியின் பங்கு மிகப்பெரிய தாகையால் மனிதர்களின் முன்னேற்றத்தில் அக்கறை கொண்டவர்கள். எல்லாம் கல்வியைப் பற்றி ஆழ்ந்தறிந்து கருத்துக்களை வெளியிட்டிருக்கின்றனர்[31]

என்ற கருத்திற்கேற்ப இனங்கள் தங்கள் இதழ்களில் கல்வி குறித்த சிந்தனைகளை விதைக்க முற்படுகின்றன.

கல்வி குறித்த சிந்தனைகள் பொதுவாக இன மாணவ, மாணவியர்களை அடிப்படையாகக் கொண்டு அமைகின்றன. இன மாணவர்கள் எழுச்சி பெறவும், அரசியலில் அதிகாரத்தைப் பெறவும் இனச் சங்கத்தின் வாயிலாக முயற்சி மேற்கொள்வதை, நம் இனத்தைக் கல்வி ரீதியில் இன்னும் மேம்பட செய்வதே இந்த சங்கத்தின் முக்கிய நோக்கமாகும். இப்போது கல்லூரி, பல்கலைக் கழகங்களில் நம் இன மாணவர்கள் தாக்கப்படும் சம்பவம் அதிகரித்துள்ளது. இதைத் தவிர்ப்பதும் நம் மாணவர்கள் மத்தியில் விழிப்புணர்வை ஏற்படுத்துவதும் இதன் லட்சியங்களில் முக்கியமானவை என தேவேந்திரர் குல மாணவர் முன்னேற்ற சங்கம்

தோற்றுவிக்கப்பட்டதன் காரணத்தை (மருதமலர் டிச-08, ப.26) விளக்குகிறது. இன மாணவர்களை உற்சாகப்படுத்தும் விதமாக அவர்களின் சாதனை விபரத்தைப் புகைப்படத்துடன் பல இன இதழ்கள் வெளியிடுகின்றன. அவ்வகையில், பாராட்டுகிறோம் +2 தேர்வில் மாநில அளவில் 3வது இடம் பெற்ற மாணவி செல்வி கே.தீபா 1200/1180 மதிப்பெண்கள் எடுத்ததைப் பெருமையுடன் வெளியிட்டு இவரைப் போல இன மாணவ, மாணவியர்கள் சாதனை படைக்க வேண்டும் என (கொங்கு, மே-08, ப.31) வலியுறுத்துகிறது.

இனப் பேரவை, மன்றம், இயக்கம் சார்பாக இன மாணவ, மாணவியர்க்குக் கல்வி குறித்த விழிப்புணர்வை ஊட்டுவதில் இன இதழ்கள் முக்கியப் பங்காற்றுகின்றன. இதில் மாணவ மாணவியரின் வேலை வாய்ப்புக்கு உதவும் படிப்புகள், குறைந்த கால படிப்புகள், தொழிற்படிப்புகள், குறித்து ‘சிவில் இன்ஜினியர் தட்டுப்பாடு’ (செ.மி, ஏப்-08, ப.39) எனும் தலைப்பில் ஐ.டி. துறை அசுர வளர்ச்சி கண்ட பிறகு சிவில் இன்ஜினியரிங் படிப்பிற்கு இருந்த கொஞ்ச நஞ்ச கவர்ச்சியும் இல்லாமல் போனது. தற்போது ஆண்டுதோறும் 50 ஆயிரம் இன்ஜினியர்கள் தேவைப்படுகிறார்கள் என்பதைக் கருத்தில் கொண்டு இன மாணவர்கள் செயல்பட வேண்டும் என வேலை வாய்ப்புத் தகவல் தருகிறது. தேவேந்திரர்களான மள்ளர்களின் நூலான முக்கூடற்பள்ளுவைக் கல்வி நிறுவனங்களில் தடை செய்ய வேண்டும் என விமர்சனம் செய்வதைக் குறிப்பிட்டு, மள்ளர்கள் தங்கள் நிலங்கள், வித்து வகைகள், மாடுகள், ஏர்க்கால்கள், நுகங்கள், வடங்கள் போன்றவற்றை எப்படி எல்லாம் இழந்துள்ளனர் என்று முக்கூடற்பள்ளு மிகத் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளது. எனவே கல்வி நிறுவனங்கள் பள்ளுவை ஏசல் முறையில் நடத்தாமல், அதை ஓர் இசை நூலாகக் கருத்தில் கொண்டு 2000 ஆண்டுகட்கு முன்பு வள்ளுவர் வகுத்த ‘உழவு’ அதிகாரத்தின் இலக்கணப்படி வேளாண்குடி உயர்ந்தகுடி பண்பாட்டைக் கொண்டது என விளக்கமளிக்கிறது.

கொடை வள்ளலும், குடியிருந்த வீடும் கொடுத்த கொடைஞனாகிய அழகப்பர் குறித்த செய்தியைக் (பூச்சரம் ஏப்-08, ப.9) கல்விப்புரட்சி எனும் தலைப்பில் டாக்டர் அழகப்பசெட்டியார் தம்மிடம் உள்ள பெரும்பாலானவற்றைக் கைம்மாறு கருதாமல் இலவசமாகவே வழங்கினார்.

> இன்றைய மாணவர்கள் அனைவரும் தரத்துடன் வளர வேண்டும். தாங்கள் சம்பாதிக்கும் செல்வத்தில் முடிந்த வரை தர்ம காரியங்களுக்குச் செலவிட வேண்டும். இவர் வாழ்க்கையே ஒரு பாடம் தான். அதிலிருந்து நல்ல

> நோக்கத்துக்காக எப்படி உதவமுடியும். மனஉறுதியை எப்படி வளர்த்துக் கொள்வது என்று ஒவ்வொரு மாணவரும் கற்றுக்கொள்ள வேண்டும். அத்துடன் அழகப்பா செட்டியாரின் மன வலிமையைத் தங்கள் உள்ளத்தில் விதைத்து வளர்த்துக் கொள்ள வேண்டும்[31]

என மூதறிஞர் இராசாசி குறிப்பிட்டதை இன மாணவர்களுக்கு உணர்த்துகிறது. இன்றைய அறிவியல் உலகில் பல தகவல் தொடர்புச் சாதனங்கள் உலகை ஆக்கிரமித்திருந்தாலும் அவற்றை எல்லாம் பின்னுக்குத்தள்ளி மக்களின் முன்னேற்றத்திற்கும் பெரிதும் பயன்படுவது நல்ல நூல்களே. நூல்களைத் தனக்குள் கொண்டுள்ள நூலகத்தைப் பற்றியும் நூலகக் கல்வியின் பயன்பாடு குறித்தும் (பண்டிதம், டிச-08, ப.9) விளக்குகிறது.

யாதவ இன மாணவ மாணவிகளுக்குக் கல்வி உதவித்தொகை வழங்குவது பற்றி (ஒலிக்கும் யாதவர் முரசு, ஏப்-08, ப.8) நலிந்த நிலையில் உள்ள யாதவ மாணவர் மாணவிகளுக்குக் கல்வி உதவித்தொகை வழங்கி வருவதையும், ஏற்கனவே யாதவர் பேரவை சார்பாகக் கடந்த ஆண்டு ரூ.1.5 லட்சம் கல்வி உதவித்தொகையாக வழங்கப்பட்டுள்ளதையும் இதழில் பதிவு செய்துள்ளது. உயர்கல்வி நிறுவனங்களில் பணியாற்றும் இன மக்களைப் பாதுகாக்கும் பணியை இன இதழ்கள் செய்வதைக் காணமுடிகிறது. காட்டாக பெரியார் பல்கலைக்கழகத்தில் துணைவேந்தராகப் பணியாற்றும் வன்னியர் இனத்தைச் சேர்ந்த தங்கராஜ் அவர்களைப் பல்கலைக்கழகத்துட்பட்ட கல்லூரிகளில் சாதிவெறி அமைந்திருப்பதாகக் குற்றஞ்சாட்டி நக்கீரன் இதழ் கண்டித்துள்ளது. உயர்கல்வி அமைச்சர் பொன்முடியையும் கண்டித்து விமர்சனம் செய்கிறது.

இவை தவிர மாணவ மாணவியர்களுக்கு வேலை வாய்ப்புத்தகவல்கள், எங்கு, யாரைத் தொடர்பு கொள்வது, பயிற்சி முகாம்கள், நோட்டுப் புத்தகங்கள் வழங்கல், இன ஆசிரியர்களின் சாதனைகள், மாணவ, மாணவியர் சாதனை விபரங்கள், இன முன்னோடிகளின் அனுபவங்கள் போன்ற செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து வெளியிடுகின்றன. ஆய்வுக்குட்பட்ட அனைத்து இன இதழ்களிலும் கல்வி குறித்த சிந்தனைகள் இடம் பெறுகின்றன.

இவை தவிர சங்கத்தின் சார்பாகக் கல்விப் பணிகள் நடைபெறுகின்றன. சங்கப் பணிகளில் பாராட்டிற்கும் போற்றுதலுக்கும் உரியதாய்த் திகழ்வது கல்விப் பணியாகும்.

பொருளாதார வசதி குறைந்த மாணவர்களுக்குக் கல்விக் கடனுதவி வழங்குவது, புத்தகம், பொருளுதவி கொடுப்பது, பள்ளிகள் உருவாகவும், நிலைபெறவும், பொருளாதார உதவி அளிப்பது ஆகியவை சங்கம், பேரவைகள் ஏற்றுச் செய்கின்ற சீரிய பணிகளாகும். இத்தகைய செயல்பாடுகள் இனத்தின் இளைய தலைமுறைகள் வெற்றித் தலைமுறையாக வலம் வர செய்யப்படுகின்றதாக இன இதழ்கள் நினைக்கின்றன. கல்வி முன்னேற்றத்திற்கு வித்தாக இதைப் போற்றுகின்றன.

## தொகுப்புரை

ஆய்வுத் தலைப்பான 'இனம்' என்பதற்கான விளக்கங்கள் பல்வேறு சான்றுகளுடன் தெளிவுப்படுத்தப்பட்டுள்ளன.

சமூகம், சாதி, குலம், வகுப்பு, குடி போன்ற சொற்களிலும் 'இனம்' என்னும் சொல் பொருத்தமாக இருப்பதனால் இச்சொல்லாட்சி எடுத்தாளப்பட்டுள்ளது.

'இனம்' என்னும் சொல் இன்றைய தமிழ்ச் சமூகத்தில் நிலவும் சாதிய அமைப்புகளை மையமாகக் கொண்டதாக அமைகிறது.

இவ்வமைப்புகள் இன உணர்வுக்கு முதன்மை கொடுப்பதால் இன உணர்வுகளைத் தாங்கி வரும் இதழ்களை 'இன இதழ்கள்' என்றழைப்பது பொருத்தமாக அமையும்.

இவ்வின இதழ்களில் ஆசிரியர் உரை முதன்மை வகிப்பதை அறியமுடிகிறது. தலையங்கமும் பல இதழ்களில் இடம்பெறுகின்றன.

இவ்விதழ்களில் உள்ளடக்கக் கூறுகளாகக் கட்டுரை, கதை, சிறுகதைகள், கவிதை போன்ற இலக்கியப் படைப்புகள் அவ்வவ் இனத்தாரால் படைக்கப்பட்டு வெளிவருகின்றன. இவ்விதழ்கள் இனத்தார்களின் படைப்பாற்றல்களுக்குக் களமாகத் திகழ்கின்றன. சில இதழ்களில் இவை இடநிரப்பிகளாகவும் (Fillers) அவ்வப்பொழுது அமைகின்றன.

இன வரலாறு, இனத்தின் கலாச்சாரம், பண்பாடுகள், மரபுகள் இனத்தின் சிறப்புகள், ஏனைய இனம் தொடர்பான தகவல்களை இனத்தாருக்குக் கொண்டு செல்லும் உறவுப் பாலங்களாக இவ்விதழ்கள் திகழ்கின்றன.

ஒவ்வொரு இனமும் தங்கள் இன மேம்பாட்டுக்குப் பாடுபட்டவர்கள், இனத்தலைவர்கள், இனத்தின் சாதனையாளர்கள் போன்றவர்களைத் தங்கள் இனத்தார்களுக்கும், பிறர்க்கும் அறிமுகப்படுத்துவதற்கும் சிறப்பிப்பதற்கும் இவ்விதழ்களை வாயில்களாகக் கருதுகின்றன.

இன மக்களால் நடத்தப்படும் மாநாடுகள், இல்ல நிகழ்வுகள், இனத்தார்களின் சமூகத் தொண்டு போன்ற இன்றியமையாத நிகழ்வுகளைப் பதிவு செய்து காக்கும் ஆவணங்களாக இவ்விதழ்கள் வெளிப்படுகின்றன.

இனத்தின் அடிப்படை அமைப்புகளான சங்கம், பேரவை, மன்றம் போன்றவை தொடங்கப்பட்டதன் நோக்கம், இயங்கு நிலைகள், இனத்தாரின் தேவைகள், பொருளாதார, அரசியல், கல்வி முன்னேற்றம் போன்ற இனம் சார்ந்த நிகழ்வுகளை அவ்வப்பொழுது தங்கள் மக்களுக்குச் செல்லும் தகவல் சாதனமாக இவ்விதழ்கள் இருக்கின்றன.

தங்கள் இனத்தின் ஒட்டுமொத்த மக்கள் தொகை, வாக்கு வங்கி, கல்வி, பொருளாதாரம், இட ஒதுக்கீடு, தேர்தல், வேலைவாய்ப்புக்கள் போன்ற இனத்தின் தேவைகளை அரசு மற்றும் ஊடகங்களின் கவனத்திற்குத் தெரியப்படுத்தும் ஒரு சாதனமாக இன இதழ்கள் விளங்குகின்றன.

